# இலங்கைச் சரித்திரம்

## 1500—1948

G. C. E. வகுப்புக்குரியது





ஆக்கியோன்:
மு. இளையதம்பி, B. A. (Lond.)
பயிற்றப்பட்ட ஆங்கில முதலாம் தராதரப்பத்திரமுடையவர்.
(சரித்திர ஆசிரியர், காரைநகர் இந்துக்கல்லூரி.)







அச்சுப்பதிப்பு:
ஸ்ரீ லங்கா அச்சகம்,
234, கே. கே. எஸ். ரேட், யாழ்ப்பாணம்.

விலை ரூபா 4-75.

# இலங்கைச் சரித்திரம்

## 1500 — 1948

**G. C. E. வகுப்புக்குரியது**





ஆக்கியோன்:

**மு. இளையதம்பி, B. A. (Lond.)**

பயிற்றப்பட்ட ஆங்கில முதலாம் தராதரப்பத்திரமுடையவர்.

(சரித்திர ஆசிரியர், காரைநகர் இந்துக்கல்லூரி.)



அச்சுப்பதிப்பு:

ஸ்ரீ லங்கா அச்சகம்,

284, கே. கே. எஸ். ரோட், யாழ்ப்பாணம்.

## முகவுரை.

G. C. E. வகுப்புக்குரிய உலக சரித்திரப் புத்தகத்தை எழுதி வெளியிட்டபின், அவ்வகுப்புக்கேற்ற இலங்கைச் சரித்திரம் ஒன்றையும் எழுதும்படி கேட்டுக்கொண்ட பல ஆசிரியர்களின் வேண்டுகோளுக்கிணங்கி இந்நூலையும் எழுதியுள்ளேன். கி. பி. 1500 தொடக்கம் 1948 வரையுமுள்ள இலங்கைச் சரித்திரம் தெளிவாகவும், வகுப்புக்கேற்ற வண்ணம் விரிவாகவும் எழுதப்பட்டிருக்கிறபடியால் இதை ஆசிரியர்களும் மாணவர்களும் தகுந்த சரித்திரப்பாடப் புத்தகமாக ஏற்றுக்கொள்வர் என்பது எனது நம்பிக்கை.

இந்நூலுக்கு மதிப்புரை எழுதியுதவிய திரு. S. V. பாலசிங்கம் B. A. (Hons.) M. A. (Lond.) அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவிக்கிறேன். இந்நூலை செவ்வனே அச்சிட்டுதவிய ஸ்ரீ லங்கா அச்சகத்தாருக்கும் எனது நன்றி உரித்தாகுக.

18A, ஆஸ்பத்திரி ரோட்,
கொட்டடி,
யாழ்ப்பாணம்.
1 - 6 - 59.

மு. இளையதம்பி.

திரு. S. V. பாலசிங்கம் B. A. (Hons.) M. A. (Lond.)
அவர்கள் அளித்த

## மதிப்புரை

தற்போழுது G. C. E. வகுப்பில் சரித்திரம் கற்கும் மாணவர்களுக்கும், கற்பிக்கும் ஆசிரியர்களுக்கும் தகுந்த சரித்திர பாடப் புத்தகம் இல்லாத குறையை திரு. மு. இளையதம்பி எழுதிய இப் புத்தகம் நிவிர்த்தி செய்கிறதனுல் நான் அதிக மனப்பூர்வமாக இம்மதிப்புரையை எழுதுவதற்கு விரும்பியுள்ளேன். இந்நூலாசிரியர் இதைப்போன்று வேறும் சில சரித்திரப் புத்தகங்களை, ஆறும் வகுப்புத் தொடக்கம் பாவிக்கக்கூடியதாக எழுதி வெளியிட்டிருப்பதால் ஆசிரியர்களும், மாணவர்களும் அவருக்குக் கடமைப் பட்டவர்களாவார்கள்.

இந்நூல்களை எழுதினதால், இவர் பெற்றுள்ள அனுபவத்தை விட இவரிடம் இரண்டு வல்லமைகள் இருக்கின்றன. சரித்திரப் பாடத்தை நீண்டகாலமாகக் கற்பித்ததினுல் இவருக்கு உண்டான அனுபவம் ஒன்ருகும்; மற்றது அவருக்கு இருக்கும் தமிழ் அறிவாகும். இப்புத்தகத்திலும் கவனிக்கக்கூடிய இரண்டு விஷயங்களைக் குறிப்பிடலாம். மாணவர்கள் விஷயங்களைக் கிரகித்துக்கொள்ளத் தக்கதாகிய பழக்கத்தையும், சரித்திரப்பாடத்தில் நாட்டத்தையும் உண்டுபண்ணிவிடுவதும் சரித்திர ஆசிரியர்களின் நோக்கமாகையால் அதைப் பூர்த்திசெய்கிறதற்கு இது தகுந்த நூலாகும்; இப்புத்தகத்தில் விபரிக்கப்பட்ட சரித்திரகாலத்திலுள்ள பிரதான பிரச்சனைகளை நல்லாக விளங்கிக்கொள்வதற்கு இந்நூல் உதவியாக இருக்கிறது. ஆகையால் உயர்தர சரித்திரப்படிப்புக்கு இந்நூல் மிகவும் பயன்படும் என்பது எனது அபிப்பிராயம்,

யாழ்ப்பாணக் கல்லூரி,
வட்டுக்கோட்டை,
15-5-59.

S. V. பாலசிங்கம்

# பொருளடக்கம்

பக்கம்

## போத்துக்கீசர் காலம் 1505 — 1658



## ஒல்லாந்தர் காலம் 1658 — 1796



## பிரித்தானியர் காலம் 1796 — 1948

# இலங்கைச் சரித்திரம்

## (1500–1948)

### போர்த்துக்கீசர் காலம்
### (1505 – 1658)

## 1. கீழ்நாடுகளுக்குப் போர்த்துக்கீசர் வருகை

பழைய காலந்தொட்டு ஐரோப்பாவுக்கும் கீழ்த்திசை நாடுகளுக்குமிடையில் வர்த்தகத் தொடர்பு காணப்பட்டது. கீழைத்தேசங்களிலிருந்து கறுவா, ஏலம், மிளகு, சாதிக்காய் முதலிய வாசனைச் சரக்குவகைகளும், முத்து, இரத்தினக்கற்கள், பட்டாடைகள், கம்பளம் போன்ற வர்த்தகப் பொருட்களும் தரைமார்க்கமாக ஐரோப்பாவுக்குக் கொண்டுசெல்லப்பட்டன. பாரசீகக் குடாவுக்கூடாக ஒரு மார்க்கமும், செங்கடலுக்கூடாக இன்னொரு மார்க்கமுமாக இரு வழிகள் இருந்தன. முதல் வழியாகச் சென்ற வர்த்தகர்கள் பாக்டாத்தை அடைந்து அவ்வழியாய் கொன்ஸ்தாந்தைன்நோப்பிளை அல்லது லிவாந்தைச் சேர்ந்தனர். இரண்டாவது வழியாகச்சென்றவர்கள் கெய்ரோவை அடைந்து அங்கிருந்து அலெச்சாந்திரியாவுக்குச் சென்றனர். அவ்வர்த்தகப் பொருட்களெல்லாம் வெனிசுக்குக் கொண்டுசெல்லப்பட்டு அங்கிருந்து ஐரோப்பிய நாடுகளுக்கு அனுப்பப்பட்டன. நீண்டகாலப் பிரயாணஞ் செய்தபோதிலும், ஆபத்துக்களும் செலவுகளும் அதிகரித்தபோதிலும் அவ்வர்த்தகத்தைநடத்திய துருக்கியராகிய முஸ்லீங்கள் பெரும் ஆதாயத்தைப் பெற்றனர். கீழைத்தேசங்களிலிருந்து கொண்டுசெல்லப்பட்ட அவ்வர்த்தகப் பொருட்களை ஐரோப்பாவிற் செல்வர்களே விலைகொடுத்துவாங்கினர்.

சிலுவை யுத்தத்தை நடத்தும்பொருட்டு சமீபத்திலுள்ள கீழ் நாடுகளுக்குச்சென்ற ஐரோப்பியர் பலர் கீழைத்தேசங்களிலுள்ள வாசனைச்சரக்குகளையும் ஏனைய வர்த்தகப் பொருட்களையும் உபயோகித்ததினால் அவைகளில் விருப்பங் கொண்டனர். அதனால் ஆசியாவுக்கும் ஐரோப்பாவுக்குமிடையிலுள்ள வர்த்தகம் விருத்தியடையத் தொடங்கியது. ஆனால் பதினைந்தாம் நூற்றாண்டின் மத்தியகாலத்தில் சின்ன ஆசியாவைத் துருக்கியர் கைப்பற்றியதனால் பாரசீகக் குடாவுக்கூடாகவிருந்த வர்த்தகமார்க்கம் தடைப்பட்டது.

ஆகையால் முழு வர்த்தகப் பொருட்களும் எகிப்துக்கூடாகக் கொண்டு செல்லப்பட்டமையால் அந்நாட்டை ஆண்ட சுல்தான் கூடிய வருமானம் தனக்குக் கிடைக்கிறதென எண்ணி அதிக மகிழ்ச்சியடைந்தான். அவ்வளவு வருமானத்தோடு திருப்தியடையாமல் அப்பொருட்களின்மீது மேலும் வரியைக் கூட்டியமையினாலும் வர்த்தகர்களும் தங்களுடைய ஆதாயத்தைக் கூட்டியமையினாலும் ஐரோப்பாவில் அப்பொருட்களின் விலை அதிகரிக்கப் பொதுமக்கள் அவைகளை விலைக்கு வாங்க இயலாதவர்களாயிருந்தனர். இக்காரணத்தினால் ஐரோப்பிய நாட்டினர் கீழைத்தேசத்துக்குப் போவதற்கு இன்னொரு மார்க்கத்தைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் ஈடுபட ஆரம்பித்தனர்.

வெகுகாலமாக மொறொக்கோவிலுள்ள துருக்கியராலாளப்பட்டு வந்த போர்த்துக்கீசரும், ஸ்பானியரும் சண்டைசெய்து துருக்கியரைத் தங்கள் நாட்டினின்று துரத்திய காலந்தொட்டு அவர்களில் வெறுப்புக்கொண்டிருந்தனர். சுதந்திர நாடாக விளங்கிய போர்த்துக்கல் துருக்கியரின் பலத்தைக் குறைக்க எண்ணி 1415ல் ஆபிரிக்காவிலுள்ள **கியூட்டாவைத்** தாக்கி அவர்களுடைய பலத்தைக் குறைத்தது. இதுவே ஆபிரிக்காவைச் சுற்றிச்செல்ல எத்தனித்த கடற்பிரயாணங்களில் முதலாவதாகும். அக்காலத்தில் போர்த்துக்கீச அரசகுமாரனாகிய **ஹென்றி** என்பவனுடைய மனத்தில் ஆபிரிக்காவைச்சுற்றி இந்தியாவுக்கு ஒரு கடல்மார்க்கத்தைக் கண்டுபிடித்தால் முஸ்லிங்களிடமிருந்து கீழைத்தேச வர்த்தகத்தைக் கைப்பற்றலாமென்ற எண்ணம் உதித்தது. வட ஆபிரிக்காவிலிருந்து இடையிடையே தாக்கிக்கொண்டிருந்த துருக்கியரின் பலத்தைக் குறைக்க போர்த்துக்கீசருக்குக் கடற்படை அவசியந்தேவைப்பட்டது. ஆபிரிக்காவின் கரையிலுள்ள கியூட்டாவைக் கைப்பற்றியவுடன் மேலுஞ்சென்று இந்தியாவையடையலாமென்னும் எண்ணமுந் தோன்றிற்று. ஆனால் ஐரோப்பிய நாடுகளுக்குள்ளே சிறு நாடாகிய போர்த்துக்கல்லுக்கு ஏன் இவ்வெண்ணமுதித்ததென்பதை ஆராயுமிடத்து போர்த்துக்கல் விவசாயஞ் செய்வதற்கு ஏற்றதாயிருக்கவில்லையென்றும், அதனுடைய உற்பத்திப் பொருட்களும் மதிப்பானவையல்லவென்றும் அறியத்தக்கதாயிருக்கிறது. ஆகையால் கடலிலேயே போர்த்துக்கீசர் தங்களுடைய பலத்தைக் காட்ட வேண்டியவர்களானார்கள். கடலிற்செல்லும் திறமை அவர்களிடம் இயற்கையாக அமைந்ததெனலாம். 1356 வரையில் துருக்கியர் பால்கன் குடாநாட்டைக் கைப்பற்றித் தங்களுடைய ஆதிக்கத்தை

நிலைநாட்டியவுடன் ஐரோப்பியர் கிறிஸ்து சமயத்திற்கும் ஐரோப்பிய நாகரிகத்திற்கும் இடையூறு ஏற்பட்டதெனவெண்ணி அதை நீக்குவதற்கு வழிவகைகளை ஆலோசிக்கலாயினர். கிழக்கே கிறிஸ்தவ இராச்சியமொன் றிருப்பதாயும், **பிறிஸ்டர்யோன்** என்றொரு கிறிஸ்த அரசன் அவ்விராச்சியத்துக்கு அரசனாகவிருக்கிறானென்றும், வெகுகாலமாக ஐரோப்பாவில் ஒரு கதை பரவியிருந்தது. அக்கதை வர்த்தகராலாக்கப்பட்ட வொன்றேயல்லாது உண்மையானதொன்றல்ல. ஆனால் ஐரோப்பாவிலுள்ள மக்கள் அதில் நம்பிக்கைவைத்து ஐரோப்பாவிலுள்ள கிறிஸ்தவர்களும், கிழக்கிலுள்ள கிறிஸ்தவரசனும் ஒன்றுசேர்ந்தே துருக்கியரை இருபக்கங்களிலுமிருந்து தாக்கி அவர்களுடைய பலத்தைக் குறைக்கமுடியுமெனத் தீர்மானித்தனர். ஆகையால் கீழைத்தேசங்களுக்கு வருவதற்கு ஒரு மார்க்கத்தைக் கண்டுபிடிப்பதற்கு இரு காரணங்கள் ஐரோப்பியரைத் தூண்டிவிட்டனவெனலாம். ஒன்று வாசனைச்சரக்குகளையும் ஏனைய வர்த்தகப் பொருள்களையும் கைப்பற்றிக்கொள்ளும் நோக்கமாகும். மற்றது கிழக்கிலுள்ள கிறிஸ்தவர்களோடு நட்புக்கொண்டு தொடர்பு வைப்பதாகும். ஆகையால் மார்க்கமும், பொருளாதார, வர்த்தக நோக்கங்களுமே போர்த்துக்கீசரைத் தூண்டிவிட்டனவென்று சொல்லலாம்.

கடலிற் போர்த்துக்கீச கப்பல்களைத் தாக்கிய துருக்கியரை எதிர்ப்பதற்குப் பலமான கடற்படையொன்றை போர்த்துக்கீசர் தாபிக்கவேண்டியிருந்தது. ஆகையால் போர்த்துக்கீச இளவரசனான **கடலோடி ஹென்றி** என்பவன் லிஸ்பன், கோயன்பராவிலுள்ள சர்வகலாசாலைகளில் ஆராய்ச்சி நடத்துவதற்கு வேண்டிய ஒழுங்குகளைச் செய்தான். பலமான கப்பல்கள் உண்டாக்கப்பட்டன. கடற்பிரயாணஞ் செய்வதற்கு வேண்டிய உதவிகள் அளிக்கப்பட்டன. நேரம், தூரம், திக்கு முதலியவைகளை அறிந்துகொள்ளவும் கணக்கிடவும் உபாயங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. முன்னொருபோதுஞ் செல்லாத கடலிற் செல்லவேண்டியிருந்ததாலும், சாதகமற்ற சுவாத்தியத்தின் கஷ்டமேற்பட்டபோதிலும், ஆபிரிக்காவின் கரையிலுள்ள சுதேசிகளின் பகைமையிருந்தபொழுதிலும், பல இன்னல்களையும் சகித்துக்கொண்டு பிரயாணஞ் செய்தனர். 1486ம் ஆண்டு **பார்த்தலோமியு டயசு** என்னும் கடலோடி ஆபிரிக்காவின் மேற்குக் கரையோரமாகச் சென்று ஆபிரிக்காவின் தெற்குமுனையைப் போய்ச் சேர்ந்தபொழுது அங்கே புயல் அமோகமாகக் காணப்பட்டமையால், அதற்கு அப்பாற் செல்லமுடியாமல், அதற்குப் 'புயல் முனை'

என்று பெயரிட்டுத் திரும்பினன். போர்த்துக்கல் நாட்டரசன் கேள்வியுற்றவுடன் சந்தோஷமடைந்து கிழக்கே மேலும் செல்வதற்கு நம்பிக்கை இருக்கென்றெண்ணி அம்முனைக்கு "நன்நம்பிக்கை முனை"யெனப் பெயரிட்டான். 1498-ல் **வஸ்கோடகாமா** என்பவன் நன்நம்பிக்கைமுனைக்குச் சென்று அதிலிருந்து ஆபிரிக்காவின் கீழ் கரையிலுள்ள மொசாம்பி, மொம்பாசா என்ற துறைமுகங்களையடைந்து அங்கிருந்து இந்து சமுத்திரத்தின் வழியேசென்று இந்தியாவின் மேற்குக்கரையிலுள்ள **கள்ளிக்கோட்**டையைப் போய்ச் சேர்ந்தான். அவன் வந்துசேர்ந்த காலத்தில் இந்தியாவின் நிலை போர்த்துக்கீசருக்குச் சாதகமாயிருந்ததெனலாம். வட இந்தியா, பல முஸ்லிம் இராச்சியங்களாகப் பிளவுபட்டிருந்தது. தென்னிந்தியாவில் விஜயநகர இராச்சியமாகிய இந்து இராச்சியம் விளங்கியது. தென்னிந்தியாவின் மேற்குக் கரையோரமாகக் கோவை, கள்ளிக்கோட்டை கொச்சின், குயிலன் என்னும் மிகச்சிறு இராச்சியங்கள் காணப்பட்டன. இவைகள் விஜயநகர இராச்சியத்திலிருந்து மேற்குத்தொடர் மலைகளாற் பிரிக்கப்பட்டிருந்தன. இவ்வாறிருந்த இராச்சியங்களுக்கிடையே காணப்பட்ட பொருமை, பயம் காரணமாக அவைகள் ஒன்றுசேர்ந்து போர்த்துக்கீசருக்கெதிரே சண்டைசெய்ய முயற்சிக்கவில்லை. ஆகையால் இந்துசமுத்திரத்தில் வர்த்தகம் நடத்திய அரேபியாவிலுள்ள முஸ்லிங்கள் தங்களுடைய மார்க்கத்திற்கு எதிரிகளான போர்த்துக்கிசர் வர்த்தகத்தைக் கைப்பற்றும்பொருட்டு வந்துவிட்டனரென ஏக்கமுற்றனர். போர்த்துக்கீசர் அவர்களோடுதான் சண்டைசெய்து தங்களுடைய ஆதிக்கத்தை நிலைநாட்ட வேண்டியிருந்தது.

இம் முஸ்லிங்கள் இலங்கையிலிருந்து கறுவாவையும், கிழக்கிந்திய தீவுகளிலிருந்து ஏலம், சாதிக்காய், கராம்பு ஆகிய சரக்கு வகைகளையும், சீனுவிலிருந்து பட்டுப்புடவைகளையும், மலையாளத்திலிருந்து மிளகையும் வாங்கி ஐரோப்பாவுக்கு அனுப்பியதோடு, தென்னிந்தியாவிற் பருத்தித் துணிகளை வாங்கி இலங்கையிலும் கிழக்கிந்திய தீவுகளிலும், வங்காளத்திலுள்ள அபினை வாங்கிச் சீனுவிலும், சோழதேசத்திலுள்ள அரிசியை வாங்கி மலையாளத்திலும் விற்றனர். பருவக்காற்றுகளின் உதவியுடன் அம்முஸ்லிங்கள் கடலிற் பிரயாணஞ்செய்தனர். தூரகிழ்த்திசையில் மலாக்காவே முஸ்லிங்களின் முக்கிய தலமாகவிருந்தது. அடுத்த பெரிய துறைமுகம் கள்ளிக்கோட்டையாகும். தூரகிழ்த்திசையிலிருந்து கொண்டுவரப்பட்ட பொருட்கள் அத்துறைமுகத்திலிறக்கப்பட்டு ஐரோப்பா

வுக்கு அனுப்பப்பட்டன. சோழநாட்டிலிருந்து வந்த சாமான்களும் கள்ளிக்கோட்டைக்கே அனுப்பப்பட்டன. ஆகையால் இத்துறைமுகம் பெரிய வர்த்தக தலமாகவிருந்தது. ஓர்மஸ், ஏடன் என்னும் துறைமுகங்களும் மலாக்காவைப்போல் பிரதான இடங்களாயிருந்தன.

வாஸ்கோடகாமா சமாதான முறையில் வர்த்தகத்தைக் கைப்பற்றிக்கொள்ள முயற்சித்தபோது, சாமோரினுடைய அரச உத்தியோகத்தரை போர்த்துக்கீசருக்கெதிரே தூண்டிவிட்டுக்கொண்டிருந்த முஸ்லிங்களுடைய பகைமையை எதிர்க்கவேண்டியவனுனன். எவ்விதமான கஷ்டங்களேற்பட்டபொழுதிலும் பல வர்த்தக உரிமைகளையும் ஆதாயத்தையும் பெற்றுக்கொண்டு திரும்பினுன். அவன் சென்றதின் பின்பு 1500-ல் அல்வாரிசு காப்ரால் என்பவனின் தலைமையில் போர்த்துக்கீசர் வந்தனர். அவன் ஒரு புயலில் அகப்பட்டுத் தென் அமெரிக்காவின் வடகிழக்குக் கரையைச் சேர நேர்ந்தபொழுது பிரேஸில் என்ற பகுதியைப் போர்த்துக்கல் அரசனுக்கு உரிமையாக்கினுன்.

கள்ளிக்கோட்டைக்கு அரசனுன சாமோரின், முஸ்லிங்களுடன் வியாபாரஞ் செய்யாவண்ணம் தடுப்பதற்குப் போர்த்துக்கீசர் முயற்சித்தனர். அவன் அதற்கு இணங்காமையை அறிந்து அவர்கள் அவனுடைய பகைவனுன கொச்சிராசாவோடு நட்புப்பூண்டனர். முஸ்லீம் வியாபாரிகள் வர்த்தகம் நடத்திவந்த துறைமுகங்களைப் போர்த்துக்கீசர் தாக்கியமையால், அவர்களுக்கும் கள்ளிக்கோட்டை அரசனுக்குமிடையிற் போர் தொடங்கியது. அங்கிலேயிற் போர்த்துக்கீசர் ஒரு நிரந்தரமான சேனையொன்றைத் தாபிக்க எண்ணினர். வர்த்தகப்போட்டி காரணமாக முஸ்லீங்களுக்கும், போர்த்துக்கீசருக்குமிடையில் ஏடன், ஓர்மசு, மலாக்கா முதலிய இடங்களிற் சண்டைகள் நடைபெற்றன. திறமைவாய்ந்த பெரிய கப்பல்களும், பீரங்கி, துவக்கு முதலிய ஆயுதங்களுமுடைய போர்த்துக்கீசருக்கு, காற்றோட்டத்துக்கெதிரேயோடும் திறமையற்றனவாயும், திண்மையற்றனவாயுமுள்ள முஸ்லிங்களுடைய கப்பல்களைத் தோற்கடித்துக் கைப்பற்றுவது அதிகம் கஷ்டமாயிருக்கவில்லை. கடற்பிரயாணஞ் செய்வதிலும் அதிகம் தேர்ச்சிபெற்றவர்களாவார்கள். நெடும் பிரயாணஞ் செய்யவோ, புயல்களைத் தாங்கவோ, பீரங்கிகளை ஏற்றிச் செல்வதற்கோ போர்த்துக்கீசரின் கப்பல்கள் தகுந்தனவாகக் காணப்பட்டன. மேலும் போர்த்துக்கீசப் படைத்தலைவர்களும் மாலுமிகளும் கடற்சண்டை செய்வதில் முஸ்லீங்களைப்பார்க்கிலும் திறமை வாய்ந்தவர்கள்,

1505-ம் ஆண்டு இந்தியாவுக்குப் புறப்பட்ட **பிரான்சிசு அல்மெய்டா** என்பவன் இந்துசமுத்திரத்தின் ஆதிக்கத்தைப் பெறுவதாகவும், முஸ்லிங்களிடமிருந்து வர்த்தகத்தைக் கைப்பற்றுவதாகவும் தீர்மானஞ் செய்தான். அவன் கொச்சியில் காரியாலயம் வகுத்து தங்களோடு வியாபாரஞ் செய்துகொள்ள விரும்பிய இந்திய மகா ராசாக்களோடு உடன்படிக்கை செய்ததுமல்லாது தற்பாதுகாப்புக்காகப் பல கோட்டைகளையுங் கட்டினான். மலையாளக்கரையில் நடைபெற்ற வியாபாரத்தைக் கைப்பற்றுவதோடு முஸ்லிங்களையும் துரத்திவிடுவதற்கும் வேண்டிய முயற்சிகளையும் செய்தான். இந்துசமுத்திரத்தின் பல பகுதிகளைக் காவல்செய்தும் முஸ்லிங் கப்பல்களைத் தாக்கியும் வர்த்தகத்தைப் போர்த்துக்கீசர் வசமாக்கிக்கொள்ள எண்ணமிருந்தமையால் இடையருக் கடற்சண்டைகள் நடந்தன. செங்கடல் மார்க்கத்தை விடுத்து நன்னம்பிக்கைமுனை வழியாகச் சென்றதினால், போர்த்துக்கீசக் கடலோடிகள் கிழக்கிந்திய தீவுகளிலிருந்து வந்த முஸ்லிங் கப்பல்களைச் சூறையாடினமையாலும் எகிப்திய சுல்தானுக்கு வருவாய் குன்றியது. அலெக்சாந்திரியாவுக்கு வந்து வர்த்தகம் நடத்திய வெனிஸ் வர்த்தகர்களின் வருவாயும் குன்றியது. ஆகையால் வெனிசியரும் குஜராத்தியரும் போர்த்துக்கீசருக்கெதிரே போர் தொடங்குமாறு எகிப்திய சுல்தானைத் தூண்டினர். அதனால் வட இந்திய நாடுகளாகிய **கூர்ஜரமும்,** பிஜாப்பூரும், சுல்தானுஞ் சேர்ந்து போர்த்துக்கீசரைத் தாக்கினர். கூர்ஜரக் கரையிலுள்ள **டியூ** என்னுந்தீவுக்கு சுல்தானால் அனுப்பப்பட்ட கடற்படை **1509**-ல் போர்த்துக்கீசரால் தோற்கடிக்கப்பட்டமையால் இந்துசமுத்திரத்தில் அவர்களுடைய ஆதிக்கம் பெலமடைந்தது.

இந்துசமுத்திரத்தின் பல பகுதிகளையும் காவல்செய்வதால் கீழைத்தேச வர்த்தகத்தைக் கைப்பற்றிக்கொள்ளலாமென்ற கொள்கை ஏற்றதல்லவெனப் போர்த்துக்கீசர் உணர்ந்தனர். மேலும் பரந்த இந்துசமுத்திரத்தை அவ்வண்ணங் காவல்செய்வதும் இலகுவான காரியமன்று. லிஸ்பனிலிருந்து இந்துசமுத்திரத்திற் கடற்சண்டை செய்வதும் கஷ்டமாகவிருந்தது. ஆகையால் அல்மேயிடாவுக்குப்பின் ராசப்பிரதிநிதியாக **1505**-ல் நியமிக்கப்பட்ட **அல்புக்கூர்க்கே** என்பவனை கிழைத்தேச வர்த்தகத்தின் ஏகபோகவுரிமையைக் கைப்பற்றுவதற்கு புதியவொரு கொள்கையை அனுசரிக்கும் வண்ணம் அனுப்பினர். அவன் கொச்சி இராசாவின் தயவில் தங்கியிராமல் வேறான தலைமைக் காரியாலயமொன்றை அமைக்

கும் நோக்கத்துடன் கோவையைக் கைப்பற்றினுன் (1510). இந்து சமுத்திரத்திற்கு வருவதற்குரிய செங்கடல், பார்சியாக்குடா, மலாக்கா ஆகிய மூன்று வழிகளையுங் காவல்புரிவதால் இந்து சமுத்திரத்தின் கடல் ஆதிக்கத்தைப் பெறலாமென யோசித்து **சோகொத்ரா, ஓர்மஸ்** என்னுந் தீவுகளைக் கைப்பற்றி அங்கே கோட்டைகளைக் கட்டினுன். 1511-ல் மலாக்காவைக் கைப்பற்றினுன். ஆனுல் ஏடன் என்ற இடத்தைக் கைப்பற்ற முடியாமற் போனது. பின்பு தூரகிழ்த்திசையிலும் தங்களுடைய செல்வாக்கைப் பரப்பும் நோக்கத்துடன் பிலிப்பைன் தீவுகளுக்கு அணித்தாயுள்ள மொலுக்காஸ் என்னுந் தீவுகளைக் கைப்பற்றி அங்கிருந்து சாதிக்காய், கராம்பு முதலிய வர்த்தகப் பொருட்களை ஏற்றுமதி செய்தனர். பின்பு **மக்காவோ** என்னுந்தீவைக் கைப்பற்றி அங்கிருந்து அபினையும் வாசனைச்சரக்குகளையும் சீனுவுக்குக் கொண்டு சென்று அந்நாட்டிலிருந்து மட்பாண்டம், பட்டு, தேயிலை முதலியனவற்றைப் பெற்றனர். கடைசியாகப் போர்த்துக்கீசர் கைப்பற்றிய இடம் கூர்ஜரப் பகுதியாகும். பின்பு டியூ என்னுந் தீவு அவர்களுடைய கையிற் சிக்கியது. விஜயநகரச் சக்கரவர்த்தியும் பிஜாப்பூரையாண்ட முஸ்லிம் அரசனும் அடிக்கடி சண்டையிட்டமையால் அவ்விராச்சியங்களுக்கு மிடையிலுள்ள கோவையைப் போர்த்துக்கீசர் கைப்பற்றத்தக்கதாக விருந்தது. போர்த்துக்கீசரை எதிர்க்க வல்லரசுகளில்லாமையாலும் குறுநிலமன்னர்கள் ஒருவரோடொருவர் சண்டைசெய்தமையினுலும் அவர்கள் தமது ஆட்சியைத் தாபிக்கக்கூடியதாயிருந்தது.

கிழைத்தேசங்களிற் போர்த்துக்கீசர் கைப்பற்றிய பகுதிகளை ஆட்சிசெய்ய ஒரு இராசப்பிரதிநிதி நியமிக்கப்பட்டான். அவன் கோவையிற் காரியாலயம் வகுத்து அரசாங்க அலுவல்களை நடத்தி வந்ததுடன் வர்த்தகத்தையும் மேற்பார்வைசெய்தான். அவனுடைய கையிலேயே இராச்சிய அதிகாரம் முழுவதும் இருந்தது. வர்த்தகக் கப்பல்களை மேற்பார்வை செய்வதற்கும் ஒரு உத்தியோகத்தன் நியமிக்கப்பட்டிருந்தான். பழுதடைந்த கப்பல்களைத் திருத்தியமைப்பதுடன் உணவு, உடை முதலிய பொருட்களைப் போர்த்துக்கீசர் பெற்றுக்கொள்ளக்கூடிய வசதிகளையும் கவனித்துவந்தான். பல பாகங்களிலும் சிதறிக்கிடந்த நாடுகளை நிர்வகிப்பது இராசப்பிரதிநிதிக்குக் கஷ்டமாயிருந்தபடியால் ஒவ்வொரு பகுதிக்கும் தேசாதிபதிகள் நியமிக்கப்பட்டனர். ஆபிரிக்காவில் மொசாம்பிக் என்ற இடத்திலும், ஓர்மஸிலும், மலாக்காவிலும், கொழும்பிலும் கிளை அர

சாங்கங்கள் தாபிக்கப்பட்டிருந்தன. பதினாரும் நூற்றாண்டின் பிற்பகுதியில் போர்த்துக்கீசரின் ஆதிக்கம் குன்றத் தொடங்கியது. ஆகையால் 1604-ல் ''கீழ்நாட்டுப் பரிபாலனசபை'' என்ற ஒரு சங்கம் தாபிக்கப்பட்டது. கீழ்நாடுகளிலும், அமெரிக்காவிலுமுள்ள பகுதிகளைப் பரிபாலிப்பது மிகவும் கஷ்டமாகத் தோற்றிற்று. பதினேழாம் நூற்றாண்டில் போர்த்துக்கீசரின் அரசாட்சி நிலைதளம்பியது.

## வினாக்கள்

1. போர்த்துக்கீசர் கீழ்த்திசையில் ஒரு சாம்ராச்சியத்தை நிறுவ வேண்டியதற்குரிய காரணங்களை ஆராய்க.

2. இந்துசமுத்திரத்தில் போர்த்துக்கீசர் தங்களுடைய ஆதிக்கத்தை எவ்வாறு நிலைநாட்டினர்?

3. கீழ்த்திசையில் போர்த்துக்கீசரின் ஆட்சியிலுள்ள பகுதிகளின் நிர்வாகமுறையை விளக்குக.

---

# 2. இலங்கைக்குப் போர்த்துக்கீசர் வருகை

பதினாரும் நூற்றாண்டின் ஆரம்பகாலத்தில் போர்த்துக்கீசர் இலங்கைக்கு வந்தபொழுது இலங்கையில் மூன்று இராச்சியங்கள் காணப்பட்டன. கோட்டை, யாழ்ப்பாணம், கண்டி என்ற அம் மூன்று இராச்சியங்களுக்கிடையில் ஒற்றுமை காணப்படாமையால் அந்நிய நாட்டினர் தங்களுடைய ஆதிக்கத்தை நிலைநாட்ட வசதியாயிருந்தது. அம்மூன்று இராச்சியங்களிலொன்றாவது பொருளாதாரத் துறையிற் பலமடைந்திருக்கவில்லை.

அவ்விராச்சியங்களின் எல்லைகள் வரையறுக்கப்பட்டிருந்தன. இலங்கையின் தென்மேற்குப் பகுதியில் வடக்கே கால ஓயாத் தொடங்கித் தெற்கே வளவகங்கை வரையும் பரந்திருந்த இராச்சியம் கோட்டை இராச்சியம். அது சப்தகோறளை, நான்குகோறளை, மூன்றுகோறளை, இரயிகம், மாத்தறை, தெனவாக்கை என்னும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. இவை தற்போதுள்ள வடமேல் மாகாணம், மேல்மாகாணம், சப்பிரகமுவாமாகாணம், காலி, மாத்தறை என்னும் பகுதிகளாகும். கொழும்பிலிருந்து ஆறு மைலுக் கப்பாலுள்ள கோட்டையே அவ்விராச்சியத்தின் தலைநகராகும். அந்நகர் நாற்புறமும் நல்ல அரணுடையதாயும் பெரும்பகுதி சதுப்பு நிலங்களாலும் நீரினாலும் சூழப்பட்டிருந்தமையினாலும், தரைப்பகுதி உயர்ந்த மதில்களால் அரண்செய்யப்பட்டமையினாலும் எதிரிகள் இலேசாகத் தாக்கமுடியாமலிருந்தது. மதில்களைச் சூழ்ந்து அகழிகளும், சுவர்களும் காணப்பட்டன. நாட்டினுள்ளே நுழைவதானால் கோட்டையைத் தாண்டியே போகவேண்டியிருந்ததால் அந்நகர் ஒரு பிரதான தானத்தில் அமைந்திருந்ததெனலாம். கோட்டை இராச்சியப் பிரதேசம் நெற்செய்கைக்கு ஏற்றதாகக் காணப்படவில்லை. தென்மேற்குப் பருவப்பெயர்ச்சிக் காற்றினால் அதிக மழையைப் பெறும் அப்பிரதேசத்திலே கறுவா ஏராளமாகக் காணப்பட்டது. ஆகையால் கறுவா வியாபாரம் அமோகமாக நடைபெற்றது. இலங்கைக் கறுவாவைப்போல் வேறெங்கும் காணப்படாமையால் முஸ்லீங்களும் பின்பு ஐரோப்பியரும் கறுவா வியாபாரத்தின்பொருட்டு இந்நாட்டிற்கு வரநேர்ந்தது. கறுவா வியாபாரத்தினால் வருமானத்தைப் பெருக்கிக்கொள்ளும் நோக்கத்தோடேயே ஆறாவது பராக்கிரமபாகு அந்நகரத்தை இராசதானியாக்கினான். இவனைப்போலவே இவனுக்குப் பின்வந்த அரசர்களும் அதே நோக்கத்தோடேயே அந்நகரை இராசதானியாக்கினர். கறுவாவைவிட இரத்தினக்கற்கள்

மிளகு, பாக்கு முதலியவைகளை விற்பதன்மூலமே கோட்டை இராச்சியம் வேண்டிய வருமானத்தை ஈட்டியது.

கோட்டை இராச்சியம் ஏனைய இராச்சியங்களிலும் பார்க்கச் செல்வத்திலும் அதிகாரத்திலும் மேம்பட்டதாக விளங்கியது. கோட்டை இராசதானி ''ஜயவர்த்தனகோட்டை'' என்று அழைக்கப்பட்டது. கோட்டை அரசன் பழைய சிங்கள அரசர்களின் வம்சாவழியிலுள்ளவனும் உரிமையாளனுமாகையால் இலங்கைச் சக்கரவர்த்தியென அழைக்கப்பட்டான். வருடமொருமுறை சிற்றரசர்கள் 'பெரஹரா'த் தினங்களுக்குக் கோட்டைக்கு வந்து தாங்கள் செலுத்த வேண்டிய கப்பங்களைக் கொடுத்துச்செல்வது வழக்கம். அவ்வாறு செய்யத் தவறினோரைத் தண்டிப்பதற்காகப் போருக்குச் செல்வது வழக்கம். போர்த்துக்கீசர் இலங்கைக்கு வந்த காலத்தில் கோட்டை இராச்சியத்துக்கு எட்டாவது வீரபராக்கிரமபாகு (1484-1509) அரசனுகவிருந்தான். யாழ்ப்பாண இராச்சியத்தை பரராசசேகரனும் (1478-1519) கண்டியை விக்கிரமபாகுவும் (1480-1511) ஆண்டனர்.

யாழ்ப்பாண இராச்சியத்திற்கு இருதய ஸ்தானமாக விளங்கிய யாழ்ப்பாணக் குடாநாடும் அயலிலுள்ள தீவுகளும் மன்னூர் தொடங்கி முல்லைத்தீவு வரையுமுள்ள பிரதேசமும் இவ்விராச்சியத்திலடங்கிய பகுதிகளாகும். இங்கே தமிழரே வசித்துவந்தனர். அவர்களுடைய சமயம் சைவசமயமாகும். பதின்மூன்ரும் நூற்ருண்டளவில் தமிழ் இராச்சியம் அதிக உன்னத நிலையையும் அதிகாரத்தையும் பெற்றிருந்தமையினுல் அங்குள்ள அரசர்கள் ஏனைய அரசர்களிடமிருந்து திறை அறவிட்டனர். இவ்விராச்சியத்தை ஆண்ட அரசர்கள் ஆரியசக்கரவர்த்திகளெனப்படுவர். அவர்கள் கலிங்கநாட்டு அரசவமிசத்தவர்களும், இராமேஸ்வரத்துப் பிராமணர்களும் சேர்ந்த வமிசத்தவர்களாவர். பாண்டிய நாட்டிலுள்ள ஒரு பிரபல குடும்பத்திலுள்ள ஆரியசக்கரவர்த்தியொருவன் அக்காலத்துள்ள யாழ்ப்பாண அரசனின் மகளை மணந்துகொண்டான். பதினைந்தாம் நூற்ருண்டின் முற்பகுதியில் விஜயநகர அரசர்களின்கீழ் யாழ்ப்பாண இராச்சியம் அமர்ந்து திறைசெலுத்தி வந்தது. இக்காலத்திலேயே கோட்டையரசனுகிய ஆருவது பராக்கிரமபாகுவின் வளர்ப்புப் பிள்ளையாகிய **சப்புமால்** குமரையன் என்பவன் யாழ்ப்பாணத்தைக் கைப்பற்றியதாகக் கூறப்படுகிறது. மீண்டும் யாழ்ப்பாண இராச்சியம் பதினைந்தாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் சுதந்திரத்துடன் அதிகாரமுள்ள இராச்சியமாக விளங்கியது. இவ்விராச்சியத்தின் தலைநகரம் நல்லூராகும். அந்நகரம் மதில்களாலும், சுவர்களாலும் அரண்செய்யப்பட்டிருந்தது.

மன்னருக்கும் திருகோணமலைக்குமிடையில் 18 குறிச்சிகளைக் கொண்டுள்ள வன்னியென்னும் பகுதி வன்னியர் என்ற வேளாள அதிகாரிகளால் ஆளப்பட்டுவந்தது. திருகோணமலை, மட்டக்களப்பு, கொட்டியாரம் முதலிய கிழ்க்கரையோரப் பகுதிகளிலும் வன்னியர் வசித்தனர். யாழ்ப்பாண அரசர்கள் வன்னியர்கள்மீது அதிக அதிகாரத்தைச் செலுத்தவில்லை. பதின்மூன்றும் நூற்றுண்டு தொடக்கம் அவர்கள் தங்கள் எண்ணப்படியே ஆட்சி நடத்திவந்தார்கள்.

இலங்கையின் மத்திய பகுதியாகிய உடரட்டை என்றழைக்கப்பட்ட கண்டிராச்சியம் உடுநுவரை, எட்டிநுவரை, தும்பறை, ஹரிஸ்பற்று, ஹீவாஹேத்தா என்னும் ஐந்து பகுதிகளைக் கொண்டுள்ளது. கண்டிராச்சியம் மலைகளாலும், காடுகளாலும் சூழப்பட்டிருந்தமையினுல் அங்கே செல்வது மிகவும் கஷ்டமாகவிருந்தது. கண்டிக்குச் செல்வோர், மேற்குப் பக்கத்திலுள்ள **வல்லனே,** கிழக்குப் பக்கத்திலுள்ள **அலுத்நுவரை,** வடமேற்கிலுள்ள **கலகேதரை** ஆகிய கணவாய்கள்மூலமே செல்லமுடியும். கம்பளையே கண்டி இராச்சியத்தின் தலைநகராக விளங்கியது. **1540**ன் பின் தற்போது **கண்டி** என்று அழைக்கப்படும் மகாநுவரை அல்லது செங்கடகால என்னும் நகரே தலைநகராயமர்ந்தது. கண்டிநகரம் இயற்கையரணையுடையதெனலாம். தெற்கே மலையில்லாதிருந்த சிறிது தூரத்துக்கு இருபதடி உயரமுள்ள மதில் கட்டப்பட்டிருந்தது. மேட்டுப் பிரதேசமே இங்கே காணப்பட்டமையால் நெல்விளைவுக்கேற்ற சமபூமி அதிகமிருக்கவில்லை. உணவுப் பொருட்களை உண்டாக்குவது மிகவும் கஷ்டமாகவிருந்தது. ஆகையால் மக்கள் மெய்வருத்தம் பாராது மேடுபள்ளங்களை மட்டமாக்கி நெல்விளைவித்து வந்தனர். ஊவா, தும்பரை, ஹீவாஹெத்தா முதலிய உஷ்ணவலயப் பிரதேசங்களில் நெல் விளைவிக்கக்கூடியதாகவிருந்தது.

விவசாயமே இலங்கை மக்களின் பிரதான தொழிலாகும். திருகோணமலை, மட்டக்களப்பு. வளவகங்கைப் பிரதேசத்திலும் நெல் அதிகமாக விளைவிக்கப்பட்டது. மழைவளங் குறையாத இடங்களிலும், நீர்கொழும்பு, காலியாகிய இடங்களிலும் கறுவா ஏராளமாகக் காணப்பட்டது. ஏலம், சாதிக்காய், மிள்கு ஆகிய சரக்குகளும் தேங்காய், பலாக்காய், பாக்கு முதலியவைகளும் செய்கைபண்ணப்பட்டன. தமிழரும், சிங்களரும் பயிரிடுந்தொழிலை நடத்தினரல்லாது வியாபாரத்திற் கவனஞ்செலுத்தவில்லை. ஆகையால் முஸ்லிங்களே வியாபாரத்தை நடத்திவந்தனர். கறுவா அமோகமாகக் காணப்பட்ட காலிக்கும் நீர்கொழும்புக்கும் மத்தியில் கொழும்பு இருந்தமையால்

அது சிறந்த வியாபாரத்தலமாக விளங்கியது. உள்ளூர்ச்சாமான்கள், பொதிமாடுகள், சுமையாட்கள் மூலமாகத் துறைமுகத்துக்குக் கொண்டுசெல்லப்பட்டன. வாசனைச்சரக்குகளும் இரத்தினக்கற்களும், யானைகளும் கோட்டை இராச்சியத்திற் காணப்பட்டமையினுல் அது பல்வளங்களும் நிறைந்து பொலிவுற்றதுமல்லாது வர்த்தகத் தலமாகவுமமர்ந்தது.

அக்காலத்திலிருந்த அரசியல், பொருளாதாரநிலைபற்றி இனி ஆராய்வோம். சிங்கள அரசர்கள் எதேச்சாதிகாரிகள். அரசனுடைய சொல்லே நாட்டின் சட்டமாகும். அவனுக்கு ஆலோசனை கூறுவதற்கு ஒருசபை இருந்தது. ஆனுல் அரசனும் அச்சபையும் பழைய வழக்கங்களை அனுசரித்து நடக்கவேண்டியிருந்தது. தலைமைக்காரர் மூலம் ராணுவ விஷயங்களும் நீதிப்பரிபாலனமும் நடைபெற்றன. வருமானத்தை அறவிடுதல் வீதிகள், பாலங்கள், குளங்கள் ஆகியவற்றைப் பழுதுபார்த்தல் விவாதங்களைத் தீர்த்துவைத்தல், தேவையான காலத்தில் போர்வீரர்களைத் திரட்டல் ஆகிய கடமைகள் கிராமத் தலைமைக்காரர்களிலே விடப்பட்டிருந்தன. வர்ணக்கட்டுப்பாடுகளும் பழமையானதொன்ருகும். குலத்துக்குரிய வேலைகளையே ஒருவன் செய்யலாம். அவ்விதமான வர்ணக்கட்டுப்பாடு தென்னிந்திய திராவிடமுறையாகும். ஒருவனைத் தண்டிப்பதற்காக அவனுடைய குலத்தினின்று குறைத்துவிடலாம். ஆனுல் கூடிய குலத்துக்கு தாழ்ந்த குலத்தவர் சேர்த்துக்கொள்ளப்படமாட்டார். மக்களிடையே நிலம் சொத்துரிமை சம்பந்தமான விவாதங்களைத் தீர்ப்பதற்காக கன்சபா என்று சொல்லப்படும் கிராமசபைகள் ஏற்படுத்தப்பட்டன. அச்சபையின் தீர்ப்பை ஏற்றுக்கொள்ள விருப்பமில்லாத மக்கள் தலைமைக்காரனுக்கு விண்ணப்பஞ் செய்யலாம். குற்றஞ்செய்தவர்களை விசாரணைசெய்து அபராதம் விதிக்கவும் சிறைச்சாலைக்கு அனுப்பவும் தலைமைக்காரனுக்கு அதிகாரமுண்டு. அவ்வதிகாரியின் தீர்ப்பை எதிர்த்து மேலதிகாரிக்கு அல்லது அரசனுக்கு விண்ணப்பிக்கலாம். தலைமைக்காரன் தான் செய்யும் கடமைகளுக்குச் சம்பளத்தைப் பெருதபொழுதிலும் மக்கள் அவனுடைய நிலங்களை அவனுக்காகப் பயிரிட்டும், உபகாரங்களைக் குறித்த காலத்திற் கொடுத்தும் வந்தனர்.

அரசனுக்காக அல்லது அரச அதிகாரிகளுக்காக செய்யும் சேவைகளுக்காக மக்களுக்கு நிலங்கள் வழங்கப்பட்டன. அரசனுக்காகப் பயிரிடப்பட்ட நிலங்கள் **கபடாகம்** எனப்படும். அதிகாரிகளுக்காக விளைவிக்கப்பட்ட நிலங்கள் **நின்தாகம்** எனப்படும்.

2494



ஏனைய சில நிலங்கள் அரசனுக்கோ அல்லது அதிகாரிகளுக்கோ வினைபொருட்களை வரியாகக் கொடுத்துப் பயிரிடப்பட்டன. **தேவாலகம்** அல்லது **விகாரகம்** என்ற நிலங்கள் தேவாலயங்களுக்காகப் பயிரிடப்பட்டன.

வர்த்தகம் அரசனது ஏகபோகயுரிமையாயிருந்தது. நாணயங்கள் மிகக்குறைவு. பண்டமாற்று முறையே வழங்கிவந்தது. உணவு, உடை ஆகியவைகளுக்கு மேலதிகமாக ஒன்றும் ஒருவருக்கும் தேவையில்லை. ஏனெனில் ஒவ்வொருவரும் தன்னுடைய சாதிக்கேற்ற உடைகளை அணிந்தும், தொழிலைச் செய்வதுமல்லாது மீறி ஒன்றையுஞ் செய்யமுடியாது.

பதினாரும் நூற்றாண்டின் ஆரம்பகாலத்தில் இலங்கையின் பொருளாதார, அரசியல், சமுதாய நிலையைப்பற்றி ஆராய்ந்தோம். இனி போர்த்துக்கீசரின் வருகையைப்பற்றி அறியவேண்டும். இலங்கையின் கறுவா வியாபாரத்தைக் கைப்பற்றவேண்டுமென்று போர்த்துக்கீசர் அவாவுற்றிருந்தனர். ஆனல் காத்திராப்பிரகாரமாக அவர்கள் இலங்கையை வந்துசேர நேரிட்டது. மலையாளக் கரையிலிருந்து முஸ்லிம் வியாபாரிகள் போர்த்துக்கீசராற் துரத்தப்பட்டபடியால் அவர்கள் கள்ளிக்கோட்டைக்குச் செல்லாமல் நேரே பாரசீகக்குடாவுக்குச் செல்லவேண்டியிருந்தது. இவ்வண்ணமாகச் சீனவிலிருந்து பாரசீகக்குடாவுக்குச் சென்ற முஸ்லிம் வர்த்தகக் கப்பல்கள் வழக்கமாகப்போகும் பாதையைத் தவிர்த்து மாலைதீவுப் பக்கமாகச் சென்றுகொண்டிருந்தமையால் அக்கப்பல்களைக் கைப்பற்றுமாறு பிரான்ஸிஸ் டி அல்மேயிடா தனது மகன் **லொறென்சோவை 1505**-ல் ஒரு கடற்படையுடன் அனுப்பினன்.

வரும்வழியில் லொறென்சோ டி அல்மேயிடா ஒரு புயலில் அகப்பட்டு காலித்துறைமுகத்தைச் சேரநேர்ந்தது. தான் வந்துசேர்ந்த நாடு இலங்கையென்றறிந்ததும் கோட்டைத் தலைநகரத்துக்குச் சமீபத்திலுள்ள துறைமுகம் கொழும்பெனவறிந்து அங்கே சென்றான். வர்த்தகத்தலமாகிய கொழும்பில் அக்காலத்தில் வசித்த பெரும்பான்மையோர் முஸ்லிம் வர்த்தகர்களாவர். வெகுகாலமாகப் போர்த்துக்கீசருக்கும் முஸ்லிங்களுக்கும் பகைமையிருந்துவந்தது. கிறிஸ்தவர்களாகிய போர்த்துக்கீசருக்கும், முகமதியராகிய முஸ்லிங்களுக்கும் பல நூற்றாண்டுகளாகச் சிலுவையுத்தம் நடந்தது. முஸ்லிங்களுடைய வர்த்தகத்தையும் ஆதாயத்தையும் கைப்பற்றும் நோக்கத்தோடேயே போர்த்துக்கிசக் கடலோடிகள் இந்தியாவுக்கு வந்தனர். ஆகையால் அவர்கள் சந்தித்த இடங்களெல்லாம் சண்டை

செய்தனர். இவ்வண்ணமாக நடைபெற்ற சண்டைகளின் பயனாக முஸ்லிங்கள் இந்தியாவில் நடத்திய வர்த்தகத்தை இழக்கவேண்டி நேர்ந்தது.

லொறென்சோ கொழும்பையடைந்தவுடன் அங்கிருந்த முஸ்லிங்கள் காத்திராப்பிரகாரம் வந்துசேர்ந்த எதிரியைக்கண்டு திகிலடைந்தனர். முஸ்லிங்களின் தூண்டுகோலினால் கொழும்புவாசிகள், வந்த அந்நியருக்கு எதிர்ப்புக்காட்டினர். ஆனால் போர்த்துக்கீசரின் பீரங்கிகளின் வெடிச்சத்தத்தைக் கேட்டதும் எல்லோரும் ஓடி ஒதுங்கினர். இதற்கிடையில் போர்த்துக்கீசரின் வருகையைப் பற்றிய செய்தி கோட்டை அரசனுக்கெட்டியது. செய்தி பின்வருமாறு கூறப்பட்டது. ''எங்களுடைய கொழும்புத் துறைமுகத்தில் அழகிய வெள்ளைத்தோலுள்ள மனிதர் வந்திருக்கின்றனர். அவர்கள் இரும்பினாற் செய்த சட்டைகளையும் தொப்பிகளையுமணிந்திருக்கின்றனர். ஒரு இடத்திற் தங்கியிராது அங்குமிங்கும் நடந்துதிரிகின்றனர். கற்களைச் சாப்பிட்டு இரத்தத்தைக் குடிக்கின்றனர். ஒரு மீன் அல்லது ஒரு எலுமிச்சம்பழத்தை வாங்கிக்கொண்டு பொன் அல்லது வெள்ளிகளைக் கொடுக்கின்றனர். அவர்களுடைய பீரங்கியின் சத்தம் இடிமுழக்கத்திலும் பார்க்கக் கூடியதாக விருக்கிறது.'' இலங்கையில் அக்காலத்தில் பொன், வெள்ளி நாணயங்கள் இருந்திருக்கவில்லையென்பது தெளிவாகும். துப்பாக்கியை முன் கண்டறியாத மக்கள் பீரங்கிச் சத்தத்தைக்கேட்டு அச்சமுற்றனர்.

எட்டாவது பராக்கிரமபாகுவாகிய அரசன் அரசுசபையைக் கூட்டி அதனுடைய ஆலோசனைப்படி வந்த அந்நியரை வரவழைக்கும்படி தூதரையனுப்பினான். லொறென்சோ மகிழ்ச்சியடைந்து படைத்தலைவனிலொருவனாகிய **குட்றிம்** என்பவனை அனுப்பினான். கோட்டைத் தலைநகரம் கொழும்பிலிருந்து வெகுதூரத்திலிருக்கிறதென்பதை யுணர்த்தும் நோக்கத்துடன் அவனைச் சுற்றுவழியாற் கொண்டுபோனதால் அப்பயணம் மூன்றுநாட்கள் எடுத்தன. ஒவ்வொரு மணித்தியாலத்தின்பின் கொழும்பிலிருந்து துப்பாக்கிச்சத்தத்தையுண்டாக்கியமையினால் அச்சத்தத்தின் உதவியைக்கொண்டு சுற்றுவழியினால் கொண்டுசெல்லப்பட்டதாக **குட்றிம்** அறிந்துகொண்டான். போர்த்துக்கீசரோடு உடன்படிக்கையெழுதிக்கொள்ள அரசன் விருப்பமாய் இருப்பதையறிந்துகொண்டு கொழும்புக்குத் திரும்பினான். லொறென்சோ, பயோ டி சூசாவை அரசனோடு உடன்படிக்கை எழுதிக்கொள்வதற்காக அனுப்பினான். சமாதான உடன்படிக்கையொன்று எழுதப்பட்டது. அதன்பிரகாரம் வருடந்தோறும்

அரசன் திறையாக கறுவா போர்த்துக்கீசருக்குக் கொடுப்பதாகவும், போர்த்துக்கீச அரசனையே தனது தலைவனாக மதிப்பதாகவும் சம்மதித்துக்கொண்டான். இதற்குப் பதிலாக இலங்கைத் துறைமுகங்களைப் போர்த்துக்கீசர் பாதுகாப்பதாகவும் குறிப்பிடப்பட்டது.

லொறென்சோ கொழும்பில் ஒரு பண்டகசாலையையும் நிறுவி, போர்வீரர் சிலரை அதைக் காவல்செய்யுமாறு வைத்தான். ஒரு போர்த்துக்கீசத் தேவாலயத்தையுங் கட்டினான். போர்த்துக்கல் நாட்டின் வீரமுத்திரையையும் ஒரு கல்லில் செதுக்கச்செய்து திரும்பினான். அவன் கொழும்பைவிட்டு நீங்கியபின் முஸ்லிம் வியாபாரிகளும் சில சிங்களருஞ் சேர்ந்து அங்கிருந்த போர்த்துக்கீசரைத் தாக்கினர். பகைமை அதிகரித்தமையினால் இந்தியாவிலிருந்த போர்த்துக்கீசத் தேசாதிபதி அப்பண்டகசாலையை மூடிவிடும்படி கட்டளையிட்டமையினால் அது 1507-ம் ஆண்டு மூடப்பட்டது. கொழும்பிலிருந்த போர்த்துக்கீசப் போர்வீரர்களும் கொச்சிக்குச் சென்றனர். இலங்கையில் ஒரு கோட்டையை நிறுவுவது நல்லது என்று தேசாதிபதி போர்த்துக்கல் அரசனுக்கு அறிவித்திருந்தார்.

## வினாக்கள்

1. போர்த்துக்கீசர் வந்தகாலத்தில், இலங்கையின் அரசியல் நிலையை விளக்குக.
2. பொருளாதார, சமுதாய வாழ்க்கை நிலையைப்பற்றிக் கூறுக.
3. "போர்த்துக்கீசரைப் புயல் இலங்கைக்குக் கொண்டுவந்திருந்த தென்றல், கறுவா வியாபாரத்தின் மோகமே அவர்களை இங்கே தடுத்துவைத்தது என்று சொல்லலாம்" இக்கூற்றை ஆராய்க.

---

# 3. கோட்டை அரசர்களும் போர்த்துக்கீசரும்

வீரபராக்கிரமபாகு வயோதிப பருவமடைந்த காலத்தில் தனது புதல்வர்களான தர்மப்பராக்கிரமபாகுவையும், விஜயபாகுவையும் கோட்டை இராச்சியத்தின் இணையரசர்களாக நியமித்தான். 1509-ல் இவர்களுடைய தந்தையிறக்க இரு புதல்வர்களும் ஒருவரையொருவர் நீக்கிவிட சூழ்ச்சிசெய்தமையினுல் உள்நாட்டுக் குழப்பங்களுண்டாயின. தர்மப்பராக்கிரமபாகுவுக்கு கோட்டையில் அதிக ஆதரவு இருந்தது. தனது சகோதரனைப் பயமுறுத்தும் நோக்கத்துடன் போர்த்துக்கீசருக்கு கொழும்பில் கோட்டையொன்றை நிறுவுவதற்கு அனுமதிகொடுப்பதாக வாக்குப்பண்ணி போர்த்துக்கீசப் போர்வீரர்களை வரவழைத்தான். அந்நேரத்தில் போர்த்துக்கீசர் **மலாக்கா, ஓமஸ்** ஆகிய இடங்களிற் கோட்டைகளைத் தாபிக்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்தனர். **அல்மேயிடா**வின்பின், **அல்புகூர்குவே** என்பவன் இராசப்பிரதிநிதியாக இந்தியாவுக்கு அனுப்பப்பட்டான். இவன் கோவையிற் காரியாலயம் வகுத்து போர்த்துக்கீசருடைய ஆதிக்கத்தைப் பலமுறச்செய்தான். அவனுக்குப்பின் வந்த **டி அல்பகேரியா** என்னும் இராசப்பிரதிநிதி ஏடினைக் கைப்பற்ற முயன்று, அது முடியாமையால் இலங்கையிற் கோட்டையொன்றை நிறுவுவது நலமென எண்ணினுன். வங்காளக்குடாக்கடலில் தங்களுடைய ஆதிக்கத்தை பலப்படுத்துவதற்குக் கொழும்புத் துறைமுகத்தைக் கைப்பற்றுவது அவசியமென போர்த்துக்கீசர் உணர்ந்தனர். தர்மப்பராக்கிரமபாகு போர்த்துக்கீசருடைய உதவியைக் கோரிநின்றமையினுல் 1518ல் மறுபடியும் அவர்கள் இலங்கைக்கு வந்து அரசனின் அனுமதியுடன் ஒரு கோட்டையைக் கட்டினர். அக்கோட்டை மூன்று பக்கங்களிற் கடலாலும் நிலப்பக்கத்திற் கால்வாய் ஒன்ருலும் சூழப்பட்டிருந்தது. கோட்டையைச்சுற்றி ஓர் சுவரிருந்தது. சுவரின் சிகரத்தின் உட்புறத்தே காணப்பட்ட பாதைவழியே காவலாளர் சுற்றித் திரிந்தனர். பின்பு பழைய உடன்படிக்கையைப் புதுப்பித்து அரசனைத் திறைசெலுத்தும்படி வற்புறுத்தினுன். அரசன் வருடந்தோறும் போர்த்துக்கல் அரசனுக்குக் கறுவாவும், விலையுயர்ந்த கற்கள் பதித்த 20 மோதிரங்களும், 10 யானைகளும் கொடுப்பதாக உடன்பட்டான். போர்த்துக்கீசர் அதற்குப்பதிலாக அரசனுடைய துறைமுகங்களைக் காவல்புரிவதாயும், பகைவர்களினின்று அரசனுக்குப் பாதுகாப்பளிப்பதாயும் வாக்குப்பண்ணினர்.

அக்கோட்டையைக் கட்டுவதற்கு அரசன் அனுமதிகொடுத்தமையினுற் சனங்கள் அவனை வெறுத்தனர். அது அந்நியராதிக்கத்தின் அறிகுறியாகச் சனங்களுக்குத் தோன்றியது. கோபங்கொண்டு சனங்கள் திரண்டு கோட்டையின் ஒருபகுதிச் சுவரை அழித்தனர். அரசனுல் அக்கோட்டையைப் பாதுகாக்க முடியாமற்போனது. அவ்விதமான தொல்லைகளும், இன்னும் பல துன்பங்களுஞ் சேர்ந்து அரசனின் முடிவுக்குக் காரணமாயின. பின்பு அவனுடைய சகோதரனுன விஜயபாகு அரசாளத்தொடங்கினுன். போர்த்துக்கீசரைக் கொழும்பிலிருந்து துரத்தவேண்டுமென்றும், அவர்களது கோட்டையை அழிக்கவேண்டுமென்றும் தீர்மானஞ்செய்தான். ஆனுல் தன்னிடத்திற் கடற்படையில்லாமையால் போர்த்துக்கீசரின் பகைவனுன கள்ளிக்கோட்டை அரசனின் துணையைத்தேடினுன். அவனது கடற்படையும் போர்த்துக்கீசரின் கடற்படைக்கு முன் எதிர்நிற்க முடியாமல் பின்வாங்கியது. ஈற்றில் விஜயபாகு போர்த்துக்கீசருடன் சமாதானஞ் செய்துகொண்டான்.

**1520**-ல் இந்தியாவுக்குப் புதிதாக அனுப்பப்பட்ட **டீசிக்விரா** என்ற தேசாதிபதி **டீபிரிட்டோ** என்பவனை கொழும்புக்குத் தளபதியாக (**1520-1522**) நியமித்து அவனை கொழும்பிலிருந்த கோட்டையைப் பலப்படுத்துமாறு கட்டளையிட்டான். அவ்வேலை நடந்துகொண்டிருக்கும்பொழுது அந்நகரமக்கள் கோட்டையிலுள்ளவர்களுக்கு உணவுப் பொருள்களை அளிக்க மறுத்தமையினுல் **பிரிட்டோ** அந்நகரத்தைத் தாக்கி முஸ்லிம் பகுதியை எரித்துவிட்டான். அப்பகுதிகளைச் சூறையாடிக்கொண்டிருக்கையில் திடீரென அந்நகர மக்களாற் தாக்கப்பட்டமையினுல் அவன் பின்வாங்க நேரிட்டது. கோட்டையின் வேலை முடிவடைவதற்குமுன் அது முற்றுக்கையிடப்பட்டது. விஜயபாகுவும் வெளியரங்கமாக எதிர்ப்புக்காட்டினுன். பிரிட்டோ கொச்சியிலிருந்து உதவிபெறவேண்டியிருந்தது. அவன் அனுப்பிய தூதுவர்களிலிருவர் அரசனின் கையிற்சிக்கினர். கொச்சிக்குத் தூதுசென்ற ஒருவன் கொழும்பிலிருந்த நிலையை விளக்கிக் காட்டியவுடன், உணவுப்பொருட்களையும் 50 ஆட்களையும் போர்த்துக்கீசத் தேசாதிபதியனுப்பினுன். அவ்வுதவியைப் பெற்றவுடன் போர்த்துக்கீசத் தளபதி முற்றுக்கையிட்டவர்களை தரை கடலாகிய இரு பகுதிகளினின்றும் தாக்கித் துரத்திவிட்டான். மீண்டும் 20 யானைகளுடனும் மலபாரிலிருந்துவந்த குதிரைப்படையுடனும் பெருந்தொகையான போர்வீரருடனும் கோட்டையைச் சமீபித்ததும் அவர்கள் போர்த்துக்கீசராற் துரத்தப்பட்டனர்.

அந்நியரை நாட்டினின்றும் துரத்துவதற்காகச் செய்த எத்தனங்கள் பயனற்றதாய்ப் போனமையால் விஜயபாகுவின்மேல் மக்களுக்கிருந்த மதிப்புக் குன்றத்தொடங்கியது. போர்த்துக்கீசரின் பலம் அதிகரித்தது. விஜயபாகு சிம்மாசனமேறியகாலத்து **கிரவெலா**விலுள்ள அரசிளங்குமரியை விவாகஞ்செய்தான். அவள் தன்னுடன் கொண்டுவந்த ஒரு சிறு பிள்ளையை விஜயபாகு தனது தத்தபுத்திரனுக வளர்த்துவந்தான். தனது தத்தபுத்திரனைத் தன்னின்பின் அரசனுக்க யோசனைசெய்து, தான் அரசனுவதற்கு முன்னிருந்த தனது மூன்று புதல்வர்களையும் கொலைசெய்விக்கும் நோக்கத்துடன் எக்கநாயக்கா, பண்டாரா என்னும் இருவர்களுடன் சதியாலோசனை செய்தான். ஆகையால் அவனுடைய புதல்வர்கள் மாளிகையிலிருந்து தப்பி ஓடினர். மூத்த இரு சகோதரர்கள் நீர்கொழும்புக்கும் இளையமகன் கண்டி இராச்சியத்துக்குஞ் சென்றனர். மலைநாட்டரசன் அரசகுமாரர்களுக்கு ஆதரவளித்து ஒரு சேனைப் படையொன்றைக் கொடுக்க அவர்கள் தங்களுடைய உரிமையை நிலைநாட்டும்பொருட்டு கோட்டைக்குப் படையெடுத்துச் சென்றனர். கோட்டை இராச்சியத்திலுள்ள மக்களும் அரசகுமாரர்களுக்கு ஆதரவு கொடுத்தமையால் விஜயபாகு சமாதானஞ் செய்துகொண்டான். அரசன் மீண்டும் அவர்களுடைய உயிருக்கு அபாயம் விளைக்கச் சதியாலோசனை செய்வதைக் கேள்வியுற்று அவர்கள் அரண்மனைக் குட்புகுந்து அரசனுடைய பொக்கிஷங்களைக் கவர்ந்ததுமன்றி ஒரு அந்நிய கொலைஞனைக்கொண்டு தந்தையைக் கொலைசெய்வித்தனர் (**1521**).

கண்டி அரசனுகிய ஜயவீரனும், கோட்டையிலுள்ள பிரபுக்களும் ஒன்றுகூடி மூன்று புதல்வர்களுள் மூத்தவனுகிய புவனேகபாகுவை அரசனுக்கத் தீர்மானித்தனர். ஆனல் இக்குழப்பத்திற்குக் காரணமாயிருந்தவன் இளைய சகோதரனுகிய மாயதுன்னை. ஆகையால் அவனுக்கும் இராச்சியத்தின் ஒரு பகுதியைக் கொடுப்பதாகத் தீர்மானஞ் செய்தனர். கோட்டையும் கடற்கரைப்பகுதியும் புவனேகபாகுவுக்குக் கொடுக்கப்பட்டன. அவன் சக்கரவர்த்தி என்ற பட்டத்துடன் கோட்டையரசனுக நியமிக்கப்பட்டான். சீதவாக்கையும், நான்கு கோறளையும் தற்போது சப்பிரகமுவா மாகாணம் என வழங்கப்படும் தேனவாகா என்ற பகுதியும் மாயதுன்னைக்குக் கொடுக்கப்பட்டன. றைகம்பண்டாரனுக்கு றைகம, மாத்தறை முதலிய பகுதிகள் கொடுக்கப்பட்டன.

போர்த்துக்கீசர் தமது நிலைமையை வலியுறச் செய்வதற்கு கோட்டை இராச்சியம் பிரிக்கப்பட்டமை சாதகமாகவிருந்தது.

பிரிட்டோவின்பின் நியமிக்கப்பட்ட போர்த்துக்கீசத் தளபதியாகிய **டி லெமொஸ்** என்பவன், கோட்டை நிறுவியதைச் சிங்கள மக்கள் வெறுத்தனரென்பதாக போர்த்துக்கல் அரசனுக்கு விளங்கியதன் பயனாக 1524-ல் இராசப்பிரதிநிதியாக இந்தியாவுக்கு வந்த வஸ் கோடகாமா, கொழும்பிலிருந்த கோட்டையை அழிப்பதற்கு அனுமதியைப் பெற்றுவந்து, அவ்வாண்டிலேயே கோட்டையை அழிப்பித்துவிட்டு ஒரு பண்டகசாலையை நிறுவினான்.

சீதவாக்கைக்கு அரசனான மாயதுன்னை தனக்குக் கிடைத்த சிறிய இராச்சியத்தோடு திருப்தியடையாமல் கோட்டை இராச்சியத்தைக் கைப்பற்ற எண்ணினான். அவன் அதிக பேராசையும் திறமையுமுடையவன். மாயதுன்னை தன்னை எந்நேரமாகுதல் தாக்கக்கூடுமென நினைந்து புவனேகபாகு போர்த்துக்கீசருடன் நட்புக் கொண்டிருந்தான். அவனுடைய நட்பில் நம்பிக்கைவைத்தே போர்த்துக்கீசர் தங்களுடைய கோட்டையையுமழித்து பண்டகசாலையை மாத்திரம் பரிபாலித்து வந்தனரெனலாம். ஆனால் முஸ்லிங்களுக்குப் பயந்தே கோட்டையை யழித்துவிட்டனரென எண்ணி மாயதுன்னை முஸ்லிங்களை வரவழைத்து அவர்களிற் சிலரை கள்ளிக்கோட்டையின் அரசனாகிய சாமோரினிடமனுப்பி போர்த்துக்கீசரைத் துரத்திவிடும் நோக்கத்துடன் அவனுடைய உதவியைக் கேட்டுக்கொண்டான். கொழும்பிலிருந்த பண்டகசாலையைக் கைப்பற்றும்பொருட்டு சாமோரின் கடற்படையொன்றை அனுப்பினான். அதனுடைய தலைவன், பண்டகசாலையைக் கைப்பற்றுவதால் புவனேகபாகு கோபங்கொள்ளக்கூடுமென நினைந்து கோட்டைக்குச் சென்று அங்கிருந்த போர்த்துக்கீசரைத் தன்னிடம் ஒப்புவிக்கும்படியாக புவனேகபாகுவைக் கேட்டான். அவன் அதற்கு இணங்கத்தக்கதாக போர்த்துக்கீசர் கடற்சண்டையிற் கள்ளிக்கோட்டையரசனாற் தோற்கடிக்கப்பட்டனரென்னும் ஒரு போலிக்கதையையு முண்டாக்கினான். பண்டகசாலைத் தலைவன் அச்செய்தியை மறுத்தான். இதற்கிடையில் போர்த்துக்கீசரும் சிங்களப் போர்விரர்களுஞ் சேர்ந்து மலபார் கடற்படையைத் தாக்கி அதைத் தோற்கடித்தனர். பின்பு கொழும்பிலிருந்த முஸ்லிங்களைப் புவனேகபாகு துரத்திவிட அவர்கள் மாயதுன்னையின் இராச்சியத்துக்குட் போய்ச்சேர்ந்தனர். அவர்களின் உதவியைக்கொண்டு கள்ளிக்கோட்டை அரசனுக்குத் தனக்கு உதவி செய்யும்படி தூது அனுப்பிவிட்டு புவனேகபாகுவுக்கெதிரே சண்டை செய்வதற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்தான்.

மாயதுன்னைக்கு உதவிசெய்வதற்கு மூன்று சேனுதிபதிகளை யுடைய இன்னெரு சேனையைச் சாமோரின் அனுப்ப அதன் உதவி யுடன் மாயதுன்னை கோட்டையை முற்றுக்கையிட்டான் (1527). டி மெல்லோவின் தலைமையின்கீழ் ஒரு போர்த்துக்கீசப்படை புவ னேகபாகுவுக்கு உதவிசெய்வதற்காக அனுப்பப்பட்டது. அச்செய் தியை மாயதுன்னை கேள்விப்பட்டவுடன் சீதவாக்கைக்குத் திரும்பி னுன் போர்த்துக்கீசச் சேனுதிபதி மாயதுன்னையைப் பின்தொடர்ந்து தாக்க முயன்றபோது புவனேகபாகு அதற்கு உடன்படவில்லை. மாயதுன்னை தான் திறைகொடுப்பதாகவும் இனிமேல் புவனேக பாகுவுக்கெதிரே சண்டைசெய்வதில்லை என்றும் வாக்குப்பண்ணிய பொழுது போர்த்துக்கீசப்படை இந்தியாவுக்குத் திரும்பியது. 1536-ல் மீண்டும் மாயதுன்னை போருக்குக் கிளம்பினுன். போர்த்துக்கீசரின் படைத்துணை வந்துசேர்வதற்குமுன் கோட்டையைக் கைப்பற்ற வேண்டுமென்று தீர்மானஞ்செய்தான். கோட்டை நகரம் முதலைகள் நிறைந்த ஒரு வாவியினுற் சூழப்பட்டிருந்தது. நகரத்தின் உட்புற மாக அகழியும் மதில்களும் காணப்பட்டன. கோவையிலிருந்து **டிசூசா** என்பவனின் தலைமையில் ஒரு கடற்படை வருவதை அறிந்தவுடன் மாயதுன்னை பின்வாங்கினுன். டிசூசா கோவைக்குத் திரும்பினுன். அடுத்த ஆண்டில் (1537) மாயதுன்னைக்கு உதவி செய்வதற்காக சாமோரின் 2000 போர்வீரர்களும், 50 துப்பாக்கி களும், 50 கப்பல்களும் கொண்டுள்ள ஒரு பெரிய கடற்படையை அனுப்பினுன். வழியிற் சந்தித்த போர்த்துக்கீசக் கப்பல்களைத் தாக்கியும் இரு கப்பல்களைக் கைப்பற்றியும் வந்தன. உடனே மாயதுன்னை கோட்டையை முற்றுக்கையிட, புவனேகபாகு கோவைக்கு அறிவித்தான். மலபார்ப்படையை அழித்துவிடும் தீர் மானத்துடன் டிசூசா கோவையிலிருந்து புறப்பட்டான். இராமேஸ் வரத்துக்குச் சமீபத்திலுள்ள **வேடாலை** என்ற இடத்தில் நடை பெற்ற கடற்சண்டையில் மலபார்ப்படையைத் தோற்கடித்து போர்த் துக்கீசக் கைதிகளையும் மீட்டதோடு அநேக பொருள்களையும் சூறை யாடினுன். இத்தோல்வியைக் கேள்வியுற்ற மாயதுன்னை தமைய னேடு சமாதானம்பேசித் திரும்பினுன். மாயதுன்னைக்கெதிரே ஒன்றை யுஞ் செய்யப் புவனேகபாகு விருப்பங்காட்டாமையால் டிசூசா தான் வந்தசெலவைப் பெற்றுக்கொண்டு கோவைக்குத் திரும்பினுன்.

புவனேகபாகு தனது மகளை தனது வமிசத்திலுள்ள வித்திய பண்டாரன் என்ற ஒருவனுக்கு விவாகஞ்செய்துவைத்தான். புவ னேகபாகுவின்பின் கோட்டை இராச்சியத்துக்குத் தனக்குரிய உரிமை யில்லாமற்போகுமென நினைந்து மாயதுன்னை மீண்டும் கோட்டை

யைக் கைப்பற்றும் நோக்கத்துடன் முற்றுக்கையிட்டான். றைகம் பண்டாரனிறந்தபின் அப்பகுதியையும் தன்னுடைய இராச்சியத்துடன் சேர்த்துக்கொண்டமையால் மாயதுன்னை அங்குள்ள போர் வீரர்களையுங் கொணர்ந்து தன்னுடைய சைனியத்தைப் பலப்படுத்தினன் அந்தப் பெரிய சேனையுடன் கோட்டை இராச்சியத்தின் பல பகுதிகளையுஞ் சூறையாடி நகரத்தைநோக்கிச் சென்றுன் (1539). சாமோரின் அவனுடைய வேண்டுகோட்கிணங்கி ஒரு படையை அனுப்ப அது புத்தளத்திலிறங்கி சீதவாக்கைக்குச் சென்றது. வித்தியபண்டாரன் புவனேகபாகுவின் சேனைக்குத் தலைமைதாங்கி நின்று மாயதுன்னை முன்னேருவண்ணம் தடுத்தான். போர்த்துக்கீசத் தேசாதிபதியும் **பெரீரா** என்ற தளபதியை ஒரு சேனையுடன் அனுப்பினன். மாயதுன்னை தோல்வியுற்றுத் திரும்பிச் செல்ல வேண்டியிருந்தது. பெரீரா மாயதுன்னையினுடைய இராச்சியத்துட் புகுந்தவுடன் மாயதுன்னை சரணுகதியடைய நேரிட்டது. மாயதுன்னையின் போர்ச்சேவையிலிருந்த நான்கு மலபார்த் தளபதிகளையும் மேலும் 6 தளகத்தர்களையும் தன்னிடம் கொடுத்தால் சமாதானஞ் செய்துகொள்வதாகப் பெரீரா கூறினன். தனக்கு உதவிபுரிவதற்காக வந்தவர்களை அவ்வண்ணஞ்செய்வது தகாதமுறையென மாயதுன்னை சுட்டிக்காட்டியும் அவன் அதற்கு இணங்காமையால், சாமோரின் அனுப்பிய தளபதிகளைக் கொன்று அவர்களுடைய தலைகளை பெரீராவுக்கு அனுப்பினன். அதன்பின் சமாதானப்பேச்சு நடைபெற்றது. மாயதுன்னை தான் கைப்பற்றிய பகுதிகளைத் திருப்பிக் கொடுத்ததோடு யுத்தத்தின் செலவையுங் கொடுக்கவேண்டியதாயிற்று. இச்சம்பவத்தின்பின் சாமோரினிடமிருந்து ஒரு உதவியையும் மாயதுன்னை பெற்றுக்கொள்ளவில்லை.

முதுமைப் பருவமடைந்தமையினுல் தனக்குப்பின் தன்னுடைய இராச்சியம் யாருக்குச் சேரவேண்டுமென்பதைப்பற்றி ஆலோசிக்கலானுன். அக்காலத்திலிருந்த வழக்கப்படி அரசுரிமை மாயதுன்னைக்கே உரியது. அதற்கு விருப்பமில்லாமல் புவனேகபாகு தன்னுடைய பேரனுகிய தர்மபாலனுக்கு அரசுரிமையையளிக்கத் தீர்மானஞ் செய்தான். தர்மபாலனுக்குப் பாதுகாப்பு அளிக்கும்படி போர்த்துக்கல் அரசனைக் கேட்டுக்கொண்டான். பின்பு கோட்டையிலிருந்த போர்த்துக்கீசரின் ஆலோசனைப்படி தர்மபாலனைப்போன்ற தங்க உருவச்சிலையொன்றைச் செய்து அதற்கு முடிசூட்டும்படி போர்த்துக்கல் அரசனுக்கு அனுப்பினுன் (1542). போர்த்துக்கல் நாட்டிலுள்ள பிரபுக்களின் முன்னிலையில் லிஸ்பன் நகரத்தில் அத்

தங்கச்சிலேக்கு அந்நாட்டரசன் முடிசூட்டினுன். போர்த்துக்கல் அரச ஊனச் சந்தோஷப்படுத்துவதற்காக கிறிஸ்த குருமார்களேயும் இலங் கைக்கு அனுப்பும்படி புவனேகபாகு கேட்டுக்கொண்டான். புவ னேகபாகு தானே கிறிஸ்தசமயத்தைத் தழுவி மற்றவர்களுக்கு முன் மாதிரி காட்டுவதாயும் கூறியிருந்தான். கறுவா வியாபாரத்தையுங் கைப்பற்றி கிறிஸ்தமார்க்கத்தையும் பரப்புவதற்கு ஏற்ற தருணங் கிடைத்ததைப்பற்றிப் போர்த்துக்கீசர் மகிழ்ச்சியடைந்தனர். கிறிஸ்த சமயத்தைப் பரப்புவதற்குப் புவனேகபாகுவின் ஆதரவு கிடைக்கு மென்ற மகிழ்ச்சியினுல் இலங்கையிலுள்ள போர்த்துக்கீசரின் மித மிஞ்சிய செய்கைகளேக் கண்டிப்பதற்காகச் சில கட்டளேகளே விடுத் தான். 1543-ல் தர்மபாலனின் தங்கச்சிலே திருப்பி அனுப்பப்பட்ட பொழுது கிறிஸ்த குருமார்களும் இலங்கைக்கு அனுப்பப்பட்டனர். அச்சமய குருமார்கள் கோட்டை அரசனேடு பேசியபின் அதிருப்தி யடைந்தனர். கோட்டை இராச்சியத்தில் மார்க்கப்பிரசாரஞ் செய்வ தற்கு அரசன் அனுமதியளித்ததல்லாது தானே அல்லது தன் னுடைய பிரசைகளோ கிறிஸ்தமார்க்கத்துக்குச் சேர்வதற்கு அவன் இணங்கவில்லே. அவன் கிறீஸ்தசமயத்தைத் தழுவியிருந்தால் அவ னுடைய பிரசைகள் மாயதுன்னே பக்கஞ் சேர்ந்திருப்பார்கள்.

புவனேகபாகுவுக்குப் பின் தர்மபாலன் அரசனுக வருவதை மாயதுன்னே விரும்பாது போருக்கு ஆயத்தஞ்செய்தான். புவனேக பாகுவின் இரண்டாவது மனேவியின் இரு புதல்வர்களும் இராச்சி யத்தைக் கைப்பற்ற வேண்டுமென்று எண்ணங்கொண்டனர். தன் னுடைய இரு புதல்வர்களேயும் சமாதானப்படுத்தும் நோக்கத்துடன் யாழ்ப்பாணத்துக்கும், கண்டிக்கும் அரசர்களாக நியமிக்கும்படி புவனேகபாகு போர்த்துக்கீசரைக் கேட்டுக்கொண்டான். ஆனுல் அவனுடைய மூத்த புதல்வன் கோவைக்குச் சென்று கிறிஸ்தவ ஞகிறதற்கு ஞானஸ்நானம் பெற்றுல் போர்த்துக்கீசர் உதவிசெய் வார்களென நினேந்து அங்கே செல்வதற்கு யோசனேசெய்தான். புவனேகபாகு இதைக் கேள்வியுற்றவுடன் இரகசியமாக அவனேக் கொலேசெய்வித்தான். இரண்டாவது மகன் கோவைக்கு ஓடித் தப் பிக்கொண்டான். புவனேகபாகுவின் சகோதரியின் மகனும் அவ னுடனேயே அங்கு சென்றுன். போர்த்துக்கீசர், தங்களுடைய ஆதரவிலிருந்த இரு அரசிளங்குமரர்களேயும் சிங்காசனமேற்றுவதாக யோசனேசெய்திருக்கிறுர்களென்பதை அறிந்த புவனேகபாகு அதிக சீற்றங்கொண்டான். அவனுடைய இராச்சியத்தில் வசித்த போர்த் துக்கீசரின் மிதமிஞ்சிய வாழ்க்கையும் ஒழுங்கீனமும் அவனுக்கு

வெறுப்பையுண்டாக்கியது. தன்னைக் கிறிஸ்தவனாகும்படி போர்த்துக்கல் அரசனும், குருமாரும், தேசாதிபதியும் கேட்டுக்கொண்டதும் அவனுக்கு அதிருப்தியை உண்டாக்கியது. அந்நிலையில் மாயதுன்னை புவனேகபாகுவோடு உறவுகொண்டு கண்டியைக் கைப்பற்றும் எண்ணத்தைப் பூர்த்திசெய்துகொள்ள ஏற்ற தருணமென நினைத்தான்.

மாயதுன்னையின் சூழ்ச்சிகளைக் கேள்வியுற்ற கண்டியரசனாகிய விக்கிரமபாகு போர்த்துக்கீசரை வரவழைத்து, திருகோணமலையில் பண்டகசாலை யொன்றை நிறுவுவதற்கும் உத்தரவளித்து தான் போர்த்துக்கல் அரசனுக்குத் திறைகொடுப்பதாகவும் உடன்பட்டான். ஆனால் போர்த்துக்கீசரின் உதவி உடனே வராமையால் அவ்வரசன் மாயதுன்னையோடு வெகுமதிகளைக் கொடுத்துச் சமாதானஞ் செய்துகொண்டான். புவனேகபாகுவின் மனநிலை மாறியிருப்பதைப் போர்த்துக்கீசர் அறிந்து மாயதுன்னைக்கு உதவிபுரிவதாகப் பயமுறுத்தினர். மாயதுன்னை புவனேகபாகுவுக்கெதிரே போருக்கெழுந்தான். புவனேகபாகு போர்த்துக்கல் அரசனுக்கும், தேசாதிபதிக்கு மறிவித்தவுடனே காஸ்ரோ என்னும் தளபதி புவனேகபாகுவுக்கு உதவிசெய்வதற்காக அனுப்பப்பட்டான் (1550). போர்த்துக்கீசப் படை சீதவாக்கைக்குட் சென்றவுடன் மாயதுன்னை ஓடி ஒளித்தான். மீண்டும் வேண்டிய நடவடிக்கை எடுப்பதற்குமுன் கத்தோலிக்க குரு ஒருவன் காஸ்ரோவைக் கண்டிக்குப் போகும்வண்ணம் கேட்டமையினல் அவன் அங்கே செல்லவேண்டியதாயிற்று. ஆனல் அவன் கண்டி நகரத்தைச் சேரமுன் காத்திராப்பிரகாரம் கண்டி மக்களாற் தாக்கப்பட்டு அதிக நட்டமடைந்தான். மாயதுன்னை அவனுக்கு ஆதரவளித்து அவனுக்கு நேர்ந்த இடையூறு புவனேகபாகுவின் சூழ்ச்சியினலேயே சம்பவித்ததெனக்கூறி அவனுடைய மனத்தைத் திருப்பினன்.

அவ்விதமான சூழ்ச்சியில் புவனேகபாகு ஈடுபட்டதென்றதனலும், கிறிஸ்தவர்களை வதைத்ததனலும் நட்டஈடாகப் பெருந்தொகையான பணத்தைப் புவனேகபாகு கொடுக்கவேண்டுமெனப் புதிதாக நியமிக்கப்பட்ட நொரன்கா என்னும் போர்த்துக்கீசத் தேசாதிபதி 1550-ம் ஆண்டு கோட்டைக்கு வந்து கேட்டான். தன்னிடம் அவ்வளவு பெருந்தொகையான பணமில்லையென்று புவனேகபாகு கூறியபொழுது அவன் அதை நம்பவில்லை. அந்நிலையில் மாயதுன்னை தான் போர்த்துக்கல் அரசனுக்குத் திறைகொடுக்க விருப்பங்காட்டியபொழுது நொரன்கா ஒரு தூதனைக் கோவைக்கு அனுப்பும்படி சொல்ல அவன் தனது புதல்வனை அனுப்பினன். புவனேக

பாகுவும் ஒரு தூதனை அவ்வண்ணமே அனுப்ப இருபகுதியாரும் கோட்டை இராச்சியத்தின் உரிமையைப்பற்றிக் கூறியவை முரண் பாடாகக் காணப்பட்டமையினுல் **நொரன்கா** ஒரு நீதிபதியை இலங் கைக்கு அனுப்புவதாகத் தீர்மானித்தான். இதற்கிடையில் புவனேக பாகு போர்த்துக்கீசப் போர்வீரன் ஒருவனுல் சுட்டுக்கொல்லப்பட் டான் (1551). அவனுடைய பேரனுன தர்மபாலன் சிம்மாசன மேறியவுடன் மாயதுன்னை போருக்கெழுந்தான்.

புவனேகபாகு இறக்கும்பொழுது பலம்குன்றி முதுமைப்பருவ மடைந்திருந்தான். அவன் தளரும் மனத்தன்மையும், திடமற்ற இயல்பும், சந்தேகவுணர்ச்சியு முடையவன். போர்த்துக்கீசருக்குச் சிநேகமுறையில் நடந்துகொண்டபொழுதிலும் தான் வாக்குப்பண் ணியவைகளை நிறைவேற்றத் தவறினுன். கத்தோலிக்கக் குருமார் களை வரவழைத்து, அவர்கள் மதபோதனை செய்யாது இரகசியமா கத் தடைசெய்தான். போர்த்துக்கீசரின் உதவியுடன் மாயதுன்னை யைப் பயமுறுத்தியதல்லாது, அவனைத் தண்டிக்க அவர்கள் விரும் பியபொழுது அதற்கு இணங்கவில்லை. மாயதுன்னையின் சூழ்ச்சி களை அறிந்துகொள்ள அவனுல் முடியவில்லை. அவனுடைய திட மற்ற குணமும், தவருன செய்கைகளும் அவனுக்கும் அவனுடைய இராச்சியத்திற்கும் கெடுதியை விளைத்தன. ஆனுல் அவனுடைய சாதுவான இயல்பும், தோற்றமும், நல்ல சுபாவமும் மக்களுடைய மனத்தைக் கவர்ந்தன. அவன் 29 வருடகாலம் ஆட்சிபுரிந்தான். போர்த்துக்கீசருடைய ஆதிக்கம் பலமடைவதற்கு இவனே காரணமா யிருந்தான்.

### வினுக்கள்

1. 1520-ல் போர்த்துக்கீசரை இலங்கையிலிருந்து நீக்கிவிடச் செய்த முயற்சிகள் எவ்வாறு பயனடைந்தன.
2. போர்த்துக்கீசர் தங்களுடைய ஆதிக்கத்தை நிறுவுவதற்கு, புவனேக பாகு எவ்வாறு காரணமாயிருந்தான்?
3. ''கோட்டை இராச்சியத்திலே ஏற்பட்ட பிளவுகளே அதனுடைய வீழ்ச்சிக்குக் காரணமாயிருந்தன'' இக்கூற்றின் உண்மையை ஆராய்க.

---

# 4. கோட்டை இராச்சியத்துக்குப் போர்த்துக்கீசர் பாதுகாப்பளித்தல்

புவனேகபாகு கொலையுண் டிறந்ததைப்பற்றி அறிந்தவுடன் **நொரன்கா** அதைப்பற்றி விசாரணை செய்வதற்காகக் கோட்டை இராச்சியத்துக்கு வந்தபொழுது அரசனின் பொக்கிஷத்தையுங் கவரும் நோக்கமும் அவனுடைய மனத்திலிருந்தது. தருமபாலன் கோட்டை அரசனுகவிருந்தபொழுதிலும் அவன் சிறுவனுனபடியால் அவனுடைய தந்தையாகிய விதியபண்டாரன் இராசப்பிரதிநிதியாயிருந்து பரிபாலனத்தை நடத்தினுன். தர்மபாலன் கிறிஸ்தவனுக வந்தபின்னரே போர்த்துக்கீசர் அவனை அரசனுக அங்கீகரித்துக் கொள்வரென நொரன்கா கூறியபொழுது, மாயதுன்னை போருக்கெழுந்து நிற்குமளவும் அவன் கிறிஸ்தவனுக மாறிக்கொள்ள முடியாதென விதியபண்டாரன் கூறினுன். அதுவுமல்லாமல் மாயதுன்னை கைப்பற்றிய பிரதேசங்களை திருப்பிக்கொடுப்பானுகில் புவனேகபாகுவின் பொக்கிஷங்கள் நொரன்காவிடம் ஒப்படைக்கப்படுமெனக் கூறினுன். இந்நிபந்தனைகளுக்கிணங்கிய நொரன்கா மாயதுன்னையிடமிருந்து அவன் கைப்பற்றிய இடங்களைப் பிடிப்பதற்கும், சீதவாக்கையை அழித்துவிட்டுத் தர்மபாலனுடைய பாதுகாப்புக்காக ஒரு படையைக் கொடுப்பதற்கும் ஆயத்தஞ்செய்தான்.

ஆனுல் நொரன்கா கோட்டையின் பொக்கிஷத்தைக் கைப்பற்றுவதிலேயே முனைந்துநின்றமையால் விதியபண்டாரன் நிதியின் ஒருபகுதியையும், ஆலயங்களின் பொக்கிஷங்களையுமீந்து அவன் வாக்குப்பண்ணியவைகளை நிறைவேற்றும்படி கேட்டான். நொரன்கா வழியிலுள்ள கோட்டைகளையுங் கைப்பற்றிக்கொண்டு சீதவாக்கையையடைந்தபொழுது மாயதுன்னை ஒளித்து ஓடிவிட்டான். உடனே அங்கிருந்த அரண்மனையையும், விருந்தை என்னும் இந்து ஆலயத்தையும் அழித்துப் பழிவாங்கினுன். கோட்டை இராச்சியத்தின் மக்களிலநேகர் மாயதுன்னைபக்கம் சேர்ந்ததைக்கண்டு நொரன்கா கோட்டைக்குத் திரும்பினுன். பின்பு புவனேகபாகுவினுடைய பொக்கிஷத்தைக் கைப்பற்றுவதற்குச் செய்த முயற்சியும் பயனற்றதாகையால் நொரன்கா விதியபண்டாரனைக் கைதிசெய்ய யோசனைசெய்தபொழுது அவன் ஓடி ஒளித்தான். அந்நிலையில் இந்தியாவில் போர் தொடங்கிவிட்டதென வறிந்த நொரன்கா போர்த்துக்கீசப் படையொன்றைக் கோட்டையில்விட்டுப் புறப்பட நேர்ந்தது.

விதியபண்டாரன் உடனே இராச்சிய பரிபாலனத்தை நடத்த ஆரம்பித்தான். போர்த்துக்கீசர்மீது பழிவாங்கும் நோக்கத்துடன் கத்தோலிக்க ஆலயங்களையும் அழித்து கிறீஸ்தவர்களையும் வதைத்து போர்த்துக்கல் அரசனுக்கு இறுக்கவேண்டிய திறைப்பணத்தைக் கொடுக்கவும் மறுத்தான். இவ்வாறு போர்த்துக்கீசருடைய ஆதிக்கம் குறைக்கப்பட்டது. போர்த்துக்கல் அரசன் நொரன்காவின் சீர்கேடான செய்கைகளைக் கேள்வியுற்று கோட்டை இராச்சியத்திலிருந்து கைப்பற்றிய பொக்கிஷங்களை திருப்பிக்கொடுக்குமாறு கட்டளையிட்டான். நொரன்கா ஒரு தூதுவன்மூலம் விதியனேடு சமாதானப்பேச்சு நடத்தி விதியனை இராசப்பிரதிநிதியாக ஏற்றுக்கொண்டான். அவனும் அவர்கள்மீதுள்ள சினந்தணிந்து திறைகொடுப்பதற்கும் சம்மதித்து கிறிஸ்தவர்களுக்கும் தீமைகள் இழைக்காதுவிட்டான். பொக்கிஷத்தின் ஒருபகுதியும் திருப்பிக் கொடுக்கப்பட்டது.

கிறீஸ்தவர்களுக்குத் தான் தீங்கிழைக்கவில்லையென விதியன் வாக்குப்பண்ணியிருந்தும் அவர்களுக்கு அநேக இடையூறுகளையுண்டாக்கினமையால் அங்கிருந்த குருமார் போர்த்துக்கல் அரசனுக்குப் பல முறைப்பாடுகளை அனுப்பினர். அரசன் அனுப்பிய கட்டளையின்பிரகாரம் இராசப்பிரதிநிதி ஒரு புதிய தளகர்த்தனையும் பெரிய படையையும் கொழும்புக்கு அனுப்பினுன். 1554-ல் புதியவொரு கோட்டையுங் கட்டப்பட்டது. இதனுல் விதியன் அதிக வெறுப்பும் கோபமுங்கொண்டு, கிறீஸ்தவர்களை வதைக்கத்தொடங்கினுன். இதற்கிடையில் அவன் தன்னுடைய மகனுகிய தர்மபாலனை நீக்கிவிட்டுத் தானே அரசனுக வருவதற்கு யோசனை செய்திருக்கிருன் என்பதும் சந்தேகத்துக்கு இடமாயிற்று. கோவைக்கு இச்செய்திகள் கிடைத்ததும், விதியனைக் கைதிசெய்து தர்மபாலனை சிங்காசனமேற்றும்படி போர்த்துக்கீச இராசப்பிரதிநிதி கட்டளையிட்டான். அக்கட்டளையின்பிரகாரம் **டி மெல்லோ** என்பவன் அவனைக் கைதிசெய்து கொழும்புக்குக் கூட்டிச்சென்ருன். அவனுக்காக இராசப்பிரதிநிதியாகக் கடமையாற்றிய தமீதசூரியாவோ அல்லது தர்மபாலனே விதியனுக்காக அனுதாபங்காட்டி அவனை விடுதலைசெய்ய முயற்சிக்கவில்லை. இருட்டறையிற் போடப்பட்டிருந்த விதியன் தப்பி ஓடத்தக்கதாக அவனுடைய மனைவியொரு சூழ்ச்சி செய்தாள். அவனிருந்த இருட்டறைவரைக்கும் இரகசியமாக உண்டாக்கப்பட்ட சுரங்கத்தின்மூலமாக அவன் வெளியேறினுன். பின்பு பெரிய படையொன்றைத் திரட்டி காலிமார்க்கமாக அவன் அப்படையோடு செல்லுகையில் வழியில் காணப்பட்ட கிறீஸ்ததேவாலயங்களையும் கிறீஸ்தவர்களையும் அழித்தான். திரும்பிவந்து பெலின்டா

என்னுமிடத்திலே தங்கிநின்று போர்த்துக்கீசருக்கெதிரே சண்டை செய்ய எத்தனித்தான். கோட்டையை அவன் முற்றுக்கையிட்ட பொழுதிலும் அவனால் அதைக் கைப்பற்ற முடியவில்லை. தனக்கு வாய்த்த தருணமென நினைந்து மாயதுன்னை போர்த்துக்கீசரோடு நட்புப்பூண்டு தான் போர்த்துக்கல் அரசனுக்குத் திறைகொடுப்பதாகக் கூறினான். அவனுடைய விருப்பப்படி தமீதசூரியாவைக் கோவைக்கு அனுப்பச் சம்மதித்தனர். கோவைக்கு அனுப்பப்பட்ட இராசப்பிரதிநிதி போர்த்துக்கீசத் தேசாதிபதிக்கு தான் ஒருவிதமான குற்றமுஞ் செய்யாதவனென விளங்கப்படுத்தியவுடன் அவன் தமீத சூரியாவுக்கு விடுதலையளித்தான்.

பின்பு மாயதுன்னையின் மகனான திகிரிபண்டாவின் தலைமையின்கீழ் அனுப்பப்பட்ட பெருஞ்சேனை பெலின்டாவுக்குச் சென்று அவனைத் தோற்கடித்தது. தன்னிடமிருந்த பொக்கிஷத்தோடு விதியன் யாழ்ப்பாணஞ்சென்று அவ்வரசனுடைய ஆதரவைப் பெற்றான். ஆனால் அவன் திரும்பிவந்து சண்டைசெய்வதற்கு முன் தற்செயலாக நடைபெற்ற குழப்பத்தில் கொலையுண்டிறந்தான். விதிய பண்டாரன் திடகாத்திரமுள்ள தேகமும், தைரியமுள்ள மனமும், சண்டைசெய்யும் சுபாவமுமுடையவனாவான். அவன் புவனேகபாகுவின் மருகனாயிருந்து பின்பு தர்மபாலனின் தாயாரிறக்க மாயதுன்னையின் மகளை மணஞ்செய்து அவனுக்கும் மருகனாக விளங்கினான். அதிகம் அவாவுடையவனாகையால் எல்லோராலும் வெறுக்கப்பட்டான். சுயநம்பிக்கையும், யுக்தியுமுடையவன். அவன் இறந்தது கோட்டை இராச்சியத்துக்கு ஒரு துர்அதிஷ்டமென்றே கூற வேண்டும். மாயதுன்னை கோட்டையைக் கைப்பற்றும் எண்ணம் பூர்த்தியாவதற்குத் தடையாகவிருந்தவன் விதியனாதம். தன்னுடைய மகனான தர்மபாலனுக்குப் பாதுகாப்பாக ஒருவருமில்லாமல் போர்த்துக்கீசர் மாத்திரமே யிருந்தமையினால் ஈற்றில் கோட்டை இராச்சியம் அவர்கள் கையிற் சிக்கியது.

விதியன் இறந்தவுடனே போர்த்துக்கீசரின் ஆதரவோடு கோட்டை இராச்சியத்துக்கு அரசனானான். தான் தன் மனைவியோடும் அரண்மனையிலுள்ள பிரபுக்களோடுஞ் சேர்ந்து கிறிஸ்தவனாகிறதற்குத் தீர்மானஞ் செய்தான். தன்னுடைய பிரசைகள் மாயதுன்னையோடு சேர்ந்துகொள்வார்கள் என்ற பயத்தினாலேயே இதுவரையும் அவன் ஞானஸ்நானம் பெறாமலிருந்தான். இப்பொழுது தமீதசூரியாவும் இராதாராக்ச பண்டிதரும், கரையோரப்பகுதியிலுள்ள சனங்களும் கிறிஸ்தவர்களாக மாறினமையால் தானும் ஞானஸ்நானம் பெற்

றுக் கிறிஸ்தவனுனுன் (1557). இவனும் இவனுடைய மனைவியும் டொன்யூவான், டோனுகதரினு என்று அழைக்கப்பட்டனர். கோட்டையிலுள்ள மக்களிலநேகரும் கிறிஸ்தவர்களானுர்கள். 12 கிறிஸ்த கோயில்களும் அங்கே கட்டப்பட்டன. மற்றும் சிலர் மாயதுன்னை பக்கஞ் சேர்ந்தனர்.

இத்தகைய தருணத்தை எதிர்பார்த்திருந்த மாயதுன்னை தானே கோட்டை இராச்சியத்திற்கு உரிமையுள்ளவனெனக் கூறி மக்களிடம் சமயக்கிளர்ச்சியை யுண்டுபண்ணி அவர்களுடைய ஆதரவைப் பெற முயன்ருன். கோட்டை இராச்சியத்திலுள்ள சமயத்தலைவர்கள் அவனைச் சார்ந்தபொழுது அவர்களிலநேகர் கொலைசெய்யப்பட்டனர். மாயதுன்னையும் அவனுடைய மகன் இராசசிங்கனும் பெருஞ்சேனையோடு சென்று கோட்டையை முற்றுக்கையிட்டனர். கோட்டையைச் சுற்றியுள்ள நிலங்களைக் கைப்பற்றி அந்நகரத்திற்கு உணவுப்பொருட்கள் செல்லாவண்ணம் தடைசெய்தனர். போர்த்துக்கீசப் படைகளின் உதவியோடு தர்மபாலன் எதிர்த்துச் சண்டை செய்தான். இந்தியாவிலிருந்து கூடிய படைத்துணையைப் பெற்றவுடன் போர்த்துக்கிசர் சீதவாக்கைப் படைகளைத் தாக்கித் துரத்திவிட்டனர். மாயதுன்னையை முற்ருகத் தோற்கடிக்கப் போர்த்துக்கீசரிடம் அந்நேரத்தில் போதிய படைப்பலமில்லை. தன்னுடைய இராச்சியம் சூறையாடப்பட்டதையும், தனது பிரசைகள் மாயதுன்னை பக்கஞ் சேர்வதையும் கண்ணுற்ற தர்மபாலன் சோர்வடைந்து களனிக்குப் போயிருந்தான். அத்தருணத்தில் அவனைக் கைதிசெய்ய இராசசிங்கன் எத்தனித்தபொழுது போர்த்துக்கிசரின் உதவியிருந்தமையினுல் தான் கருதியதைச் செய்துமுடிக்க முடியவில்லை. மாயதுன்னை சீதவாக்கைக்குத் திரும்பி வரவேண்டியிருந்தது.

யாழ்ப்பாணத்திற் போர்த்துக்கீசர் போர்நிகழ்த்திய தருணத்தில் மாயதுன்னையும் இராசசிங்கனும் மீண்டும் கோட்டைக்குப் படையெடுத்துச் சென்றனர். போர்த்துக்கீசரின் படைகள் ஒன்ருகச் சேராமற் தடுப்பதற்காக மாயதுன்னை கொழும்புக் கோட்டையையும், இராசசிங்கன் கோட்டை நகரத்தையும் தாக்கினர். போர்த்துக்கீசத் தளபதி இராசசிங்கனைப் பின்வாங்கச்செய்தான். மாயதுன்னையும் மகனும் சீதவாக்கைக்குத் திரும்பிச்செல்ல நேரிட்டது. ஆனுல் **1562**-ல் மீண்டும் மாயதுன்னை குதிரைப்படை யானைப்படைகளைக் கொண்டுள்ள பெருஞ்சேனையோடு சென்று கொழும்பையும் கோட்டையையும் ஒரேநேரத்தில் தாக்கும் நோக்கத்துடன் முல்லேரியாவா என்ற இடத்திற் றங்கினுன். போர்த்துக்கீசரும் தங்களுடைய சேனை

யைத் திரட்டிச் சண்டைக்குச் சென்றனர். ஆனால் இராசசிங்கனுடைய சேனை போர்த்துக்கீசரை சூழ்ந்துகொண்டமையினால் அப்போர்வீரர்கள் தப்பி ஓடுவதும் கஷ்டமாகவிருந்தது. 125 போர்வீரர்வரையில் கொழும்புக்குத் தப்பி ஓடினர். ஏனையோர் மாண்டனர். போர்த்துக்கீசர் இச்சண்டையிற் பெருந்தோல்வியுற்றனர். போர்த்துக்கீசர் மீண்டும் வருவதற்கு முன்பு கோட்டை நகரத்தை முற்றுக்கையிட்டான். அந்நகர மக்களும் இராசசிங்கனுடைய பக்கத்தைச் சார்ந்தனர். களனியும் இராசசிங்கனாற் கைப்பற்றப்பட்டது. போர்த்துக்கீசருக்கும் பெருங்கஷ்டமான நிலைமையேற்பட்டது. அங்கு வாழ்ந்த மக்களும் இடர்ப்பட்டனர். இரு கோட்டைகளையும் சிறிய படையோடு பாதுகாப்பது கஷ்டமெனவுணர்ந்து போர்த்துக்கீசர் கோட்டை நகரத்தைக் கைவிட்டு தர்மபாலனையும் தம்முடன் அழைத்துக்கொண்டு கொழும்புக்குச் சென்றனர். பழைய இராசதானியாகிய கோட்டை பாழடைந்த நிலையிலிருந்தது. தர்மபாலனும் போர்த்துக்கீசரின் ஆதரவிற் தங்கியிருக்கவேண்டியவனானான். அவன் நாடும், பிரசைகளுமற்று பெயரளவில் அரசனாகவிருந்தான். டொன்யூவான் தர்மபாலனுடைய மூத்த மனைவியிறக்க அவன் பின்பு கண்டியரசனுடைய மகள் தோனுமாகரிடாவை மணந்துகொண்டான். அவன் இராச்சிய பரிபாலனத்தையிழந்து போர்த்துக்கீசரின் உதவியுடன் கொழும்பிலிருக்கும்பொழுது போர்த்துக்கீசர் சிலநேரங்களில் அவனை பரிகசித்தும் மற்றுஞ் சிலநேரங்களில் முகஸ்துதிகூறியும் அவமதித்தனர். மாயதுன்னையின் இராச்சியங்களிற் பலபகுதிகள் போர்த்துக்கீசராற் சூறையாடப்பட்டன. டொன்யூவானுக்காகவே போர்த்துக்கீசர் சண்டை செய்கின்றார்களென்றெண்ணி மாயதுன்னை அவனைக் கொலைசெய்வதற்குச் சூழ்ச்சிசெய்தான். ஒரு போர்த்துக்கீசன்மூலம் தர்மபாலனுக்கு நஞ்சூட்டச்செய்த சூழ்ச்சி பயனடையவில்லை. அவன் மாயதுன்னையிடம் பணத்தைப் பெற்றுக்கொண்டு நஞ்சை வெளியே ஊற்றிவிட்டுத் திராட்சரசத்தைக் கோப்பையில் நிறைத்து அரசனிடங் கொடுத்தான். கோப்பையிலிருந்த சிறுதுளி நஞ்சு அப்பானத்தோடு கலந்திருந்தமையினால் அதை அருந்திய காரணத்தால் அவன் பற்களை இழக்கவேண்டி நேரிட்டது. டொன்யூவான் தர்மபாலனுடைய நிலைமை பரிதாபப்படக்கூடியதாகவிருந்தது. தன்னுடைய நாட்டிலே அதிகாரமற்று போர்த்துக்கீசரிலே தனது வருமானத்துக்குத் தங்கியிருக்கவேண்டிய நிலையேற்பட்டது. போர்த்துக்கீசத் தளபதிகளும் போர்வீரர்களும் கடன்கேட்டுப் பரிகாசஞ்செய்தனர். பணக்கஷ்டத்தினிமித்தம் தன் பொறுப்பில் பிறநாடுகளுக்குக் கறுவா அனுப்புவதற்கு உத்தரவளிக்கும்படி போர்த்துக்கல் அரசனைக் கேட்டபொழுது

அதற்கு அரசன் சம்மதியாது அவனுக்குக்கொடுத்த வேதனத்தைக் கூட்டிக்கொடுத்தான். ஆனால் டொன்யூவான் கொழும்பிலுள்ள ஓர் அரண்மனையில் வெளித்தோற்றத்துக்கு அரசனுக்குரிய மரி யாதைகளோடு வசித்துவந்ததல்லாது அரசனுக்குரிய அதிகாரமேதை யும் கையாளவில்லை. அவன் கத்தோலிக்க சமயத்திலதிக பற் றுடையவனுகையால், கோயில் நிலங்களைப் போர்த்துக்கீசக் குருமா ருக்குப் பாடசாலைகள் கட்டுவதற்காக மனப்பூர்வமாக ஈந்தான். இரண்டாவது மனைவியிறந்தவுடன் தோனு இசபெலாவை மூன்ருவது மனைவியாக்கினுன். ஆனுல் அரசுரிமையைப் பெறுவதற்கு ஒரு மகவாகுதல் பிறக்கவில்லை. ஆகையால் மாயதுன்னையும் இராச சிங்கனும் தனக்குப்பின் அரசுரிமையைப் பெற்ருல் கிறிஸ்தசம யத்தை அறவே ஒழித்துவிடுவார்கள் என்ற அச்சத்தினுலும், போர்த் துக்கீசர் தன்னை அரசனுகப் பாதுகாத்ததற்காக நன்றிபாராட்டும் முகமாக, தான் சந்ததியில்லாமலிறந்தால் தன்னுடைய இராச்சிய உரிமை போர்த்துக்கல் மன்னனுக்கே சேரவேண்டுமென்று இறுதிச் சாதனத்தை எழுதிவைத்தான் (1580).

மாயதுன்னை வயோதிபமடைந்தமையினுல் தனது மகன் இராச சிங்கனே தனக்குப்பின் அரசனுகவேண்டுமென்று தீர்மானஞ்செய் தான். சீதவாக்கையும், றைகமாவும், கோட்டைநகரமும் தம் வச மிருப்பதால், கொழும்பையும், கண்டியையும் கைப்பற்றினுல் முழு இலங்கைக்கும் சக்கரவர்த்தி யாகலாமென இராசசிங்கன் நினைந் திருந்தான். ஆகையால் பெருஞ்சேனையொன்றைத் திரட்டிக்கொண்டு 1579 தொடக்கம் இரண்டு ஆண்டுகளாகக் கொழும்பைப் பலமுறை முற்றுக்கையிட்டும் அதைக்கைப்பற்ற முடியவில்லை.

1597-ம் ஆண்டு வைகாசி மாதம் 27-ந் திகதி கோட்டை இராச்சியத்தை ஆண்டுவந்த சிங்கள அரசர்களுள் கடைசி அரச னுன டொன்யூவான் மகாபண்டாரா (தர்மபாலன்) இறந்தான். இலங்கைச் சரித்திரத்தில் எவரும் பரிதாபப்படக்கூடிய நிலையி லிருந்த அரசனுவான். தான் அதிகம் அன்புபாராட்டிய தர்மபாலன் என்ற பௌத்திரனை அரசனுக்குவதற்குப் புவனேகபாகு செய்த தீர்மானம் நாட்டுக்கு அளவற்ற துன்பத்தைக் கொண்டுவந்ததென லாம். அதனுல் வெகுழ்ச்சியடைந்த மாயதுன்னை பகைமைகொண் டிருந்தான். அவன் சிறுபராயத்தவனுயிருந்தமையால் ஆரம்பத்தில் விதியபண்டாரன் இராசப்பிரதிநிதியாக ஆண்டான். பின்பு அவன் ஆளும் பருவமடைந்ததும் அவன் ஆளுவதற்கு அவன்வசம் இராச்சிய மில்லாமற்போனது. அவனுடைய சீவனத்திற்கும் அவன் போர்த்துக்

கீசரிற் தங்கியிருக்கவேண்டிய நிலேயேற்பட்டது. அவனுக்குச் சந்ததியுமில்லாமற்போனது. தனக்குப் பாதுகாப்பளித்ததற்காக அரசுரிமையைப் போர்த்துக்கீசருக்கே ஈந்தான். அவன் கிறிஸ்தவனுக மாறினமையால் பிரசைகளிலநேகர் அவனே வெறுத்தனர். ஆனுல் பல இன்னல்களுக்குமிடையிலும் தான் கைக்கொண்ட சமயத்திற் பற்றுடையவனுகவிருந்தான். புத்த ஆலயங்களுக்குரிய நிலங்களின் வருமானத்தைக் கிறிஸ்த ஆலயங்களும், பாடசாலேகளும் கட்டுவதற்காகக் கிறிஸ்த குருமார்களுக்குக் கொடுத்தான்.

டொன்யூவான் எழுதிய இறுதிச் சாதனத்தின்பிரகாரம் அவன் இறந்தபின் போர்த்துக்கல் நாட்டு அரசனுகிய முதலாம் பிலிப்பே கோட்டை இராச்சியத்துக்கு அரசனுனன். தர்மபாலனிறந்த இரண்டாவது நாள் போர்த்துக்கீசத் தளபதி கோட்டை இராச்சியத்துக்கு முதலாம் பிலிப்பு மன்னனே அரசன் எனப் பிரகடனஞ்செய்து பெருந்திரளான மக்களோடு கொழும்பு வீதிவழியே சென்ருன். போர்த்துக்கல்நாட்டுச் சட்டங்களின்படியே இந்நாட்டையும் ஆள யோசனேசெய்தனர். பின்பு இந்நாட்டு மக்கள் பழைய வழக்கங்களேயே விரும்புவார்களென நினேத்து மக்களின் விருப்பத்தையறியும் நோக்கத்துடன் **மல்வானே** என்ற இடத்தில், கோரளேகளிலிருந்து பிரதிநிதிகளேயழைத்து ஒரு சபையைக் கூட்டினர். இரண்டு நாட்களாக ஆலோசனேசெய்து அப்பிரதிநிதிகள் இலங்கைநாட்டுச் சட்டங்கள், பழக்கவழக்கங்களின் பிரகாரமே பிலிப்பு மன்னன் ஆட்சிபுரிய வேண்டுமெனத் தீர்மானித்தனர். பலாத்காரமாக மதமாற்றஞ் செய்வதில்லேயெனவும், மாறுவதற்கு விரும்புவோரைத் தடுப்பதில்லேயெனவும் இருபகுதியாரும் ஒப்பந்தஞ் செய்துகொண்டனர். இந்த மல்வானே ஒப்பந்தத்தில் (1597) போர்த்துக்கீசத் தளபதியாகிய அசிவிடோ பண்டைப் பழக்கவழக்கங்களேயும் சட்டங்களேயும் அனுசரிப்பதாகவும், பிரதிநிதிகள் போர்த்துக்கீச அரசனே விசுவாசத்துடனும், உண்மையுடனும் ஏற்றுக்கொள்வதாயும் வாக்குப்பண்ணினுன்.

### வினுக்கள்

1. *"தர்மபாலன் எவராலும் பரிதாபப்படக்கூடிய அரசன்" இவனேப் பற்றி இவ்வாறு கூறுதல் நியாயமா?*
2. *மல்வானே மரபுமன்றத்தின் முக்கியத்துவத்தை ஆராய்க.*
3. *மாயதுன்னே கோட்டை இராச்சியத்தைக் கைப்பற்றுவதற்குத் தொடர்ந்து நடத்திய சண்டைகளே விபரிக்குக.*

# 5. சீதாவாக்கையின் எழுச்சியும் வீழ்ச்சியும்

ஏழாம் விஜயபாகு கோட்டை இராச்சியத்திற்கு அரசனுக விருந்த காலத்தில் கோட்டை இராச்சியத்தின் உரிமையை தன்னுடைய வளர்ப்புப் பிள்ளைக்குக் கொடுப்பதற்கு ஆலோசனைசெய்திருந்தான். அதை அறிந்தவுடன் புவனேகபாகு, மாயதுன்னை, றைகம்பண்டாரா என அழைக்கப்பட்ட மதுமைபண்டா ஆகிய மூன்று புதல்வர்களும் தந்தையைக் கொலைசெய்வித்தனர் (1521). பின்பு கண்டி அரசனும் கோட்டையிலுள்ள பிரதானிகளுஞ் சேர்ந்து மூத்த புதல்வனுகிய புவனேகபாகுவை யரசனுக்கத் தீர்மானித்தனர். ஆனுல் திட்டம் வகுத்து அப்பாதகச்செயலுக்குக் காரணமாகவிருந்தவன் இளைய புதல்வனுகிய மாயாதுன்னையேயாகும். ஆகையால் கோட்டை இராச்சியம் கோட்டை, சீதாவாக்கை, றைகம என மூன்று சிறு இராச்சியங்களாகப் பிரிக்கப்பட்டன. புவனேகபாகு கோட்டையையும் கடலோரப்பகுதியையும் பெற்றுச் சக்கரவர்த்தி என்ற பட்டத்துடன் ஆளத்தொடங்கினுன். மாயதுன்னை சீதாவாக்கை நான்கு கோறளையையும், தெனவாக்கையையும் பெற்று சீதாவாக்கை அரசனென அழைக்கப்பட்டான். மதுமைபண்டா றைகம்பகுதியைப் பெற்று றைகம்பண்டாரன் என்ற பெயருடன் அப்பகுதிக்கு அரசனுனன். இக்காலந்தொட்டே சீதாவாக்கை என்ற புது இராச்சியம் உண்டானது. அதனுடைய எழுச்சியையும் பின்பு அதற்கு ஏற்பட்ட வீழ்ச்சியையும்பற்றி இனி ஆராயவேண்டும்.

மாயதுன்னை அதிக ஆசைகொண்டவனுகையால் தனக்குக் கிடைத்த சிறு பகுதியோடு திருப்தியடையாது புவனேகபாகுவின் இராச்சியத்தையும் கைப்பற்ற எத்தனித்தான். 1527 தொடக்கம் 1539 வரையும் அவன் கோட்டை இராச்சியத்திற்குப் பலமுறையும் படையெடுத்துச் சென்ருன். புவனேகபாகுவுக்குப் போர்த்துக்கீசர் அளித்த உதவியே அவனுடைய ஆசை பூர்த்தியாவதற்குத் தடையாகவிருந்தது. இவன் தனது படைகளுடன் கோட்டையைக் கைப்பற்றச் சென்றபொழுதெல்லாம் போர்த்துக்கீசர் கோட்டைக்குத் தங்களுடைய படைகளையனுப்ப அவர்களை எதிர்க்கமுடியாமல் அவன் திரும்பிச்செல்ல நேரிட்டது. ஆனுல் 1539-ல் அவர்கள் சீதாவாக்கைக்குட் புகுந்தவுடன் அவன் சமாதானம் செய்துகொண்டான். இதற்கிடையில் றைகம்பண்டாரனிறந்தமையினுல் அவன் ஆண்ட இராச்சியத்தையும் மாயதுன்னை தன்னுடைய இராச்சியத்தோடு சேர்த்துக்கொண்டமையால் சீதாவாக்கை முன்னிலும்பார்க்

கப் பலமுற்றது. ஆனுல் புவனேகபாகுவின் இராச்சியத்தையும் கைப்பற்றுவதே அவனுடைய நோக்கமாகவிருந்தது. புவனேகபாகு போர்த்துக்கீசருடைய உதவியைத் தேடிக்கொண்டமையினுலும், பின்பு கிறீத்த குருமாரைத் தன்னுடைய இராச்சியத்துக்கு வரவழைத்தமையினுலும், வெறுப்புற்று அநேக பிரசைகள் மாயதுன்னை பக்கஞ் சேர்ந்தனர். அதனுல் புத்தசமயத்தைப் பாதுகாக்கும் சிங்கள அரசனுக மாயதுன்னை விளங்கினுன். முஸ்லீங்களும் அவனுடைய பக்கத்தையே சார்ந்தனர்.

**1551**-ல் புவனேகபாகு இறக்க மாயதுன்னை கோட்டை இராச்சியத்திற்கு தனக்குரிய உரிமையை நிலைநாட்டிப் போருக்கெழுந்தான். தர்மபாலனே தனக்குப்பின் அரசாளவேண்டுமெனப் புவனேகபாகு செய்துவைத்த ஏற்பாட்டை அலட்சியஞ் செய்து போர்த்துக்கீசருடன் நட்புக்கொண்டு இராசப்பிரதிநிதியாகவிருந்த விதியனுக்கெதிரே சண்டைசெய்தான். போர்த்துக்கல் அரசனுக்குத் திறை கொடுப்பதற்கும் சம்மதித்தான். போர்த்துக்கீசப்படையும் சீதாவாக்கையின் படையும் ஒன்றுசேர்ந்து திகிரிபண்டாவின் தலைமையில் விதிய பண்டாரனுக்கெதிரே சண்டைசெய்து அவனைத் தோற்கடித்தன. கடுமையாகத் தாக்கப்பட்டமையால் விதியன் தன்னிடமுள்ள பொக்கிஷங்களோடு யாழ்ப்பாணத்திற்கு ஓடநேரிட்டது. யாழ்ப்பாணத்தில் விதியன் இறந்தமையினுல் மாயதுன்னை கோட்டை இராச்சியத்தைக் கைப்பற்றுவதற்கிருந்த தடைகளிலொன்று நீங்கியது. விதியனிறந்ததால் தர்மபாலனின் பலம் குன்றியது. சீதாவாக்கையே அதிக அதிகாரமுடையதாகக் காணப்பட்டது. **1557**-ல் தர்மபாலன் கிறீத்தவனுக மாறியதைக்கண்ட பிரசைகளிலநேகர் கோபாவேசங்கொண்டனர். அவர்களை அடக்கப் போர்த்துக்கீசர் முயற்சித்தமையால் அநேகர் மாயதுன்னைபக்கஞ் சார்ந்தனர். மாயதுன்னையும் புத்த சமயத்தைப் பாதுகாக்கும் சிங்கள அரசனுகக் காணப்பட்டான். மாயதுன்னை கோட்டை இராச்சியத்துக்குத் தனக்குரிய உரிமையைக்கொண்டு போருக்கெழுந்தவுடன் கோட்டையின் எல்லைப்பிரதேசத்திலுள்ள மக்கள் மாயதுன்னைக்கு அனுதாபங்காட்டினர். மாயதுன்னையும் அவனுடைய மகன் இராசசிங்கனும் (திகிரிபண்டா) கோட்டைக்கெதிரே பெருஞ்சேனையுடன் சென்றபொழுது போர்த்துக்கீசச் சேனையின் உதவியோடு தர்மபாலன் எதிர்த்துச் சண்டை செய்தான். போர்த்துக்கீசரிடம் போதிய படைப்பலமில்லாமையால் முடிவுறச் சண்டையைச் செய்யமுடியவில்லை. தன்னுடைய இராச்சியம் சூறையாடப்படுவதையும் தன்னுடைய பிரசைகள் தன்னை

விட்டு விலகுவதையும் கண்ணுற்ற தர்மபாலன் மனக்குழப்பமடைந்து களனிக்குச் சென்ருன். பின்பு மாயதுன்னையும் முடிவறச் சண்டை செய்துகொள்ள முடியாமல் சீதாவாக்கைக்குச் சென்ருன். போர்த்துக்கீசராலும் சுலபமாகத் தோற்கடிக்கமுடியாத பலத்தையுடையதாகச் சீதாவாக்கை இராச்சியம் விளங்கியதெனலாம்.

யாழ்ப்பாண இராச்சியத்தில் போர்த்துக்கீசர் சண்டைசெய்து கொண்டிருக்கும்பொழுது மாயதுன்னையும் மகனும் மீண்டும் கோட்டை இராச்சியத்துக்குப் படையெடுத்துச் சென்று மகன் கோட்டையையும், மாயதுன்னை கொழும்பையுந் தாக்கினர். இரு சேனைகளின் தாக்குதலினுல் இன்னலுற்ற மக்கள் போர்த்துக்கீசத் தளகர்த்தனுக்கு முறையிட்டனர். போர்த்துக்கீசப்படை இராசசிங்கனைத் துரத்துவதற்கு முயற்சித்தபொழுது சீதாவாக்கையின் இரு சேனைகளாலுந் தாக்கப்பட்டு பெரும் நட்டத்தையடைந்தது. போர்த்துக்கீசர் படைப்பலத்தைக் கூட்டிச் சண்டைசெய்து ஈற்றில் மாயதுன்னையையும் மகனையும் பின்வாங்கச்செய்தனர். மீண்டும் இராசசிங்கன் 1562-ல் குதிரைப்படை, ஆட்படைகளைக் கொண்டுள்ள பெருஞ்சேனையுடன் சென்று வழியிற்காணப்பட்ட இடங்களைச் சூறையாடி **முல்லேரியா** என்ற இடத்திற் பாளயமிட்டான். கொழும்பையும் கோட்டையையும் ஒரே சமயத்திற் தாக்குவதற்குத் திட்டம்போட்டான். இதையறிந்த போர்த்துக்கீசர் இருநகரங்களையும் சீக்கிரமாகப் பாதுகாப்புச்செய்து இராசசிங்கனை எதிர்க்க முன்வந்தனர். இராசசிங்கன் யூகமாக போர்த்துக்கீசச் சேனையை, நாலாபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டமையால் போர்த்துக்கீசர் தங்களுடைய உயிர்களையே பாதுகாப்பதற்காகச் சண்டை செய்யவேண்டிய நிலைபரமேற்பட்டது. 125 போர்வீரர் வரையில் மாத்திரம் கொழும்புக்குத் தப்பியோடினர். இத்தோல்வியினின்று போர்த்துக்கீசர் மீளுவதற்குமுன் இராசசிங்கன் கோட்டைநகரத்தை முற்றுக்கையிட்டு நாலுபக்கமும் தன்சேனையுடன் சூழ்ந்துகொண்டான். போர்த்துக்கீசர் ஆபத்தான அந்நிலையில் நகரத்தைக் கைவிடவேண்டியதாயிற்று. நகரவாசிகளும் எதிரிபக்கத்திற்கு ஓடினர். களனியும் இராசசிங்கன் கையிற் சிக்கியது. பின்பு கோவையிலுள்ள அதிகாரிகள், கற்பித்தவண்ணம் இரு கோட்டைகளையும் பாதுகாப்பது சாத்தியமல்லவென நினைந்து கோட்டையினின்று போர்த்துக்கீசர் விலகினர். அவர்கள் கொழும்புக்குப் போகும்பொழுது தர்மபாலனையும் அரண்மனையிலுள்ள பிரபுக்களையும் கூட்டிச்சென்றனர். கடைசிச் சிங்களச் சக்கரவர்த்தியின் நிலைமையும் இவ்வாருயிற்று. ஒரு நூற்ருண்டுக்கு மேலாகப் பொலிவுற்றுவிளங்கிய கோட்டை இராசதானியும் பாழ்நிலையடைந்து

காட்டு மிருகங்களுக்கிருப்பிடமானதொன்றுக மாறியது. டொன்யூ வானும் போர்த்துக்கீசரிடம் வெகுமதிச் சம்பளத்தைப்பெற்று அவர் களுடைய ஆதரவிலேயே தங்கியிருந்தான். இலங்கை முழுவதிலும் முதன்மைபெற்ற கோட்டை இராச்சியத்திற்கு அரசனுன தர்மபாலன் இவ்விதமான கதியையடைய, சீதாவாக்கையரசனே அப்பொழுது மக்களால் மதிக்கப்படக்கூடிய சிங்கள அரசனுகத் தோற்றினுன். கோட்டை இராசதானியைப் போர்த்துக்கீசரும் தர்மபாலனும் கை விட்டமை மாயதுன்னையின் வெற்றிக்கு அறிகுறியாயிற்று. பழைய கோட்டை இராச்சியத்தின் கொழும்பு நீங்கிய ஏனைய பகுதிகள் அவனுடைய ஆட்சியின் கீழமைந்தமையினுல் சீதாவாக்கை இராச்சி யம் பெருமையும் பலமுமடைந்தது. ஆனுல் டொன்யூவானே நாடும் பிரசைகளுமில்லாமல், பெயரளவில் அரசனுகவேயிருந்தான். கோட்டை இராச்சியத்தின் வீழ்ச்சி சீதாவாக்கையின் எழுச்சிக்கு ஒரு காரணமாகும்.

மாயதுன்னையின்மீது கோபங்கொண்டிருந்த போர்த்துக்கீசர் அவ னுடைய இராச்சியத்தின் பலபாகங்களிற் கொள்ளையடித்தும் அழிவு உண்டாக்கியும் துன்பம் விளைத்தனர். டொன்யூவானுடைய முத்த மனைவி பிள்ளைகளில்லாமலிறந்தபின் கண்டியரசனுடைய மகளா கிய தோனுமாகரிதாவை மணந்தான். தனது மகன் இராசசிங்க னுக்கு கண்டி அரசன் தனது மகளை மணம்புரிவதற்கு சம்மதிக்கா மல் டொன்யூவானுக்கு விவாகஞ்செய்து கொடுத்தமையினுல் மாய துன்னை கண்டி இராச்சியத்தையும் கைப்பற்றிக்கொள்ள யோசனை செய்தான். அவன் கண்டி நாட்டின்மீது படையெடுத்தபொழுது போர்த்துக்கீசர் அவனுடைய இராச்சியத்தின் பலபகுதிகளிற் புகுந்து கோட்டைகளைக் கைப்பற்றி ஆலயங்களை இடித்து கரையோரங்களி லுள்ள நகரங்களையும் துறைமுகங்களையும் கொள்ளையடித்துப் பல இன் னல்களை விளைவித்ததினுல் அவன் தொடர்ந்து கண்டியில் சண்டை செய்ய முடியாமற்போனது. நீர்கொழும்பு, சிலாபம், களுத்துறை முதலிய பிரதேசங்கள் அடிக்கடி தாக்கப்பட்டன. சிங்கள அரச னுகிய தர்மபாலனுக்காகப் போர்த்துக்கீசர் சண்டைசெய்தமையினுல் சனங்களும் அவர்களுக்கு உதவிபுரிந்தனர். ஆகையால் தர்மபால னைக் கொன்றுவிட்டால் அவனுடைய இராச்சியம் தனக்குக் கிடைக்கு மென்றும் சனங்கள் தன்னுடைய பக்கத்தைச் சார்ந்துகொள்வார் கள் என்று எண்ணி அவனைக் கொன்றுவிடச் சூழ்ச்சிசெய்தான். அவன் செய்த சூழ்ச்சியினுல் தர்மபாலனிறக்காதுவிட்டாலும் பற் களை இழந்து துன்பமுற்றுன்.

கொழும்பைக் கைப்பற்றினற் கோட்டை இராச்சியம் முழுதும் தனது அதிகாரத்துக்குட்படுமென நினைந்து தனது எண்ணத்தைப் பூர்த்தி செய்வதற்காகப் பெருஞ்சேனை யொன்றைத் திரட்டினன். 1579-ல் அச்சேனையோடு புறப்பட்டுக் கொழும்பை முற்றுக்கை யிட்டான். கொழும்புநகரைப் பலமுறை தாக்கியபொழுதிலும் அதைக் கைப்பற்ற முடியவில்லை. அந்நகரத்திற்குத் தெற்கேயுள்ள வாவி யின் நீரை வற்ற இறைத்து அதைக்கடந்து நகரத்தைத் தாக்கிய சேனை போர்த்துக்கீசராற் துரத்தப்பட்டது. இவ்விதமாகச் சண்டை ஒருவருடம் 10 மாதங்கள் வரையில் நீடித்தமையினுல் இருபகுதி யாரும் களைப்புற்றனர். 300 போர்வீரர்களைக் கொண்டுள்ள போர்த் துக்கீசப்படை கொழும்பில் வந்திறங்கியமையால் அதன் உதவி யுடன் இராசசிங்கனுடைய சேனையைப் போர்த்துக்கீசர் தோற்கடித்த னர். அவன் கொழும்பைக் கைப்பற்றத் தவறினுலும் போர்த்துக்கீச ரோடு எதிர்த்துச் சண்டைசெய்து அவர்களைத் தோற்கடித்தவனும் (1562) அவர்கள் தங்களுடைய ஆதிக்கத்தை விரும்பியவிதம் பரப்பு வதற்குத் தடையாயிருந்தவனும் இராசசிங்கனுவான்.

ஐம்பது வருடங்களாக சீதாவாக்கைக்கு அரசனுயிருந்த மாய துன்னை தனது எண்பதாவது வயதில் தன்னுடைய மகன் இராச சிங்கனுடைய சூழ்ச்சியினுலிறக்க நேரிட்டது. கோட்டையின் பெரும் பகுதியைத் தனது ஆளுகைக்குட்படுத்தியதும், கொழும்பையும் கோட்டையையும் முற்றுக்கையிட்டுப் போர்த்துக்கீசருக்குப் பல இன்னல்களையுண்டாக்கினதும், அவர்கள் கோட்டை நகரைவிட்டுக் கொழும்புக்கு ஓடச்செய்ததும், சீதாவாக்கை அரசனின் திறமை யைக் காட்டுகின்றன. சீதாவாக்கை இராச்சியத்துக்கு அரசனுன வுடனே இராசசிங்கன் இலங்கை முழுவதற்கும் தானே அரசனுக வேண்டுமெனத் தன்னுடைய தந்தையைப்போலவே தானும் எண்ணி னுன். கொழும்பை சுலபமாக வெல்லமுடியாதென அறிந்து கண்டி இராச்சியத்தின்மிது கவனஞ்செலுத்தினுன். அக்காலத்தில் கண்டி இராச்சியத்தைக் கரலியட்டபண்டாரன் என்பவன் ஒரு சிறு போர்த் துக்கீசப்படையின் உதவியோடு ஆண்டுகொண்டிருந்தான். இராச சிங்கன், கண்டியரசனின் பிரதானிகளிலொருவனுகிய வீரசுந்தர பண்டார னென்பவனுடைய உதவியைப்பெற்று பெருஞ்சேனையுடன் கண்டிக்குச்சென்று கண்டியரசனுடைய சேனையைத் தோற்கடித்து அவனுடைய இராச்சியத்தைக் கைப்பற்றினுன். கண்டியைக் கைப் பற்றியதனுல் இராசசிங்கன், சீதாவாக்கையும் கோட்டையின் பெரும் பகுதியும் கண்டியும் ஒன்றுசேர்ந்த ஒரு பெரிய இராச்சியத்திற்கு

அரசனுக விளங்கினுன். அப்பொழுதே சீதாவாக்கை இராச்சியமும் உன்னதநிலையை யடைந்திருந்ததெனலாம். இவனே ஒரு சிங்கள அரசனுகவிருந்தபடியால் இவனை மக்கள் பெரும் வீரனுகக் கருதினர்.

கரலியட்டபண்டாரன் தன்னுடைய நாட்டைவிட்டோடி திருகோணமலையில் அம்மைநோயினுற் பீடிக்கப்பட் டிறக்கும்பொழுது தன்னுடைய மருமகனுகிய யமசிங்கனையும் மகளையும் போர்த்துக்கீசரிடம் ஒப்படைத்தான். யமசிங்கன் கோவைக்குச் சென்று டொம் பிலிப்பு என்ற பெயருடன் கிறீத்தவனுக, கண்டியரசனின் மகள் மன்னுரில் போர்த்துக்கீசரின் பாதுகாப்பிலிருக்கும்பொழுது டோனு கதரினு என்ற பெயரைப்பெற்றுக் கிறீத்தசமயத்திற் சேர்ந்தாள்.

இராசசிங்கன், பொறுமை, அமைதி, சகிப்புத்தன்மையில்லாதபடியால், தன்னில் மக்களுக்கு விசுவாசமில்லையென நினைந்து தான் சந்தேகங்கொண்ட யாபேரையும் கொலைசெய்வித்தான். கண்டி இராச்சியத்தைக் கைப்பற்றுவதற்கு உதவிசெய்த வீரசுந்தரபண்டாரனையும் கொலைசெய்வித்தமையால் அவனுடைய மகன் கோனப்பு பண்டாரன் கொழும்புக்கு ஓடினுன். அரசனுடைய மிதமிஞ்சிய செய்கைகளினுலும், பாதகமான கொலைகளாலும் வெறுப்புற்ற மக்கள் நஞ்சூட்டி இவனைக்கொல்ல முயன்றனர். அச்சூழ்ச்சியிற் பங்கு பெற்றவர்களெனச் சந்தேகப்பட்டவர்கள் கொலைசெய்யப்பட்டனர். புத்தபிக்குகள்கூட உயிரிழக்க நேரிட்டது.

கண்டி இராச்சியத்தைக் கைப்பற்றியபின் கொழும்பைக் கைப்பற்றிப் போர்த்துக்கீசரை இலங்கையிலிருந்து துரத்தவேண்டுமென்று திட்டம்போட்டான். அதற்குவேண்டிய பெருஞ்சேனையுடன் 1587-ல் புறப்பட்டான். அந்நகரத்தில் 60,000 பேர்வரையிலிருந்தபொழுதிலும் 350 போர்த்துக்கீசப் போர்வீரர்களேயிருந்தனர். உடனே டி பிறிட்டோ என்ற போர்த்துக்கீசத் தளபதி கோவைக்கு அவசரச் செய்தியனுப்பினுன். இராசசிங்கன் நகரத்திற்குத் தெற்கேயுள்ள வாவி நீரை வற்ற இறைத்து நகரத்தின் புறமதில்களுக்குக் கிட்ட நெருங்கித் தாக்கினுன். அவனுடைய நோக்கத்தை மாற்றும்பொருட்டு போர்த்துக்கீசர் கடற்கரைப் பட்டினங்களை யழித்தனர். கொழும்பு நகரைப் பலவழிகளைக் கையாண்டு தாக்கியும் இராசசிங்கனுல் அதைக் கைப்பற்ற முடியவில்லை. அந்நேரத்திற் சிறு படைத்துணையைப் பெற்ற போர்த்துக்கீசர் மீண்டும் கடற்கரைப் பகுதிகளிலுள்ள நகரங்களைத் தாக்கி தேவாலயங்களையுமழித்தனர். 1588-ல் கோவையிலிருந்து பெற்ற உதவியுடன் போர்த்துக்கீசர் இராசசிங்கனைப் பின்

வாங்கச்செய்தனர். அவன், எடுத்துக்கொண்ட முயற்சியிற் சித்தி பெருது சீதாவாக்கைக்குத் திரும்பினுன்.

கொழும்பைக் கைப்பற்ற முடியாமையினுல் வெறுப்புற்று, இராசசிங்கன் தன்னுடைய பிரசைகளை இரக்கமின்றித் துன்புறுத்தினுன். சீதாவாக்கையிலும், கண்டியிலும், இராசசிங்கன்மீது வெறுப்புற்ற மக்கள் கலகத்தை விளைவித்தனர். கண்டியிலுள்ள மக்கள் அவ்விராச்சியத்திற்கு உரிமையுடையவனுகிய யமசிங்கனை அரசனுக ஏற்றுக்கொள்ளச் சித்தமாயிருந்தனர். யமசிங்கன் கிறீத்தவனுகி டொன் பிலிப்பு என்ற பெயரைப்பெற்று அந்நேரத்தில் மன்னுரிலிருந்தான். கிறீத்த குருமார்களின் தூண்டுதலினுலும், கண்டி மக்களுடைய வேண்டுதலினுலும் கோவையிலுள்ள அதிகாரிகள் கண்டிக்குப் படையெடுத்துச்செல்லத் தீர்மானஞ்செய்தனர். தொன்சுவான் என்ற பெயரைப்பெற்ற கோனப்புபண்டாரனின் தலைமையில் சென்ற யமசிங்கனின் சேனை இராசசிங்கனைத் தோற்கடித்தது. தொன்பிலிப்பு சிங்காசனமேறியவுடன் இராசசிங்கன் கண்டி இராச்சியத்தை இழந்துவிடச் சீதாவாக்கையின் பலமும் குன்றத்தொடங்கியது. சில நாட்களின்பின் தொன்பிலிப்பு இறந்தமையினுல் கோனப்புபண்டாரன் இராச்சியத்தைக் கைப்பற்றினுன். வலோற்காரமாக அரசைக் கைப்பற்றிய தொன்பிலிப்புக்கெதிரே இராசசிங்கன் அனுப்பிய சேனை வல்லனை என்ற இடத்தில் தோற்கடிக்கப்பட்டது. இராசசிங்கன் சீதாவாக்கைக்குத் திரும்பும்பொழுது வழியில் மூங்கில் சிராய் காலில் குத்தியதால் அவன் இறந்தான் (1592).

இராசசிங்கனுக்கு மக்களில்லாமையால் அவனுக்குப்பின் பட்டத்துக்குரியவர் யாரென்பதுபற்றிப் பெரிய குழப்பமுண்டாயிற்று. மன்னம்பெருமாள் என்ற படைத்தலைவன் அதிகஞ் செல்வாக்குடையவனுகையால் அரசைக்கைப்பற்ற முயன்ருன். ஆனுல் இராசசிங்கனின் பேரனுன இராசசூரியன் அரசுரிமையைப் பெற்றபொழுதிலும் அவன் சீக்கிரத்திற் கொலைசெய்யப்பட்டான். பின்பு விதியபண்டாரனின் மனைவியாகிய இராசசிங்கனின் சகோதரி தன்னுடைய பேரனுன நிகபிட்டியபண்டாரனை அரசனுக ஏற்றுக்கொள்ளும்படி மன்னம்பெருமாளைக் கேட்டுக்கொள்ள அவனும் அதற்குச் சம்மதித்தான். மன்னம்பெருமாளைப் பகைத்தவர்கள் போர்த்துக்கீசரைச் சார்ந்தனர். போர்த்துக்கீசரும் சீதாவாக்கைமீது படையெடுத்துச் சென்று மல்வானை, கடுவலை முதலிய இடங்களிலே சீதாவாக்கைச் சேனைகளைத் தோற்கடித்தனர். நிகபிட்டியபண்டாரனும் இராசசிங்கனின் சகோதரியும் கைதிசெய்யப்பட்டனர். மாத்தறைத்திசைவானி

யும், கோட்டையும் சீதாவாக்கையும் போர்த்துக்கீசருடைய ஆதிக்கத்திலமர்ந்தன. பழைய கோட்டை இராச்சியம் முழுவதும் போர்த்துக்கீசருடைய கையிற் சிக்கிக்கொண்டமையால் சீதாவாக்கை இராச்சியம் மறைவுற்றது. மாயதுன்னையின் காலத்திலும், இராசசிங்கனுடைய காலத்திலும் பொலிவுற்று விளங்கிய சிங்கள இராச்சியம் வீழ்ச்சியுற்றதால் போர்த்துக்கீசர் இலங்கையில் தங்களுடைய ஆதிக்கத்தை நிலைநாட்டிக்கொள்ள வசதியாயிருந்தது.

## விஞக்கள்

1. கோட்டை இராச்சியத்தின் பலம் குன்றிப்போனதற்குரிய காரணங்கள் யாவை?

2. போர்த்துக்கேசரின் திட்டங்கள் நிறைவேருவண்ணம் இராசசிங்கன் எவ்வாறு தடைசெய்தான்?

3. சீதாவாக்கையின் எழுச்சிக்கும் வீழ்ச்சிக்குமுரிய காரணங்களை ஆராய்க.

---

# 6. யாழ்ப்பாணத்தரசர்களும் போர்த்துக்கீசரும்

போர்த்துக்கீசர் இலங்கைக்கு வந்த காலத்தில் இலங்கையில் கோட்டை, கண்டி என்னும் இரு சிங்கள இராச்சியங்களும் யாழ்ப்பாணம் என்ற ஒரு தமிழ் இராச்சியமும் இருந்ததென முன் அத்தியாயங்களிற் படித்திருக்கிறேம். 1478 தொடக்கம் 1519 வரையும் பரராசசேகரன் என்ற தமிழரசன் யாழ்ப்பாண இராச்சியத்தை அரசாண்டுவந்தான். அக்காலத்தில் நல்லூரே அவ்விராச்சியத்தின் தலைநகரமாகும். 1519-ல் பரராசசேகரனைக் கொன்றுவிட்டுச் சங்கிலி என்பவன் அரசைக்கைப்பற்றி செகராசசேகரன் என்ற பெயருடன் ஆளத்தொடங்கினுன்.

பரராசசேகரனின்பின் அரசுரிமையைப் பெறவேண்டிய இளவரசன், சங்கிலியரசனிடமிருந்து இராச்சியத்தைக் கைப்பற்றிக்கொள்ளப் பலமில்லாமையால் போர்த்துக்கீசரின் உதவியைத் தேடினுன். போர்த்துக்கீசருக்குத் திறையுங்கொடுத்து கத்தோலிக்க சமயத்தைப் பரப்புவதற்கு அனுமதிகொடுக்கும் அரசர்களுக்கு அவர்கள் உதவி செய்வதற்கு ஆயத்தமாயிருந்தார்கள். அரசர்களுக்கிடையிலிருந்த பகைமையைப் பயன்படுத்தி கோட்டை இராச்சியத்தை எவ்வாறு தம் வசப்படுத்தினரோ அவ்வாறே யாழ்ப்பாண இராச்சியத்திற் தலையிட்டு அதனையும் தங்களுடைய ஆணைக்குட்படுத்தினரென்பதை கவனிக்கலாம். யாழ்ப்பாண இராச்சியத்திற்குரிய இளவரசன் அவர்களுடைய உதவியைக் கேட்டுக்கொண்டமை அவர்களுக்கு அதனுடைய விஷயங்களிற் தலையிட்டுக்கொள்ளச் சந்தர்ப்பமளித்தது. இதைவிட இன்னுமொரு காரணம் அவ்விராச்சியத்தின் விஷயங்களிலே தலையிட்டுக்கொள்ளச் சாதகமாகவிருந்தது. சங்கிலியரசன் தன்னுடைய இராச்சியத்தின் கரையோரப்பகுதிகளில் தாக்குண்ட கப்பல்களைக் கைப்பற்றும் உரிமை தனக்குண்டு என்று பாராட்டினுன். சில போர்த்துக்கீசக் கப்பல்களும் அவ்வரசனிடம் சிக்கிவிட்டன.

தங்களுடைய கப்பல்களை மீட்டுக்கொள்வதற்காகவும் யாழ்ப்பாணத்து இளவரசனுக்கு அவனிழந்துவிட்ட இராச்சியத்தைப் பெற்றுக்கொடுப்பதற்காகவும் 1543-ல் மாட்டின் அபோன்சோ டி சூசா என்பவன் ஒரு பெரிய கடற்படையுடன் அனுப்பப்பட்டான். போர்த்துக்கீசரின் படைப்பலத்தைப்பற்றிக் கேள்வியுற்ற சங்கிலி அவர்க

ளோடு எதிர்த்துச் சண்டைசெய்யாது சமாதானமுறையில் நடந்து கொண்டான். போர்த்துக்கீசப் படைத்தலைவனைச் சந்தித்துத் தான் போர்த்துக்கல் அரசனுக்குத் திறைகொடுப்பதாகவும், தன்னுடைய நாட்டில் கிறிஸ்துசமயத்தைப் பரப்ப உத்தரவு அளிப்பதாயும் வாக்குப்பண்ணினன். இவ்வுடன்படிக்கையோடு திருப்தியடைந்த படைத்தலைவன் இளவரசனுக்கு உதவிசெய்வதை அலட்சியஞ்செய்து சங்கிலி அரசனே அரசாள அனுமதியளித்துத் திறையையும் பெற்றுச் சென்ருன். கத்தோலிக்கப் பாதிரிமார் மதபோதனை செய்ய ஆரம்பித்தனர்.

யாழ்ப்பாண இராச்சியத்திலுள்ள அநேக பிரசைகள் கத்தோலிக்க சமயத்தவர்களாக மாறுவதைக்கண்ட சங்கிலி அரசன் அவர்கள் போர்த்துக்கீசருடைய ஆளுகையை விரும்பக்கூடுமென அச்சமுற்ருன். அதுவுமல்லாமல் போர்த்துக்கீசர் தன்னைத் தாக்கினல் கத்தோலிக்க சமயத்தைச்சேர்ந்த தனது பிரசைகள் அவர்களுக்கு ஆதரவளிக்கக்கூடுமென்றும் அவர்கள் தனக்கு ஆபத்தை உண்டாக்கக்கூடுமென்றும் எண்ணினன். யாழ்ப்பாண இராச்சியத்தின் ஒரு பகுதியாயிருந்த மன்னுரிலுள்ள மக்கள் இந்தியாவில் மதமாற்றஞ் செய்துகொண்டிருந்த பிரான்சிஸ் சவேரியாரை வரவழைத்தனர். அவர் இந்தியாவில் மார்க்க விஷயங்களிற் தலையிட்டுக்கொண்டிருந்தமையினல் அவர் தனது சீடனிலொருவனை அனுப்ப அவர் மன்னுரிலுள்ள மக்களனேகரைக் கிறீஸ்தவர்களாக மதமாற்றஞ்செய்தார். அந்நேரத்தில் போர்த்துக்கீசர் கோட்டையிலேற்பட்ட உள்நாட்டுக் கலகங்களை அடக்குவதில் முனைந்துநின்றமையைக் கண்டு சங்கிலி அரசன் மன்னுருக்குத் தன்னுடைய சேனைப்படை ஒன்றை அனுப்பி மீண்டும் சைவசமயத்திற்கு மாறுவதற்கு மறுத்த கத்தோலிக்கரனைவோரையும் கொலைசெய்வித்தான் (1544). அத்தருணத்தில் 600 கிறித்தவர்கள் வரையில் வாளுக்கிரையாயினர்.

வாசனைத் திரவியங்களையும் கிறீத்தவர்களையுந் தேடியே கீழைத் தேசங்களுக்குப் போர்த்துக்கீசர் வந்தனரென்று முன் அத்தியாயங்களிற் படித்திருக்கிருேம். அவர்களுடைய மதப்பிரசாரத்திற்கும் வர்த்தகத்திற்கும் தடைசெய்த எந்த அரசர்களோடுஞ் சமர்புரிவதற்கு அவர்கள் ஆயத்தமாயிருந்தனர். ஆகையால் சங்கிலியரசனைத் தண்டிப்பதுமல்லாமல் கிறித்தமார்க்கத்தைச் சேர்ந்தவர்களுக்குத் தங்களுடைய ஆதரவு என்றும் கிடைக்குமென்றும் காட்டிவிட வேண்டுமென்றும் எண்ணினர். அந்நோக்கத்தோடு அனுப்பப்பட்ட சேனை சங்கிலியைத் தண்டிப்பதற்குப் பதிலாக அந்நேரத்தில் யாழ்ப்

பாணக்கரையில் உடைந்த கப்பலொன்றின் திரவியங்களைக் கவர்ந்து கொள்வதில் கவனஞ்செலுத்தியது. சங்கிலியும் இனிமேல் கிறீத்த வர்களைத் தான் வதைப்பதில்லையென வாக்குப்பண்ணினமையால் அவனை அவர்கள் தண்டிக்காது திரும்பினர்.

ஆனால் பிரான்சிஸ் சவேரியார் சங்கிலியரசனைத் தண்டித்து யாழ்ப்பாண இராச்சியத்திற்கு உரிமையுள்ள இளவரசனை அரசனுக்க வேண்டுமென்று போர்த்துக்கல் அரசனை பலமுறையுந் தூண்டினுர். போர்த்துக்கீசர் இந்தியாவிலும் கோட்டை இராச்சியத்திலும் ஏற் பட்ட சண்டைகளில் ஈடுபட்டிருந்தமையினுல் 1560 வரைக்கும் யாழ்ப்பாண இராச்சியத்தின் விஷயங்களிற் தலையிட முடியாமற் போனது. மன்னுரிலுள்ள கிறீத்தவர்களைக் கொலைசெய்வித்ததற்காக சங்கிலி அரசனைத் தண்டிப்பதற்குப் படையெடுத்துச்செல்லப் பல முறை முயன்றும் அவர்களுக்கு வசதி ஏற்படவில்லை. போர்த்துக் கீச அரசன், கோவையிலிருந்த இராசப்பிரதிநிதிகளை சங்கிலி அரச னைத் தண்டிக்குமாறு தூண்டிக்கொண்டிருந்தமையினுல் 1560-ல் கொன்ஸ்தாந்தைன் டி பிரகன்சா பெரும்படையுடன் யாழ்ப்பாணத் துக்கு அனுப்பப்பட்டான். அரசனையுந் தண்டித்து யாழ்ப்பாணத் தில் ஒரு கோட்டையையும் கட்டுவதே அவனுடைய நோக்கமாக விருந்தது. அவன் ஊர்காவற்றுறையை வந்து சேர்ந்தவுடன் சங் கிலியரசன் தன்னுடைய சேனைப்படைகளுடன் நிற்பதைக்கண்ட வுடன் கொழும்புத்துறைக்குச் சென்று அங்கே தன்னுடைய படை யோடு இறங்கினுன். அங்கிருந்து யாழ்ப்பாண இராச்சியத்தின் தலை நகராகிய நல்லூருக்குச் சென்ருன். அந்நகரைச் சூழ்ந்திருந்த மதில் களையும் அரண்களையுங் கடந்து நகரத்துக்குட் புகுந்தவுடன் யாழ்ப் பாணத்து மக்கள் எதிர்ப்புக்காட்டினர். அவர்கள் சீக்கிரத்தில் தோற்கடிக்கப்பட்டு நகரமும் போர்த்துக்கீசராற் கைப்பற்றப்பட்டது. சங்கிலியரசன் அரண்மனைக்குத் தீயிட்டுவிட்டுக் கோப்பாய்க்குச்சென் ருன். விதியன் இறக்கும்பொழுது சங்கிலியரசனுக்குக் கிடைத்த கோட்டை இராச்சியத்தின் பொக்கிசங்களும் போர்த்துக்கீசர் கையிற் சிக்கின. அடுத்தநாள் கோப்பாயும் போர்த்துக்கீசராற் கைப்பற்றப் பட்டது. சங்கிலி யானையிறவு மார்க்கமாகத் தெற்குநோக்கிச் சென்று அங்கிருந்து போர்த்துக்கீசத் தளபதிக்குத் தூதுவர்களையனுப்பினுன். போர்த்துக்கல் அரசன் ஆணைக்கு அடங்கித் திறைசெலுத்துவதா யும் கிறித்து மதப்பிரசாரத்திற்கு அனுமதியளிப்பதாயும் சங்கிலி கூறியபொழுது பிரகன்சா சம்மதித்து அவன் மீண்டும் தன்னுடைய இராச்சியத்தைப் பெற்றுக்கொள்ள உத்தரவளித்தான்,

பிரகன்சாவோடு சென்ற குருமார் மதப்போதனைசெய்து மக்களை கிறித்துமதத்திற்கு மாற்றும் முயற்சியில் ஈடுபட்டனர். போர்த்துக்கீசர் வழக்கம்போல் இந்து ஆலயங்களையும் அழித்து மக்களையும் பலவாறு துன்புறுத்தியமையினால் அவைகளைக் கண்ணுற்ற மக்கள் கோபங்கொண்டு எதிர்ப்புக் காட்டினர். நகரத்திலிருந்த போர்த்துக்கீசப்படை சிறியதாகக் காணப்பட்டமையால் காத்திராப் பிரகாரம் மக்கள் திரண்டு தாக்கினர். போர்த்துக்கீசப் போர்வீரர்கள் தப்பி ஓடவேண்டியதாயிற்று. போர்த்துக்கீசப் போர்வீரர்கள் மிகக்குறைவாக விருந்தமையினால் பிரகன்சா மீண்டும் அந்நகரத்தைக் கைப்பற்ற முடியவில்லை. எனவே யாழ்ப்பாண இராச்சியத்தைக் கைப்பற்றுவதற்காக எடுத்துக்கொண்ட முயற்சி அனுகூலப்படவில்லை. இவ்வாறு நேர்ந்த கலகத்திற்கு அரசன் தான் ஒருவிதத்திலேனும் பொறுப்பில்லையென்றும், மக்களே அதற்குக் காரணமாயிருந்தனரென்றும் தூது அனுப்பியபொழுது அதை ஏற்றுக்கொள்ளாது பிரகன்சா மன்னாருக்குச்சென்று அதைக்கைப்பற்றி அங்கே ஒரு கோட்டையையும் நிறுவினான். அவன் இந்தியாவுக்குத் திரும்பியவுடன் அக்கோட்டையைச் சங்கிலி முற்றுக்கையிட்டும் கைப்பற்ற முடியாமற்போனது.

சங்கிலியரசன் மக்களைத் துன்புறுத்தியமையினால் அவனுடைய பிரசைகள் கலகமுண்டாக்கி அவனை நீக்கிவிட்டு அவனுடைய மகனை புவிராசபண்டாரன் என்பவனை அரசனாக்கினர். பின்பு காசிநயினார் என்பவன் அரசைக்கைப்பற்றி ஆளத்தொடங்கினான். அவன் மேல் மக்களுக்கு ஏற்பட்ட வெறுப்புக் காரணமாக கலகங்கள் உண்டாயின. மன்னாரிலிருந்த போர்த்துக்கீசரின் உதவியுடன் அவனைச் சிறைச்சாலையிலிட்டனர். காசிநயினார் சிறைச்சாலையினின்று தப்பியோட மன்னாரிலிருந்த போர்த்துக்கீசத் தளபதியின் தூண்டுதலினால் கைதிசெய்யப்பட்டுக் கொல்லப்பட்டான். யாழ்ப்பாணத்திலுள்ள மக்கள் போர்த்துக்கீசரின் உதவியைத் தேடிநின்றமையால் அவர்கள் தலையிட்டு பெரியபிள்ளை என்பவனைச் சிங்காசனமேற்றினர். அவன் செகராசசேகரன் என்ற பெயருடன் ஆளத்தொடங்கினான். இவ்வரசன் போர்த்துக்கீசரின் ஆதரவைப் பெற்றமையினால் அவர்களுக்கு நேர்மையாகவும் உண்மையாகவும் நடந்துகொண்டதோடு திறையுஞ்செலுத்தி கிறித்த குருமாரையும் மதப்போதனை செய்வதற்கு அனுமதி அளித்தான். பின்பு புவிராசபண்டாரம் என்னுமொருவன் இராச்சியத்தைக் கைப்பற்றி பரராசசேகரன் என்ற

பெயருடன் ஆளத்தொடங்கினன். அவன் போர்த்துக்கீசருடைய ஆணையினின்று விலகிக்கொள்ள விரும்பியதோடு கிறீத்த குருமாரின் மதப்போதனையையும் தடுத்து மன்னரை முற்றுக்கையிட்டும் அதிற் சித்தியடையவில்லை. பின்பு மாந்தோட்டையிலிருந்த கிறீத்தவர்களை வதைத்தான். அவனுக்கு உதவிபுரிய, கள்ளிக்கோட்டை அரசனால் அனுப்பப்பட்ட படை போர்த்துக்கீசராற் தோற்கடிக்கப் பட்டது. பின்பு அவர்கள் யாழ்ப்பாணம் சென்று கொழும்புத் துறையிலிறங்கி அங்கிருந்து நல்லூரை அடைந்து (1591) தமிழரசனுடைய சேனையையுந் தோற்கடித்தனர். அந்நேரத்தில் யாழ்ப்பாண இராச்சியத்தின் இளவரசனொருவன் இறக்கும் நேரத்தில் **சிமாவோ பின்காவோ** என்பவனாற் காப்பாற்றப்பட்டான். அச்சம்பவத்தைப் பற்றிப் பொறிக்கப்பட்ட கல்லை இன்றும் சப்பிரகாமுவாவிலுள்ள தேவாலயத்திற் காணலாம். புவிராசபண்டாரம் தப்பியோட எத்தனித்தபொழுது போர்த்துக்கீசராற் கைதிசெய்யப்பட்டுக் கொல்லப் பட்டான். அரண்மனையிலுள்ள பணமும், ஆபரணங்களும், யுத்தத்திற்குரிய ஆயுதங்களும் அவர்களுடைய கையிற் சிக்கின.

பின்பு போர்த்துக்கீசத் தளபதியாகிய **பேற்றாடோ** என்பவன் நல்லூரில் ஒரு **மகாநாட்டைக்கூட்டி** (1591) யாழ்ப்பாணத்திலுள்ள பிரதானிகளை அங்கு அழைத்து போர்த்துக்கல் அரசனுடைய ஆணையை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றும், அவர்களுடைய பழைய வழக்கங்களும் முறைகளும் அனுசரிக்கப்படுமென்றுங் கூறிய பொழுது அவர்கள் தங்களுடைய சம்மதத்தைத் தெரிவித்தனர். இருபகுதியாருடைய சம்மதத்துடன் போர்த்துக்கீசராற் பாதுகாக்கப் பட்ட எதிர்மன்னசிங்கன் என்ற இளவரசன் (பெரியபிள்ளையின் மகன்) யாழ்ப்பாண இராச்சியத்துக்கு அரசனுக்கப்பட்டான். தனக்கு உதவிசெய்தவர்களுக்கு நன்றி பாராட்டும்முகமாக எதிர்மன்னசிங்கன் பரராசசேகரன் என்ற பெயருடன் ஆளுகை நடத்திய காலத்தில் (1591 - 1615) போர்த்துக்கீசரோடு உண்மையுடனும் விசுவாசத்துடனும் நடந்துகொண்டான். அதிருப்தியடைந்த பிரதானிகளிற் சிலர், தஞ்சாவூர் அரசனின் உதவியோடும், விமலதர்மசூரியனின் உதவியோடும் இன்னொரு இளவரசனை அரசனுக்கும் நோக்கத்துடன் சதிசெய்தனர். ஆனால் மன்னரிலுள்ள போர்த்துக்கீசத் தளபதி தஞ்சாவூரிலிருந்துவந்த படையைத் தோற்கடித்தமையினால் அவர்களுடைய முயற்சி பயனடையவில்லை. பரராசசேகரன் போர்த்துக்கீசரோடு சிநேகமுறையில் நடந்துகொண்டதுமல்லாமல் கிறித்து

மதத்தைப் பரப்பவும் அவர்களுக்கு உத்தரவளித்தான். அவனுடைய மருமகனுகிய சங்கிலி என்பவன் தடுக்காதிருந்தால் அவன் தானும் கிறித்தவனுக மாறியிருப்பான்.

**1615**-ல் பரராசசேகரன் இறக்க அவனுடைய சகோதரனுகிய அரசகேசரி, இறந்த அரசனுடைய மகனுக்காக இராசப்பிரதிநிதியாய் ஆண்டுகொண்டிருக்கும்பொழுது சங்கிலி அவனைக்கொன்று இராச்சியத்தைக் கைப்பற்றினுன். மன்னுரிலிருந்த போர்த்துக்கீசத் தளபதி கிறித்தசமயத்திற்கு ஆதரவளிக்குமாறு சங்கிலியை வாக்களிக்கும்படி செய்துவிட்டுத் திரும்பினுன். அரசுரிமையையுடைய இளம்பராயத்திலுள்ள அச்சிறுவனைச் சங்கிலி கொலைசெய்துபோடுவானென நினைந்த மக்கள் சங்கிலிக்கெதிரே கிளர்ச்சியுண்டாக்க அவன் போர்த்துக்கீசரின் உதவியைத் தேடினுன். அவர்களுடைய உதவியுடன் தனக்கெதிரே கிளர்ச்சிசெய்தவர்களை அடக்கிவிட்டு ஆளத் தொடங்கினுன். பின்பு முன்னிருந்த சங்கிலி அரசனைப்போல இவனும் தான் வாக்குப்பண்ணியவைகளை நிறைவேற்றத் தவறினுன். சங்கிலி டச்சுக்காரரோடு நட்புக்கொண்டிருப்பதாயும், திறைசெலுத்துவதை நிறுத்திவிட்டானென்றும் கேள்வியுற்ற போர்த்துக்கீசத் தளபதியாகிய கொன்ஸ்தாந்தைன் டி சா என்பவன் சங்கிலியைத் தண்டிக்குமாறு **டி ஒலிவீரா** என்பவனை அனுப்பினுன் (1618). அவன் தன்னுடைய படையுடன் ஊர்காவற்றுறையிலிறங்கி திறைசெலுத்தும்படி கேட்க சங்கிலி திறைகொடுப்பதைப் பின்போட்டமையினுல் நல்லூர்மார்க்கமாகப் புறப்பட்டான். சங்கிலியினுடைய படைகள் வண்ணுர்பண்ணையிற் காட்டிய எதிர்ப்பை வென்று நல்லூரை அண்மினுன். சங்கிலி இந்தியாவுக்குத் தப்பியோட எத்தனித்தபொழுது அவன் கைதிசெய்யப்பட்டு கொழும்புக்குக் கொண்டுசெல்லப்பட்டான். அங்கிருந்து கோவைக்கு அனுப்பப்பட்டு அங்கு கொலை செய்யப்பட்டான். அரசுரிமையைப்பற்றி மேலும் விவாதங்களேற்பட்டமையாலும், அரசியற்குழப்பங்கள் அடிக்கடி காணப்பட்டமையாலும் டி சா யாழ்ப்பாண இராச்சியத்தைத் தன்னுடைய ஆட்சிக்குட்படுத்தினுன் (1621). டி ஒலிவீராஅங்கே தளபதியாக நியமிக்கப்பட்டான். யாழ்ப்பாண இராச்சியம் சுதந்திரத்தை இழந்தது. அரசுரிமையைப்பற்றி விவாதமே பிரதான காரணமாகும். சங்கிலி, காசிநயினுர்போன்ற அரசர்களின் அநீதி, போர்த்துக்கீசரின் உதவியை நாடும்படி அந்நாட்டு மக்களைத் தூண்டியது. கோட்டை இராச்சியத்தைத் தங்களுடைய ஆட்சிக்குட்கொண்டுவந்த போர்த்துக்கீசர் யாழ்ப்பாண இராச்சியத்தையும் தம்வசப்படுத்தினர்.

## வினாக்கள்

1. 1543-ல் போர்த்துக்கேசர் யாழ்ப்பாண இராச்சியத்திற்குக் கப்பற் படையொன்றை அனுப்பியதற்குக் காரணமென்ன? அதனால் அவர்கள் அடைந்த பயன் என்ன?

2. போர்த்துக்கேசருக்கும் சங்கிலி அரசனுக்குமிடையில் பகைமை ஏற்பட்டதற்குக் காரணமென்ன?

3. "யாழ்ப்பாண இராச்சியத்திலே காணப்பட்ட அரசியற்குழப்பங்களே போர்த்துக்கேசர் தங்களுடைய ஆட்சியை நிலைநாட்டுவதற்குச் சாதகமாயிருந்தன" இதன் உண்மையை ஆராய்க.

4. யாழ்ப்பாண இராச்சியம் சுதந்திரத்தை இழந்த வரலாற்றைப்பற்றிக் கூறுக.

---

# 7. கண்டி அரசர்களும் போர்த்துக்கீசரும்

**1505**-ம் ஆண்டிலே போர்த்துக்கீசர் இலங்கைக்கு வந்தபொழுதிலும் **1539**-ன் பின்பே கண்டி இராச்சியத்தினுடைய விஷயங்களிலே தலையிட்டனர். அதுவரையும் கண்டி இராச்சியத்திற் சமாதானம் நிலவியது. போர்த்துக்கீசர் புவனேகபாகுவுக்கு உதவிசெய்துகொண்டிருந்தமையினால் கோட்டையைக் கைப்பற்றுவது மாயதுன்னைக்குச் சுலபமாய்த் தோற்றவில்லை. ஆகையால் அவன் கண்டியைக் கைப்பற்றுவதிற் கவனஞ்செலுத்தினான். அந்நேரத்தில் புவனேகபாகுவும் மாயதுன்னையோடு சேர்ந்துகொண்டான். கண்டிக்கு அரசனாகிய விக்கிரமபாகு இருவருடைய படைகளையும் எதிர்த்துச் சண்டைசெய்வதற் கியலாமையினால் போர்த்துக்கீசருடைய உதவியைத் தேடினான். அவர்கள் செய்யும் உதவிக்குப் பதிலாகத் தான் கிறீத்தவனாக மாறுவதாகவும் கண்டியிலுள்ள கறுவாவைக் கொடுப்பதாகவும் கத்தோலிக்க சமயத்தைப் பரப்ப அனுமதி அளிப்பதாகவும் வாக்குப்பண்ணினான். இவ்விதமாகத் தங்களுக்கு வாய்த்த தருணத்தை இழக்க விரும்பாது, உதவியளிக்க உடன்பட்டனர். ஆனால் அவர்கள் உதவியளிக்கத் தாமதப்பட்டமையால், விக்கிரமபாகு, படையெடுத்துவந்த இரு அரசர்களோடுஞ் சமாதானஞ் செய்துகொள்ள வேண்டியதாயிற்று. மாயதுன்னை கேட்ட பணத்தொகையையும் ஈந்து புவனேகபாகுவின் பௌத்திரனான தர்மபாலனுக்குத் தனது மகளை விவாகஞ்செய்து கொடுப்பதாகவும் இணங்கிக்கொண்டான். பின்பு போர்த்துக்கீசர் கோட்டை, யாழ்ப்பாணம் ஆகிய இரு இராச்சியங்களின் விஷயங்களிற் சிரத்தையெடுத்தமையினால் கண்டியிற் கவனஞ்செலுத்த முடியவில்லை.

**1582**-ல் கண்டி இராச்சியத்தை கரலியட்ட பண்டாரனினின்று இராசசிங்கன் கைப்பற்றியதனால் அவன் தன்னுடைய மகளையும், மருமகனையுங் கூட்டிச்சென்று போர்த்துக்கீசரின் பாதுகாப்பைப் பெற்றான். அவன் நோய்வாய்ப்பட்டு இறந்தமையினால் அவ்விரு பிள்ளைகளும் போர்த்துக்கீசரின் பாதுகாப்பிலிருந்தனர். அவர்கள் ஞானஸ்நானம் பெற்று முறையே தோனாகதரினா, தோன்பிலிப்பு என்ற பெயரைப்பெற்றனர். இராசசிங்கன்மீது வெறுப்புக்காட்டிய பிரசைகள் தோன்பிலிப்பை அவனுக்கு உரிய உரிமைப்படி இராச்சியத்தை ஏற்றுக்கொள்ளும்படி கேட்டுக்கொண்டனர். போர்த்துக்கீசருடைய உதவியையுங் கோரினர். அக்காலத்தில் தோன்யூவான் என்ற பெயருடன் போர்த்துக்கீசரோடிருந்த கோனப்புபண்டாரன்

என்பவனுடைய தலைமையின்கீழ் கண்டிக்கு ஒரு படையை அனுப்பினர். இராசசிங்கன் தோற்கடிக்கப்பட்டமையால் தொன்பிலிப்பு அவ்விராச்சியத்துக்கு அரசனுக்கப்பட்டான். கண்டியிலுள்ள மக்கள் இராசவமிசத்திலுள்ள ஒருவன் அரசனுக்கப்பட்டான் என்று திருப்தியடைந்தனர். போர்த்துக்கீசர் கத்தோலிக்க சமயத்தைச்சேர்ந்த ஒருவன் அரசனுக்கப்பட்டமையால் தங்களுடைய சமயமும் வர்த்தகமும் பாதுகாக்கப்பட்டனவென்று திருப்தியடைந்தனர். அதிருப்தியடைந்த கோனப்புபண்டாரன் போர்த்துக்கீசருக்கெதிரே மக்களுடைய ஆதரவைத் தேடினுன். சிறிது காலத்திற்குள் டொன்பிலிப்பு மரணமடைந்தான். டொன்யூவனுல் நஞ்சூட்டிக் கொல்லப்பட்டானென்ற சந்தேகம் உண்டானது. டொன்யூவான் அரசைக்கைப்பற்றி மக்களுடைய உதவியோடு கண்டியினின்று போர்த்துக்கீசரைத் துரத்தினுன். விமலதர்மசூரியன் என்ற பெயருடன் அரசனுனவுடன் கத்தோலிக்க சமயத்தை நீத்து புத்தசமயத்தவனுனுன். போர்த்துக்கீசர் தங்களுடைய சமயத்திற்கும் வர்த்தகத்திற்கும் அபாயம் ஏற்பட்டதென எண்ணி அவனைக் கண்டி இராச்சியத்திற்கு அரசனுக நீடித்து ஆள விடக்கூடாதென்றும், அவனுடைய மதமாற்றம் பிரசைகளுடைய சமயப்பற்றைக் குறைத்துவிடுமென்றும் யோசித்தனர். ஆகையால் தோனுகதரினுவை அரசியாக்க நினைத்து பெருஞ்சேனையுடன் அவளையுங் கூட்டிச்சென்றனர். கரலியட்டபண்டாரனுடைய மகளாகையால் அவளை அரசியாக்க அந்நாட்டு மக்களுஞ் சம்மதப்பட்டனர். சண்டையிற் தோல்வியுற்ற விமலதர்மசூரியன் தப்பி ஓடி மறைவிடஞ் சென்றுன். தோனுகதரினு அரசியாக எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டாள். ஆனுல் அவள் போர்த்துக்கீசரிலேயே தனது அதிகாரத்தைச் செலுத்துவதற்குத் தங்கியிருந்தமையால் மக்களுக்கு திருப்தியுண்டாகவில்லை. அதுவுமல்லாமல் ஒரு போர்த்துக்கீசப் பிரபுவுக்கு அவளை மணஞ்செய்து கொடுப்பதாக அவர்கள் யோசனை செய்திருப்பதாகக் கேள்வியுற்றோர் மனத்தில் வெறுப்புண்டானது. சனங்கள் ஜெயவீரபண்டாரனை அவளுக்கு மணஞ்செய்து வைக்க வேண்டுமென விரும்பினர். போர்த்துக்கீசர் அதற்கு உடன்படமாட்டார்களெனவுணர்ந்த ஜெயவீரன் விமலதர்மசூரியனுடைய பக்கஞ் சார்ந்தான். இதனையறிந்த போர்த்துக்கீசர் ஜெயவீரனைக் கொலை செய்வித்தனர். மறைவிடமிருந்து வெளியேறிய விமலதர்மசூரியன் சனங்களுடைய ஆதரவோடு போர்த்துக்கீசரோடு சமர்புரிந்து வெற்றி பெற்றுன். பின்பு அவன் தோனுகதரினுவை மனைவியாக்கித் தனக்குரிய அரசுரிமையைப் பலப்படுத்தினுன்.

இதுவரையில் கண்டி இராச்சியத்தின் விஷயங்களில், தங்களுடைய மார்க்கமும் வர்த்தகமும் பாதிக்கப்படாத அளவுக்குத் தலையிட்டனர். ஆனால் அவர்களுக்கு இலங்கையில் எப்பகுதியையும் கைப்பற்றும் நோக்கம் இதுவரையுமில்லை. கோட்டை இராச்சியம் அவர்களுடைய ஆட்சியின்கீழ் வந்துசேர்ந்தது. யாழ்ப்பாண இராச்சியத்தில் அரசுரிமைபற்றி அடிக்கடி ஏற்பட்ட கலகங்கள் அமைதிக்குறைவை யுண்டாக்கியமையினால் அதையும் தங்களுடைய ஆட்சியின்கீழ்க் கொண்டுவர நேரிட்டது. ஆனால் இப்பொழுது கண்டியைக் கைப்பற்றத் தீர்மானித்தனர். அவ்விதம் அவர்கள் எண்ணங்கொண்டதற்குரிய காரணங்களை ஆராய்வோம். கத்தோலிக்க சமயத்திற்கும் வர்த்தகத்திற்கும் விமலதர்மசூரியன் அரசனாயிருந்தால் அபாயமுண்டென்று எண்ணினர். மேலும் விமலதர்மசூரியன் கிறீத்த சமயத்தினின்று புத்தசமயத்திற்கு மாறினமையால் அவனுடைய பிரசைகளும் அவனைப் பின்பற்றக்கூடு மெனவும் யோசித்தனர். அவர்களுடைய படைப்பலமும், போர்த்திறமையும் வெற்றியை அளிக்குமென்றும் அவர்கள் பெருமிதமடைந்தனர். கோட்டையிலும், யாழ்ப்பாணத்திலும் வெற்றிமாலை சூடியவர்கள் கண்டியிலும் அவ்விதம் செய்துமுடிக்கலாம் என்றும் பெருமைகொண்டனர். இலங்கையிலுள்ள இரு இராச்சியங்களையும் தங்களுடைய ஆட்சிக்குட் கொண்டுவருவதில் அனுகூலமடைந்தவர்கள் கண்டியையும் அதிக கஷ்டமின்றிக் கைப்பற்றிக்கொள்ளலாமென மனக்கோட்டைகட்டினர். இனி கோவையிலும் பார்க்க இலங்கையே காரியாலயம் வகுப்பதற்குத் தகுந்ததென யோசித்தனர். இலங்கையைத் தம்வசப்படுத்தினால் முழு இந்துசமுத்திரத்தின் ஆதிக்கத்தையும் பெறமுடியும். ஆகையால் இலங்கை முழுவதையும் தங்களுடைய ஆட்சிக்குள்ளாக்க வேண்டியிருந்தது. மத்திய இலங்கையை ஆண்டுகொண்டிருந்த அரசன் பகைமைகொண்டிருக்குமளவும் இலங்கையிற் காரியாலயம் வகுப்பது சாத்தியமாகாது. ஆகையால் முழு இலங்கையையும் கைப்பற்றுவதற்கு யோசனைசெய்தனர். வர்த்தகம், மார்க்கம், நிர்வாகம் ஆகியவைகளின் நிமித்தம் கண்டியைக் கைப்பற்றுவது அவசியமாயிற்று. ஆகையால் இலங்கைக்கு அனுப்பப்பட்ட ஒவ்வொரு போர்த்துக்கீசத் தளபதிக்கும் கண்டியைக் கைப்பற்றவேண்டுமென்று கற்பிக்கப்பட்டது.

**1594**-ல் தோனகதரினவை அரசியாக்கும்பொருட்டுக் கண்டிக்குச்சென்ற **டிசூசா** தன்னுடைய நோக்கத்தை நிறைவேற்றுவதிற் சித்தி எய்தியும் ஈற்றில் எவ்வாறு விமலதர்மசூரியனாற் தோற்கடிக்

கப்பட்டான் என்பதைப்பற்றி முன்பு படித்திருக்கின்ளேம். அவ் வண்ணம் கன்னறுவா (பேராதனை)வில் தோற்றமை போர்த்துக்கீச ரின் கௌரவத்திற்குப் பங்கமென நினைந்த போர்த்துக்கீச இராசப் பிரதிநிதி கண்டியைக் கைப்பற்றவேண்டுமெனத் தீர்மானஞ்செய் தான். விமலதர்மசூரியன் தான் இலங்கை முழுவதற்கும் தானே அரசனென வெளிப்படுத்தியதும் போர்த்துக்கீசருக்குக் கோபமூட்டி யது. தங்களுக்குக் கிடைத்த கோட்டை இராச்சியத்திற்கும் ஆபத்து நேர்ந்தது எனவும் அவர்கள் உணர்ந்து தங்களுடைய உரிமையை நிலைநாட்டவேண்டியதுமாயிற்று. கண்டியிலுள்ள மக்கள் விமலதர்ம சூரியனைத் தங்களுடைய அரசனாக மதித்து அவனுடைய தூண்டு தலினால் போர்த்துக்கீசருக்கெதிரே கலகமுண்டாக்கினர்.

இழந்த பிரதேசங்களைக் கைப்பற்றுவதற்காகவும் டிசூசாவின் படையெடுப்பில்நேர்ந்த அவமானத்திற்காகத் தண்டிக்கவும் கோவையி லுள்ள இராசப்பிரதிநிதி **டிஅசிவிடோவை** தளபதியாக அனுப்பி னான் (1594). 1595-ல் தொன்யூவானையும் அழைத்துக்கொண்டு அசிவிடோ கொழும்பிலிருந்து புறப்பட்டான். முன்பு **டிசூசா** தோற் கடிக்கப்பட்டு பின் கைதிசெய்யப்பட்ட 40 போர்த்துக்கீசப் போர் வீரர்கள் விமலதர்மசூரியனால் அங்கவீனப்படுத்தப்பட்டனர். அதற் காக தான் சென்றவிடமெல்லாம் பல கொடுமைகளை விளைத்தான். சீதாவாக்கையிலுள்ள அரண்மனையில் தொன்யூவானை இருத்தி டொமின்கோஸ் கோரியாவைச் சப்தகோரளைக்கு திசாவையாக்கி தெனவாக்கை, மல்வானை, கழுத்துறை, மாத்தறை, நீர்கொழும்பு முதலிய இடங்களிலே தனது அதிகாரத்தைத் தாபித்தான். அசி விடோவின் கொடுமையான செயல்களினால் வெறுப்பும் கோபமுங் கொண்ட மக்கள் கலகத்தை விளைவிக்க அதைப் பயன்படுத்தி டொமின்கோஸ் கோரியா போர்த்துக்கீசருக்கெதிரே கிளர்ச்சியுண்டு பண்ணினான். டொன்யூவானுக்கு ஆபத்து நேரிடக்கூடுமென நினைந்து அசிவிடோ அவனையும், மனைவியையும் கொழும்புக்குக் கொண்டுசென்றான். கொழும்பையும் காலியையுந் தவிர்ந்த ஏனைய பகுதிகளெல்லாம் கலகத்தையுண்டுபண்ணின. அசிவிடோ மீண்டும் மனத்தைரியத்துடன் போர்முனைக்குச் சென்றான். கலகத்தை விளை வித்தவனாகிய டொமின்கோஸ் கோரியா விமலதர்மசூரியனிடம் ஓட அவன் படைத்துணை உதவி, சண்டையை நீடித்து நடத்தும்படி தூண்டினான். டொன்யூவானுடைய மருமகனான கொன்ஸ்தாந்தைன் நவரத்தினவும், சமரக்கோன் என்பவனும் போர்த்துக்கீசருடைய பக் கஞ் சார்ந்து சண்டைசெய்தனர். டொமின்கோஸ் கோரியா, சம ரக்கோனுடைய கையிற் சிக்கியவுடன் அவன் அசிவிடோவிடற்

அவனை ஒப்படைத்தான். கொழும்புக்குக் கொண்டுபோகப்பட்டு அங்கே கொலைசெய்யப்பட்டான்.

1597-ல் டொன்யூவான் தர்மபாலன் இறந்தவுடன் அவன் எழுதிவைத்த மரணசாதனத்தின் பிரகாரம் போர்த்துக்கல் அரசனே கோட்டை இராச்சிய அரசுரிமையைப் பெற்றான். அசிவிடோ கோட்டை அரசனின் மாளிகையிலுள்ள பிரபுக்களையும் மற்றும் பிரதானிகளையும் அழைத்துப் போர்த்துக்கல் அரசனாகிய பிலிப்பு மன்னனே அரசனென ஏற்றுக்கொள்ளுமாறு அவர்களுடைய அங்கிகாரத்தைப் பெற்று போர்த்துக்கல்நாட்டுக் கொடியையும் நாட்டிக் கொழும்புவீதிகளில் ஊர்வலமாகச் சென்றான். இவ்விதம் கோட்டை இராச்சியத்தின் ஆதிக்கத்தைப் போர்த்துக்கீசர் பெற்றமை விமல தர்மனுக்கு விருப்பமில்லை. போர்த்துக்கீசருக்கெதிரே கலகமுண்டாக்கியவர்களை தன்னுடைய நாட்டுக்கு வந்துசேர அனுமதியளித்தான். மேலும் அவர்களுக்குக் கஷ்டமுண்டாக்கும் நோக்கத்துடன் மாத்தறைத் திசைவானிக்கு ஒரு படையுடன் தெனவாக்கையிலுள்ள மாயதுன்னையையும் சிமான்கோரியாவையும் அனுப்பினான். அங்கிருந்த திசாவையாகிய சமரக்கோன் படையெடுத்துச் சென்றோர்களை தோற்கடித்தான். விமலதர்மசூரியனும் ஒரு படையுடன் சென்று சமர்புரிந்தும் வெற்றிபெற முடியாது திரும்பிச் செல்லவேண்டியதாயிற்று.

பின்பு அசிவிடோ கண்டிக்குப் படையெடுத்துச்செல்ல ஆயத்தஞ்செய்தான். மெனிக்கடவரையில் கோட்டையொன்றை நிறுவிபின் அங்கிருந்து விமலதர்மனைத் தாக்கியபொழுது அவன் அசிவிடோவின் நோக்கத்தை மாற்றும்பொருட்டு சப்பிரகாமுவாவில் கலகத்தையுண்டுபண்ணினான். அசிவிடோ தன்னுடைய போர்வீரர்களைத் திரட்டிக் கலகக்காரரைத் தாக்கியபொழுது அவர்கள் சரணாகதியடைந்தனர். அதனால் மனத்தளர்ச்சியுற்ற விமலதர்மன் சமாதானத்தை விரும்பியதோடு டிசூசாவின் மகனையும் சில கத்தோலிக்க குருமாரையும் விடுதலைசெய்தான். அசிவிடோ திருப்தியடையாது கண்டியை தனதாட்சிக்குட்படுத்த வேண்டுமென்று தீர்மானித்தான். கோவையிலுள்ள இராசப்பிரதிநிதியும் விமலதர்மனைத் தண்டிப்பதற்காக அசிவிடோவுக்குப் படைத்துணையுமனுப்பினான். போர்த்துக்கிசர் பலவிடங்களையுஞ் சூறையாடி கோயில்களையும் அழித்தனர். 1601-ல் இந்தியாவிலிருந்துவந்த படைத்துணையுடன் அசிவிடோ புறப்பட்டு நான்கு கோரளைகளை அடக்கிக் கோட்டைகளையுங் கட்டினான். விமலதர்மன் தன்னுடைய சேனைகளைத்திரட்டிப் போர்த்துக்கிசரோடு சண்டை செய்த

பொழுது அவன் பின்வாங்க நேரிட்டது. அடுத்த ஆண்டில் அசிவிடோ படையெடுத்துச்சென்று பலானையிற் பாளையமிட்டான். படைப் பலத்தினுல் வெல்லமுடியாதெனவுணர்ந்த விமலதர்மன் சூழ்ச்சியினுல் வெல்லக்கருதினுன். போர்த்துக்கீசரின் சேனையிலுள்ள சிங்களப் போர்வீரர்களுக்குத் தலைவனுன பின்காவோ என்பவனேடு சம்பாஷித்து அவன் போர்த்துக்கீசருடைய சேனையைத் தனக்குக் காட்டிக்கொடுத்தால் தான் அவனைச் சீதாவாக்கைக்கு அரசனுக்குவதாகச் சொன்னுன். அவன் அசிவிடோவிடம் அச்சூழ்ச்சியைப்பற்றிக் கூறியபொழுது அசிவிடோ விமலதர்மனைக் கைதிசெய்யும் நோக்கத்துடன் அவனுடைய சூழ்ச்சிக்குச் சம்மதங்கொடுக்குமாறு கூறினுன். இதை உறுதிப்பண்ணுவதற்காக 5 போர்த்துக்கீசப் போர்வீரர்களை பலானையில் அரசனைச் சந்திக்கும்படி அனுப்புவதாய் பின்காவோ கூறினுன். அசிவிடோ அங்கே விமலதர்மனையும் 5 போர்வீரர்களையும் கொன்றுவிடப் போர்த்துக்கீசப்படை கண்டிக்குள் பிரவேசிப்பதாக யோசனைசெய்தான். டிசூசா தோல்வியடைந்த சமயத்தில் கைதிசெய்யப்பட்ட மனுவேல்டயஸ் என்பவன் விமலதர்மனின் நண்பனுய் மாறி அவனுக்கு உதவிசெய்யும் நோக்கத்துடன், தான் அரசனிடமிருந்து தப்பி ஓடிவந்தவனுக அசிவிடோவிடம் போய்ச் சேர்ந்தான். அங்கிருந்த நிலை நன்ருயறிந்தபின் அவன் விமலதர்மனிடம் திரும்பிவந்து அசிவிடோ செய்யப்போகின்ற சூழ்ச்சியைப்பற்றிக் கூறினுன். அதனுல் சூழ்ச்சி ஒன்றும் பயனடையவில்லை.

அக்காலத்தில் டச்சுக்காரர் விமலதர்மனுக்கு உதவிசெய்வதற்கு விருப்பத்தைத் தெரிவித்தனர். விமலதர்மனும் டச்சுக்காரரின் தூதர்களும் கலந்தாலோசித்ததைப்பற்றி யறிந்த அசிவிடோ கண்டிக்குப் படையெடுத்துச் செல்வதற்கு ஆயத்தஞ்செய்தான். பலானையை அடைந்து கண்டிக்குச் செல்லும் மார்க்கத்தில் ஒரு இரவு போர்த்துக்கீசருடைய சேனையிலுள்ள சிங்களப் போர்வீரர்கள் விட்டுவிலகினர். அதனுலேற்பட்ட குழப்பங்கள் காரணமாக கண்டியிலுள்ள சேனைகள் பின்தொடர்ந்து தாக்கியும் அசிவிடோ பல இன்னல்களுக்கூடாக மல்வானையை அடைந்தான். கலகங்கள் பலவிடங்களிலும் காணப்பட்டன.

விமலதர்மசூரியன் நோய்வாய்ப்பட்டு 1604-ல் செங்கடகாலையி (கண்டி) லிறந்தான். அவன் திறமையும், தேகபலமும், மனத்திடமும் வாய்ந்த அரசனுவான். கண்டியிற் பிறந்து வளர்ந்தவனுகையால், மக்களுக்குத் திருப்தியளித்து போர்த்துக்கீசரை எதிர்த்துச் சண்டைசெய்தான். அவன் கண்டியிலுள்ள பிரதானி ஒருவனின்

மகனுயிருந்தபொழுதிலும் ஒரு அரசவமிசத்தைத் தாபித்த ஒருவனு வான். நீதியுடனும் மனத்திடத்தோடும் அரசுசெலுத்தினுன். போர்த் துக்கீசரின் உடையை அவனும், மனைவியும், பிள்ளைகளும் அணிந் திருந்தபொழுதிலும் பழைய வழக்கங்களை பின்பற்றி பெர ஹரா முதலிய மார்க்க சம்பந்தமான விழாக்களையும் நடத்தினுன். பாழடைந்த கோயில்களைத் திருத்தியமைத்ததோடு புத்தகுருமார்களை யும் வெளிநாட்டிலிருந்து வரவழைத்தான். தந்ததாதுவை வைத்து ஒரு மாளிகையுங் கட்டுவித்தான். கலகங்களை விளைவித்தும் போர்த் துக்கீசருடன் நின்று சண்டைசெய்த சிங்களப் போர்வீரர்களை தன் வசப்படுத்தியும். இன்னும் பலவித சூழ்ச்சிகளினுலும் போர்த்துக்கீச ரின் பலத்தைக் குறைத்தான். 1605-ல் அவனுடைய சகோதரனுன சேனரதன் என்பவன் இராசப்பிரதிநிதியாக ஆளத்தொடங்கினுன். இவன் ஒரு புத்தகுருவாக விருந்தபொழுதிலும் அரசனுகும் ஆசை யினுல் தோனுகதரினுவை மனைவியாக்கி அரசனுக ஆளத்தொடங்கி னுன். இராச்சியத்தின் விஷயங்களை ஒழுங்குக்குக் கொண்டுவருவ தற்கு அவனுக்குச் சிலகாலம் எடுத்தது.

சேனரதன் சமாதானத்தை விரும்பி போர்த்துக்கீசரின் பகை மையை நீக்கிவிட எண்ணங்கொண்டான். கண்டியை அடக்கித் தன்னுடைய ஆட்சிக்குட்படுத்தத் தீர்மானங்கொண்ட அசிவிடோ கண்டிக்குப் படையெடுத்துச்செல்ல ஆயத்தஞ்செய்தான். இதை அறிந்த சேனரதன் டச்சுக்காரரின் உதவியைக்கோரி அவர்களோடு ஒரு உடன்படிக்கையும் எழுதினுன். அசிவிடோ படையெடுத்துச் சென்று (1610) மாத்தளைவரைக்கும் முன்னேறினுன். அடுத்த ஆண் டில் இந்தியாவிலிருந்துபெற்ற படைத்துணையோடு நான்கு கோரளை யைத் தாண்டி பலானையை அடைந்து அங்கிருந்து கன்னறுவா (பேராதனை)வுக்குச் சென்ருன். அவனை எதிர்த்த கண்டிச்சேனை தோல்வியுற்றதால் அரசன் ஓடி ஒளித்தான். போர்த்துக்கீசர் நக ரத்தைச் சூறையாடி, அயற்பிரதேசங்களையுங் கொள்ளையடித்து, கோயில்களையும் தரைமட்டமாக்கினர். பின்பு கண்டியிலுள்ள மக்கள் திரண்டு எதிர்ப்புக்காட்டமுன் பலானைக்குத் திரும்பினர். கண்டி யைத் தீக்கிரையாக்கியதனுல் மனத்திருப்திகொண்டு அசிவிடோ கொழும்புக்குச் சென்ருன். பின்பு சேனரதன் மறைவிடமிருந்து வெளிச்சென்று சமாதானத்தை ஏற்பதாகப் போர்த்துக்கீசரிடம் தூதனுப்பினுன். அசிவிடோ அதற்குச் சம்மதங்கொடுத்தான். போர்த் துக்கல்லுக்குத் திறைகொடுப்பதாயும், கோட்டை இராச்சியத்திற் குப் போர்த்துக்கீசரின் ஆட்சியை ஏற்றுக்கொள்வதாயும் ஏற்றுக் கொண்டபொழுது சேனரதன்மீது மக்கள் கோபாவேசங்கொண்டனர்,

இதற்கிடையில் அசிவிடோ இந்தியாவின் இராசப்பிரதிநிதியாக நியமிக்கப்பட்டான். அவன் 18 வருடகாலம் போர்த்துக்கீசத் தள பதியாக இலங்கையில் ஆட்சி நடத்தினுன். டிசூசாவைத் தோல்வி யுறச்செய்ததினுலும் போர்த்துக்கீசக் கைதிகளுக்கு அங்கவீனமுண் டாக்கினமையினுலும் விமலதர்மனைத் தண்டிப்பதற்காக அனுப்பப் பட்ட அசிவிடோ கொடூரமான செயல்களால் மக்களிடையே பயங் கரத்தை யுண்டுபண்ணினுன். அவன் அரசியல் விஷயங்களிற் கவனஞ்செலுத்தாது கண்டியரசனை அடக்கவேண்டுமென்பதிலேயே முனைந்துநின்ருன். போர்த்துக்கீசத் தளபதிகளுட் திறமைவாய்ந்த வன் எனலாம். அரசாங்கத்தினுலுண்டான கொடுமைகளிலிருந்து மக்களைக் காப்பாற்றத் தவறினமையால் மக்கள் அவனையும் போர்த் துக்கீசரையும் வெறுத்தனர். அவன் செய்த தவறுகளினுலும் பகை வர்களின் சூழ்ச்சிகளினுலும் இந்தியாவிற் தன்னுடைய பதவியில் நீடித்திருக்க முடியாமற்போனது. ஈற்றில் லிஸ்பனுக்குக் கொண்டு போகப்பட்டு அங்கே சிறைச்சாலையில் இறக்க நேரிட்டது.

சேனரதன் தன்னுடைய சொந்த மகனுக்கே அரசுரிமை கிடைக்க வேண்டுமென்ற எண்ணத்தால் விமலதர்மசூரியனுடைய மகனைக் கொன்றுவிட்டதால் தோனுகதரினு மனவருத்தத்தினுல் இறந்தாள். அவள் இறந்ததின்பின் சேனரதன் விமலதர்மசூரியனுடைய பெண் பிள்ளைகளிருவரையும் மனைவிமாராக்கினுன். அசிவிடோ இந்தியா வுக்குச் சென்றபிறகு **மென்செசு** என்பவன் தளபதியாக இருந்த காலத்தில் அவனுக்கெதிரே பல குற்றங்கள் கொண்டுவரப்பட்டமை யால் **கோமெம்** என்பவன் இலங்கைக்குத் தளபதியாக அனுப்பப் பட்டான். அசிவிடோ கற்பித்தபடி அவன் கண்டிமீது வருடமிரு முறை படையெடுத்து பெரும் அழிவையுண்டாக்கினுன். அவன் மட் டக்களப்பு, கொட்டியாரம், திருகோணமலை, யாழ்ப்பாணம், கொழும் புத்துறை முதலிய துறைமுகங்கள்மூலம் அரசன் வர்த்தகஞ் செய் யாதவண்ணம் தடைசெய்தான். 1614-ம் ஆண்டு தளபதியாக இலங்கைக்கு வந்து அவன் அடுத்த ஆண்டில் கண்டிக்குப் படை யெடுத்துச்சென்று கண்டிநகரைத் தீக்கிரையாக்கி மல்வானைக்குத் திரும்பினுன். அவன் இன்னுமொருமுறை கண்டிக்குப் படையெடுத் துச்சென்று சிங்களப் போர்வீரர்களைத் தண்டித்தும், அதிகாரிகளைக் கடுமையாக அடக்கிவைத்தும் திரும்பி இரக்கங்காட்டாது நிர்வா கத்தை நடத்தினுன். நீதிவழங்கும் முறையையும் திருத்தியமைத் தான். நிலங்களை அளந்து அவைகளைப்பற்றிய விபரங்களை எழுது வதற்கு வருமானப்பகுதி அதிகாரிக்கு உதவியளித்தான். அவ

னுடைய ஆட்சி ஒன்றரை வருடமளவிலேதான் நீடித்தது. அவனுக்குப்பின் பெரிரா என்பவன் தளபதியாக அனுப்பப்பட்டான். இவனுடைய காலத்தில் (1616-1618) பல கலகங்களேற்பட்டன. நிக்கபித்தியபண்டாரன் என்ற பெயருடன் றைகம்கோரளையிலுள்ள ஒருவன் தான் சீதாவாக்கை அரசவமிசத்தவன் என்று கூறியபொழுது போர்த்துக்கீசருடைய ஆளுகையை வெறுத்த கோட்டையிலுள்ள மக்கள் அவனுக்கு ஆதரவளித்தனர். சேனரதனும் உதவியளித்தான். அவன் ஆரம்பத்தில் பெற்ற வெற்றிப்பிரலாபத்தின் காரணமாக தோனுகதரினுவின் மகள் ஒருத்தியைத் தான் விவாகஞ்செய்ய வேண்டுமென சேனரதனைக் கேட்டமையினுல் அவன் கோபங்கொண்டு போர்த்துக்கீசர் பக்கஞ் சார்ந்தான். போர்த்துக்கீசருக்கும் சேனரதனுக்குமிடையில் ஏற்பட்ட சமாதானத்தின் பயனுகச் சேனரதன் போர்த்துக்கல் அரசனுடைய ஆணையை ஏற்றுக்கொள்வதாயும், போர்த்துக்கீசக் கைதிகளை விடுதலைசெய்வதாயும், திறைகொடுப்பதாயும் உடன்படிக்கை எழுதிக்கொண்டான் (1617). நிக்கபித்தியபண்டாரன் ஓடி ஒளிக்கவேண்டியதாயிற்று.

பெரிராவின்பின் கொன்ஸ்தாந்தைன் டீசா என்பவன் தளபதியாக அனுப்பப்பட்டான். அவன் 1618 தொடக்கம் இரண்டு ஆண்டுகள் வரையிலும், பின்னர் 1623 தொடக்கம் 1630 வரையிலும் தளபதியாகவிருந்து ஆட்சிபுரிந்தான். அவன் ஆபிரிக்காவிலும் இந்தியாவிலும் கடமையாற்றி பெரும் மதிப்பைப் பெற்றவனுவன். சிறந்த குணுதிசயங்களும், திறமையும், ஆற்றலும் அனுபவமும் ஒருங்கே அமைந்தவனுகையால் போர்த்துக்கீசத் தளபதிகளுக்குட் சிறந்தவனுகப் பலராலும் பாராட்டப்பட்டான்.

டீசா செய்து முடிக்கவேண்டிய வேலைகள் பலவிருந்தன. சமாதான மேற்பட்டபின் போர்ச்சேவையி லிருந்த போர்த்துக்கீசப் போர்வீரர்கள் சட்டத்தை மீறியும் ஒழுங்கீனமான முறையிலும் நடந்துகொண்டனர். போர்த்துக்கீச உத்தியோகத்தர்கள் ஒழுக்கமற்றவர்களாயும் துரோகிகளாயுங் காணப்பட்டனர். மக்களும் அதிருப்தியடைந்திருந்தனர். பரேட்டோ, கங்கர ஆராய்ச்சி முதலிய கலகக்காரர்களும் அமைதிக்குறைவை யுண்டுபண்ணினர். இவ்விதமான சீர்கேடுகளைத் திருத்தி அமைப்பது அவனது பிரதான கடமைகளாயின. சேனையைத் திருத்தியமைத்து ஒழுங்குமுறையைப் புகுத்தினுன்; மக்களுக்கு ஆதரவுகாட்டி அவர்களுடைய அனுதாபத்தைப் பெற்றுன்; போர்த்துக்கீச உத்தியோகத்தர்களின் ஒழுங்கீனமான வாழ்க்கையைக் கண்டித்து அவர்களைச் சீர்ப்படுத்தினுன். சேனரத

னேடு சிநேகமுறையிலே நடந்துகொண்டு கலகக்காரரை அடக்கு வதில் முனேந்துநின்ருன். கங்கர ஆராய்ச்சி கைதிசெய்யப்பட்டு கொல்லப்பட்டான். யாழ்ப்பாணத்தின் அரசியல்நிலை குழப்பமா யிருந்தமையினுல் அதிற் கவனஞ்செலுத்தினுன். யாழ்ப்பாண இராச் சியம் எவ்வாறு போர்த்துக்கீசருடைய ஆட்சியின்கீழ்க் கொண்டுவரப் பட்டதென்பதைப்பற்றி முன் அத்தியாயத்திற் படித்திருக்கிரேம்.

சேனரதன் ஒல்லாந்தரோடு தொடர்புவைத்திருப்பதை அறிந்து தாங்கள் ஆட்சிபுரிந்த பகுதிகளை எதிரிகளிடமிருந்து பாதுகாப்ப தற்காக காலித்துறைமுகத்தில் ஒரு கோட்டையைக் கட்டினுன். இவ்வேலையிலீடுபட்டிருக்கின்ற நேரத்திலே சேனரதனுடைய அழைப் புக்கு தேனியருடைய கடற்படை திருகோணமலைக்கு வந்திருப்ப தாக அறிந்தான். போர்த்துக்கீசருடன் சேனரதன் சமாதானஞ்செய்து கொண்டமையால் தேனியருடைய உதவியைப் பெற்றுக்கொள்வ தற்கு விரும்பவில்லை.

சென்ற இரு ஆண்டுகளாக ஆட்சிபுரிந்த காலத்தில் **டீசா** இலங்கையில் போர்த்துக்கீசருடைய அதிகாரம் உன்னத நிலையடை யச் செய்தான். யாழ்ப்பாண இராச்சியம் போர்த்துக்கீசருடைய ஆதிக்கத்துட் கொண்டுவரப்பட்டது. கலகங்களை விளைவித்த கங்கர ஆராய்ச்சி, பரட்டோ என்பவர்கள் கொல்லப்பட்டனர். சேனரதன் தன்னைத் தேடிவந்த தேனியரின் உதவியைப் பெற்றுக்கொள்ளாத விதம் தடைசெய்தான். இவ்விதமாகப் பல சேவைகளைப் புரிந்த தளபதி இலங்கையை விட்டுவிலக நேரிட்டது. பின்பு **அர்பக்கூர் குவே** என்பவன் 1620 தொடங்கி இரண்டு ஆண்டுகளாக ஆட் சியை நடத்திவந்தான். அவனுடைய காலத்தில் போர்த்துக்கீசப் போர்வீரர்கள் கலகஞ்செய்தமையாலும் மக்கள் அவனில் விருப்ப மில்லாமையினுலும் அவன் கோவைக்குப் போகும்படி கற்பிக்கப் பட, **டீசா** மீண்டும் தளபதியாக இலங்கைக்கு அனுப்பப்பட்டான்.

1623-ல் **டீசா** இலங்கைக்குவந்த பொழுது போர்த்துக்கீசருடைய நிலைமை அல்பக்கூர்குவேயின் பிழையான நிர்வாகத்தினுல் சீர் கேடான நிலையிலிருந்தது. மற்றும் ஐரோப்பிய சாதியினர் மட்டக் களப்பையும் திருகோணமலையையும் கைப்பற்றுவண்ணம் அவை களை அரண்செய்ய வேண்டுமெனத் தீர்மானஞ்செய்தான். திரு கோணமலையை ஏனைய ஐரோப்பியச் சாதியினர் கைப்பற்றுவண் ணம் தான் அரண்செய்யப்போவதாகச் சேனரதனுக்கு அறிவித்து விட்டு தன்னிடமிருந்த சேனையோடு திருக்கோணமலைக்குச் சென் ருன். அங்கிருந்த இந்துக்களுடைய தேவாலயத்தை இடித்து அந்த

இடத்தில் முக்கோணவடிவுள்ள ஒரு கோட்டையைக் கட்டி அதிலே ஒரு படையையும் இருத்தினுன். ஆனுல் சேனரதனுல் போர்த்துக் கீசருடைய நடவடிக்கைகளைத் தடுக்க முடியாமற்போனது. **1617** தொடங்கி அவன் போர்த்துக்கீசருடன் சமாதானமுறையில் நடந்து கொண்டான். தன்னுடைய இராச்சியத்திற்குள் கிறீத்தகுருமார் வரவும் கோயில்களைக் கட்டவும் அனுமதியளித்ததுமல்லாது கிறீத்த குருமார்களிடம் கல்விகற்பதற்குத் தன்னுடைய பிள்ளைகளை ஒப்படைத்தான். ஆனுல் டீசாவினுடைய செய்கைகள் பிரதானமாக திருக்கோணமலையில் கோட்டையை நிறுவியமை சேனரதனுக்குப் பிடிக்கவில்லை. இதுவரையும் திருகோணமலையில் கண்டியிலுள்ள விளைபொருட்கள் சில, அபின் முதலிய பிறபொருட்களோடு பண்ட மாற்றுச் செய்யப்பட்டுவந்தன. இனிமேல் அது தடைபடுமென அஞ்சினுன்.

கண்டி அரசன் கோபங்கொண்டிருப்பதை அறிந்த போர்த்துக் கீசத் தளபதி தாழ் பூமியிலுள்ள மக்களின் ஆதரவைப் பெறும் நோக்கத்தோடு அவர்களை அன்பாக நடத்தியதோடு உயர்ந்த உத்தியோக பதவியையும் ஈந்தான். நிலம் வழங்கும் விஷயத்திலும், மற்றும் விஷயங்களிலும் போர்த்துக்கீசரையும் சிங்கள மக்களையும் சமத்துவமான முறையில் நடத்தினுன். நிர்வாகத்திற் சீர்திருத்தங்களை உண்டாக்கினுன். காலி, கழுத்துறை, கொழும்பு ஆகிய இடங்களை அரண்செய்தான். முஸ்லிங்கள் போர்த்துக்கீசரின் ஆதிக்கத்திற்கும் மதப்பிரசாரத்திற்கும் இடையூருக இருக்கிருர்களென்று கோவையிலுள்ள அதிகாரிகளின் கட்டளைப்படி போர்த்துக்கீசர் ஆட்சியிலுள்ள பகுதிகளிலிருந்து துரத்தினுன். அவர்கள் கண்டி இராச்சியத்திற்குச் செல்ல அங்கே சேனரதனுல் வரவேற்கப்பட்டனர். நாலாயிரம் முஸ்லிங்கள் வரையில் மட்டக்களப்பிலே குடியேறினர்.

டீசா, போர்த்துக்கீசருடைய ஆதிக்கம் இலங்கையில் நிலைக்க வேண்டுமென்ருல், கண்டியைக் கைப்பற்ற வேண்டுமென்ற முடிவு செய்தான். அதைச் செய்து முடிப்பதற்குப் போதிய படைப்பலம் தேவைப்பட்டது. அக்காலத்தில் போர்த்துக்கல்நாடு ஸ்பானிய அரசனுடைய ஆளுகையின் கீழமர்ந்தமையினுல் அவன் படைப்பலத்தைக் கூட்டுவதற்குச் சம்மதியாது மட்டக்களப்பை அரண்செய்து கொண்டு கண்டி அரசனேடு சமாதானஞ்செய்யும்படி கட்டளையிட்டான். கண்டியின் எல்லைப்புறங்களை பலப்படுத்திக்கொண்டு மட்டக்களப்புக்குச் சென்று அங்குள்ள புளியன்தீவில் கோட்டையொன்றைக் கட்டினுன். சேனரதனுடைய இரு புதல்வர்களும் யாழ்ப்பா

ணத்து அரசனுடைய பெண்பிள்ளைகளிருவரை விவாகஞ்செய்தமை யினுல் அவ்விராச்சியத்திற்குத் தனக்கு உரிமையுண்டென்று சொல்லி அதைக் கைப்பற்றுவதற்காகப் படையொன்றை அனுப்பினுன் (1628). டீசா அங்நேரத்தில் கண்டிக்குப் படையெடுத்துச்செல்ல சேனரதன் ஓடி ஒளித்தான். அங்கிருந்து தன்னுடைய சேனையிலொருபகுதியை யாழ்ப்பாணத்திற்கு அனுப்பினுன். கண்டியரசனுடைய சேனையைத் தோற்கடிக்கச்செய்து அங்குள்ள பிரமுகர்களை போர்த்துக்கல் அரச னின் ஆணையை ஏற்றுக்கொள்ளுமாறும் செய்து போர்த்துக்கீசர் கொழும்புக்குத் திரும்பினர்.

அத்தருணத்தில் போர்த்துக்கீசருடைய சேவையிலிருந்த சிங் கள முதலியார்மார்களின் தூண்டுதலினுல் சேனரதனுடைய மக ஞன குமாரசிங்கன் ஒரு படையோடு சப்பிரகாமுவாவுக்குச் சென்று எல்லைப்பிரதேசங்களைச் சூறையாடி வதுளைக்குத் திரும்பினுன். டீசா தன்னுடைய சேனையைத் திரட்டிக்கொண்டு வதுளையை நோக்கிச் செல்ல சேனரதன் அவன் நகரத்திற்குள்ளே செல்லுமளவும் எதிர்ப் புக் காட்டவில்லை. அவன் நகரத்தைத் தீக்கிரையாக்கிக் கோயில் களையும் இடித்தான். இதற்கிடையில் போர்த்துக்கீசருடைய சேனையி லிருந்த சிங்களப் போர்வீரர்களுக்குத் தலைவரான முதலியார்மார் சதிசெய்தனர். வதுளையிலிருந்து திரும்பின டீசாவினுடைய சேனையி னின்று விலகிப் போர்த்துக்கீசரைத் தாக்கினர். அங்நேரத்திலேற் பட்ட ஆபத்தினின்றும் விலகிச்சென்ற போர்த்துக்கீசச் சேனை எல்லா விடங்களிலும் சிங்களவரால் தாக்கப்பட்டது. அவர்களுக்கு முன் னேறிச்சென்ற சிங்களச் சேனையொன்று பருத்தமரங்களை வழியில் விழுத்திப் போர்த்துக்கீசருடைய சேனை முன்னேறுவண்ணந் தடுத் தது. கடும்போர் நேர்ந்தது. துரத்திச்சென்றவர்களினின்று விலகி **வெல்லவாயா** என்ற இடத்தைச் சேர்ந்தனர். பல இன்னல்களுக் குள் அவஸ்தைப்பட்ட போர்த்துக்கீசரின் துரதிஷ்டமாக பெரும் மழையும் பெய்து துப்பாக்கிகளுக்கு உபயோகிக்கும் மருந்துகளை நனைத்துவிட்டன. மறுநாள் காலை 6 மணி தொடங்கி மாலை 2 மணிவரையும் தொடர்ந்து நடந்த சண்டையில் 350 போர்த்துக் கீசர் இறந்தனர். 100 வீரர்வரையில் கைதிசெய்யப்பட்டனர். டீசா வும் அம்பினுல் தைக்கப்பட்டு கீழே விழும்போது சிங்களச்சேனை அவனுடைய தலையை வெட்டுவதற்காக விரைந்துசென்றது. அதற் கிடையில் போர்த்துக்கீசனெருவன் அவனைச் சுட்டுக்கொன்ருன். எஞ்சிய வீரர்கள் கைதிசெய்யப்பட்டனர். மேலும் முன்னேறிச் சென்ற சேனரதனுடைய புதல்வர்கள் மூவரும் 26 நாட்களின்பின் கொழும்பை அண்மினர். கண்டியரசனின் சேனையும் சிங்கள மக்க

ளும் கொழும்பை இரண்டு மாதங்களாகத் தாக்கினர். கோவையி லிருந்து படைத்துணை வந்துசேர்ந்தவுடன் சேனரதன் கண்டிக்குத் திரும்பினுன்.

போர்த்துக்கீசருக்கெதிரே சதிசெய்த முதலியார்மாரிலொருவன் போர்த்துக்கீசர் பக்கஞ் சார்ந்தமையால் அரசன் சமாதானஞ்செய்து கொள்ள விரும்பினுன். தற்காலிகமாகச் செய்துகொண்ட உடன் படிக்கையின் பிரகாரம் அரசன் திறையும் கொடுத்து போர்த்துக்கல் அரசனுடைய ஆணையையும் ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. ஆனுல் சேனரதன் அவ்வண்ணம் நடந்துகொள்ளாமையால் புதி தாக நியமிக்கப்பட்ட டிகாஸ்ரோ (1633-1635) என்ற போர்த்துக் கீசத் தளபதி கண்டிக்குப் படையெடுத்துச் சென்ருன். நீடித்த போரினுல் களைப்புற்றிருந்த கண்டி அரசன் சமாதானஞ் செய்து கொள்வதற்கு விரும்பினுன். திறை செலுத்துவதற்கும் தான் கைப் பற்றிய இடங்களைத் திருப்பிக் கொடுப்பதற்கும், போர்த்துக்கீசக் கைதிகளை விடுதலைசெய்வதற்கும், மட்டக்களப்பை அவர்களுக்குக் கொடுக்கவும் சேனரதன் சம்மதித்தான். டிசாவினுடைய தோல் விக்கு முன்னிருந்த நிலையை இருபகுதியாரும் ஏற்றுக்கொண்டனர்.

படைப்பலத்தில் கூடிய போர்த்துக்கீசர் கண்டி இராச்சியத்தைக் கைப்பற்றப் பலமுறை முயன்றும் அனுகூலமடையாததற்குரிய காரணங்களை இனி ஆராய்ந்து பார்ப்போம். போர்த்துக்கீசர் ஆரம் பத்தில் கண்டி மக்களுடைய ஆதரவைப் பெற்றமையினுலேயே சித்தி எய்தினர். டிசூசா தோனுகதரினுவோடு கண்டிக்குச் சென்றபொழுது கண்டியிலுள்ள பெரும்பான்மையான மக்கள் ஆதரவு அளித்தனர். பின்பு 1594 வரையில் போர்த்துக்கீசர் கண்டி மக்களின் பகைமை யைத் தேடிக்கொண்டனர். கண்டி இராசதானிக்குச் செல்லும் பாதை அடர்ந்த காடுகளுக்கூடாகவும் கரடுமுரடான மலைகளுக்கு மேலாகவும் காணப்பட்டன. அதுவுமல்லாமல் மறைவிடம் ஒளித் திருந்து சமர்புரிவதில் கண்டி மக்கள் அதிகம் திறமைவாய்ந்தவர் கள். பருத்த மரங்கள், கற்பாறைகள், குகைகள் எல்லாம் மறைந் திருந்து தாக்குவதற்கு வசதி அளித்தன. ஆனுல் போர்த்துக்கீச ருக்கு நாட்டின் இயல்பு தெரியாது. மறைந்திருந்து செய்யும் சண்டையில் அனுபவமும் கிடையாது. நானுபக்கமும் சிங்களவராற் சூழப்பட்ட போர்த்துக்கீசச் சேனைகள் வலனை, வெல்லவாயா, கன் னறுவை முதலிய இடங்களிற் தோல்வியுற்றன. போர்த்துக்கீசருடைய சேனையிலுள்ள போர்வீரர்களின் தொகை காணுமையால் சிங்களப் போர்வீரர்களை போர்ச்சேவையில் சேர்த்துக்கொள்ளவேண்டியிருந்

தது. ஆகையால் சுதேசிகளான சிங்களவர் போர்த்துக்கீசரிடம் உண்மையாக நடந்துகொள்ளவில்லை. தாழ்பூமியிலுள்ள சிங்கள மக்கள் கண்டியரசன் ஒருவனே சிங்களச் சாதியினரையும் புத்தசமயத்தையும் பாதுகாக்கக்கூடியவனென நினைந்து சண்டைகள் நடக்கும் நேரத்தில் அவ்வரசனைச் சார்ந்தனர். அசிவிடோ, டீசா சண்டை செய்த நேரங்களிலே சிங்களப் போர்வீரர்கள் உண்மையாக நடந்துகொள்ளவில்லை. அடிக்கடி ஏற்பட்ட கலகங்கள் போர்த்துக்கீசரின் படைப்பலத்தைக் குறைத்துவிட்டது. அதுவுமல்லாமல் போர்த்துக்கீசர் ஆபிரிக்கா, தென் அமெரிக்கா, இந்தியா, கிழக்கிந்திய தீவுகளிலும் சண்டைசெய்தனர்.

கண்டி இராச்சியத்தை அவர்கள் கைப்பற்ற முடியாமலிருந்த பொழுதிலும், அவர்கள் ஒருபொழுதும் சரணுகதியடையவில்லை. 1630-ல் டீசா வெல்லவாயாவில் நடந்த சண்டையிற் காட்டிய மனத்தைரியமும் வீரமும் போற்றத்தக்க குணங்களாம். அவ்விதமே அவர்கள் நடத்திய ஒவ்வொரு சண்டையிலும் தங்களுடைய வீரத்தைக் காட்டினர்.

## வினக்கள்

1. கோனப்புபண்டாரன், எவ்வாறு கண்டி இராச்சியத்திற்கு அரசனுனன்?

2. கண்டி இராச்சியத்தைக் கைப்பற்றவேண்டுமென்று போர்த்துக்கீசர் தீர்மானஞ் செய்ததற்குக் காரணம் என்ன?

3. "விமலதர்மன் கண்டி இராச்சியத்தைப் போர்த்துக்கீசர் கைப்பற்ருவண்ணம் தடுத்துவைத்த சிங்கள அரசனுவான்" இதன் உண்மையை ஆராய்க.

4. அசிவிடோவின் ஆட்சியை விபரிக்குக.

5. கொன்ஸ்தாந்தைன் டீசாவினுடைய ஆட்சியையும் அசிவிடோவின் ஆட்சியையும் ஒப்பிடுக.

6. கோட்டை, யாழ்ப்பாண இராச்சியங்களைக் கைப்பற்றிய போர்த்துக்கீசர் கண்டி இராச்சியத்தைக் கைப்பற்றப் பலமுறை முயன்றும் அனுகூலமடையாததற்குக் காரணம் என்ன?

---

# 8. இரண்டாம் இராசசிங்கனும் ஒல்லாந்தரும் (1635-1658)

சேனரதன் தன்னுடைய காலத்திற்குப்பின் அரசுரிமைபற்றித் தன்னுடைய மூன்று புதல்வர்களிடையே விவாதமும் ஒற்றுமைக் குறைவும் ஏற்படாவண்ணம் கண்டி இராச்சியத்தை மூன்று பிரிவு களாகப் பிரித்து ஒவ்வொரு பகுதியையும் ஒவ்வொருவருக்குக் கொடுத்தான். கண்டிக்கு இராசசிங்கனும், ஊவாவுக்கு குமாரசிங்க னும், மாத்தளைக்கு விஜயபாலனும் அரசர்களாக நியமிக்கப்பட்ட னர். தான் இறந்தபின்னரே அவர்கள் இராச்சியபரிபாலனம் நடத் தலாமென்றும் அதுவரையும் அவர்கள் அரசிளங்குமரர்களென அழைக்கப்படுவார்களென்றும் ஒழுங்கு செய்துவைத்தான். சேன ரதன் இறந்தவுடன் (1635) மூன்று புதல்வர்களும் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட பகுதிகளுக்கு அரசர்களானுர்கள். சிறிது காலத் திற்குள் குமாரசிங்கன் இறந்தமையால் ஊவாவையும் இராசசிங்கன் தன்னுடைய இராச்சியத்துடன் சேர்த்துக்கொண்டான். அதனுல் விஜயபாலன் தனது தம்பியாகிய இராசசிங்கன்மீது வெறுப்புற்று போர்த்துக்கீசரோடு நட்புப்பூண்டான்.

இராசசிங்கன் போர்த்துக்கீசப் பாஷையில் எழுதவாசிக்கத் தெரி யாதவனுக விருந்தபொழுதிலும் அவர்களுடைய கொள்கைகளையும் முறைகளையும் அறிந்திருந்தான். கிறீத்த சமயத்திற்கு ஆதரவளித்து கிறீத்த குருமார்களை தந்நாட்டில் வசிக்கவும், தேவாலயங்களைக் கட்டவும் அனுமதியளித்தான். போர்த்துக்கல் அரசனேடு ஒரு நிரந் தரமான சமாதான உடன்படிக்கை செய்துகொள்வதற்குப் போர்த்துக் கீசனெருவன் இராசசிங்கனுல் அனுப்பப்பட்டபொழுது அவன் இந் தியாவிலுள்ள போர்த்துக்கீச இராசப்பிரதிநிதியால் தடுக்கப்பட்டுக் கண்டிக்குத் திரும்பினன். போர்த்துக்கீசருடைய படையெடுப்பி லிருந்து தன்னுடைய இராச்சியத்தைப் பாதுகாப்பதற்காக அந்நிய ருடைய உதவியைத் தேடிக்கொள்ளத் தீர்மானஞ்செய்தான். இலங் கையிலுள்ள வர்த்தகத்தின் ஏகபோக உரிமையைப் பெறுவதற்கு டச்சுக் கிழக்கிந்திய சங்கம் ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருந் தமையால் அவர்களுடைய உதவியைப் பெறுவதற்குச் சித்தமா ஞன். ஒரு அந்நியரைத் துரத்தி இன்னெரு அந்நியரை வரவழைக் கும் நோக்கம் அவனுக்கில்லை. கறுவா வியாபாரத்தின் ஏகபோக உரிமையையும் அளித்து ஒரு கோட்டையையும் கட்டிக்கொள்ள அனுமதிகொடுத்தால் அவர்களுடைய உதவியைப் பெற்றுப் போர்த்

துக்கீசரை இலங்கையிலிருந்து துரத்திவிடலாமென்று எண்ணினன். கொட்டியாரம் அல்லது மட்டக்களப்பில் ஒரு கோட்டையை நிறுவு வதற்கும், அவர்கள் வந்துபோகுஞ் செலவைக் கொடுப்பதற்கும் தன்னுடைய சம்மதத்தை பட்டேவியாவிலிருந்த டச்சு அதிகாரிக ளுக்குத் தெரிவித்தான் (1636). ஆகையால் பட்டேவியாவிலுள்ள அதிகாரியாகிய **வான்டீமன்** என்பவன் அதற்கு உடன்பட்டு அந் நேரத்திலே கோவையிற் சண்டையிலீடுபட்டிருந்த வெஸ்டர்வோல்டை இலங்கைக்குப்போய் உடன்படிக்கை செய்துகொள்ளும்படி கட்டளை யிட்டான். இச்செய்தியை இராசசிங்கன் அறிந்தவுடன் வெஸ்டர் வோல்டை மட்டக்களப்பைக் கைப்பற்றும்படி வரவழைக்க அவன் தனது துணைத்தளபதியாகிய காஸ்டர் என்பவனை ஒரு கடற்படை யுடன் இலங்கைக்கு அனுப்பினன். இந்த நடவடிக்கைகளைக் கேள்வி யுற்ற போர்த்துக்கீசத் தளபதியாகிய **டிமெல்லோ** என்பவன் கண் டிக்குப் படையெடுத்துச் சென்றான். அவனை எதிர்ப்பதற்கு ஆயத்த மில்லாமையால் இராசசிங்கன் ஓடி ஒளித்தான். **டிமெல்லோ** அரண் மனைக்குத் தீயிட்டுவிட்டு அங்கே தங்கினல் ஆபத்து ஏற்படக்கூடு மெனவெண்ணி பலானைக்குப்போக முயற்சித்தான். போகும் வழி யில் போர்த்துக்கீசருடைய சேனை நாலுபக்கமும் சிங்களப் படைக ளாற் சூழப்பட்டுத் தத்தளிக்க நேர்ந்தது. போர்த்துக்கீசச் சேனை முற்றாக அழிக்கப்பட்டது.

கல்முனையில் வந்திறங்கிய காஸ்டர் கன்னறுவாவில் இராச சிங்கன் ஈட்டிய வெற்றியைப்பற்றிக் கேள்வியுற்றான். ஏற்ற தருண மென நினைந்து மட்டக்களப்பைத் தாக்கிக் கைப்பற்றினன். வெஸ் டர்வோல்ட் மட்டக்களப்பைச் சேர்ந்தவுடன் இராசசிங்கன் அவ னைச் சந்தித்து இருபகுதியாருஞ் செய்துகொள்ளப்போகின்ற ஒப் பந்தத்தைப்பற்றிக் கலந்தாலோசித்தான். இலங்கையில் கறுவா வியாபாரத்தின் ஏகபோக உரிமையைப் பெறலாமென்பதும், இராச சிங்கன் போர்ச்செலவைக் கொடுப்பதென்பதும், போர்த்துக்கீசரிட மிருந்து கைப்பற்றப்படும் கோட்டைகளில் அவர்கள் தங்களுடைய சேனைப்படைகளை அரசன் விரும்பாவிட்டால் வைத்திருக்கக்கூடா தென்பதும் அவ் ஒப்பந்தத்தின் (1638) முக்கிய அம்சங்களாகும். இராசசிங்கனிடம் கொடுக்கப்பட்ட பிரதியில் மாத்திரம் அவனுடைய விருப்பத்தைப்பற்றிய குறிப்புக் காணப்பட்டதேயன்றி டச்சுக்கார ரிடம் கொடுக்கப்பட்ட பிரதியில் அது காணப்படவில்லை. காஸ்ட ரின் தலைமையின்கீழ் படையொன்றை மட்டக்களப்பிற் தங்கிநிற்க விட்டு வெஸ்டர்வோல்ட் கிழக்கிந்திய சங்கத்தின் அதிகாரிகளின் அங்கீகாரத்தைப் பெறுவதற்காகச் சென்றான். பட்டேவியாவிலுள்ள

அதிகாரிகள் அவ்வுடன்படிக்கையை அங்கீகரித்துவிட்டு இலங்கையிலுள்ள போர்த்துக்கீசருடைய கோட்டைகளைக் கைப்பற்றுவதற்கு முயன்றனர். திருகோணமலையிலுள்ள கோட்டையைத் தாக்கி அதைக் கைப்பற்றினர் (1639). இராசசிங்கனுடைய உதவியில்லாமல் திருகோணமலையும் மட்டக்களப்பும் கைப்பற்றப்பட்டு டச்சுக்காரரால் இரு கோட்டைகளும் அரண்செய்யப்பட்டன. உடன்படிக்கைக்கு மாறாக நடந்துகொண்ட இச்செய்கை இராசசிங்கனுக்குச் சந்தேகத்தையும் மனவேற்றுமையையும் உண்டாக்கியது. இராசசிங்கனுடைய விருப்பப்படி கொழும்பைக் கைப்பற்றுவதற்கு **உலூக்காஸ்** என்ற தளபதியின் தலைமையின்கீழ்ச் சென்ற கடற்படை கடலில் எட்டுநாட்கள் வரையில் தங்கிநின்றும் இராசசிங்கனுடைய தரைப்படை கொழும்புக்கண்மையிற் காணப்படாமையால் அது நீர்கொழும்புக்குச் சென்று நீர்கொழும்புக் கோட்டையைத் தாக்கிக் கைப்பற்றியது. இராசசிங்கன் நீர்கொழும்புக் கோட்டை உடனே அழிக்கப்பட வேண்டுமென்று வற்புறுத்திநின்றும் அதைக் கவனியாது அக்கோட்டையைத் திருத்தியமைத்து உலூக்காஸ் அரண் செய்தான். நீர்கொழும்பு கறுவா விளையும் பகுதியாகையால் கோட்டையை அழித்துவிடுவது புத்தியல்லவென நினைந்து இராசசிங்கனின் வேண்டுகோளுக் கிணங்கவில்லை. இராசசிங்கனுக்கு அவர்களில் நம்பிக்கை குறையத் தொடங்கியது. அரசனோடு பகைக்க விருப்பமில்லாது காஸ்டர் அவனுடன் புதிய நிபந்தனைகளுடன் ஒப்பந்தஞ் செய்தான். அரசனுக்கு திருகோணமலையைக் கொடுப்பதாயும், போர்ச்செலவை அரசன் கொடுக்குமளவும் ஏனைய கோட்டைகள் தம்வசமிருப்பதாயும், கொழும்பு கைப்பற்றப்பட்டவுடன் தரைமட்டமாக்கப்படுமென்றும் காஸ்டர் கூறினன். அதுவுமல்லாமல் இலங்கையிலிருந்து போர்த்துக்கீசர் முற்றாகத் துரத்தப்பட்டவுடனும் போர்ச்செலவுகள் தங்களுக்குக் கொடுக்கப்பட்டவுடனும் தாங்கள் ஒரு கோட்டையை மாத்திரம் தங்கள் வசம் வைத்திருப்பதாகவும் வாக்குப்பண்ணினன். இந்தப் புதிய ஒழுங்கைச் செய்துவிட்டு காலியை நோக்கிச் சென்றான். காலியிலுள்ள கோட்டையைத் தாக்கிக் கொண்டு நிற்கும்பொழுது இராசசிங்கனுடைய சேனையும் அங்கு போய்ச் சேர்ந்தது. கறுவா விளையும்பகுதிகளில் காலியே செழிப்பானது. இராசசிங்கனுடைய உதவியில்லாமல் அது கைப்பற்றப்பட்டமையாலும், கறுவா வர்த்தகத்திற்கு வசதியாகவிருந்தமையினாலும் காலியே டச்சுச் சங்கத்தாரின் காரியாலயம் வகுப்பதற்குத் தகுந்ததாகக் காணப்பட்டது.

போர்த்துக்கீசரைத் துரத்துவதற்காக டச்சுக்காரரை வரவழைக்க அவர்கள் தங்களுடைய அதிகாரத்தை நிலைநாட்டுவதைக் கண்ட இராசசிங்கன் அச்சமுற்றான். ஆகையால் அவன் சனங்களை அவர்களோடு வர்த்தகஞ்செய்யாது தடுத்ததோடு அவர்களுக்கு முன் செய்துகொண்ட ஒழுங்கின்படி உணவுப்பொருள்களையும் கொடுக்க மறுத்தான். இவைகளைப்பற்றி முறையிடுவதற்குக் கண்டிக்குச்சென்ற காஸ்டர் அரசனால் அவமதிக்கப்பட்டான். அவன் திரும்பிப்போகும் பொழுது அவனும் அவனுடன் சென்றவர்களும் வழியிற் கொல்லப்பட்டனர்.

**பிலிப்மாஸ்கரன் காஸ்** என்ற புதிய போர்த்துக்கீசத் தளபதி ஊக்கத்துடன் சண்டை செய்து நீர்கொழும்பை ஒல்லாந்தரிடமிருந்து கைப்பற்றினன். பின்பு, சப்த கோறளையும் நான்கு கோறளையும் எளிதில் போர்த்துக்கீசர் வசமாயின. இந்த வெற்றிகளினல் ஊக்கமடைந்து காலியைக் கைப்பற்றிக்கொள்ள முயன்ற பொழுது அவர்கள் அனுகூலமடையவில்லை. இராசசிங்கனுக்கு ஏற்பட்ட மனவேற்றுமையினல் அவன் டச்சுக்காரருக்கு உணவு அளிக்க மறுத்ததினல் அவர்கள் அதிக கஷ்டமடைந்து போர்த்துக்கீசரைத் துரத்துமளவும் அரசனேடு சிநேகமுறையில் நடந்து கொள்ள விரும்பினர். அந்நேரத்தில் இராசசிங்கனுடைய சகோதரனுன மாத்தளைக்கரசனுன விஜயபாலா என்பவன் போர்த்துக்கீசரோடு சேர்ந்து சதியாலோசனை செய்தபடியால் இராசசிங்கன் பட்டேவியாவிலுள்ள டச்சு அதிகாரிகளுக்கு தன் உடன்படிக்கைக்கு மாருக நடந்துகொள்ளவில்லை யென்றும், கொழும்பை விரைவிற் கைப்பற்ற வேண்டுமென்றும் தெரிவித்தான். அவனுடைய வார்த்தைகளில் நம்பிக்கை இல்லாதபோதிலும் அவர்கள் கொழும்பைக் கைப்பற்றுவதற்கு ஒரு படையொன்றைச் சீக்கிரத்தில் அனுப்புவதாகக் கூறினர்.

அப்போது போர்த்துக்கல் நாட்டில் உண்டான புரட்சியின் பயனுக ஸ்பானிய அரசனின் ஆதிக்கத்தினின்றும் போர்த்துக்கல் விலகிக்கொண்டது. **நான்காவது யோன்** என்பவன் போர்த்துக்கல் நாட்டுக்கு அரசனுனன். அவ்வரசன் ஒல்லாந்தோடு பத்து வருடத்திற்கு ஒரு தற்காலிகமான ஒப்பந்தஞ் செய்துகொண்டான். அதன் பயனுக அவரவர்கள் வசமுள்ள இடங்களை அவரவர்களே வைத்துக் கொள்ளலாமென்று தீர்மானஞ் செய்யப்பட்டது. அவ் ஒப்பந்தத்தின் பிரகாரம் காலிக்கோட்டை தங்களுடைய வசமிருப்பதால் காலிப்பகுதி முழுவதும் தங்களுக்கே உரியது என்று ஒல்லாந்தர் வாதாடியபொழுது போர்த்துக்கீசர் அதற்குடன்படாமை

யால் ஐரோப்பாவிற் செய்துகொண்ட ஒப்பந்தம் இலங்கையிற் கவனிக்கப்படவில்லை. **1642ல் அக்குரேசா** என்ற இடத்தில் நடந் தேறிய சண்டையில் டச்சுக்காரர் தோல்வியுற்றமையால் அவர்கள் அதனுல் ஏற்பட்ட அவமானத்தைத் துடைப்பதற்காக நீர்கொழும்பை முற்றுகையிட்டுக் கைப்பற்றினர். போர்த்துக்கீச படைத்தலைவனுல் அந்தோனியோ மஸ்கரன் காஸ் என்பவனும் அநேக போர்வீரர் களும் மாண்டனர். இந்தியாவிலுள்ள போர்த்துக்கீச இராசப்பிரதி நிதியின் கட்டளைப்படி, பிலிப்பு மஸ்கரன் காஸ் என்ற தளபதி நீர்கொழும்பை மீண்டும் கைப்பற்ற முயன்றும் அதில் அனுகூலப் படவில்லை. இச்சண்டைகள் நடக்கும்பொழுது இராசசிங்கன் ஒரு பக்கமுஞ் சேர்ந்துகொள்ளாமல் நடுநிலைமையா யிருந்தான். பின்பு ஐரோப்பாவில் போர்த்துக்கீசருக்கும் ஒல்லாந்தருக்குமிடையி லேற் பட்ட ஒப்பந்தம் இந்தியாவிலும் இலங்கையிலும் கவனிக்கப்பட்டது. அதன் பயனுக டச்சுக்காரர் காலியையும் நீர்கொழும்பையும் அவை களைச் சார்ந்த பகுதிகளையும் பெற்று வெங்தோட்டை ஆறே இரு பகுதியாருடைய எல்லையாகவும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. தற்பொழு துள்ள மேல் மாகாணத்திற்கும் தென் மாகாணத்திற்கும் அவ் ஆறே எல்லையாக இருக்கின்றது.

டச்சுக்காரர் இராசசிங்கனுக்கு உதவி புரிய வந்து ஏழு ஆண்டுகளாகியும், அவன் முன்னர் வாக்களித்த பிரகாரம் போர்ச் செலவில் ஒரு பகுதியாயினும் கொடுக்கவில்லையென்றும், டச்சுப் போர் வீரர்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களைக் கொடுக் கத் தவறினுனென்றும் ஒல்லாந்தர் குறைகூறினர். ஆனுல் போர்த் துக்கீசரிடமிருந்து கைப்பற்றிய கோட்டைகளை ஒல்லாந்தர் அழித்து விடாமற் தம் வசம் வைத்திருந்தது ஒப்பந்தத்திற்கு மாருன செய லென இராசசிங்கன் கூறினுன். அதனுற் கோபமடைந்த கண்டி அரசன் போர்த்துக்கீசரோடு இரகசியமாக உறவுகொண்டு ஒல்லாந்தர் தன்னுடைய இராச்சியத்தின் எப்பகுதியையாயினும் அரண் செய்யக் கூடாதென்றும், தங்கள் வசம் வைத்திருக்கக் கூடா தென்றும் ஆஞ்ஞையிட்டான். போர்ச்செலவை அறவிடும் வரையும் அவர்கள் நிலங்களின் வருமானங்களை வசூலித்துக் கொள்ளலா மென்று கூறினுன். போர்ச்செலவை அறவிடும்வரைக்கும் தாங்கள் நீர்கொழும்பையும் காலியையும் மாத்திரம் வைத்திருப்பதாகக் கூறினர். எனினும் இராசசிங்கன் அவர்களுடைய இணக்கமான பேச்சினுற் திருப்தியடையாமல், அவர்களோடு தன்னுடைய பிரசை கள் உறவு வைக்கவிடாது தடுத்து, அவர்கள் வசமிருந்த கோட்டை களிலிருந்து ஆறு மைல் தூரத்திற்குள் கறுவாப்பட்டை யுரிப்போர்

போகக்கூடாதென்றும் கட்டளையிட்டுத் தன்னுடைய நிலங்களைக் காவல் புரியுமாறு திசாவைகளை அனுப்பினன். ஆனல் ஒல்லாந்தரோ கறுவா சேகரிப்பதில் ஊக்கமாயிருந்ததோடு வழமையாயுள்ள வரிகளையும் அறவிட்டு ''இராசகாரியா''போன்ற சேவைகளைப் பெற்றும் யானை வேட்டை நடத்தியும், இவைகளாற் பெற்ற வருமானங்களை அரசனுக்கும் கொடாமல், போர்ச்செலவிலும் கழியாமல் தங்களிட்டப்படி நடந்துகொண்டனர். **1644**ல் புதிதாக இலங்கைக்கு வந்த **தைசன்** என்பவன் அரசனுடைய யானைகளைப் பிடித்ததுமல்லாது கண்டிக்கெதிரே போருக்குக் கிளம்பினன். இராசசிங்கனும் சண்டை செய்வதற்குத் தயங்கவில்லை. பட்டேவியாவிலுள்ள அதிகாரிகள் தைசனை அழைத்துவிட்டு மட்சூய்கரை அனுப்பினர்கள். இராசசிங்கனுடைய படைகள் நீர்கொழும்புப் பகுதியைக் கைப்பற்றி ஒல்லாந்தர் அந்நிலங்களின் வருமானங்களைப் பெற்றுக்கொள்ளாத வண்ணம் தடுத்தான். மட்சூய்கர் கோபங்கொண்டு, மட்டக்களப்பு, கொட்டியாரம் திருகோணமலை முதலிய இடங்களைத் தான் கைப்பற்றப்போவதாகப் பயமுறுத்தினன். பின்பு இருபகுதியாரும் சமாதானத்தை விரும்பி **1647**ல் உடன்படிக்கை ஒன்றை எழுதினர். **1638**ல் செய்த உடன்படிக்கையின் அம்சங்கள் சில திருத்தங்களுடன் இருபகுதியாராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. அரசனுக்காக, டச்சுச் சங்கத்தார் செய்த சேவையின் செலவுகளை கொடுத்துத் தீர்க்குமளவும் வேறுசாதியினர் ஒருவருக்கும் கறுவா வர்த்தக உரிமையை அரசன் கொடுக்கக் கூடாதென்று கட்டுப்படுத்தப்பட்டது. மாத்தறைப் பகுதிக்கு ஒல்லாந்தரில் ஒருவனே திசாவையாக இருக்கவேண்டுமென்றும், கொழும்பைக் கைப்பற்றுமளவும் நீர்கொழும்பு தங்கள் வசம் இருக்க வேண்டுமென்றுங் கேட்டுக்கொண்டனர்.

நீர்கொழும்பு, மாத்தறை ஆகிய இரு பகுதிகளின் நிர்வாகத்தையும் டச்சுக்காரர் நடத்த ஆரம்பித்தனர். காலியிலிருந்த டச்சுத் தேசாதிபதி டச்சுத் திசாவைமூலம் ஆட்சி புரிந்தான். கறுவாப்பகுதி (மகாபத்தா) ஒரு விசேட அதிகாரியில் விடப்பட்டது. திசாவைக்குக் கீழ் ஒரு சிங்கள அதிகாரி நியமிக்கப்பட்டிருந்தார். ''இராசகாரியா'' என்ற சேவையும் வழக்கமான வரிகளும் டச்சுச் சங்கத்திற்கே இறுக்கப்பட்டன. வெவ்வேறு சாதியினருடைய பெயர்களும் ஒவ்வொருவரும் செய்யவேண்டிய கடமைகளும் குறிப்பிடப்பட்ட இடாப்பு ஒன்று தயாரிக்கப்பட்டது. சிங்களப்பிரதானிகளின் உதவியைக் கொண்டே இவைகள் எல்லாம் நடைபெற்று வந்தமையினல் அவர்களுக்குப் பல சலுகைகள் வழங்கப்பட்டன.

16 பாடசாலைகள் தாபிக்கப்பட்டன. கத்தோலிக்கக் குருமார் அப்பகுதிகளிற் பிரவேசிக்க முடியாது.

இராசசிங்கன், ஒல்லாந்தர் ஆகிய இருபகுதியாருக்குமெதிரே போர்த்துக்கீசர் சண்டை செய்யவேண்டி நேர்ந்தது. மஸ்கரன் காஸ் என்ற போர்த்துக்கீசத் தளபதியின்பின் **கோமம்** என்பவன் தேசாதிபதியாக நியமிக்கப்பட்டான். இவன் இராசசிங்கனோடு ஒரு ஒழுங்குக்கு வரும் நோக்கத்தோடு தூதுவர்களை அவனிடம் அனுப்பினன். ஒல்லாந்தருக்கு மனப்பயமுண்டாக்குவதற்காகப் போர்த்துக்கீசத் தூதுவர்களை வரவழைத்தான். இராசசிங்கன் போர்த்துக்கீசருக்கும் ஒல்லாந்தருக்குமிடையில் பகைமையை உண்டாக்கிவிட முயற்சித்தான். ஒல்லாந்தருக்கும், போர்த்துச்கீசருக்கு மிடையில் நடந்தேறிய 10 வருட சமாதானம் 1652ல் முடிவடைந்தமையினுல் அச்செய்தியை டச்சுக்காரர் கொழும்பிலிருந்த போர்த்துக்கீசத் தளபதிக்கு அறிவித்தனர். போர்த்துக்கீச தளபதியாகிய கோமம் என்பவன் சண்டைக்கு வேண்டிய ஆயத்தம் ஒன்றுஞ் செய்யவில்லை. கொழும்பு தாக்கப்படுவதற்கு முன்பு கழுத்துறை தாக்கப்படுமாகையால் அதனையும் அரண்செய்யாது கவனயீனமாக இருந்ததைக் கண்ட மக்கள் கொதித்தெழுந்தனர். அதன்பின் கழுத்துறைக்கு ஒரு சிறிய படையை அனுப்பி அது ஒல்லாந்தரால் தாக்கப்பட்டால் அதைக் கைவிடும்படி பணித்தான். ஒல்லாந்தப் படைகள் வெந்தோட்டை ஆற்றைக்கடந்து கழுத்துறையைக் கைப்பற்றினதால் கழுத்துறையிலிருந்த போர்த்துக்கீசப்படை பின்வாங்கிக் கொழும்பைச் சேர்ந்தது. ஏனைய இடங்களிலிருந்த போர்த்துச்கீசப் படைகளும் கொழும்பையடைந்தன. ஒல்லாந்தர் இராசசிங்கனுக்குத் தாங்கள் வெகுகாலமாக விரும்பியிருந்த விஷயத்தை முடிப்பதற்காகப் புறப்பட்டிருப்பதாக அவனுக்கு அறிவிக்க அவன் சப்பிரகாமுவாவைக் கைப்பற்றினன்.

கொழும்பு நகர வாசிகள் தங்களுடைய தளபதிமீது கோபங் கொண்டு இராசத்துரோகக் குற்றஞ் சாட்டினர். **காஸ்பர் பிதுய்ரா டி சேர்பே** சேனைத் தலைவனுக நியமிக்கப்பட்டு, அரசாங்கத்தை ஏற்று கொழும்பைப் பாதுகாப்பதற்கும் மூன்றுபேர் கொண்ட சபை நியமிக்கப்பட்டது. நகரத்திற் குழப்பமேற்பட்டதை யறிந்த எதிரிகள் கொழும்பை நோக்கிச் சென்றனர். டி சேர்பே கழுத்துறையையும் கைப்பற்றி இராசசிங்கனுடைய படைகளையுந் தாக்கினன். ஒல்லாந்தரும் இராசசிங்கனும் பின்வாங்க நேரிட்டது. 1653 ல் **பிரான்சிஸ் கோடி காஸ்ரோ** போர்த்துக்கீசத் தளபதியாக நியமிக்

கப்பட்டான். ஒரு பெரிய போர்த்துக்கீசப் படை வந்து சேர்ந்தவுடன் காலியைத் தாக்க யோசனை செய்தபொழுது ஒல்லாந்தர் கழுத் துறையை விட்டு விலகி காலியைப் பாதுகாக்க முயன்றனர். ஒல்லாந்தக் கடற்படைத் தலைவனுன வான்கோயன்சு என்பவன் போர்த்துக்கீசருடைய கப்பல்களைத் தாக்கிவிட்டமையால் அவர்களு டைய பலம் குறைந்தது. பின்பு நடந்த தரைச் சண்டையில் போர்த்துக்கீசர் பின்வாங்க நேரிட்டது. இராசசிங்கனுடைய படைகள் பிகுய்ராவாற் தோற்கடிக்கப்பட்டு சப்த கோரளையும் போர்த்துக்கீசர் வசமாயிற்று.

இருபது கப்பல்களைக் கொண்டுள்ள டச்சுக் கடற்படை யொன்று **செராட் கல்ப்ட்** என்பவனின் தலைமையின் கீழ் ஒரு சேனைப் படையைக் கொண்டுவந்து சேர்த்தது. ஒல்லாந்தருடைய சேனை தங்களுடைய சேனையைப் பார்க்கிலும் பன்மடங்கு பெரிதாகக் காணப்பட்டமையால் போர்த்துக்கீசத் தளபதியாகிய குட்டின்கோ என்பவன் எல்லைப் புறங்களிலிருந்த தங்களுடைய படைகளை கொழும்பைப் பாதுகாக்கும்படி பணித்தான். **கல்ப்ட்** தன்னுடைய படையுடன் கொழும்பைத் தாக்கும் நோக்கத்துடன் களனி ஆற்றுக் கருகாமையில் வந்திறங்கிய பொழுது பெரும் மழை பெய்ததினுல் கழுத்துறைக்குச் சென்ருன். கழுத்துறையைப் பாதுகாப்பதற்காக அனுப்பப்பட்ட போர்த்துக்கீசப் படை பாணந்துறையில் தோற்கடிக் கப்பட்டது. மீண்டும் அனுப்பப்பட்ட இன்னெரு படையும் அதே கதியை அடைந்தது. கல்ப்ட் கழுத்துறையைச் சுலபமாகக் கைப் பற்றினுன். வெற்றிப் பிரலாபத்துடன் டச்சுச் சேனை கொழும்பை நோக்கிச் சென்றது. போகும் வழியில் நேரிட்ட பிய்குரோவின் சேனை தோல்வியுற்று கொழும்புக்குத் திரும்ப டச்சுச் சேனை பின் தொடர்ந்து சென்றது.

நீர்கொழும்பு, காலி. கழுத்துறை ஆகிய மூன்று இடங்களையும் இழந்தபோதிலும் கொழும்பைப் பாதுகாப்பதற்குத் தங்களால் இயன்ற வரை போர்த்துக்கீசப் போர் வீரர்கள் பல இன்னல்களுக்கிடையில் பெரும் வீரத்தோடு சண்டைசெய்தனர். 1655-ம் ஆண்டு ஐப்பசி மாதம் தொடக்கம் ஏழு மாதகாலமாக வீராவேசத்தோடு சண்டை செய்தனர். நோயும், உணவுக்கஷ்டமும் அவர்களை அதிகம் தாக் கின. கோவையிலிருந்து எதிர்பார்த்த படைத்துணையும் வரவில்லை. முன் போர்த்துக்கீசத் தளபதியாகக் கொழும்பிலிருந்து அப்பதவியி லிருந்து நீக்கப்பட்ட மஸ்கரன்காஸ் என்பவனே அந்நேரத்தில் இந்தியாவில் தற்காலிகமாகப் போர்த்துக்கீச இராசப்பிரதிநிதியா

யிருந்தபடியால் அவன் உதவி அளிக்காது பழிவாங்கினுன். கொழும்புக் கோட்டையையும் வெகுகாலமாக எதிரிகளின் தாக்குதல் இல்லாமையால் பழுதுபார்த்துச் செப்பமான நிலையில் போர்த்துக்கீசர் வைத்திருக்கவில்லை. போர்க்குரிய ஆயுதங்களும் பழுதடைந்த நிலையிலிருந்தன. துப்பாக்கிகள், அதற்குரிய மருந்துகள், உணவு ஆகியவை போதியளவு இல்லை. எனினும் போர்த்துக்கீசரிடம் இருந்த கோட்டைகளுள் கொழும்பே பலமுள்ளதாகக் காணப்பட்டது. அது மேற்கே சமுத்திரத்தினுலும், வடக்கே குடாக்கடலினுலும், தெற்கே பாதுகாப்புக்காக வெட்டப்பட்ட கால்வாயாலும் பாதுகாக்கப்பட்டிருந்தது. மேற்குப்பக்கமொன்றே எதிரிகள் தாக்கக்கூடியதாகவிருந்தது. நகரத்திற்குள் பிரவேசிப்பதற்கு இரு பாதைகளிருந்தன. தற்போது காணப்படும் நோரிஸ் வீதியும், பிரதான வீதியுமே அவைகளைக் குறிக்குமிடங்களாகும். அதைப் பாதுகாப்பதற்காக மூவாயிரம் போர்வீரர்கள் வரையிற் தேவை. ஆனுல் 500 போர்வீரர்கள் மாத்திரம் போர்த்துக்கீசருடைய சேனையிலிருந்தனர். முழு நகரத்தின் சனத்தொகை பதினுயிரம் வரையிலுண்டு. நகரம் முற்றுகையிடப்பட்டபொழுது கோட்டைக்கு வெளிப்புறத்திலுள்ள மக்களும் உள்ளே சென்றபடியால் சனத்தொகை இருமடங்காக அதிகரித்தது. ஆகையால் நகரத்திலிருந்த உணவும் நாளடைவிற் குறைந்துகொண்டு போனது.

ஒல்லாந்தருடைய சேனை நகரத்தின் வெளிப்புறத்தை அண்மியது. கல்ப்ட் பாசறையிட்ட இடமே இன்றைக்கும் ''கல்ஸ்டோப்'' என வழங்கிவருகிறது. அங்கிருந்து பீரங்கிக் குண்டுகளால் இடையருது நகரத்தைத் தாக்கினுன். அவர்களுடைய வெற்றியைப்பற்றியறிந்தவுடன் இராசசிங்கனும் தன்னுடைய சேனையுடன் போகிறதற்கு ஆயத்தமாயிருந்தான். கொழும்புக்கோட்டை கைப்பற்றப்பட்டவுடனே அழிக்கப்படவேண்டு மென்பதே அவனுடைய விருப்பம். நகரத்தின் மதில்கள் ஓரளவில் அழிக்கப்பட்டவுடன் கல்ப்ட் தரைமார்க்கமாகவுங் கடல்மார்க்கமாகவும் ஒரே நேரத்திற் தாக்க யோசனைசெய்தான். கடற்பக்கமாகத் தாக்கிய நான்கு கப்பல்களும் தாழ்க்கப்பட்டன. தரைப்பக்கமாக நேர்ந்த சண்டையில் கல்ப்ட் காயமுற்றுன். டச்சுச் சேனையும் அதிக நட்டமடைந்தது.

நகரத்தை முற்றுக்கையிட்டுக் கைப்பற்றுவது சாத்தியமாகக் காணப்படாமையால் **கல்ப்ட்** நகரத்திற்கு உணவு போகாதவண்ணம் தடுத்துவிட யோசனை செய்தான். கடற்பக்கமாகப் போர்ப்படையோ, உணவோ வராதவண்ணம் டச்சுக் கடற்படை தடைசெய்தது. தரைப்படை முழுவதும் நகரத்தைச் சூழ்ந்துகொண்டு

நின்று தரைமார்க்கமாக உணவு வராதவண்ணம் தடுத்துநின்றது. யாழ்ப்பாணத்திலுள்ள போர்த்துக்கீசத் தேசாதிபதி உணவு கொண்டு வர அவன் முகத்துவாரத்தில் கைதிசெய்யப்பட்டான். தங்களுடைய அரசனுக்காகவும், நாட்டுக்காகவும் சண்டைசெய்த போர்த்துக்கீசர் பல துன்பங்களுக்கிடையில் பிடிவாதமாகச் சண்டை செய்தனர். சம்பளத்திற்காகச் சண்டை செய்த டச்சுப் போர்வீரர்கள் தங்களை ஆபத்துக்குள்ளாக்காமல் நகரத்திற்கு உதவியோ உணவோ வர விடாது தடுத்துநின்றனர். உணவுக்கஷ்டம் அதிகரித்தமையால் போர்வீரரல்லாதோரை நகரத்திற்கு வெளியே அனுப்ப அவர்கள் டச்சுப்போர்வீரர்களால் திருப்பி அனுப்பப்பட்டனர். நோயும் பஞ்சமும் நாளடைவில் போர்த்துக்கீசப் படையைக் குறைத்தது. உணவு கிடையாமையால் செத்த மிருகங்களையும் சாப்பிட்டனர். நகரத்திற்குத் தெற்கிலுள்ள கால்வாய் நீர் வெப்பத்தினுல் வற்றிவிட டச்சுச் சேனை நகர மதில்களுக்குக் கிட்டப்போனது. இராசசிங்கனும் தனது சேனையுடன் போய் ஹைகம்வத்தையிற் பாளையமிட்டான். மற்றநாள் முற்றுக்கையிட்ட தன்னுடைய சேனையைப் பார்வையிட்டுச் செல்லும்போது கல்பட் சுடப்பட்டிறந்ததினுல் ஏட்றியன் மேய்டன் படைத்தலைவனுனன். வைகாசி மாதம் 7-ந் திகதி (1656) டச்சுச்சேனை தீவிரமாகத் தாக்கினமையாலும், நோய், பஞ்சம் நெருக்கடியாயிருந்தமையாலும், எஞ்சியிருந்த போர்த்துக்கீசப்போர்வீரர்கள் சரணுகதியடைந்தனர். இராசசிங்கனைக் கலந்தாலோசியாமல், ஒல்லாந்தர் சரணுகதியடைந்த போர்த்துக்கீசத் தலைவனுேடு சமாதான நிபந்தனைகளைப்பற்றி ஆலோசித்தனர். கொழும்பு நகரத்திலே டச்சுக் கிழக்கிந்திய சங்கத்தின் வெற்றிக்கொடி பறக்கவிடப்பட்டது. இராசசிங்கனுடைய போர்வீரர்களை நகரத்திற்குட் பிரவேசிக்காமற் தடுத்து டச்சுப் போர்வீரர்கள் உள்ளே சென்றனர். அதனுல் அதிக சீற்றங்கொண்ட அரசன் போர்த்துக்கீசருக்கு சமயவழிபாட்டுச் சுதந்திரமளித்து அவர்களை வரவழைத்தான். ஒல்லாந்தரோடு ஒருவிதமான தொடர்பும் வைக்கக்கூடாதென தன்னுடைய பிரசைகளுக்குக் கட்டளையிட்டான்.

ஒல்லாந்தரை நம்பி நடந்து ஏமாற்றமடைந்த கண்டி அரசன் துன்பமடைந்த நேரத்தில் அவனுடைய இராச்சியத்திலும் அவனுக்குப் பகையுண்டானது. அவன் தன்னுடைய பிரசைகளை அடிக்கடி சண்டையிலீடுபடச் செய்ததாலும் அவர்களைக் கொடூரமாக நடத்தி ஏதேச்சாதிகாரியாக நடந்தமையினுலும், பல மாதங்களாகக் கண்டியில் இல்லாமையினுலும் அவர்கள் அரசனில் வெறுப்புக்கொண்டனர். ஒரு அந்நியரைத் துரத்தி இன்னெரு அந்நிய சாதியினரை

வரவழைத்துவிட்டான் என வெறுப்புற்ற மக்கள் அவனை நஞ்சூட்டிக் கொன்றுவிடவும் எத்தனித்தனர். அவ்விதமான இராசத்துரோகிகளுக்குக் கடுந்தண்டனை கொடுத்துவிட்டு இனிமேல் திரும்புவதில்லையென்றுசொல்லி கண்டியைவிட்டு விலகினன். அவன் அவ்வண்ணம் விலகியது ஒல்லாந்தருக்கு நலமாகத் தோன்றியது.

புதிதாக வந்த வான்கோயன்சு என்ற டச்சுத் தளபதி கடற்படையுடன் மன்னுரைக் கைப்பற்றுவதற்குச் சென்ருன் (1658). கடுரமான சண்டை இரு பகுதியாருக்குமிடையில் நடைபெற்றது. நாலுநாட்கள் சென்றபின் போர்த்துக்கீசர் சரணுகதியடைந்தனர். இவ்வாறு வெற்றியீட்டிய ஒல்லாந்தர் யாழ்ப்பாணத்தை நோக்கிச் சென்றனர். வன்னிக்கூடாகச் சென்று பூநகரியை அடைந்தனர். குடாக்கடலைக் கடந்து சாவகச்சேரியை யடைந்து யாழ்ப்பாணக் கோட்டையிலிருந்து ஐந்து மைலுக்கப்பால் பாசறையிட்டனர். அடுத்த நாள் சுண்டிக்குளியைச் சேர்ந்ததும் அங்கே காணப்பட்ட எதிர்ப்பை வென்று கோட்டைக்குச் சமீபத்திற் தங்கினர். இதற்கிடையில் ஊர்காவற்றுறையைக் கைப்பற்றினர். பின்பு யாழ்ப்பாணத்தை மூன்றரை மாதகாலம்வரை தாக்கிக் கைப்பற்றினர். யாழ்ப்பாணக் கோட்டைக்குள்ளிருந்த 3000 போர்வீரர்களும் உணவில்லாமையால் சரணுகதியடைந்தனர் (1658).போர்த்துக்கீசர் ஆட்சிநடத்திய பகுதிகளெல்லாம் ஒல்லாந்தருடைய ஆதிக்கத்தின் கீழமர்ந்தன.

## வினக்கள்

1. இராசசிங்கன் ஒல்லாந்தருடைய உதவியைத் தேடியதற்குக் காரணம் என்ன? ஆரம்பத்தில் இருபகுதியாரும் எழுதிக்கொண்ட உடன்படிக்கையின் பிரதான நிபந்தனைகள் யாவை?
2. இராசசிங்கனுக்கும் ஒல்லாந்தருக்குமிடையிற் பகை ஏற்பட்டதற்குக் காரணம் என்ன?
3. 1647-ல் எழுதிய உடன்படிக்கையின் நிபந்தனைகள் யாவை?
4. போர்த்துக்கீசருக்கும் ஒல்லாந்தருக்கு மிடையில் நடந்த போரை விபரிக்குக.
5. ஒல்லாந்தர் கொழும்பைக் கைப்பற்றிய வரலாற்றை எழுதுக.
6. போர்த்துக்கீசர் ஒல்லாந்தரோடு நடத்திய போரிற் தோல்வியடைந்ததற்குக் காரணங்கள் யாவை?
7. "ஒல்லாந்தர் தங்களுடைய ஆதிக்கத்தை இலங்கையில் தாபிப்பதற்கு இராசசிங்கனே காரணமாயிருந்தான்" இக்கூற்றை ஆராய்க.

# 9. போர்த்துக்கீசர் ஆட்சி

போர்த்துக்கீசர் கோட்டை இராச்சியத்தையும் யாழ்ப்பாண இராச்சியத்தையும் தங்களுடைய ஆட்சியிற் கொண்டுவந்தபொழுது மல்வானை, நல்லூர் என்ற இடங்களிலே மரபுமன்றங்களைக் கூட்டி அங்கு வந்திருந்த பிரதானிகள் முன்னிலையில் தாங்கள் இந்நாட்டிலுள்ள பண்டைக்கால முறைகளின் வழக்கப்படி ஆட்சிபுரிவதாக வாக்களித்தனர். அவ்வண்ணம் பழைய சட்டங்களைத் திரட்டுவதிற் கவனஞ் செலுத்தவில்லை. ஆகையால் நிர்வாகத்தை நடத்தியவர்கள் நாட்டு வழக்கங்களுக்கு மாருகத் தங்களிஷ்டப்படி ஆட்சி செலுத்தியபடியால் கோட்டையிலுள்ள சிங்களவருடனும் யாழ்ப்பாணத்திலுள்ள தமிழரோடும் பகைத்துக்கொள்ள நேர்ந்தது. இதுவரையும் நாட்டிலுள்ள அரசராலும், அதிகாரிகளாலும் நடத்தப்பட்டு வந்த நிர்வாகம் இப்பொழுது பண்டைக்காலச் சட்டங்கள் வழக்கங்களைத் தெரியாத அந்நியராலே நடத்தப்பட்டது.

போர்த்துக்கீசருள் போர்வீரர்களும் சமயகுருமார்களுமே பிரதானமாக இலங்கைக்கு வந்தனரேயன்றி சிறந்த அரசியல் நிபுணர்களோ, நிர்வாகிகளோ வரவில்லை. போர்வீரர்கள் தங்களுடைய அரசனுக்காகத் திறமையுடன் போர்புரிந்தனர். மதகுருமார் சமயத்தைப் பரப்புவதிற் சிரத்தை எடுத்தனர். ஆட்சிபுரிந்த தளபதிகளுக்குள்ளே **கொன்ஸ்தாந்தைன் டிசா** என்பவனே நிர்வாகத்தை நடத்தும் ஆற்றலுள்ளவனுகக் காணப்பட்டான். அவன் இந்நாட்டு மக்களின் ஆதரவைப் பெறுவதற்காக போர்த்துக்கீசரையும் அவர்களையும் ஒரேமாதிரி நடத்திவந்தான். 150 வருடங்களாக ஆட்சிபுரிந்த காலத்தில் இந்நாட்டில் யாதோவொரு பகுதியில் சண்டைசெய்வதிலேயே ஈடுபட்டிருந்தமையால் அவர்கள் அதிற் கவனஞ்செலுத்தினதல்லாது நிர்வாகத்திற் கவனஞ்செலுத்தவில்லை. போர்த்துக்கல் நாட்டை ஆண்டவண்ணமே இலங்கையையும் ஆளத்தொடங்கினர். அந்நேரத்தில் போர்த்துக்கல் நாட்டிலே நிலமானியமுறை படிப்படியாகக் குறைந்துகொண்டுபோனது. இலங்கையில் நிலமானியமுறை நிலவிவந்தது. ஆகையால் இரு நாடுகளிலும் ஒரேமுறை காணப்பட்டமையால் இலங்கையிலுள்ள பழைய சட்டங்கள் வழக்கங்களை அனுசரிக்காது ஒரே ஆட்சிமுறையை நடத்திவந்தனர். போர்த்துக்கல் நாட்டிலுள்ள சட்டங்கள் சமத்துவத்தை அடிப்படையாகவுள்ளனவென்பதையும் இலங்கையிலுள்ள பழைய சட்டங்கள் சாதிப்பாகுபாட்டிற்கேற்றவாறு வகுக்கப்பட்டனவென்பதையும் அவர்கள்

உணரவில்லை. ஆகையால் வர்ணபாகுபாட்டைக் கவனியாது நிர்வாகத்தை நடத்தியமையால் மக்களுடைய பகையைத் தேடிக்கொண்டனர். வர்ணக் கட்டுப்பாட்டின் ஒழுங்கைக் கவனியாது "இராசகாரியா" என்னும் சேவையும், வரிகளையும் அறவிட்டனர். உயர் குலத்திலுள்ளவர்களுக்கு பல்லக்குக் காவிச்செல்லும்வேலை போன்ற கீழ்க்குலத்தினேர் செய்யும் வேலைகளைக் கொடுத்தபொழுது அவர்கள் செய்ய மறுத்ததினுல் கொடுரமான தண்டனைக்குள்ளாக்கினுர்கள். தங்களுடைய குலத்துக்கிழிவான தொழிலைச் செய்வதிலும் பார்க்க இறந்துவிடுதலே நலமெனமக்கள் எண்ணினரென **குயிரேஸ்** என்ற கத்தோலிக்கக் குருவானவர் போர்த்துக்கீசரின் வரலாற்றைப்பற்றிக் கூறுமிடத்துச் சொன்னுர். ஒரு உயர்குலத்தவன் இழிவான வேலையைச் செய்யவேண்டி நேரிட்டால் அவனுடைய குலத்திலுள்ளவர்களெல்லோரும் தங்களுடைய குலம் முழுவதிற்கும் அவமானமேற்பட்டதென எண்ணினமையால், எல்லோரும் போர்த்துக்கீசரோடு பகைத்துக்கொண்டனர்.

தமிழரசர்கள், சிங்களவரசர்களுடைய காலத்தில் திசாவை, கோருளை, அதிகாரி முதலிய உத்தியோக பதவிகள் நாட்டிலுள்ளவர்களுக்கே கொடுக்கப்பட்டன. ஆனுல் போர்த்துக்கீசரோ அவ்வகைப் பதவிகளைத் தம்மினத்தவருக்கே கொடுத்தமையால் அவ்வுத்தியோகத்தர்கள், மக்களை வருத்திய கீழுத்தியோகத்தர்களைக் கட்டுப்படுத்தவோ தண்டிக்கவோ முடியவில்லை. நாட்டிலுள்ள பழைய வழக்கங்களைப்பற்றித் தெரியாமையே அதற்குக் காரணமாகும். வரியிறுப்போர் அதிகம் கஷ்டமடைந்தனர். பழைய அரசர்களுடைய காலத்தில் வரிகளின் தொகை குறிக்கப்பட்டிருந்தது. ஆனுல் போர்த்துக்கீசரோ அளவுகடந்த வரிகளை அறவிட்டபடியால் வறிய மக்கள் சிலவேளைகளிற் தங்களுடைய பிள்ளைகளை விற்றும் வரியிறுக்கவேண்டி நேரிட்டது. நீதிஸ்தலங்களிற் சென்று முறையிட்டவர்களுக்கும் நீதி செலுத்தப்படவில்லை. நீதிவான்களும் கைலஞ்சம் வாங்கினர். ஆகையால் திருப்திகரமில்லாத நிர்வாகத்தினுலும், கொடுரமான செயல்களாலும், நாட்டின் வழக்கங்களை அலட்சியஞ் செய்தமையினுலும், நீதிசெலுத்தத் தவறினமையாலும் போர்த்துக்கீசர் மக்களைப் பகைத்து அவர்களுடைய ஆதரவைப் பெறவில்லை.

போர்த்துக்கீசர் தங்களுடைய சமயத்தைப் பரப்புவதற்காகச் செய்த முயற்சிகளைப்பற்றி இனி ஆராய்வோம். போர்த்துக்கீசர் இலங்கைக்கு வருவதற்குமுன் கோட்டை, கண்டி இராச்சியங்களிலுள்ளவர்கள் புத்தசமயத்தவர்களாயும், யாழ்ப்பாண இராச்சியத்தி

லுள்ளவர்கள் இந்துசமயத்தவர்களாயு மிருந்தனர். இந்த இராச்சியங்களில் இடையிடையே முஸ்லீங்களுங் காணப்பட்டனர். முஸ்லீங்கள் தங்களுடைய எதிரிகளென நினைத்து அவர்களை எப்பொழுதும் துன்புறுத்தினர். கோட்டை இராச்சியத்தினின்று அவர்களைத் துரத்தியும்விட்டனர். இந்துசமயம், புத்தசமயத்தைப்பற்றி முன்பு சிறிதளவேனும் அறிந்திராதவர்களாகிய போர்த்துக்கீசர் அச்சமயங்களின் வழிபாட்டுமுறைகளைக் கவனித்துவிட்டு அவைகள் பிழையான சமயங்களென்ற தப்பிதமான கொள்கையை மனத்தில் வைத்துக்கொண்டு, அச்சமயத்தவர்களை கத்தோலிக்க சமயத்திற்கு மாற்றவேண்டுமென எண்ணினர். ஆகையால் மதக்குருமார்கள் இலங்கைக்குவந்து சமயப்பிரசாரஞ் செய்யத் தொடங்கினர். குருமார் இந்நாட்டு மக்களுடைய பாஷைகளை விரைவில் கற்றுக்கொண்டு கிராமங்கள்தோறுஞ் சென்று அவர்களோடு இணங்க நடந்து வறியவர்கள், நோயாளிகள், வயோதிபர்கள் ஆகியோருக்கு வேண்டிய உதவிபுரிந்து மக்களின் ஆதரவைப் பெற்றனர். பின்பு அநேகரைப் பிரதானமாக கரையோரங்களில் வசித்த மக்களை கத்தோலிக்க சமயத்திற்கு மாற்றினர். அவ்விதம் மாறியவர்கள் மார்க்க விசுவாசமும் பக்தியுமுடையவர்களாகக் காணப்பட்டனர். தங்களுடைய சமயத்தினின்று விலகிக்கொள்ள விருப்பமில்லாமல் மன்னாரிலுள்ள 600 கிறீஸ்தவர்கள் உயிர் நீத்தனர். புரட்டஸ்தாந்து சமயத்தைச் சேர்ந்த ஒல்லாந்தர் நூறு வருடங்களுக்கு மேலாக ஆட்சிபுரிந்தும் கத்தோலிக்க சமயத்தை அழிக்க முடியவில்லை. கத்தோலிக்க சமயத்தவர்கள் உத்தியோக பதவிக்கோ அல்லது வெகுமதிக்கோ மனந்திரும்பி சமயப்பற்றை நீக்கவில்லை. கோட்டை, யாழ்ப்பாண இராச்சியங்கள் போர்த்துக்கீசரின் ஆட்சியின்கீழ் கொண்டுவரப்பட்டபோது ஆளுபவர்கள் கிறீத்தவர்களாகவிருந்தபடியால் அச்சமயம் தலையோங்க வசதியாகவிருந்தது. இந்துசமயமும் புத்தசமயமும் அவ்விதமான ஆதரவைப் பெறவில்லை. ஆகையால் அச்சமயங்கள் நாளடைவிற் குன்றத் தொடங்கின. கிறித்தசமயப் பிரசாரகர்களும் ஊக்கத்தோடு சமயத்தொண்டு புரிந்தனர். இலங்கையிலுள்ள சமயங்களைப்போன்று கத்தோலிக்க சமயமும் விக்கிரகவழிபாடும் கிரியைகளும் உடையதாதலால் மக்கள் அந்தச் சமயத்தைப் பின்பற்றுவது சுலபமாகவிருந்தது. 1135-ன் மேல் இலங்கையிலுள்ள நாகரிகமும் படிப்படியாகக் குன்றத் தொடங்கியது. ஆகையால் ஐரோப்பிய நாகரிகம் போர்த்துக்கீசராற் கொண்டுவரப்பட்டவுடன் அவர்கள் கொண்டுவந்தவையெல்லாம் சிறந்ததென நினைத்தனர். இவ்வகையான நிலை சமயப்பிரசாரஞ் செய்வதற்குப் போர்த்துக்கீசருக்குச்

சாதகமாகவிருந்ததெனலாம். கத்தோலிக்க சமயவளர்ச்சி, அவர்கள் ஆட்சி நடத்துவதற்கும் வசதியாயிருந்தது.

கத்தோலிக்க சமயவளர்ச்சிக்குச் சில தடைகளும் இருந்தன வென்று சொல்லலாம். இந்துசமயமும் புத்தசமயமும் இலங்கையில் பல நூற்றுண்டுகளாக விளங்கிவந்த சமயங்களாகையால் அவை மக்களுடைய வாழ்க்கையிற் செறிந்து இருந்தன. ஆகையால் சந்ததியாக வந்த சமயங்களாகையால் சுலபமாக மக்களைப் பிற சமயத்திற்கு மாற்றுவது கஷ்டமாகவிருந்தது. அதுவுமல்லாமல் கத்தோலிக்க சமயம் அந்நியருடைய மதமாகையால் எல்லோராலும் விரும்பப்படவில்லை. போர்த்துக்கீசரின் நிர்வாகமும் போர்த்துக்கீசப் போர் வீரர்களுடைய மிதமிஞ்சிய நடத்தையும் போர்த்துக்கீசர் விதித்த கொடூர தண்டனைகளும் அவர்களுடைய சமயப்பிரசாரத்தை மக்கள் ஏற்றுக்கொள்வதற்குத் தடையாகவிருந்தன.

போர்த்துக்கீசர் கைப்பற்றிய கோட்டை இராச்சியம் வடக்கே புத்தளத்தையும், தெற்கே வளவகங்கையையும், மேற்கே கடலையும், கிழக்கே மலைநாட்டையும் எல்லையாகவுடைய பகுதியாகும். இதிற் கொழும்பைத் தவிர்ந்த பகுதி 4 திசைவானிகளாகப் பிரிக்கப்பட்டது. கொழும்பு போர்த்துக்கீசத் தளபதியினுடைய நிர்வாகத்தின்கீழிருந்தது. திசைவானிகள் நான்கு கோறளை, மாத்தறை, சப்பிரகமுவா, சப்தகோறளை என்பனவாம். ஒவ்வொரு திசாவானிக்கும் நியமிக்கப்பட்ட திசாவை என்ற அதிகாரிவசமே நீதி பரிபாலனம், இராணுவம், நிதிநிர்வாகம் முதலியவைபற்றிய நிர்வாகம் விடப்பட்டன. சண்டைசெய்யும்போது போர்த்துக்கீச இராணுவச் சேவையிலுள்ள சிங்களப் போர்வீரர்களை (இலஸ்கரின்)த் திரட்டுவதும் இவர்களுடைய கடமைகளாகும். நீதிநிர்வாகத்தை நடத்துவதற்கு அதிகாரிகள், மொகத்தலர், பசநாயகர்கள் என்ற உத்தியோகத்தர்களும் துணைபுரிந்தனர். மரண தண்டனை விதிக்கவும், சிறைச்சாலைக்கு அனுப்பவும், குற்றம் விதிக்கவும் திசாவைகளுக்கு அதிகாரமுண்டு. அவர்களுக்கு ஊதியம் அளிக்கப்படாத போதிலும், தங்களுடைய திசாவானிகளிலுள்ள சில கிராமங்களிலிருந்து நின்தகம் என்ற வருமானத்தைப் பெறும் உரிமை அவர்களுக்குண்டு. ஆரம்பத்தில் சிங்களத் திசாவைகளே யிருந்தனர். ஆனால் பல கலகங்களேற்பட்டபின் போர்த்துக்கீசரே திசாவைகளாக நியமிக்கப்பட்டனர்.

ஒவ்வொரு திசாவானியும் கோறளைகளாகப் பிரிக்கப்பட்டது. கோறளை ஒவ்வொன்றிலும் பல கிராமங்கள் இருந்தன. ஒவ்வொரு

கோறளேக்கும் கோறளைவிதானே என்ற தலைமைக்காரன் நியமிக்கப் பட்டான். இவனுக்கு நீதிவழங்கும் அதிகாரமும், வரி வசூலிக்கும் அதிகாரமும் உண்டு. இவனுக்கு உதவிபுரிய அத்துக்கோறளைகள் நியமிக்கப்பட்டனர். அரசனுக்குரிய வரிகளை அறவிடுவதும், குற்றங்களோ அல்லது தண்டனைகளை விதித்து விவாதங்களைத் தீர்த்து வைத்தலும் விதானைமாருடைய பிரதான கடமைகளாம். இரத்தினங்கள் விளையும் நிலங்களுக்கும், கறுவாப்பகுதிக்கும் (மகாபட்டதள பதிகள்) யானைவேட்டையாடும் பகுதிக்கும் ஒவ்வொரு விதானை நியமிக்கப்பட்டார். மொகத்தலா, கங்காணி முதலிய கீழ் உத்தியோகத்தர்களும் இருந்தனர். இவர்களைவிட "மயேரல்லர்" என்ற கிராம அதிகாரிகள், வீதிகள், பாலங்களைக் கண்காணிப்பதும் நீர்ப் பாய்ச்சும் மதகுகளை பழுதுபார்த்தலும், போர்வீரர்களுக்கு உண வளித்தலும், திசாவைகளுக்கும் விதானைமாருக்கும் பணிசெய்ய வேலை ஆட்களைத் திரட்டுவதும், இவைபோன்ற பல்வேறு கடமைகளை ஆற்றிவந்தனர். ஊதியம்பெறாத அவ்வுத்தியோகத்தர்கள் அரசனிடம் நிலங்களைப்பெற்று அவைகளின் வருமானத்தைப் பெற்று வந்தனர்.

அரசிறை அறவிடுதற்கு போர்த்துக்கீசர் இந்நாட்டில் வழங்கிவந்த பண்டைக்காலமுறைகளையே பின்பற்றினர். நிலங்கள் முழுவதும் அரசனுக்கேவுரியதாக விருந்தபொழுதிலும் மக்கள் செய்த சேவைக்குத் தக்கதாக அவர்களுக்கு நிலங்கள் வழங்கப்பட்டன. அரசனுக்காக ஈயப்பட்ட நிலங்கள் **கபடாகம்** எனவும், தேவாலயங்களுக்கு அளிக்கப்பட்ட நிலங்கள் **தேவாலகம்** எனவும், உத்தியோகத்தர்களுக்கு வழங்கப்பட்ட நிலம் **நின்தாகம்** எனவும், அரசசேவையில் கம்மாளர்போன்ற தொழிலாளிகளுக்குக் கொடுக்கப்பட்ட நிலங்கள் **ஆக்ரகம்** எனவும், போர்ச்சேவையி லிருந்தோர்களுக்கு அளிக்கப்பட்ட நிலம் **பரவேணி** எனவும் வழங்கிவந்தன. அந் நிலங்களைப் பயிரிட்டோர் அவைகளின் வருமானத்தை அவைகளுக் குரியோர்க்குக் கொடுத்து வந்தனர். வரிகளையிறுப்பதாலும், சேவை புரிவதாலும் மக்கள் அதிகம் கஷ்டப்பட்டனர். போர்த்துக்கீச உத்தியோகத்தர்களும் ஒருவிதமான அனுதாபமுங் காட்டாது வரிகளை வசூலித்தமையினால் மக்கள் அதிக துன்பமடைந்தனர். இவ்வகையான கொடூர ஆட்சியே பல கலகங்களுக்கும் காரணமாயின.

போர்த்துக்கீசருடைய போர்ச்சேவையிலுள்ள சிங்களப் போர் வீரர்கள் (லஸ்கரீன்ஸ்) குறிக்கப்பட்ட சில காலங்களிலேயே சண்டை செய்யவேண்டியிருந்தது. சிங்கள அரசர்களுடைய காலத்தில் போர்ச்

சேவை அடிக்கடி நேராததினுல் அவர்கள் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட நிலங்களை (பரவேணி) பயிரிடத்தக்கதாகவிருந்தது. ஆனுல் போர்த்துக்கீசருடைய காலத்தில் அடிக்கடி சண்டை நடைபெற்றதால் அப்போர்வீரர்கள் வீடுதிரும்பாமல் பல மாதங்களாகச் சண்டை செய்யவேண்டியிருந்தது. ஒரு போர்வீரன் இறந்துவிட்டால், இறந்தவனுடைய மகன் அல்லது சகோதரன் போர்ச்சேவையை ஏற்றுக்கொள்ளாதவிடத்து அக்குடும்பம் பரவேணியை இழக்கவேண்டும். ''லஸ்கரின்ஸ்'', முதலியார்மார், ஆராய்ச்சி முதலிய உத்தியோகத்தர்களின் கீழ் வேலைபார்த்தனர். அவர்களுக்கும் நிலங்கள் அளிக்கப்பட்டன. லஸ்கரின்ஸ் என்ற போர்வீரர்களுக்குத் தலைவராயிருந்த முதலியார் விக்கிரமசிங்கனென அழைக்கப்பட்டார். போர்வீரர்கள் தலைவர்களால் நல்லமுறையில் நடத்தப்படாமையால் அடிக்கடி கலகங்கள் ஏற்பட்டன.

நீதி வழங்கும்பொருட்டு வருடமொருமுறை பிரதான போர்த்துக்கீசத் தளபதி தன்னுடைய காரியதரிசியோடு (பஸ்நாயக்கா) வழக்குகளை விசாரணை செய்வதற்காக நாட்டின் பல பாகங்களுக்குஞ் செல்வது வழக்கம். அவ்வண்ணம் கூடும் பொழுது ''மரல்லா'' என்னும் மரணவரியை அறவிடுவது வழக்கம். சிங்கள அரசர்களுடைய காலத்தில் தனக்குரிய நிலங்களுக்கு உரிமையாளன் இல்லாது ஒருவன் இறந்தால் அந்நிலங்கள் அரசனுக்கே யுரியதாயிற்று; அல்லது இறந்தவனுடைய உடைமைகளில் மூன்றிலொரு பகுதியை அரசனுக்குக் கொடுத்து அந்நிலங்களைச் சொந்தக்காரர் பெற்றுவந்தனர். ஆனுல் போர்த்துக்கீசர் எவர் இறந்தாலும் அவருடைய பொருள்களில் மூன்றிலொரு பகுதியைக் கவர்ந்தனர். ஆனுல் கிறீத்தவர்களுக்கு மாத்திரம் இந்த விதி விலக்கப்பட்டது. அந்த விசாரணைக் கோடு நிலங்களைப்பற்றிய விவாதங்களைத் தீர்த்துவைத்ததோடு, களவு, கடன், கொலை என்பனபற்றிய விசாரணையையும் நடத்தியது. கொலை செய்தவன் 60 நாட்களுக்குள்ளாகக் கைதி செய்யப்பட்டால் அவனுக்கு விசாரணை யில்லாது உடனடியாக மரண தண்டனை விதிக்கப்பட்டது. அக்கால எல்லை தவறினுல் அப்படிச் செய்வதற்கு அதிகாரம் கிடையாது. உயர்குலத்திலுள்ள ஒருவனைக் கீழ்க் குலத்தவன் கொலைசெய்து விட்டால் அவனுக்கு அச்சலாக்கியம் கிடையாது. சாதி சம்பந்தப்பட்ட வழக்குகளில் குற்றவாளிக்கு காய்ச்சின இரும்பு, எண்ணெய் முதலியனவைகளாற் தண்டனை கொடுக்கப்பட்டது.

போர்த்துக்கீசத் தளபதியின் கீழ் "கப்டன்மேட்ஜர்" "ஔவிடோர்" என்னும் உத்தியோகத்தர்களால் யாழ்ப்பாணப் பகுதியின் நிர்வாகம் நடத்தப்பட்டது. மன்னர் ஓர் உப தளபதியின் மேற்பார்வையிலிருந்தது. ஆனல் யாழ்ப்பாணம் போர்த்துக்கீசராற் கைப்பற்றப் பட்டபின் அத்தளபதியின் அதிகாரம் குறைந்து விட்டது.

போர்த்துக்கீசர் பண ஆசை மேற்கொண்டு மக்களை வருத்திக் கொடுரச் செயல்களைப் புரிந்தனரேயன்றி மக்களின் நன்மையைக் கருதவில்லை. கமுகு, பழ மரங்கள் ஆகியவைகளை தேவையான அளவுக்கு வெட்டிக்கொள்வதற்கு பழைய அரசர்களுக்கு உரிமை இருந்துவந்தது. ஆனல் போர்த்துக்கீச அதிகாரிகளோ அவ்வுரிமைகளை அளவு கடந்து கையாண்டமையினல் மக்கள் வறுமையுற்றனர். சிங்கள அரசர் காலத்தில் உத்தியோக அதிகாரிகள் அரசனுக்குப் பயந்து நடந்தனர். ஆனல் இப்பொழுது ஒவ்வொரு கிராம அதிகாரியும் தலைமைக்காரரும் பெரும் அதிகாரத்தை மக்களிடையே செலுத்தினர். சிங்கள அதிகாரிகளே, போர்த்துக்கீச அதிகாரிகளிலும் பார்க்க மக்களை வருத்தினர்.

சேனையில் ஒழுங்கும், கட்டுப்பாடும் இல்லாமையால் போர் வீரர்கள் கொள்ளையடிக்க ஆரம்பித்தனர். அடிக்கடி ஏற்பட்ட சண்டைகளினல் சனத்தொகையும் குறைந்தது. போர்த்துக்கீசராற் பல கோயில்களும் அழிக்கப்பட்டன. ஆனல் போர்த்துக்கீச அதிகாரிகள் மக்களை வருத்திய பொழுதிலும், குருமார் மக்களுக்கு அனுதாபத்தைக் காட்டினர். புகையிலை, மிளகாய், பிறநாட்டுப் பழ மரங்கள் போர்த்துக்கீசராலேயே இந்நாட்டுக்குக் கொண்டுவரப் பட்டன. போர்த்துக்கீசர் இலங்கைக்கு வந்திராவிட்டால் முகமதியருடைய ஆளுகை தென் இந்தியாவிலும் இலங்கையிலும் பரவியிருக்கக் கூடுமென யூகிக்க இடமுண்டு.

## வினக்கள்

1. *போர்த்துக்கீசர், மக்களுடைய ஆதரவைப் பெற்றுக்கொள்ளாததற்குரிய காரணங்களை ஆராய்க ?*
2. *கத்தோலிக்க சமயம் வளர்ச்சியுற்றதற்குரிய காரணங்கள் யாவை ?*
3. *போர்த்துக்கீசருடைய நிர்வாக முறையை விரித்துக் கூறுக ?*
4. *போர்த்துக்கீசருடைய நிர்வாகத்திற் காணப்பட்ட குறைகள் யாவை?*

# 10. போர்த்துக்கீசர் ஆட்சியின் பலன்களும் ஆட்சியின் தேய்வும்

போர்த்துக்கீசர் இலங்கையை விட்டு விலகிய காலத்தில் கண்டி இராச்சியமொன்றே சுதந்திரத்தை அனுபவித்தது மல்லாது அந்நியருடைய ஆதிக்கத்தை எதிர்த்து ஏற்றுக்கொள்ளாத இராச்சியமாகவும் விளங்கியது. அதன்பின் கண்டி இராச்சியம், இலங்கை அரசியல் விஷயங்களிற் சிறந்த தானத்தைப் பெற்றது. பன்முறை முயன்றும் போர்த்துக்கீசர் கண்டியைக் கைப்பற்ற முடியாமையால் மலே நாட்டுச் சிங்களவர் பெருமிதம் அடைந்தனர். தாங்கள் வலிமை பெற்ற சிங்களவரென்றும், தாழ் பூமியிலுள்ளவர்கள் போர்த்துக்கீசராலாளப்பட்டமையால் குறைந்தவர்க ளென்றும் எண்ணினர். அவ்விதமான கொள்கையே மலே நாட்டுச் சிங்களவர் தாழ் பூமியிலுள்ள சிங்களவரென்ற பிரிவினைக்குக் காரணமாயிருந்தது.

போர்த்துக்கீசர் ஆசியாவிலுள்ள மக்களைக் குறைந்தவர்க ளென இகழவில்லை. இலங்கையிலுள்ள சனங்களோடு சிநேக மனப்பான்மையோடு நடந்துகொண்டது மல்லாமல் சிங்களவர் தமிழருடைய உணவு, வாழ்க்கை முறைகளையும் பின்பற்றினர். இலங்கைச் சாதியினரோடு விவாகஞ் செய்தும் கலந்து கொண்டனர். அரச சேவையிலும் இராணுவத்திலும் உயர்ந்த பதவிகளையும் சுதேசிகளுக்குக் கொடுத்தனர். அவர்கள் இவ்விதமான நெருங்கிய தொடர்பை வைத்திருந்தமையினல், இந்நாட்டிலுள்ள மக்கள் உயர்வகுப்பினர் உட்பட போர்த்துக்கீசருடைய பழக்க வழக்கங்களைப் பின்பற்றினர். இந்த நாட்டிலே தங்கின போர்த்துக்கீசர் இந்த நாட்டையே தங்களுடைய சொந்த ஊராகப் பாவிக்கத் தொடங்கிவிட்டனர்.

மார்க்க விஷயத்திலேயே அவர்களுடைய செல்வாக்குக் கூடிய அளவுக்குக் காணப்பட்டது. கத்தோலிக்க சமயத்தைப் புகுத்தி அதைப் பரப்புவதற்காக அதிக சிரத்தை காட்டினர். சமயப் பிரசாரஞ் செய்ய வந்த கத்தோலிக்கப் பாதிரிமார் மார்க்கத்தைப் பரப்பும் வேலையில் தங்களுடைய வாழ் நாள் முழுவதையும் செலவழித்தனர். புவனேகபாகுவின் வேண்டுகோட்கிணங்கி கோட்டைக்கு **1543**ல் வந்த குருமார் கோட்டை இராச்சியத்திலே மாத்திரமல்ல கண்டி, யாழ்ப்பாண இராச்சியங்களிலும் மதப் பிரசாரஞ் செய்து மக்களைக் கத்தோலிக்க சமயத்திற்கு மாற்றினர். உரோமன் கத்தோலிக்க ஆலயம் உரோமாபுரியிலுள்ள போப்பாண்டவரின் நிர்வாகத்தின் கீழ

மைந்தது. கத்தோலிக்க தேவாலயக் குருமார் மதப் பிரசாரஞ் செய்து சமயக்கிரியைகளையும் நடத்தியதோடு பொது சனங்கள் சமய விதிகளைக் கவனித்து நடக்கவேண்டுமென்றும் வற்புறுத்தினர். இலங்கைக்கு வந்த குருமார்கள் பிரான்சிஸ்கன், டொமினிக்கன் யேசு சபைகளைச் சேர்ந்தவர்களாகும். இவர்கள் பிரமச்சாரிகளாக வறிய சீவியத்தை நடத்தியதோடு உலகத்தை வெறுத்து ஏகாந்த மான வாழ்க்கையை விரும்பாது மக்களோடு கலந்து பழகி வாழ்ந் தனர். கத்தோலிக்க தேவாலயத்தின் விதிகளும் கொள்கைகளும் மக்களிடம், வாழ்க்கையைப் பற்றிய மனப்பான்மையை மாற்றி விட்டன. கர்மம், மறுபிறப்பு என்பவைகளிலுள்ள நம்பிக்கைக்கு மாருகக் காணப்பட்டன. கத்தோலிக்க சமய கிரியைகளும் வழி பாட்டு முறைகளும் மக்களுடைய மனத்தை மாற்றிவிட்டன. நூற்றுக்கணக்கான குருமார்கள் இந்நாட்டிலேயே தங்கி இந்நாட்டு மக்களின் பாஷைகளையும் கற்று, ஆலயங்களையும், கல்லூரிகளையும், பாடசாலைகளையுங் கட்டினர். தாழ் பூமி முழுவதும் கத்தோலிக்க சமயம் பரவியதால் கிறீத்தவர்களல்லாதவர்களும் கிறீத்து சமயக் கொள்கைகளாற் பாதிக்கப்பட்டனர். போர்த்துக்கீச உத்தியோகத்தர் களுடைய கொடுர செயல்களினின்று குருமார் மக்களைப் பாதுகாத் தபடியால், கிறிஸ்த சமயத்திற் சேராதவர்கள் கூட அச்சமயத்திற்கும் குருமாருக்கும் மரியாதை காட்டினர். கலகங்களேற்பட்டகாலத்திலும் அம்மரியாதை காட்டப்பட்டது. அச்சமயத்தைத் தழுவியவர்கள் ஒல்லாந்தர் வந்த காலத்தில் வதைக்கப்பட்ட போதிலும் சமயத்தை மாற்றிக்கொள்ளவில்லை. அது அவர்களின் சமயப் பற்றைக் காட்டு கிறது. போர்த்துக்கீசர் இலங்கைக்கு வருவதற்கு முன்பு சமுதாயத் தில் வர்ணக்கட்டுப்பாடே காணப்பட்டது. கோட்டை யாழ்ப்பாண இராச்சியங்களில் கத்தோலிக்க சமயம் பரவியதால் அவ்விடங்களிலே சமத்துவக் கொள்கை தோன்றியது. சமயம் மாறியவர்களும் ஆரம்பத்தில் வர்ணக் கட்டுப்பாட்டை கவனித்தே வந்தனர். ஆனல் நாளடைவில் சாதி வித்தியாசம் குன்றத்தொடங்கியது.

போர்த்துக்கீசர் இலங்கைக்கு வருவதற்கு முன்பு விவாகத் தைப் பற்றி வரையறுக்கப்பட்ட விதிகள், சிங்கள சமுதாயத்தில் இல்லை. பதினேழாம் நூற்ருண்டு காலத்தில் கண்டியில் நடைபெற்ற விவாகங்கள் ஒரு கட்டுப்பாட்டுடன் நிரந்தரமானவையல்ல வென்றும் வசதிக்குத்தக்கதாகத் தொடர்பை நீக்கிக் கொள்ளலா மென்றும் ரெபேட் நொக்ஸ் என்பவர் கூறியிருக்கிருர். கத்தோலிக்க சமயம் பரவியதன் பயனுக விவாகத்தைப் பற்றிய ஏற்பாடுகள் காணப்

பட்டன. கத்தோலிக்க ஆலயம் விவாக சம்பந்தமான ஏற்பாடுகளை வற்புறுத்தியது. ஒருவன் ஒரு பெண்ணை மாத்திரம் விவாகஞ் செய்யலாமென்றும் அவ்விவாகம் நிரந்தரமானதாகவு மிருக்க வேண்டுமென்று கற்பித்தது. கத்தோலிக்க சமயத்தவர்கள் அவ் வொழுங்குகளைப் பின்பற்றி நடக்கவேண்டியிருந்தது. இவ்வொழுங்கு களைக் கத்தோலிக்கர் மாத்திரமல்ல ஏனையோரும் கவனித்து நடந் தனர். ஒல்லாந்தரும் இவைபோன்ற விவாக ஏற்பாடுகளையே உண் டாக்கினர். மேலும் கத்தோலிக்க சமயம் பரவியதன் பயனாக மேனாட் டுத் தேவாலயங்களிலுள்ள சிற்பம், ஓவியம், சங்கீதம் இலங்கையிற் பரவின.

பண்டைக்காலந் தொட்டு இலங்கையின் வர்த்தகம் அந்நிய ருடைய கையிலேயே இருந்தது. தென்னிந்தியரும், கிரேக்கரும், பார்சியரும், அரேபியரும், முஸ்லிங்களும் காலத்திற்குக் காலம் வர்த்தகம் நடத்திவந்தனர். இலங்கைவாசிகள் உள்நாட்டு வர்த்தக மல்லாது, வெளிநாட்டு வர்த்தகம் நடத்துவதிற் சிரத்தை எடுக்க வில்லை. போர்த்துக்கீசர் வந்தகாலத்தில் முஸ்லிங்களே இலங்கையின் வர்த்தகத்தை நடத்தினர். போர்த்துக்கீசர் அவர்களிடமிருந்து அதைக் கைப்பற்றித் தாங்களே இலங்கையிலுள்ள வாசனைச் சரக்குகளையும் இரத்தினக் கற்கள் யானைத் தந்தம் முதலியவைகளையும் நேரே ஐரோப்பாவுக்கு அனுப்பத் தொடங்கினர். இவ்வகையாக இலங்கை யின் வர்த்தகத்தை பெருப்பித்து அதனுடைய வருவாயை அதி கரிக்கச் செய்தனர்.

இலங்கையிலுள்ள மக்களுக்குப் போர் புரியும் புதிய முறை களையும், புதிய ஆயுதங்களைப் பாவித்துக்கொள்ளும் வழிகளையும் பழக்கிவிட்டனர். பழைய காலத்தில் அம்பு, வில்லு, ஈட்டி வாள் முதலிய ஆயுதங்களை சிங்களவர் தமிழர் சண்டைகளில் உபயோ கித்தனர். போர்த்துக்கீசர் காலத்திலே துப்பாக்கி, பீரங்கி முதலிய மேனாட்டுப் போர்க் கருவிகளைப் பாவிக்கும் முறையைக் கற்றுக் கொண்டனர். சண்டை செய்வதில் புதிய முறைகளையும் போர்த்துக் கீசரிடமிருந்து பழகினர். கோனப்பு பண்டாரன் கோவையிலிருந்து போர்த்துக்கீசரிடமிருந்து பயிற்சி பெற்றதினால் கண்டியை அவர்கள் கைப்பற்றிக்கொள்ளாவண்ணம் காப்பாற்றினான். இனி 'லஸ்கரின்ஸ்' என்ற சிங்களப் போர்வீரர்கள் போர்த்துக்கீசருடைய போர்ச் சேவை யிலிருந்து பயிற்சி பெற்றதினால் தங்களுடைய நாட்டுக்கு ஆபத்து நேரிடுங் காலத்தில் போர்த்துக்கீசரோடு எதிர்த்துச் சண்டைசெய்து வெற்றி பெற்றனர்.

போர்த்துக்கீசருடைய ஆட்சியின் பயனுக மக்களுடைய உடையும் மாறுதலடைந்தது. பிரதானமாக பெண்களுடைய உடை போர்த்துக்கீசப் பெண்களுடைய உடையைப் போல மாறியது. கண்டியிலுள்ள உயர்குலத்துப் பெண்கள் கூட போர்த்துக்கீசருடைய உடையை அணிந்துகொண்டனர். இரண்டாம் இராசசிங்கன் போர்த்துக்கீசருடைய உடையை சுய உடையோடு கலந்து அணிந்தான்.

சிங்களப் பாஷையிலும் இலக்கியத்திலும் போர்த்துக்கீசச் சொற்கள் இடம்பெற்றன. போர்த்துக்கீசர் புதிதாகக் கொண்டுவந்தவைகளைக் குறிக்கும் சிங்களப் பதங்கள் போர்த்துக்கீச மொழியிலிருந்து வந்த சொற்களாகும். களிசான், கமிசை, சப்பாத்து, பொத்தான், மேசை, பேனு, தீந்தை, கடதாசி, அலுமாரி, தீதாள், போத்தல், பாண், விசுகோத்து, கோவா, அன்னுசி, ஜன்னல், ஆயா முதலிய பல சொற்கள் அப்பாஷையிலிருந்தே வழங்கிவந்தன. போர்த்துக்கீசர் தங்களுடைய சமயத்தைப் பரப்புவதற்காக அநேக பாடசாலைகளைக் கட்டியமையினுல் அங்கு பலர் சென்று கல்வி பயின்றனர். கிறீத்த குருமார் பல நூல்களையும் எழுதிவிட்டனர். மதப்பிரசாரத்திற்காக நாடகங்களை எழுதினமையால் நாடகக் கலையும் வளர்ச்சி பெற்றது. பேதுரு, பாவிலு, பர்னுந்து, அல்விஸ், சில்வா, பெரேரா என்னும் கிறீத்த பெயர்களைச் சிங்களவர் தரித்துச் கொண்டனர்.

இனி, போர்த்துக்கீசருடைய ஆட்சி தேய்வுற்றதற்குரிய காரணங்களை ஆராய்வோம். தங்களுடைய வர்த்தகத்தை விருத்தி செய்யும் நோக்கத்துடன் உலகத்தின் பல்வேறு இடங்களிலும் வர்த்தகத் தலங்களையும் முடியரசுகளையும் தாபித்தனர். காலஞ்செல்ல அவைகள் எல்லாவற்றையும் திருப்திகரமாக நடத்திக்கொள்ள முடியவில்லை. போர்த்துக்கல் நாட்டிலுள்ள அரசாங்கம் ஒரு பெரிய வர்த்தகத் தொடர்புள்ள சாம்ராச்சியத்தை நடத்திக்கொள்ள இயலாமற்போனது. போர்த்துக்கல் பலவிடங்களுக்கும் அனுப்பிய போர் வீரர்களும் மதக்குருமார்களும் திறமையான அரசாங்கத்தை ஏற்படுத்தவில்லை. ஆபிரிக்கா, அமெரிக்கா, ஆசியாவிலிருந்து வர்த்தகப் பொருள்களைக் கொண்டு சென்ற கப்பல்களும், அப்பொருள்களை வாங்கிச் செல்வதற்கு ஐரோப்பாவிலிருந்து போன கப்பல்களும் போர்த்துக்கல் நாட்டின் துறைமுகங்களில் நெருங்கி நிற்பதால் அவைகளிடமிருந்து அறவிடவேண்டிய சுங்க வரியை திருப்தியான முறையில் போர்த்துக்கீச அரசாங்கம் அறவிடத் தவறியது. அவ்விதமான நிலையிலுள்ள நாடு வர்த்தகத் தொடர்புள்ள பரந்த சாம்

ராச்சியத்தை எவ்வாறு நிர்வாகித்துக்கொள்ளும் என்பதை யூகித்துக் கொள்ளலாம்.

போர்த்துக்கீசர் பெரிய வர்த்தகத்தை நடத்தியதினுல் கிடைத்த ஆதாயம் அந்நாட்டு மக்களின் ஊக்கத்தைக் குறைத்துவிட்டது. நாடு அதிகம் ஐசுவரியமுற்றதால் மக்கள் விவசாயம், கைத்தொழில் மீன்பிடித்தொழில் ஆகிய தொழில்களில் ஊக்கங்காட்டாது சௌகரியமான வாழ்க்கையை நடத்த ஆரம்பித்தனர். அதனுல் அவர்களிடமியல்பாக வுள்ள விடாமுயற்சி, மனத்தைரியம், சகிப்புத்தன்மை ஆகிய குணங்களும் குன்றிவிட்டன. அவர்களுடைய கடற்படை பலமுற்றதாக விருந்தபடியால் இந்து சமுத்திரத்தில் தங்களுடைய ஆதிக்கத்தை நிலைநாட்டினர். ஆனுல் ஒல்லாந்தர், ஆங்கிலேயர் அப்பகுதிகளுள் வருவார்களெனக் காத்திருக்கவில்லை. அவர்களுடைய கடற்படைகள் நவீன யுத்த முறைகளையும் ஆயுதங்களையும் உடையனவாயிருந்த படியால் போர்த்துக்கீசர் அவர்களை எதிர்க்க முடியவில்லை. பதினுறும் நூற்றுண்டின் பிற்பகுதியில் போர்த்துக்கீசரின் சனத்தொகையுங் குறைந்துவிட்டது. மூன்று கண்டங்களில் ஒரு நூற்றுண்டாக நடத்திய போர் சனத் தொகையையும் படைப் பலத்தையுங் குறைத்துவிட்டது.

ஸ்பானிய நாட்டரசனுகிய இரண்டாம் பிலிப்பே 1580ல் போர்த்துக்கலுக்கும் அரசனுனுன். அவன் போர்த்துக்கலின் படைகளையும் அதன் வருவாயையும் ஸ்பானிய நாட்டின் நலத்திற்காக உபயோகித்தமையால் கிழ்த்திசையில் போர்த்துக்கீசர் வசமிருந்த பகுதிகள் கவனயினமாக விடப்பட்டன. அப்பகுதிகளைப் பாதுகாப்பதற்கு வேண்டிய படைத் துணையைத் தேவையான நேரங்களிலே அனுப்பத் தவறினமையால் போர்த்துக்கீசருடைய ஆதிக்கம் குன்றத் தொடங்கியது. கீழ் நாடுகளுக்கு அனுப்பப்பட்ட இராசப்பிரதிநிதிகளும், அல்பகூர்குவே என்பவனைத் தவிர மற்றையோர் சிறந்த நிர்வாகிகளல்ல. கீழைத் தேசங்களுக்கு வந்த போர்த்துக்கீசரும் தங்களுடைய கொடூர செயல்களாலும் திருப்தியற்ற நிர்வாகத்தாலும் மக்களுடைய பகையைத் தேடிக்கொண்டனர். உள்நாட்டு அரசர்களும் இவர்களை வெறுத்து ஒல்லாந்தரோடு சேர்ந்து இவர்களைத் துரத்திவிடுவதில் முனைந்து நின்றனர்.

போர்த்துக்கீசரின் திறமையற்ற நிர்வாகமும் போர்த்துக்கீசப் போர் வீரர்கள், உத்தியோகத்தர்களுடைய ஒழுங்கீனமான பழக்கங்களும் மக்களை வெறுக்கச்செய்தன. மேலும் படைப்பலம் குன்றியமையாலும், சனத்தொகை குறைந்து விட்டதாலும், ஆட்சிபுரிந்த

நாடுகளிலுள்ள மக்கள் பகைத்தமையினுலும், ஒல்லாந்தர், பிரித்தானியர் போன்ற ஐரோப்பியர் கீழ்த்திசை நாடுகளுக்கு வந்தமையினுலும், கீழ்த்திசையில், பிரதானமாக இலங்கையில் அவர்களுடைய ஆதிக்கம் தொடர்ந்து நிலைக்கவில்லை. கீழ்த்திசையில் போர்த்துக்கீசருடைய ஆதிக்கத்தை குறைத்துவிட்டவர்கள், பிரதானமாக ஒல்லாந்தரே யென்று சொல்லலாம். ஒல்லாந்தர் போர்த்துக்கீசரிலும் பார்க்கச் சிறந்த நிர்வாகிகள். ஸ்பானியருடைய கொடூர ஆளுகையிலிருந்து விடுதலையடைந்த ஒல்லாந்தர், போர்த்துக்கீசரிலும் பார்க்க கூடிய உற்சாகத்தையும், வீரத்தையும் காட்டினர். போர்த்துக்கீசர் ஒரு நூற்றுண்டாகப் போர்செய்து களைப்புற்றுப் போர் வீரர்களை இழந்துவிட்டதுபோல் ஒல்லாந்தர் அவ்விதமான நட்டத்தை அடையவில்லை. போர்த்துக்கீசர் தங்களுடைய கடற்படையை திருத்தியமைக்காது விட்டனர். ஒல்லாந்தர் காலத்திற்கேற்றதாக நவீனமுறையிற் கடற்படையைத் திருத்தியமைத்தனர். ஆகையால் எல்லாவிதத்திலும் ஒல்லாந்தர் போர்த்துக்கீசரிலும் பார்க்கச் சிறந்தவர்களாகக் காணப்பட்டனர். ஆனுல் சில காரியங்கள் போர்த்துக்கீசருக்குச் சார்பாக விருந்தன. போர்த்துக்கீசர் கீழ்திசையில் வெகு காலமாக நிலையான ஆதிக்கத்தைத் தாபித்திருந்தனர். ஆனுல் ஒல்லாந்தரோ புதிதாக வந்தனர். போர்த்துக்கீசர் தங்களுடைய மதப்பற்று, அரச பக்தி என்பவைகளினுற் தூண்டப்பட்டு மனத்தைரியத்துடன் போர் புரிந்தனர். ஒல்லாந்தர் சேனையில், சம்பளத்திற்காக அநேக போர் வீரர்கள் சண்டை செய்தனர். அவர்களுடைய படைப்பலமே போர்த்துக்கீசரை 1658ல் இலங்கையிலிருந்து துரத்திவிடுவதற்கு உதவியாக இருந்தது.

## வினக்கள்

1. கத்தோலிக்க சமயம் இலங்கை மக்களின் வாழ்க்கையை எவ்வாறு பாதித்தது ?
2. போர்த்துக்கீசருடைய ஆட்சியினுலேற்பட்ட பயன்கள் யாவை ?
3. போர்த்துக்கீசருடைய ஆட்சி தேய்வுற்றதற்குரிய காரணங்கள் யாவை ?
4. போர்த்துக்கீசருடைய ஆட்சியினுல் இலங்கைச் சமுதாயத்திலேற்பட்ட மாற்றங்கள் யாவை ?


இலங்கை
போத்துக்கீசர் காலம்
யாழ்ப்பாணம்
மன்னார்
வன்னி
திருக்கோணமலை
கொட்டியார்
கற்பிட்டி
புத்தளம்
ஏழு கோறளை
மட்டக்களப்பு
சிலாபம்
நாலுகோறளை
கண்டி
நீர்கொழும்பு
சீதாவாக்கை
கொழும்பு
கோட்டை
சப்பிரகாமுவை
களுத்துறை
மாத்தறை
காலி
மாத்தறை

# ஒல்லாந்தர் காலம்
# (1658—1796)

## 1. ஒல்லாந்தரும் கிழக்கிந்திய வர்த்தக சங்கமும்

ஒல்லாந்தும், பெல்ஜியமும் என்ற இரு நாடுகளும் சேர்ந்த பகுதியே பழைய காலத்தில் நெதலான்ஸ் என்று அழைக்கப்பட்டது. உரோம இராச்சியம் வீழ்ச்சியுற்றபின் ஐரோப்பிய வல்லரசுகள் சிலவற்றால் அது ஆளப்பட்டது. பதினைந்தாம் நூற்றாண்டில் அது அவுஸ்திரிய அரசனுடைய சாம்ராச்சியத்தின் ஒரு பகுதியாயமர்ந்தது. பின்பு விவாகசம்பந்தமாக ஸ்பானிய அரசனாகிய சாள்ஸ் என்பவனுடைய இராச்சியத்தோடு சேர்க்கப்பட்டது. அவ்வரசனுடைய மகன் இரண்டாம் பிலிப்பு சிம்மாசனமேறியபொழுது போர்த்துக்கல் நாட்டின் அரசுரிமையும் அவனுக்குக் கிடைத்தது. அக்காலத்தில் புரட்டஸ்தாந்து மக்களுக்கும் கத்தோலிக்க மக்களுக்குமிடையில் உண்டான விவாதங் காரணமாக பிலிப்பு மன்னனுக்கு எதிர்ப்பு இருந்தது. இதன்விளைவாக நெதலான்ஸின் வடபாகத்திலுள்ள சிறு நாடுகள் ஒன்றுசேர்ந்து ஒறேஞ்சு உவில்லியத்தின் தலைமையின் கீழ் ஐக்கியமாகாணக் குடியரசைத் தாபித்தன (1581). அப்பகுதியிலுள்ள மக்களே ஒல்லாந்தரென அழைக்கப்பட்டனர். அவ்விதம் சுதந்திரத்தைப் பெற்ற ஒல்லாந்து நாடு கைத்தொழிலிலும், வர்த்தகத்திலும் முன்னேறியது. இந்தியாவுக்குச் செல்லும் கடல்மார்க்கத்தைக் கண்டுபிடித்தபின் கீழைத்தேசவர்த்தகம் போர்த்துக்கீசருடைய கையிலேயே இருந்துவந்தது. ஒல்லாந்து மக்கள் லிஸ்பன் நகருக்குச் சென்று கீழைத்தேச வர்த்தகப் பொருள்களை வாங்கி வட ஐரோப்பியத் துறைமுகங்களுக்குக் கொண்டுசென்றனர். தன்னுடன் சண்டை செய்துகொண்டிருந்த ஒல்லாந்து மக்களின் வர்த்தகத்தை சிதைத்துவிட எண்ணி, பிலிப்பு மன்னன் அவர்களை போர்த்துக்கல் நாட்டுக்குப் போகாதபடி தடுத்துவைத்தான். இதனால் கிழக்கிந்திய தீவுகளுக்கு ஒல்லாந்தர் தாமாகவந்து அங்கிருந்து வாசனைச்சரக்குகளை ஐரோப்பாவுக்குக் கொண்டுசென்றமையால் அவர்களுடைய வர்த்தகம் முன்னிருந்ததிலும் பார்க்க அதிகரித்தது. போர்த்துக்கீசருடைய சேவையிலிருந்த வான்கூற்மன் என்பவன் இந்தியாவுக்குச் செல்லும் பாதையை அறிந்திருந்தான். அம்ஸ்ரடாம் துறை

முகத்திலுள்ள வர்த்தகர்கள் டச்சுக் கிழக்கிந்திய சங்கமொன்றை நிறுவினர் (1594). அடுத்த ஆண்டில் கூற்மன் புறப்பட்டு இந்து சமுத்திரத்திலுள்ள போர்த்துக்கீசருடைய வர்த்தக தலங்களுக்குப் போகாமல் யாவாத்தீவைப் போயடைந்தான். பல கப்பல்களையும் இழந்து, கூற்மனும் சில மாலுமிகளும் இறந்ததினால் ஒரு கப்பல் மாத்திரம் திரும்பியது. கீழ்த்திசை நாடுகளோடு வர்த்தகஞ் செய்வதற்காக புதிய வர்த்தக சங்கங்களும் தாபிக்கப்பட்டன. பின்பு ஐந்து வருடங்களுக்குள் 13 பிரயாணங்கள் வரையில் கீழ்நாடுகளுக்குச் செய்யப்பட்டன. அக்காலத்திலேயே யோரிஸ் வான் ஸ்பில்பேர்க்கன என்பவன் இலங்கைக்கு வந்து விமலதர்மசூரியனோடு கலந்துபேசிச் சென்றான்.

பல வர்த்தக சங்கங்களுக்கிடையே காணப்பட்ட போட்டியின் காரணமாக, கீழ்த்திசையில் போர்த்துக்கீசருக்கிருந்த வர்த்தக உரிமையை அவர்கள் அழித்துவிடுவது கஷ்டமாக இருந்தது. அவ்வண்ணம் செய்துமுடிப்பதற்குப் பலமுள்ள கடற்படையும் அரண் செய்யப்பட்ட வர்த்தக தலங்களும் தேவைப்பட்டன. போட்டியுள்ள வர்த்தக சங்கங்களால் அவைகளைச் செய்துமுடிக்க இயலாது. அதுவுமல்லாமல் 1600-ல் ஆங்கிலேயரும் தங்களுடைய வர்த்தகத்தை முன்னேற்றுவதற்காக கிழக்கிந்திய சங்கமொன்றை தாபித்துவிட்டனர். இக்காரணங்களின் நிமித்தம் எல்லா வர்த்தக சங்கங்களையும் ஒன்றுசேர்த்து டச்சுக் கிழக்கிந்திய சங்கம் என்ற சங்கத்தை 1602-ல் நிறுவினர். சீக்கிரத்தில் அந்தச் சங்கம் வர்த்தகத்தை ஈட்டி பெரும் ஆதாயத்தைப் பெற்றது. யாவாவில் ஒரு பண்டகசாலையை நிறுவி மலாக்கா, மொலுக்காஸ், சுமாத்திரா, போமோசா முதலிய இடங்களைக் கைப்பற்றி பட்டேவியாவில் ஒரு காரியாலயத்தை வகுத்தனர். இதைப்போன்று மேற்கிந்திய தீவுகளில் டச்சு மேற்கிந்திய சங்கமொன்றை நிறுவி, நியூயோக்கு, பிறேசில் என்னும் பகுதிகளைக் கைப்பற்றினர். இவ்விரு சங்கங்களும் ஒல்லாந்திற்குப் பெரும் செல்வத்தைச் சேகரித்தன.

இந்துசமுத்திரத்திற்கு வரும் வழிகளைத் தங்கள் வசப்படுத்தி அதனுடைய ஆதிக்கத்தையும் பெற்றமையால் அப்பகுதியிலுள்ள வர்த்தகம் போர்த்துக்கீசர் வசமே இதுவரையும் இருந்துவந்தது. அவர்களோடு எதிர்க்கக்கூடிய ஐரோப்பிய சாதியினர் ஒருவராகுதல் அப்பகுதிக்கு வராமையால் அவ்விதம் வர்த்தகத்தைத் தாமே நடத்தக்கூடியதாகவிருந்தது. ஒல்லாந்தர் வந்த காலத்தில் போர்த்துக்கீசரும் ஆங்கிலேயரும் அப்பகுதிகளிற் காணப்பட்டமையால்

அவர்கள் போர்த்துக்கீசரைப்போல கடல் ஆதிக்கத்தைப் பெற முடியாமற்போனது. ஆகையால் வர்த்தகப்பொருள் விளைந்த இடங்களிற் தங்களுடைய செல்வாக்கை நிறுவிக்கொள்ள ஆரம்பித்தனர். உள்நாட்டு அரசர்களுடன் வர்த்தக சம்பந்தமான ஒப்பந்தங்களைச் செய்தனர். அவ்விதம் செய்ய முடியாதபொழுது வாசனைச் சரக்குகள் விளைந்த இடங்களைக் கைப்பற்ற முயற்சித்தனர். போர்த்துக்கீசர் கிழ்நாடுகளிலேயுள்ள வர்த்தகப் பொருள்களை ஐரோப்பாவிற்குக் கொண்டுபோய் வர்த்தகஞ் செய்வதிலே முயன்றனர். ஆனல் ஒல்லாந்தரோ அவ்விதமான வியாபாரத்தோடு நில்லாது கீழைத்தேச நாடுகளுக்கிடையே வர்த்தகத்தை நடத்தி வந்தனர். குறைந்த செலவோடு கூடிய ஆதாயத்தைப் பெறுவதே அவர்களுடைய நோக்கமாகவிருந்தது. ஒல்லாந்திலிருந்து பொன், வெள்ளி நாணயங்களைக் கொண்டுவந்து வாசனைச்சரக்குகளுக்குக் கொடுத்து வாங்காமல், கீழ்நாடுகளிலே வர்த்தகத்திலிருந்து பெற்ற ஆதாயத்தைக் கொடுத்தே மேல்நாடுகளுக்கு வாங்கிச்செல்லும் பொருள்களுக்குக் கொடுத்தனர். போர்த்துக்கீசரைப்போலல்லாது ஒல்லாந்தர் போரிலிடுபட்டுக்கொள்ள விரும்பவில்லை. ஒல்லாந்தர் பட்டேவியாவிலே காரியாலயம் வகுத்து வர்த்தகத்தை நடத்த ஆரம்பித்தவுடன் போர்த்துக்கீசருடைய ஆதிக்கத்திற்கு அபாயம் ஏற்பட்டதெனலாம். ஒல்லாந்தர் பலமடைந்தவுடன் போர்த்துக்கீசரைத் தாக்க முயன்றனர். இலங்கையின் கறுவா வியாபாரத்தைக் கைப்பற்றிக்கொள்வதே அவர்களுடைய பிரதான நோக்கமாகவிருந்தது. இரண்டாம் இராசசிங்கனுடைய உதவியல்லாது அதைச் செய்துகொள்ள முடியாதென்றெண்ணி போர்த்துக்கீசரை இலங்கையினின்று துரத்துவதற்கு அவனுக்குத் தாங்கள் உதவியளிப்பதாகக் கூறி அவனுடைய செலவில் போர்த்துக்கீசருடைய ஆட்சியிலிருந்த பகுதிகளைக் கைப்பற்றினர். அப்பகுதிகளை அரசனுக்கே கொடுத்துவிட்டால் தாங்கள் கறுவா வியாபாரத்தின் ஏகபோக உரிமைகளை இழக்க நேரிடுமென்றும், கைப்பற்றிய கோட்டைகளை அழித்துவிட்டால் மற்றைய ஐரோப்பிய சாதியினர் கைப்பற்றிவிடுவார்களென நினைத்து அப்பகுதிகளைத் தங்கள்வசமே வைத்திருந்தனர். அரசன் போர்ச்செலவைக் கொடுக்கத் தவறிவிட்டானென்ற ஒரு காரணத்தைக் காட்டி அப்பகுதிகளுக்குத் தாங்கள் அதிகாரியானுர்கள். போர்ச்செலவின் கணக்கை அனுப்பும்படி பன்முறை அரசன் கேட்டபொழுதிலும் அவர்கள அவ்விதம் செய்துகொள்ளவில்லை. காலி, நீர்கொழும்புப் பகுதிகளிலுள்ள வருமானத்தை அறவிட்டபொழுதிலும் அவர்கள் அதைப் போர்ச் செலவில் கழித்துக்கொள்ளவில்லை. போர்ச்செலவை

அவர்கள் பெற்றுவிட்டால் கைப்பற்றிய நிலங்களின் உரிமையை இழந்துவிடுவர். ஆகையால் செலவை வாங்குவதற்கு விருப்பமில்லாது போர்ச்செலவையும் சமர்ப்பியாது தந்திரமாக நடந்து கொண்டனர். அரசன் இறந்தபின் அப்பகுதிகள் தங்களுக்கேயுரியன வென்று வாதாடலாமென யோசனை செய்திருந்தனர்.

அவர்கள் தங்களுடைய ஆட்சிக்குக் கொண்டுவந்த பகுதிகளை மூன்று பிரிவாகப்பிரித்தனர். அரசன் போர்ச்செலவைக் கொடுக்கத் தவறினமையால், நீர்கொழும்பு, காலி, கொழும்பு ஆகிய பகுதிகளைத் தங்கள்வசம் வைத்திருப்பதாக டச்சுக்காரர் கூறினர். யாழ்ப்பாணம் மன்னார்ப்பகுதிகளை தாங்கள் அரசனுடைய உதவியில்லாது போர்த்துக்கீசரிடமிருந்து கைப்பற்றியமையால் அவைகளை தங்களுடைய ஆட்சிக்குள் வைத்திருப்பதற்குத் தங்களுக்கு உரிமையுண்டென்பதாகக் கூறினர். மற்றைய ஐரோப்பிய சாதியினர் தங்களுடைய ஆட்சிக்குள்ள பகுதிகளைக் கைப்பற்றிக்கொள்ளாவண்ணம் பாதுகாப்பதற்காக, கற்பிட்டி, கொட்டியாரம், திருகோணமலை, மட்டக்களப்பு ஆகிய பகுதிகளைத் தம்வசம் வைத்திருப்பதாகக் கூறினர். அரசன் தங்களுடன் இணக்கமான முறையில் நடந்து கொண்டால் மூன்றும் பிரிவிலுள்ள பகுதிகளைக் கொடுப்பதாகவும், போர்ச்செலவுக்காக வைத்திருந்த பகுதிகளைக் காலஞ்செல்லக் கொடுப்பதாகவும், மன்னாரும், யாழ்ப்பாணமும் தங்களுக்குரியன வென்றும் கூறினர். ஒல்லாந்தர் இவ்விதமான தந்திரமுறைகளைக் கையாண்ட பொழுதிலும் இராசசிங்கன் முழு இலங்கைக்கும் தானே சக்கரவர்த்தியென்றும், அவர்களுடைய ஆட்சியிலிருந்த நிலங்கள் தன்னுடையனவென்றும், கோட்டைகளெல்லாம் தனக்கேயுரியன வென்றும் டச்சுச்சங்கத்தவர்கள் தனக்குச் சேவைபுரிபவர்களென்றும் பலவாறு சொன்னபொழுதிலும் அவர்கள் அரசனுடைய உரிமை பேச்சளவிலே மாத்திரமன்றி செயலளவில் இல்லையென நினைந்து அவன் கூறியவைகளைப் புறக்கணித்து விட்டனர். போர்த்துக்கீசரைப் போல டச்சுக்காரர் அடிக்கடி கண்டிக்குப் படையெடுத்துச் செல்லாது விடுத்தமை அவனுக்கு ஆறுதலை அளித்தது.

ஒல்லாந்தர் தங்களாட்சிக்குட்படுத்திய பகுதிகளை எவ்வாறு நிர்வகித்தனர் என்பதைப்பற்றி இனி ஆராய்வோம். ஆட்சிசெய்யும் வசதிக்காக தாங்கள் கைப்பற்றிய இடங்களை மூன்று பிரிவுகளாகப் பிரித்து ஒவ்வொன்றையும் ஆட்சிபுரியத் தளபதிகளை நியமித்தார்கள். அவை கொழும்புக் "கொமாண்டரி", யாழ்ப்பாணக் 'கொமாண்டரி', காலிக் 'கொமாண்டரி' என்பனவாம். கொழும்புப்பகுதி கொழும்பு நகரில் வசித்த டச்சுத் தேசாதிபதியின் ஆட்சியின் கீழ் இருந்தது.

கொழும்புக் கொமாண்டரியைச் சேர்ந்த திசாவனி மகாஓயாவுக்கும் வெங்தோட்டை ஆற்றுக்குமிடையிலுள்ள பிரதேசமாகும். அது ஒரு திசாவையின் ஆட்சியின் கீழிருந்தது. நான்கு கோரளை, ஏழுகோரளை, சப்பிரகாமுவா என்னும் பகுதிகளைக் கொண்டுள்ள அத்திசாவானியின் நீதிசெலுத்தும் அதிகாரமும் இராணுவ அதிகாரமும் அத்திசாவைக்கிருந்தது. கழுத்துறை, நீர்கொழும்புக் கோட்டைகளும் இப்பகுதியிலே இருந்தன. இதுவே எல்லாத்திசாவானிகளிலும் பார்க்கச் செல்வத்திலே சிறந்தது. யாழ்ப்பாணக் கொமாண்டரி யாழ்ப்பாணநகரைக் கொண்டுள்ள பகுதியாகும். அது ஒரு உபதேசாதிபதியின் ஆட்சியிலிருந்தது. அவனுடைய ஆஞ்ஞையின்படி மன்னர் தொடங்கித் திருகோணமலைவரையுமுள்ள திசாவானி ஆட்சி புரியப்பட்டது. காரைதீவு, புங்குடுதீவு முதலிய பதின்மூன்று தீவுகளும், வன்னியும் யாழ்ப்பாணத் திசாவானிக்கே சேர்ந்தவைகளாம். வன்னி, வன்னியர் என்னும் அதிகாரிகளின் மேற்பார்வையிலிருந்தது. வன்னியர் யானைகளைத் திறையாகக் கொடுக்க வேண்டியிருந்த பொழுதிலும், அவர்கள் இராசசிங்கனுடைய பக்கஞ் சேர்ந்திடுவார்கள் என்ற பயத்தினுல் ஒல்லாந்தர் அவர்களிடமிருந்து திறையைக் கேட்கவில்லை. காலிக் கொமாண்டரியும் ஒரு உபதேசாதிபதியின் ஆட்சியின் கீழிருந்தது. அதனைச் சேர்ந்த மாத்தறைத் திசாவானி வெங்தோட்டை ஆறு தொடக்கம் வளவை கங்கை வரையுமுள்ள பிரதேசமாகும். திசாவை மாத்தறையிலிருந்து ஆட்சிபுரிந்தான்.

பட்டேவியாவிலிருந்த மகாதேசாதிபதியே இலங்கைக்கு ஒரு தளபதியை நியமித்தார். அவரே தேசாதிபதியாகவிருந்து நிர்வாகத்தை நடத்திவந்தார். அவருக்கு ஆலோசனை கூறுவதற்கு ஒரு சபையுமிருந்தது. வர்த்தகத்தையும், விவசாயத்தையும் விருத்தி செய்வதற்கும், வருமானங்களை அறவிடுவதற்கும் நீதிபரிபாலனஞ் செய்வதற்கும், ஒவ்வொரு திசாவானியும் ஒவ்வொரு திசாவையின் பொறுப்பில் விடப்பட்டன. இரண்டு கோரளைகளுக்கு ஒரு ஓவசியரும், யாழ்ப்பாணத்திற்கு ஒரு முதலியாரும் ஆகிய அதிகாரிகள் நிர்வாக விஷயங்களில் அவருக்கு உதவிபுரிந்துவந்தனர். வர்த்தக சம்பந்தமான விஷயங்கள் உயர்வர்த்தகர், வர்த்தகர், கீழ்வர்த்தகர் என்னும் உத்தியோகத்தர்களால் நடத்தப்பட்டன. இராணுவ நிர்வாகம், திசாவை, சேனுதிபதி, உபசேனுதிபதி, ஆகியோரின் பொறுப்பில் விடப்பட்டது. "லஸ்கரீன்" என்ற சிங்களப் போர்வீரர்கள் முதலியார்மாரின் கீழ் வேலை செய்தனர்.

பட்டேவியில் அனுசரணையிலிருந்த ஒல்லாந்து நாட்டுச் சட்டங்கள் இலங்கைக்கு ஏற்றவண்ணம் மாற்றப்பட்டு இங்கு புகுத்தப்பட்டன. அச்சட்டங்களின் விபரம் கொழும்பு, யாழ்ப்பாணம், காலி ஆகிய இடங்களில் உயர்தர நீதிஸ்தலங்கள் தாபிக்கப்பட்டன. யாழ்ப்பாணம், காலி ஆகிய நீதி மன்றங்களிலிருந்து மேல் விசாரணைக்கு கொழும்பு நீதிமன்றத்திற்கு வழக்குகள் அனுப்பப்பட்டதுமன்றி அதனுடைய தீர்ப்பிற் திருப்தியடையாதவர்கள் பட்டேவியாவுக்கு மனுச்செய்து கொள்ளலாம். நிலங்கள் சம்பந்தமான வழக்குகள் விசாரணை செய்வதற்காக திசாவானிகளில் "லான்ட்றுட்" என்னும் நீதிஸ்தலங்களு மிருந்தன. சிறிய விவாதங்கள் திசாவையாற் தீர்க்கப்பட்டன. கொலை செய்தவர்கள் மீது வழக்குத் தொடர்வதற்காகப் பிரசித்த அரசாங்க அதிகாரிகளும் நியமிக்கப்பட்டிருந்தனர். நீதி வழங்குவதற்காக நியமிக்கப்பட்ட அதிகாரிகள் சட்டக் கல்வியறிவு யுடையவர்களல்ல. ஒல்லாந்தர் உரோம டச்சுச் சட்டங்களை அனுசரித்தது மல்லாது நாட்டு மக்களின் பண்டைய வழக்கங்களையும் நீதி முறையையும் கவனித்தும் நடந்தனர். அவ்விதம் தொகுக்கப்பட்ட சட்டத் தொகுதியே "தேசவழமை" எனப்படும்.

கறுவா வியாபாரத்தின் ஏகபோக உரிமையை ஒல்லாந்தர் பெற்றிருந்தபடியால் வருமானத்தின் பெரும் பகுதியை அதிலிருந்தே பெற்றனர். யானை விற்பனை, பாக்கு முதலிய வியாபாரத்திலிருந்தும் ஆதாயத்தை ஈட்டினர். நிலங்களிலிருந்து அறவிட்ட வரியைவிட மக்களிடமிருந்தும் வரியறவிட்டனர். விவசாயத்திலிருந்தும் வருமானங் கிடைத்தது. புகையிலை, சீனி, உப்பு, சீலை, மிளகு ஆகிய பொருள்கள் உள்நாட்டிலேயே விற்கப்பட்டமையால் அவைகளிலிருந்தும் வருமானத்தைப் பெற்றனர். கறுவா விளையும் கிராமங்கள் முழுவதும் "மகாபத்த" என்று அழைக்கப்பட்டன. அக்கிராமங்களிலே வசித்த மக்களுடைய உதவியோடு ஒரு வருடத்தில் 50,000 இருத்தல் கறுவா வரையில் பெற்றனர். கிராமங்களில் வசித்தவைகளினுடைய வருமானத்தை அனுபவித்த சனங்கள் கறுவா மரங்களின் பட்டைகளைச் சம்பளம் வாங்காது உரித்து வர்த்தக சங்கத்திற்குச் சேவை புரிந்தனர். ஒவ்வொரு மனிதனும் வருடம் 682 இருத்தல் கறுவா கொடுக்கவேண்டி யிருந்தது. அவ்விதமான இலவச சேவை செய்யுங் காலத்தில் அவர்களுக்குத் தேவைப்பட்ட உப்பு, மீன், அரிசி ஆகிய உணவுப் பொருட்களை வர்த்தகம் கொடுத்துதவியது. அச்சங்கம் கறுவா வியாபாரத்தின் ஏகபோக உரிமையைப் பெற்றிருந்தமையால் வேறெருவராகுதல் அவ்வர்த்தகத்தை நடத்த முடியாது. 1679ல்

பாக்கு வியாபாரத்திலே பெற்ற வருமானத்தைக் கொண்டு போர்ப் படை முழுவதின் செலவைப் பெற்றனர். யானைகள் மாத்தறைப் திசாவனியில் வேட்டை யாடப்பட்டன. வன்னியர்கள் வருடம் 80 யானைகள் வரையில் திறையாகப் பெற்றனர். மட்டக்களப்பு திரு கோணமலையிலிருந்தும் யானைகளைப் பெற்றனர். அவ்விதம் பெற்ற யானைகளை யாழ்ப்பாணத்திற்கு வந்த தென்னிந்திய வர்த்தகர் களுக்கு விற்றனர். நில வரியைவிட, ஆயக்காசு, குத்தகைப்பணம், மரணவரி (மறலா) முத்துக்குளிப்பினுல் வரும் ஆதாயம் ஆகிய இவைகளெல்லாஞ் சேர்ந்து வருமானத்தை அதிகரிக்கச் செய்தன. தஞ்சாவூரிலிருந்து அடிமைகளைக் கொண்டுவந்து அவர்களுடைய உதவியுடன் செழிப்புள்ள நிலங்களில் விவசாயத்தைச் செய்தனர்.

இராசகாரிய முறையைக் கொண்டு வீதிகள், கால்வாய்கள், அரண்கள் முதலியன அமைப்பதற்கு வேண்டிய வேலைகளைச் செய் வித்தனர். வர்த்தக சங்கத்திற்கு எவ்விதமான செலவுமில்லாமல் மாத்தறையிலிருந்து கரையோரமாகப் புத்தளம் வரையும் வீதி யொன்றை அமைத்தனர். சிறு ஆறுகளுக்குப் பாலங்கள் போடப் பட்டன. விடுதிகள் கட்டப்பட்டன.

### வினுக்கள்

1. ஒல்லாந்தர் கிழைத் தேசங்களுக்கு வரவேண்டிய காரணங்களை ஆராய்க.
2. ஒல்லாந்தர் இலங்கையில் தங்களுடைய ஆதிக்கத்தை நிலைநாட்டுவ தற்கு ஏதுவாயிருந்த காரணங்கள் யாவை?
3. போர்த்துக்கேசரிடமிருந்து கைப்பற்றிய கோட்டைகளைக் கண்டியரச னிடம் ஒப்படைக்க மறுத்ததற்கு என்ன காரணங்கள் கூறினர்?
4. ஒல்லாந்தரின் நிர்வாக முறையை ஆராய்க.
5. ஒல்லாந்தருடைய வர்த்தகசங்கம் எவ்வாறு ஆதாயத்தை ஈட்டியது?
6. "ஒரு ஐரோப்பிய சாதியினர் போக இன்னெரு ஐரோப்பிய சாதி யினர் வருவதற்கு இரண்டாம் இராசசிங்கனே காரணமாயிருந் தான்" இதன் உண்மையை ஆராய்க.

# 2. இரண்டாம் இராசசிங்கன்
## (1658 - 1687)

இரண்டாம் இராசசிங்கன் அரசனுகை வந்த காலந் (1635) தொடக்கம் போர்த்துக்கீசர் இலங்கையிலிருந்து துரத்தப்பட்ட காலம் (1658) வரையும் அவனுக்கும் ஒல்லாந்தருக்கு மிடையிலுள்ள தொடர்பைப் பற்றி முன் அத்தியாயங்களிற் படித்திருக்கிறேம். போர்த்துக்கீசரை இலங்கையிலிருந்து துரத்திவிட்டுத் தானே இலங்கை முழுவதற்கும் அரசனுயிருக்க வேண்டுமென்ற அவா அவனுடைய மனத்திற் குடிகொண்டிருந்தது. அந்நியருடைய ஆளுகை நீங்கும் காலத்தை பிரதானிகளும், ஏனைய மக்களும் எதிர்பார்த்திருந்தனர். போர்த்துக்கீசருக்குப் பதிலாக இன்னுமொரு அந்நிய சாதியினர் இலங்கையில் ஆட்சிபுரிய இடம்பெற்றதினுல் இராசசிங்கன்மீது அவனுடைய பிரசைகள் அதிகம் வெறுப்புக் கொண்டனர். ஒல்லாந்தரால் ஏமாற்றப்பட்டு, மக்களுடைய மதிப்பையும் இழந்த அரசன் எல்லோரிலும் நம்பிக்கையீனமுடையவனுனுன். ஒல்லாந்தரோடு வர்த்தகத் தொடர்பை நீக்கிவிட்டான். தன்னுடைய இராச்சியத்திற்குச் சென்ற அந்நியர் எல்லோரையும் வெளியேருவண்ணம் தடுத்துவைத்தான். தன்னுடைய பிரசைகளை அவசியமற்ற வேலைகளிலீடு படுத்தி விவசாயம் செய்வதற்கும் ஒய்வு நேரம் கொடாமற் துன்புறுத்தினுன். தனக்கிருந்த எதிர்ப்பை அடக்குவதற்காக கொடூரமான முறைகளைக் கையாண்டமையால் பிரதானிகளும் பிரசைகளும் சதிசெய்ய ஆரம்பித்தனர். சதி ஆலோசனையிலிருந்து அவர்களுடைய மனத்தைத் திருப்பும் நோக்கத்தோடு கட்டடங்களை இடித்து மீண்டும் கட்டும்படி கட்டளையிட்டான். இவ்விதமான பயனற்ற வேலைகள் மக்களை வெறுக்கச்செய்தன. பிரசைகள் செலுத்திய வரிகளை ஏற்காது அலட்சியஞ் செய்ததோடு நிலங்களின் வருமானங்கள் பண்டகசாலைகளிலிருந்து அழுகிப் பழுதடையவும் விட்டான்.

பகைமை அதிகரித்தமையால் செங்கடகலையை விட்டு நிலாம்பையிலுள்ள அரண்மனைக்குச் சென்முன். பின்பு கங்குருகன் கெத்தாவுக்குப் போக நேரிட்டது. அரசன் விளைத்த கொடுமைகளைத் தாங்கமுடியாத மக்கள் அவனைக் கொன்றுவிடத் தீர்மானித்து **அம்பன்வேலா ருலா** என்பவனின் தலைமையில் பல கலகக்காரர் ஒரு நள்ளிரவில் நிலாம்பையிலுள்ள அரண்மனையிற் புகுந்து (1664) காவற்காரரையும் கொன்று அரசனைக் கொலை செய்ய எத்தனித்தபொழுது அவன் அவர்களோடு சண்டையிட்டு உயிர் தப்பினுன்,

அரசனுடைய மகனை சிங்காசனமேற்றுவதற்கு யோசனை செய்தனர். இராசசிங்கனுடைய சகோதரி இளவரசனையுங் கொண்டு இராசசிங்கனிடம் ஓடிச்சென்றாள். பின்பு கலகக்காரர் தம்மிடையே சண்டையிட்டுக் கொண்டமையால் ஒருவராலொருவர் கொல்லப்பட்டனர். இந்த நிலையில் அரசனுடைய சகோதரனும், போர்த்துக்கீசரின் உதவியைத் தேடிக் கோவைக்குச் சென்று அங்கிறந்தவனுமாகிய விசயபாலனின் மகனெனக் கூறிக்கொண்டு ஒருபக்கிரி (யாசிக்கும் மதகுரு) நாட்டிற் தோன்றி பல அற்புதங்களைச் செய்தான். அநேகர் அவனுக்கு ஆதரவளித்தனர். இராசசிங்கன் அவனைக் கைப்பற்றிக் கடுந் தண்டனை விதித்தான்.

இராசசிங்கனுடைய கொடுமையைப் பொறுக்கொணாது அவனுடைய திறமை வாய்ந்த திசாவைகளி லொருவனான தென்னக்கோன் என்பவன் ஒல்லாந்தர் பக்கம் போய்ச் சேர்ந்தான். அவனுடைய உறவினர் வதைக்கப்பட்டனர். ஒல்லாந்தர் அவனை ஏற்றுக்கொண்டு சப்த கோரளையையும் தங்கள்வசப்படுத்தினர். அரசன் தன்னுடைய மதிப்பை இழந்துபோக, கண்டியிலுள்ள பிரதானிகள் அதிகம் செல்வாக்கைப் பெற்றனர். ஒல்லாந்தரைத் தன் நாட்டிலிருந்து துரத்துவதற்குக் கவனஞ் செலுத்திய அரசன் பிரதானிகளை கட்டுப்படுத்தவோ, அவர்களுடைய பிழையான செய்கைகளை அடக்கவோ தவறினமையால், அவர்கள் பழைமையாயுள்ள அதிகாரத்திலும் பார்க்கக் கூடிய அதிகாரத்தைப் பெற்றனர். அவன் பிற்பகுதியில் அபின் சாப்பிடும் பழக்கத்தைப் பழகிக் கொண்டமையால் அரசியல் விஷயங்களையும் பிரதானிகள் நடத்த ஆரம்பித்தனர். ஒல்லாந்தருக்கெதிரே அரசனைத் தூண்டி இருபகுதியாருக்குமிடையில் பகையைக் கூட்டிவிட்டனர். அதுவுமன்றி அரசனுடைய அனுமதியின்றி டச்சுக்காரரின் ஆட்சியிலுள்ள பிரதேசங்களிலே கொடூரச் செயல்களை விளைத்தனர். இராசசிங்கனுடைய உறவினரும் (நாயக்கா) அரசியல் விஷயங்களிற் தலையிட்டு அதிகம் செல்வாக்கைப் பெற்றனர். எல்லைப் பிரதேசங்களை அடிக்கடி டச்சுப் போர் வீரர்களும் அரசனுடைய போர் வீரர்களும் சூறையாடினமையால் சமாதானத்தை விரும்பிய மக்கள் டச்சுச் சங்கத்தின் ஆதரவில் வாழ விரும்பினர். பிற்பகுதியில் போரில் திறமை காட்டியவர்களும் தலைவர்களாயுமிருந்தோர் இராசத் துரோகிகள் எனத் தப்பான எண்ணத்தை வைத்துக்கொண்டு அநேகரை சந்தேகத்தினுல் கொலை செய்வித்தான்.

போர்த்துக்கீசருடைய ஆதிக்கம் நீங்கி ஒல்லாந்தருடைய ஆட்சி மேலோங்குவதற்கு இரண்டாம் இராசசிங்கன் எவ்வாறு காரணமாயிருந்தான் என்பதைப்பற்றி அறிந்திருக்கிறோம். பின்பும் பிறநாட்டவர்களோடு தொடர்பு வைப்பதற்குத் தயங்கவில்லை. கறுவா வர்த்தகத்தின் ஏகபோக உரிமை போர்த்துக்கீசரைத் தனவந்தர்களாக்கிய பின் டச்சுக்காரரும் அவ்வர்த்தகத்தில் கவர்ச்சிகொண்டு இங்கு வந்து சேர்ந்தனர். ஆங்கிலேயர், பிரான்சியர், தேனியர் ஆகியோரும் கறுவா வர்த்தகத்தைப் பெற ஆவலுற்றனர். ஐரோப்பாவில் இலங்கையில் விளையும் கறுவாவுக்கு எத்துணை மதிப்பு இருந்ததென்பதை கண்டியரசன் அறியவில்லை. அடிக்கடி ஏற்பட்ட போர்த்துக்கீசரின் படையெடுப்பினால் அவமானமடைந்த அரசன் அவர்களைத் துரத்துவதிலே கண்ணும் கருத்துமா யிருந்தானேயன்றி கறுவா வர்த்தகத்தினாலே பெறக்கூடிய ஆதாயத்தைப் பற்றிச் சிந்திக்கவில்லை.

ஒல்லாந்தர் இராசசிங்கனைச் சாந்தப் படுத்துவதற்காக உபகாரங்களைக் கொடுத்துப் பலமுறை தூதுவர்களை அனுப்பினர். அரசனுக்கு விருப்பமுள்ள மிருகங்களையும் நூதனப்பொருட்களையும் அனுப்பிய பொழுது அவைகளைக் கொண்டு சென்ற தூதுவர்கள் ஒருவரையும் திரும்பிவர அவன் விடவில்லை. ஐரோப்பிய சாதியினரிற் பலர் கண்டிக்குச் சென்று பின் திரும்பவில்லை. அரசன் அவ்விதமாகப் பல ஐரோப்பியரை அங்கேயே தங்கியிருக்கச் செய்தான். 1659ல் மாலைதீவுக்கருகாமையில் மோதுண்ட "பார்சியா வர்த்தகன்" என்ற ஆங்கிலக் கப்பலிலுள்ள மாலுமிகள் ஒரு தோணியிலேறி வரும் போது கற்பிட்டியை வந்து சேர்ந்தனர். அவர்களிற் பதின்மூன்று பேர்கள் அப்பகுதிக்குள்ள திசாவையால் கண்டிக்குக் கொண்டு போகப்பட்டனர். மற்றவர்கள் மன்னருக்குச் சென்றனர். கண்டிக்குச் சென்றவர்களை இராசசிங்கன் அங்கு இருக்கச் செய்தான். அவர்களுக்கு விடுதலை அளிக்கவில்லை. அடுத்த ஆண்டில் (1660) "அன்னி" என்ற இன்னொரு ஆங்கிலக் கப்பல் வர்த்தகத்தின் பொருட்டுக் கொட்டியாரம் வந்தபொழுது, பழுது பார்ப்பதற்காகச் சிறிதுகாலம் அங்கு தங்கியிருக்க வேண்டியதாயிற்று. இதனைக் கேள்வியுற்ற கண்டி அரசன், பிரித்தானிய கிழக்கிந்திய சங்கத்தோடு நட்புக்கொள்ளும் நோக்கத்தோடு கப்பலில் வந்த ஆங்கிலேயரை அழைத்து வரும்படி தனது திசாவை ஒருவனை அனுப்பினான். அரசன் அனுப்பிய செய்தியை வந்து ஏற்குமாறு திசாவை கப்பற்தலைவனாகிய **றொபேட் நொக்ஸ்** என்பவனுக்கு அறிவித்தான். அவன் கரைக்கு வந்தவுடன், திசாவையுடன் வந்தவர்கள் அவனை கண்டிக்குக் கொண்டு சென்றனர். அவனுடைய மகனும் இன்னும்

வேறுசில மாலுமிகளும் அவனுடன் கொண்டு செல்லப்பட்டனர். அவர்கள் எல்லோரும் கண்டியிலேயே தங்கியிருக்க வேண்டிய தாயிற்று.

1600ல் தாபிக்கப்பட்ட பிரித்தானிய கிழக்கிந்திய சங்கம் இந்தியாவிற் பல இடங்களிலும் பண்டகசாலைகளை நிறுவி வர்த்தகத்தை நடத்திவந்தது. போர்த்துக்கல் நாட்டின் இளவரசியாகிய கதரீனவை விவாகஞ் செய்த இங்கிலாந்தரசனாகிய இரண்டாம் சாள்ஸ் பம்பாயைச் சீதனமாகப் பெற்றான் **(1661)**. இலங்கையை ஆங்கிலேயர் கைப்பற்றினால் கொழும்பை போர்த்துக்கீசருக்குக் கொடுப்பதாகவும், போர்த்துக்கீசர் ஒல்லாந்தரை இலங்கையினின்று துரத்தினால், காலியை ஆங்கிலேயருக்குக் கொடுப்பதாகவும் விவாக ஒப்பந்தத்திற் குறிப்பிடப்பட்டது. இச்செய்திகளைப் பற்றிக் கேள்வியுற்ற ஒல்லாந்தர் ஆங்கிலேயர் வராமற் தடுப்பதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்தனர். பிரித்தானிய கிழக்கிந்திய சங்கத்தின் சேவையிலுள்ள உத்தியோகத்தி லொருவரான **எட்வேட் வின்டர்** என்பவன் இராசசிங்கனுக்குப் பல உபகாரங்களை அனுப்பி கண்டியிலுள்ள ஆங்கிலக் கைதிகளுக்கு விடுதலையளிக்குமாறு கேட்கும் பொருட்டு அனுப்பிய தூதர்கள், டச்சுக்காரரால் தடுக்கப்பட்டனர். இராசசிங்கன் சென்னைக்கு அனுப்பிய தூதனும் டச்சுக்காரரின் கையிற் சிக்கினான். ரொபேட் நொக்சு சிறையிலேயே இறந்துவிட அவனுடைய மகனும், **றட்லன்ட்** என்னும் இன்னொரு ஆங்கிலேயனும் சிறையினின்று தப்பி ஒல்லாந்தரிடஞ் சென்றனர் **(1679)**. அவ்விதம் மன்னருக்குக் கிட்டவுள்ள இடத்தைச் சேர்ந்த இருவரும் பட்டேவியாவுக்கு ஒல்லாந்தரால் அனுப்பப்பட்டனர். அங்கிருந்து இங்கிலாந்துக்குச் சென்றனர். இளைய ரொபேட் நொக்சு 18 வருட கால சிறை அனுபவத்தைப் பற்றியும் கண்டி இராச்சியத்தைப் பற்றியும் ஒரு நூலை எழுதி வெளியிட்டான். இன்னும் 6 ஆங்கிலேயர் சிறையினின்று தப்பி ஓடினர். ஆங்கிலேயரும், இராசசிங்கனும் ஒரு ஒப்பந்தத்தையுஞ் செய்துகொள்ள முடியவில்லை.

இங்கிலாந்து, ஒல்லாந்து நாடுகளில் கீழ்த்திசை நாடுகளின் வர்த்தகத்தை நடத்துவதற்காக வர்த்தக சங்கங்கள் தாபிக்கப்பட்டது போலப் பிரான்சிலும் அந்நோக்கத்தோடு ஒரு சங்கம் நிறுவப்பட்டது. ஒல்லாந்த வர்த்தக சங்கத்திலே சேவைபுரிந்த கேரன் என்பவன் தன்னுடைய நாடாகிய பிரான்சுக்கு உதவிபுரிய எண்ணங்கொண்டு இலங்கையில் ஒரு துறைமுகத்தைப் பெற்றுக்கொள்ள முயற்சித்தான். இந்தியாவில் பிரான்சியருடைய வர்த்தக விஷயங்களை நடத்துவதற்குத்

தளகர்த்தனுக நியமிக்கப்பட்ட கேரன் இராசசிங்கனேடு தொடர்பு வைத்துக்கொள்ள முயற்சிகள் செய்தான். பின்பு டி லா கேய் என்னும் கடற்படைத் தலைவனும், கேரனும் 1672ம் ஆண்டு திருகோணமலையை அடைந்து இராசசிங்கனுக்குத் தங்களுடைய வரவைப்பற்றி அறிவித்தனர். ஒல்லாந்தரிடமிருந்து கொட்டியாரத் தையுங் கைப்பற்றினர். இராசசிங்கன் பிரான்சியரோடு உடன் படிக்கை ஒன்றை எழுதினுன். அதன்பிரகாரம் திருகோணமலை, கொட்டியாரம் மட்டக்களப்பு ஆகிய துறைமுகங்கள் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டன. அவர்களுக்கு உணவு அளிக்க இராசசிங்கன் தவறினமையால் கொட்டியாரத்திலுள்ள கோட்டையைப் பாதுகாப் பதற்கு ஒரு சிறிய படையை அங்குவிட்டு, எஞ்சிய படை இந்தியா வுக்குத் திரும்பியது. ஒல்லாந்தர் காவல் புரிந்த படையைத் தோற் கடித்துச் சரணுகதியடையச் செய்தான். இராசசிங்கன் பிரான்சி யருடைய உதவியையும் பெறமுடியாமற் போனது.

ஒல்லாந்தர் தன்னை ஏமாற்றித் தங்களுடைய ஆதிக்கத்தை நிலைநாட்டிவிட்டனரென்று கோபங்கொண்ட இராசசிங்கன் அவர் களுக்குப் பல கஷ்டங்களை விளைவித்தான். அவர்களோடு வர்த்தகஞ் செய்யக்கூடாதெனத் தனது பிரசைகளைத் தடுத்தான். அவர்க ளுடைய ஆட்சியிலுள்ள பிரதேசங்களிலிருந்த மக்களை அவ்விடங் களைவிட்டு நீங்கும்படி கட்டளையிட்டான். ஆனுல் தன்னுடைய பிரசை கள் தனக்கெதிரே சதிசெய்த காலங்களில் ஒல்லாந்தர் மேற்கொண் டிருந்த கோபத்தையும் மறந்து அவர்களைத் தண்டிக்குமாறு ஒல் லாந்தருடைய உதவியைக் கேட்டதுண்டு. கோயன்சு என்ற டச்சுத் தேசாதிபதி, அரசன் வர்த்தகஞ் செய்வதற்காகக் கறப்பிட்டியைக் கொடுத்தான். ஆனுல் அரசன் ஆங்கிலேயருடன் நட்புக் கொள் வதாக அறிந்தவுடன் முன்கொடுத்த உரிமையையும் பறித்துவிட்டது மல்லாமல் கொட்டியாரத்தையும் தேசாதிபதி கைப்பற்றினுன். தன்னு டைய இராச்சியத்திலுள்ள இராசதுரோகிகளைத் தண்டிப்பதற்காக இரா சசிங்கன் ஒல்லாந்தருடைய உதவியைக் கேட்டான் (1664). உடனே டச்சுத் தேசாதிபதி சிலாபத்தைத் தம் வசப்படுத்தியதுமல்லாது உறு வன்வெலே சப்பிரகாமுவா எல்லைப்புறங்களையும் அரண்செய்தான். அதனுல் அரசனுக்கு வர்த்தகத்திலேற்பட்ட நட்டத்திற்காக சில வரிகளைக்கொடுத்து அவனைச் சமாதானப்படுத்தினுன். தன்னுடைய பிரசைகள்மீதிருந்த கோபத்தின் நிமித்தம் ஒல்லாந்தர் ஆட்சிபுரி வதையும் பராமுகமாகவிட்டான். ஆனுல் ஆங்கிலேயருடன் தொடர்பு வைத்துக்கொண்டேயிருந்தான். இராசசிங்கன் தன்னுடைய இராச்சி யத்திலுள்ள இராசதுரோகிகளை அடக்கியபின் ஒல்லாந்தருக்கெதிரே

பகைமைகாட்டினுன். அவனைச் சாந்தப்படுத்துவதற்காக ஒல்லாந்தர் கொட்டியாரம், மட்டக்களப்பு, திருகோணமலை, காலி, கொழும்பு முதலிய இடங்களில் வர்த்தகம் நடத்துவதற்கு அரசனுக்குச் சில சலுகைகளை ஈந்தனர். அச்சலுகைகளைப் பெற்றபின் அரசன் பகைமை காட்டியதால் ஒல்லாந்தர் திருகோணமலை, கொட்டியாரம், மட்டக் களப்பு ஆகிய இடங்களில் வர்த்தகத்தடையை விதித்தனர்.

1765-ல் இராசசிங்கனுடைய படைகள் உறுவான்வெலையை யும், விவிலிகாமத்தையும் முற்றுக்கையிட்டு, யாழ்ப்பாணம், மாத் தறையின் எல்லைப்புறங்களையும் தாக்கின. மல்வானையையும் கைப் பற்ற எண்ணங்கொண்ட நேரத்தில், சப்தகோரளைக்குத் திசாவையா யிருந்த தெனக்கோன் என்பவன் ஒல்லாந்தர் பக்கஞ் சார்ந்தான். அதனுல் ஒல்லாந்தர் சீதாவாக்கைவரையும் தங்களுடைய செல் வாக்கைப் பரப்பக்கூடியதாயிற்று. 1660 தொடக்கம் பதினைந்து வருடகாலம் **ரைகிளப் வான் கோயன்சு** என்பவனே இலங்கையில் டச்சுத் தேசாதிபதியாக ஆட்சிபுரிந்தான். அரசியல் நிர்வாகத்தை அவன் அதிக திறமையுடன் நடத்திவந்தான். போர்த்துக்கீசருடைய கொடுங்கோல் ஆட்சியினுலும், இடையரு யுத்தத்தினுலும் இன்ன லுற்ற மக்களின் பொருளாதார நிலையைச் சீர்ப்படுத்த ஆரம்பித் தான். யாழ்ப்பாணத்தில் புகையிலைச் செய்கையையும், சாயங் காய்ச்சும் தொழிலையும் ஊக்கப்படுத்தினுன். வன்னிப்பகுதியில் பருத்திச்செய்கையை ஆரம்பித்ததோடு வங்காளத்திலிருந்து பட்டுப் பூச்சியையும் கொண்டுவந்தான். இலங்கையின் எல்லாப் பாகங்களி லும் நெற்செய்கை உண்டுபண்ணப்பட்டது. அதை விருத்திசெய் யும்பொருட்டு தஞ்சாவூரிலிருந்து அடிமைகளைக் கொண்டுவந்தான். ஒல்லாந்த அரசியல் நிர்வாகத்திற் காணப்பட்ட குறைகளை நிவிர்த்தி செய்தான். அவனுடைய காலத்திலே காணிகள் பதிவுசெய்யப்பட் டன. போர்த்துக்கீசர் காலந்தொட்டு கொழும்பு, காலி, யாழ்ப்பா ணம் ஆகிய இடங்களிலுள்ள நகரசபை ஆட்சிமுறையைச் சீர்திருத்தி வைத்தான். போர்வீரர்கள் ஒழுங்குமுறையை அனுசரித்து நடக்கத் தக்கதாகச் செய்தான். டச்சு வர்த்தக சங்கத்தின் வருமானத்தைப் பெருக்குவதற்காக அதற்கு எதிர்ப்புக்காட்டிய முஸ்லீங்கள், போர்த் துக்கீச வம்சத்தவர்களுக்கெதிரே ஏற்ற நடவடிக்கைகளை எடுத்தான். இவன் இராசசிங்கனுக்குரிய பகுதிகளைத் தன்னுடைய ஆட்சியின்கீழ் கொண்டுவருவதை பட்டேவியாவிலிருந்த இராசப்பிரதிநிதி விரும்ப

வில்லை. வியாபாரத்தின்மூலம் செல்வத்தைப் பெருக்க ஒல்லாந்தர் வந்தார்களேயன்றி போர்செய்து, பணத்தைச் செலவழிக்கச் சிறிதேனும் விரும்பவில்லை. ஆகையால் 1665ன் பின் கைப்பற்றிய இடங்களை இராசசிங்கனுக்குத் திருப்பிக்கொடுக்கும்படி பட்டேவியாவிலுள்ள அதிகாரிகள் ஒல்லாந்த தேசாதிபதிக்கு ஆஞ்ஞையிட்டனர். அதன்பிரகாரம் கோயன்சு, சப்தகோறளைகள், மூன்றுகோறளைகளையும் திருப்பிக்கொடுப்பதாக அரசனுக்கு அறிவித்தான். ஆனால் அப்பகுதிகளை அவர்களிடமிருந்து தாழ்மையாக வாங்குவதற்கு விருப்பமில்லாது அப்பகுதிகளைக் கைப்பற்றவேண்டுமென நினைத்து அப்பகுதிகளை எரித்தும், சூறையாடியும், அழித்தும் சீதாவாக்கையை ஒல்லாந்தர் விட்டு விலகும்படி செய்தான்.

1680-ல் வான்கோயன்சு இலங்கையை விட்டுச்செல்ல **லோரன்ஸ் பைல்** என்பவன் தேசாதிபதியாக நியமிக்கப்பட்டான். இராசசிங்கனைச் சமாதானப்படுத்தும் நோக்கத்துடன் அவனுக்குப் பல வெகுமதிகளைக் கொடுத்தனுப்பி கைதிகளை விடுதலைசெய்யுமாறு கேட்டான். மூன்று புலிகளும் இரண்டு கரிய பார்சியாக் குதிரைகளும் இரண்டு வெள்ளைச் சிங்கங்களும் அனுப்பப்பட்டன. தூதுவன் வழியிற் தடைசெய்யப்பட்டான். பிரதானிகளே பகைமைக்குக் காரணமென ஒல்லாந்தர் அறிந்தனர். பின்பு மைரோப் என்பவன் ஒரு சிறு படையுடன் கண்டிக்குச் சென்று அரசனைச் சந்தித்தான். 1684 ல் கண்டியிலுள்ள பிரதானிகள் மாத்தறை, சப்பிரகாமுவா எல்லைப்புறங்களைக் கைப்பற்றினர். அரசன் முதுமைப்பருவமடைந்து நோயுற்றபொழுது பிரதானிகள் அதிக செல்வாக்கைப் பெற்றனர். அரசன் இறந்ததன்பின் கலகங்களும் புரட்சிகளுமுண்டாகக்கூடுமென எண்ணி, கொழும்பு, நீர்கொழும்பு, களுத்துறை ஆகிய இடங்களைப் பாதுகாப்பதற்காக அரண் செய்தார்கள். இராசசிங்கன் 1687-ம் ஆண்டு இறந்தான். அவனுக்த மரியாதை செய்வதற்காக கொழும்பு நகரத்திற் பெரிய ஊர்வலம் ஒன்று ஒல்லாந்தரால் நடத்தப்பட்டது. ஆறு குதிரைகள் பூட்டப்பட்ட ரதம் ஒன்றில் அரசனுடைய முடியும் செங்கோலும் படைக்கலமும் வைக்கப்பட்டு, டச்சுத் தேசாதிபதியும் ஏனை டச்சு உத்தியோகத்தரும் புடைசூழ அது வீதிவழியே கொண்டுசெல்லப்பட்டது.

இராசசிங்கன் நடுத்தர உயரமும் கறுத்த மேனியும் பொலிந்த தோற்றமும் உடையன். அவன் அணிந்த அங்கி ஒரு நூதனமா

னது. அது நாட்டின் உடையைப் போன்றதன்று அவன் தான் நவமாகக் கண்டுபிடித்த உடையையே அணிந்தான். நாலுகோணப் பட்டமுடைய தொப்பி ஒன்றை அணிந்திருந்தான். தொப்பியின் முற்பக்கத்தில் சிறகுகள் அலங்காரமாகச் செருகப்பட்டிருந்தன. கழுத்திலிருந்து இடைவரை அணிந்த சட்டையின் மத்தியபாகம் ஒரு வர்ணத்திலும், கைகள் இன்னொரு வர்ணத்திலும் அமைந்திருந்தன. கணுக்கால்வரை நீண்ட காற்சட்டையும் கால்மேசும் சப்பாத்தும் அணிந்திருந்தான். மனம்போனபோக்கில் அடிக்கடி தன்னுடைய உடையை மாற்றிக்கொள்வான். அவனுடைய வாள் பக்கத்தே தொங்கிக்கொண்டிருக்கும். வாளின் பிடியும் உறையும் தங்கத்தினுற் செய்யப்பட்டிருந்தன. கையில் ஒரு பிரம்பு வைத்திருந்தான். அதனுடைய நுனியிலே பல இரத்தினக் கற்கள் பதித்திருந்தன. இவ்வாறு இராசசிங்கனுடைய உடையைப்பற்றி **றெபேட் நொக்சு** வர்ணித்திருக்கிருன். மிருகங்களில் அதிக விருப்பமுடையவன். குதிரைகளிலும், குதிரைச் சவாரிசெய்வதிலும் விருப்பமுடையவன். மீன்களுக்குத் தன் கையால் உணவுகொடுப்பான். அகங்காரமும் பெருமையும் கொண்டவனுகையால் ஒருவகையான எதிர்ப்பையும் சகிக்கமாட்டான். பிரசைகளைக்கொண்டு வேலைசெய்விப்பதிலும் தண்டனை விதிப்பதிலும் இரக்கம் காட்டுவதில்லை. தமது சமயத்தைப் போற்றி நடந்ததுமில்லை. கிறீத்தவர்களை வதைத்ததுமில்லை.

இனி, பழைய காலந்தொட்டு கண்டியில் வழங்கிவந்த அரசாங்க நிர்வாகத்தைப்பற்றி ஆராய்வோம். சட்டநிருபண, நிர்வாகமும், நீதிவழங்கும் அதிகாரமும் அரசனுக்கே உண்டு. அரசன் எதேச்சாதிகாரியாகவே யிருந்து ஆண்டான். இருந்தும் நாட்டின் பண்டைக்கால வழக்கமுறையைத் தழுவியே நடந்துகொள்ளவேண்டியிருந்தது. அரசுரிமை அரசனுடைய இளைய சகோதரனுக்கு அல்லது மகனுக்கே உரியது. சகோதரன் அல்லது மகனில்லாது இறந்தால், பிரதானிகள் ஒரு சபையைக்கூட்டி அதிலே முதல் அதிகாரால் பிரேரிக்கப்பட்ட ஒருவன் அரசனுக நியமிக்கப்படுவான். அரசன் பிரதானிகளோடும், மதகுருமார்களோடும் அரசாங்க விஷயங்களைப்பற்றி ஆலோசிப்பதுண்டு. நிர்வாகத்திற்காக இராச்சியம் இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொன்றும் ஒவ்வொரு அதிகாரின் பொறுப்பில் விடப்பட்டது. ஒவ்வொரு பிரிவுக்கும் நியமிக்கப்பட்ட அதிகார் தன்னுடைய பிரிவிலுள்ள மக்கள் அரசனுடைய

கட்டளைகளை மீருமற் பார்த்துக்கொள்ளவேண்டும். அதிகார் தன தாட்சிக்குட்பட்ட பகுதியில் பொதுநல நன்மைக்காகிய வேலைகளை மேற்பார்வையிடுவதோடு இராணுவத் தலைவனுகவும், நீதிபதியாக வும் கடமையாற்றினுர். கீழுத்தியோகத்தர்களை நியமிக்கும்பொழுது அரசனுக்கு ஆலோசனை கூறுவது வழக்கம். இவ்வகையான கடமை களை செய்துவந்தமையால் அதிகாரிகளுக்கு மக்களிடையே அதிக செல்வாக்கு உண்டானது.

இராச்சியத்திலுள்ள பெரும் பிரிவுகள் பின்பு இருபத்தொரு சிறு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. அவைகளுள் 12 பிரிவு கள் திசாவானிகள் என அழைக்கப்பட்டன. ஒவ்வொரு திசாவானி யும் ஒரு திசாவையின் ஆட்சிக்குட்பட்டிருந்தது. எஞ்சிய 9 பிரிவு களும் ருட்டை என அழைக்கப்பட்டன. ஒவ்வொன்றும் ருட்டே மகாத்மாயா என்னும் உத்தியோகத்தரின் ஆட்சியின்கீழிருந்தது. வருமானத்தை அறவிடுவதும், வர்த்தகம், விவசாயம் என்பவற்றை ஊக்கப்படுத்துவதும் அவர்களுடைய பிரதான கடமைகளாம். இவர் களும் அதிகாரிகளுக்குக் கீழ்ப்பட்ட இராணுவ உத்தியோகத்தர் களாகும். இவர்களின்கீழ் கோறளை, அத்துக்கோறளை, விதானை ஆகிய உத்தியோகத்தர்கள் கடமையாற்றினர். மேலுத்தியோகத்தர் களைப்போல இவர்கள் இராணுவத்திற் சேவைபுரிவதில்லை. மேலுத்தி யோகத்தர்களுக்கு அடுத்தபடியாக இராணுவ அதிகாரம் முதலியார் மார், முகாந்திரம், ஆராச்சி என்பவர்களுக்கு உண்டு. இவர்கள் சேவைக்கு நிலங்கள் வழங்கப்பட்டபோதிலும், நீதித்தலங்களிலே விதிக்கப்பட்ட குற்றப்பணம், உத்தியோக நியமனப்பணம் ஆகிய வருமானத்தையும் பெற்றனர். எல்லைப்புறங்களில் விதிக்கப்பட்ட வரியை அதிகாரிகள் பெற்றனர். பெரும் பிரிவுகளுக்குப் பொறுப்பா யுள்ள மேலுத்தியோகத்தர்களைவிட போர்ச்சேவை, வரியறவிடும் பகுதி ஆகிய பகுதிகளுக்குப் பொறுப்பாளரான உத்தியோகத்தர் களுமிருந்தனர். நீதிபரிபாலனப் பொறுப்பு அரசனிலேயே இருந் தது. வழக்குவிசாரணைகள் அரசனுல் அல்லது அவனுல் நியமிக்கப் பட்ட உத்தியோகத்தர்களால் நடத்தப்பட்டன. பிரதானிகளிடையே உள்ள விவாதங்களும், கொலை, இராசதுரோகம் ஆகியவையே அரசனுல் விசாரணைசெய்யப்பட்டன. ஏனை வழக்குகள் அதிகார், திசாவை முதலிய மேலுத்தியோகத்தர் பொறுப்பில் விடப்பட்டன. கன்சபா எனப்படும் கிராமச்சங்கங்கள் கிராமங்களிற் காணப்படும் விவாதங்களைத் தீர்த்துவைத்தன. கீழ்க்கோடுகளின் தீர்மானங்கள் மேற்கோடுகளின் ஆலோசனைக்கு விடலாம். சிலவேளைகளில் அரச

னுடைய தீர்மானத்திற்கு விடப்படுவதுமுண்டு; அல்லது முதல் அதிகாரரால் விசாரணைசெய்யப்படும் **மகாநடுவா** என்னும் நீதித் தலத்தின் ஆலோசனைக்கு விடுவதுமுண்டு. நீதிவழங்கும் முறையில் சில குறைகளுங் காணப்பட்டன. போக்குவரவு வசதிகள் குறைவாயிருந்தமையினுல் மேற்கோடுகளுக்கோ அல்லது அரசனுக்கோ முறையிடப்போகிறது கஷ்டமாக இருந்தது. வழக்காளிகள் நீதிபதிக்கு ஒரு சம்பளம் கொடுக்கவேண்டியிருந்தமையினுல் கூடியதொகையைக் கொடுத்தவரின் பக்கத்தைச்சார்ந்த தீர்ப்பை செய்வதற்கும் இடமுண்டு. விதிக்கப்படும் குற்றப்பணம் நீதிபதிக்கேயுரியதாதலால் கூடிய குற்றத்தை விதிக்கவும் இடமுண்டு.

கண்டி இராச்சியத்திலுள்ள மக்களின் பிரதான தொழில் விவசாயமாகும். குரக்கன், நெல், பயறு ஆகிய பல தானியங்கள் விளைவிக்கப்பட்டன. நெற்சோறே பிரதான உணவாக இருந்தபோதிலும் அதற்குப் பதிலாக கிழங்கு, பலாக்காய் ஆகியவைகளை மக்கள் சாப்பிட்டனர். கள்ளிலிருந்து பனங்கட்டி தயாரித்தனர். கிராமங்கள் எல்லாவற்றிலும் கிராமவாசிகளுக்குத் தேவையான யாவும் கிடைத்தபடியால் அவர்கள் வேறு இடங்களுக்குப் போகவேண்டிய அவசியமேற்படவில்லை. நகரத்திற் காணப்பட்ட கடைகளில் நெல், உப்பு, சீலை, புகையிலை, பழவகைகள், மட்பாத்திரங்கள், செம்பு, பித்தளைப்பாத்திரங்கள் விற்கப்பட்டன. பண்டமாற்று முறையே வழக்கத்திலிருந்தபோதிலும் சில நாணயங்களும் காணப்பட்டன.

வர்ணக் கட்டுப்பாடே சமுதாயத்தின் அடிப்படையாக இருந்தது. ஒருவனுடைய தொழில், விவாகம், வீடு, உடை யாவும் அவனது வர்ணத்திற்கு ஏற்றதாகவே இருந்தன. ஒரு சாதியிற் பிறந்தவன் இன்னொரு சாதிக்கு மாறிக்கொள்ள முடியாது. விவாகம் நடைபெற்றபின் இருபாலாரும் தங்களிட்டப்படி பிரிந்துகொள்வதற்குக் கட்டுப்பாடுகள் அதிகமில்லை. பெண்கள் விறகுவெட்டி, தண்ணீர் கொணர்ந்து சமையல்செய்து ஆண்கள் சாப்பிட்டபின் சாப்பிடும் வழக்கம் இருந்துவந்தது. சமுதாயத்தில் பெண்களுக்குக் குறைந்த ஸ்திதி அளிக்கப்பட்டது. கண்டி இராச்சியத்திலுள்ள மக்கள் புத்தசமயத்தையே தழுவியிருந்தனர். இந்து ஆலயங்களும் அங்கு காணப்பட்டன. அவ்வாலயங்களில் இந்துக்கள் மாத்திரமல்லாது புத்தசமயத்தவர்களும் வழிபாடு செய்தனர். கண்டி அரசர்கள் புத்தசமய வளர்ச்சிக்குப் பல முயற்சிகள் செய்தபோதிலும் இராசசிங்கன், நரேந்திரசிங்கன் ஆகிய இரு அரசர்களும் புத்தசமயத்திற்கு அதிக ஆதரவு அளிக்கவில்லை.

## வினாக்கள்

1. இரண்டாம் இராசசிங்கனுக்கெதிரே மக்கள் சதிசெய்ததற்குக் காரணமென்ன? அரசன் எடுத்த நடவடிக்கைகள் என்ன?
2. ஒல்லாந்தரால் ஏமாற்றமடைந்த கண்டி அரசன் என்ன நடவடிக்கைகள் எடுத்தான்?
3. ரொபேட்நொக்ஸ் என்பவனும் அவனுடைய மகனும் கண்டிக்குச் செல்லவேண்டியதற்குரிய சந்தர்ப்பம் என்ன? மகன் நொக்ஸ் விடுதலைபெற்ற வரலாற்றை எழுதுக.
4. ஐரோப்பிய சாதியினர் ஒருவரும் இலங்கைக்கு வாராமல் எவ்வாறு ஒல்லாந்தர் தடுத்தனர்?
5. ரைக்கிளப் வான்கோயன்சு என்ற தேசாதிபதியினுடைய நிர்வாகத்தை விபரிக்குக.
6. இரண்டாம் இராசசிங்கனைப்பற்றி நீ அறிந்தவற்றைக் கூறு?
7. சீதாவாக்கை அரசனான முதலாம் இராசசிங்கனையும் கண்டி அரசனாகிய இரண்டாம் இராசசிங்கனையும் ஒப்பிடுக.
8. பழைய காலந்தொட்டு கண்டி இராச்சியத்தில் நடைபெற்றுவந்த நிர்வாகத்தைப்பற்றி எழுதுக.

---

# 3. இரண்டாம் விமலதர்மசூரியன்

## (1687 - 1706)

இராசசிங்கனுடைய மகன் இரண்டாம் விமலதர்மசூரியன் 1687ல் அரசனுனன். சாதுவான குணமுடைய அவ்வாலிபன் புத்தகுருமார் களுடைய ஆச்சிரமத்திலிருந்து வளர்ந்து குருமார்களிடமிருந்து கல்வியும், சமயமும் பயின்றமையினுல் அரசியல் விஷயங்களை அறியும் ஆற்றல் இல்லாதவனுகக் காணப்பட்டான். அரசியல் விஷயங்களை நடத்துவதற்கு வேண்டிய இராசதந்திரத்தில் அனுபவமில்லாமையால் அப்பொழுது கண்டி இராச்சியத்திலுள்ள குழப்பமான அரசியல் நிலையைத் திருத்தியமைப்பது அவனுக்குக் கஷ்டமாகவிருந்தது. அவன் பிரதானிகள், அதிகாரிகள் ஆகியோரிற் தங்கியிருந்தமையால் அவர்களுடைய செல்வாக்கு மேலும்மேலும் அதிகரித்தது. ஆனுல் நாட்டில் அமைதியும் செழிப்பும் நிலையிலிருந்தும் நாடு இராசசிங்கனுடைய காலத்திலே குன்றிய மதிப்பைப் பெற்றது.

அரசன் சிங்காசனமேறிய தினம் கொழும்பிற் கொண்டாடப்பட்டது. அரசன் அனுப்பிய கடிதங்களுடன் கொழும்புக்குச்சென்ற பிரதானிகள், ஒல்லாந்தருடைய ஆட்சியின்கீழுள்ள பிரதேசங்கள் அரசனுடைய ஆணையை யேற்றுக்கொள்ள வேண்டுமெனக் கூறிய பொழுது வர்த்தக சங்கத்தார் அரசனுடைய உதவியாளர் அல்லாது அவனுடைய ஆஞ்ஞைக்குக் கீழ்ப்பட்டவர்களல்லவென்று டச்சுத் தேசாதிபதி கூறினுன். இராசசிங்கன் கொடுக்கவேண்டிய கடனும் கொடுக்கப்படவில்லை யென்பதையும் சுட்டிக்காட்டினுன். பின்பு அவர்கள் புத்தளத்தை வர்த்தகஞ் செய்வதற்குக் கட்டுப்பாடில்லாத ஒரு துறைமுகம் ஆக்கவேண்டுமென்றும் அரசனுடைய 500 கறுவாச் சிப்பங்களைக் கொம்பனி அனுப்பவேண்டுமென்றுங் கேட்டனர். அதற்கு அரசனுடைய கறுவாவும், பாக்கும் கொம்பனிக்கே விற்கும்படி தேசாதிபதி கேட்டுக்கொண்டான். சில நாட்களுள் முதல் அதிகார் கொழும்புக்குவந்து 1665-ன் பின் ஒல்லாந்தராற் கைப்பற்றப்பட்ட இடங்களை அரசனுக்கு மீண்டும் கொடுக்கவேண்டுமென்றும், அரசன் வர்த்தகஞ் செய்வதற்குத் துறைமுகங்களைப் பாவித்துக்கொள்ள அனுமதியளிக்க வேண்டுமென்றும் கேட்டான். அதற்கு உடன்பட விருப்பமில்லாத தேசாதிபதி கொம்பனிக்கு வரவேண்டிய கடனைப்பற்றி ஞாபகமூட்டினுன். ஆனுல் கொம்பனி அரசனுடன் ஒரு உடன்படிக்கையை எழுதிக்கொள்ளச் சம்மதித்

தது (1688). வான்ரீட் என்ற தேசாதிபதி மட்டக்களப்பு, திருகோண மலை, கற்பிட்டி ஆகிய துறைமுகங்களைக் கொடுப்பதற்குச் சம்மத மில்லையென்றும், அரசனுடைய வர்த்தகக் கப்பல்களுக்கு அவைகளைப் பாவித்துக்கொள்வதற்கு அனுமதி அளிக்கப்படுமென்றும் பின்பு கறுவா வியாபாரத்தின் ஏகபோக உரிமையைப்பற்றிக் கலந்து பேச வேண்டுமென்றும் அவன் கூறினன். புதிய உடன்படிக்கையின் அம் சங்களைச் சமர்ப்பிப்பதற்காக கிளாஸ் ஏபெலோசு என்பவன் அனுப் பப்பட்டான். 1662-ன்பின் கைப்பற்றிய இடங்களைக் கடன் தீர்க் கும்வரையும் அரசனுக்குக் கொடுப்பதற்கு தேசாதிபதிக்கு விருப்ப மில்லை. வெகுகாலமாகக் கூறப்பட்டுவந்த கடனின் தொகை இவ் வளவு என்பதைக் கொம்பனி ஒருபோதும் வெளிப்படுத்தவில்லை. அவ்வகையான கடனுக்காகக் கைப்பற்றிய இடங்களை வைத்திருக்க வேண்டுமென்று கூறுவது ஒரு போலி நியாயமாகும். ஆகையால் கண்டிக்குச் சென்ற தூதன் ஒருமுடிவுஞ் செய்துகொள்ளாது திரும்ப நேரிட்டது.

1688-ல் விமலதர்மசூரியன் தன்னுளுகைக்குட்பட்ட பகுதிகளில் கறுவாவைப் பெற்றுக்கொள்வதற்கு அனுமதியளித்தான். பின்பு தேசாதிபதி உடன்படிக்கையின் அம்சங்களைப் பரிசீலனை செய்வ தற்காக அபேலொசுவை கண்டிக்கு அனுப்பினன். அவ்வுடன் படிக்கையின் பிரதான அம்சங்கள்: (1) டச்சுக்காரருக்குச் செலுத் தப்படவேண்டிய கடன் தீர்க்கப்படுமளவும் அவர்கள் கைப்பற்றிய இடங்கள் அவர்கள் வசமே இருத்தல்வேண்டும். (2) இரு பகுதி யாருக்குமிடையில் வரியோ திறையோ இல்லாது வர்த்தகம் நடத் தப்படல் வேண்டும்; கறுவா, மிளகு, மெழுகு, யானைத்தந்தம் கொம்பனிக்கல்லாது வேறெவர்க்கும் விற்கக்கூடாது. (3) அரச னுடைய துறைமுகங்களுக்கு ஆங்கிலேயர், பிரான்சியர், ஜேர்மனி யர், தேனியர் முதலிய ஐரோப்பியரை வரவொண்ணுது தடுத்தல் வேண்டும். (4) அரசனுக்குரிய நிலங்களிலுள்ள கறுவாவை டச்சுக் காரர் பெற்றுக்கொள்ள அனுமதியளிக்கப்பட வேண்டுமென்றும் அச்சலுகைக்குப் பதிலாக, கொம்பனி அரசனுக்கு வருடமொரு முறை ஒரு உபகாரத்தைக் கொடுக்கும். (5) அரசனுடைய இராச் சியத்திற்குள் கத்தோலிக்க குருமார் வசிக்க இடங்கொடுக்கக் கூடாது. அரசனுடைய உத்தியோகத்தர்களோடு உடன்படிக்கை யின் அம்சங்களைப்பற்றிக் கலந்துரையாடியபொழுது அவர்கள் டச் சுக் கொம்பனிக்கு ஒருவிதமான கடனும் அரசன் கொடுக்கவேண் டியதில்லையென்றும், கொம்பனியே முதலெழுதிய உடன்படிக்கையை

மீறியதென்றும், போர்த்துக்கீசரைத் துரத்துவதற்குத் தேவையான செலவிலும்பார்க்கக் கூடிய வருமானத்தை தாழ்பூமியிற் பெற்று விட்டதென்றும் சொன்னார்கள். அபேலொசு தங்களுடைய போர்ச் செலவின் ஆயிரத்திலொருபங்கையும் தாழ்பூமியின் வருமானத்தி லிருந்து பெறவில்லையெனக் கூறினான். அதனால் ஒரு முடிவும் செய்யப்படவில்லை. அரசன் தேசாதிபதியோடு நேரிற் கலந்துபேசிக் கொள்ள விரும்பியபொழுது தன்னுடைய பிரதேசத்தைவிட்டு நீங்க முடியாதெனத் தேசாதிபதி கூறியபொழுது அரசன் எல்லைப்புறக் கோறளைகளிலிருந்தோர், அவ்விடங்களைவிட்டு நீங்கவேண்டுமெனக் கட்டளையிட்டான். தேசாதிபதி தாங்கள் கைப்பற்றிய இடங்களுக்கு உரிமையுண்டென வற்புறுத்தி நின்றார்.

இதற்கிடையில் சமயப்பிரச்சனைகள் தோன்றின. அரசன் பக்தி நிறைந்த புத்தசமயத்தவன். வர்த்தகசங்கத்தின் ஆட்சியிலுள்ள பகுதி களில் அநேக புத்த கோயில்கள் காணப்பட்டன. களனியிலுள்ள கோயில் ஒரு பரிசுத்தமான விசேஷ தலமாகக் கைக்கொள்ளப் பட்டமையால் பல்லாயிரக்கணக்கான சிங்களவர் அதைத் தரிசிப் பது வழக்கம். அவ்வண்ணமே மாத்தறைக்கு வடகிழக்குப் பக்க மாகவுள்ள முல்கிரிகாலை என்னுமிடத்திலுள்ள விகாரைக்குத் திர ளான சனங்கள் செல்வது வழக்கம். ஒல்லாந்தர் ஆட்சிபுரிய ஆரம்பித்த காலத்தில், புத்த சமயத்தவர்கள், இந்துசமயத்தவர்கள், முகமதிய சமயத்தவர்கள், கத்தோலிக்க சமயத்தவர்கள் தாழ்பூமியி லிருந்தனர். ஒல்லாந்தர் புரட்டஸ்தாந்து மதத்தைச் சேர்ந்தவர்க ளாகையால் மக்கள் எல்லோரையும் தங்களுடைய சமயத்திற்கு மாற்றிக்கொள்ள விரும்பினர். 1682-ல் **பைல்** என்ற டச்சுத் தேசாதிபதி கிறித்த சமயத்தை முன்னேற்றும் நோக்கத்துடனும் மற் றும் சமயங்களை அடக்குவதற்காகவும் ஒரு கட்டளையையுண்டுபண் ணினமையால் கொழும்பு திசாவானில் மாத்திரம் 25000 மக்கள் வரையில் கிறித்தசமயத்தைத் தழுவினர். அரசாங்கத்திடமிருந்து நன்மைகளைப்பெறும் நோக்கத்தோடேயே அநேகர் கிறித்தவர்க ளானார்கள். ஆனால் புத்தசமயத்தவர்களும் முயற்சித்தனர். கண்டி அரசன் கரையோரப்பகுதிகளிலிருந்த தாதுகோபங்களை மீண்டும் கட்டப்போவதாகவும், அங்குள்ள சிங்களவருக்கு சமயசுதந்திரம் அளிக்கப்பட வேண்டுமென்றும் அறிவித்தல் கொடுத்தான். ஆனால் கத்தோலிக்க சமயத்திற்கு கொம்பனி அதிகம் பகைமைகாட்டி, கத்தோலிக்க ஆலயங்களையும், பாடசாலைகளையும் கைப்பற்றிய தோடு, கத்தோலிக்க குருமாரையும் துரத்திவிட்டது. அதுவுமல்லா மல் டச்சு அதிகாரிகள் தங்களுடைய ஆலயத்திற்குக் கத்தோலிச்

கர் வந்து ஞானஸ்நானம் பெறவேண்டுமென்றும் அவர்களுடைய பிள்ளைகள் புரட்டஸ்தாந்து மதத்தைப்பற்றிக் கற்கவேண்டுமென்றும், தங்களுடைய சமய ஒழுங்கின்படி இறந்தவர்கள் புதைக்கப்பட வேண்டுமென்றும் வற்புறுத்தினுர்கள். கத்தோலிக்க சமயத்தின் நிமித்தமே சிங்களவருக்கும் போர்த்துக்கீசருக்கும் தொடர்பு ஏற்பட்டிருக்கிறதென்ற எண்ணத்தினுலேயே அச்சமயத்தவர்களுக்குச் சகிப்புத்தன்மை காட்டாததற்குக் காரணமாகும். 1659-ல் கத்தோலிக்க சமயத்திற்கெதிரே ஒரு சட்டத்தை உண்டுபண்ணி எல்லா அடிமைகளும் டச்சுப் பாஷையைப் படிக்கவேண்டுமென்றும், தவறினேர்களுடைய தலைமயிர் மொட்டையாக அறுக்கப்படுமென்றும் பயமுறுத்தினர். அவ்விதமான சமயவதைப்பையும் தாங்கிக்கொண்டு போர்த்துக்கீச வம்சத்தினரும், சிங்களக் கத்தோலிக்கரும், தமிழ்க் கத்தோலிக்கரும் தங்களுடைய சமயப்பற்றைவிட்டு நீங்கவில்லை.

கத்தோலிக்க சமயத்தவர்கள் இவ்வகையான இன்னல்களை அனுபவித்துக்கொண்டிருக்கும் நேரத்தில் யோசேப்பு வாஸ் சுவாமியும், வேறும் சில குருமார்களும் கோவையிலிருந்து யாழ்ப்பாணத்தை அடைந்தனர் (1687). ஒருநாள் இரவு (1689) வாஸ் சுவாமி மதப்போதனை செய்துகொண்டிருக்கும்பொழுது அங்குள்ள டச்சுத் தேசாதிபதி சென்று எல்லோரையும் துரத்திவிட்டு எட்டுக் கத்தோலிக்கத் தலைவர்களைக் கைதிசெய்தான். வாஸ் சுவாமி தப்பி ஓடி கண்டி அரசனின் பாதுகாப்பைப் பெற்றுன். கண்டியிலுள்ள கிறித்த தேவாலயத்தைத் தன்னுடைய வாசஸ்தல மாக்கிக்கொண்டு அங்கிருந்து சிலாபம், யாழ்ப்பாணம், நீர்கொழும்பு, கொழும்பு, களுத்துறை, இரத்தினபுரி ஆகிய இடங்களுக்குச் சென்று மதப்போதனை செய்துவந்தான். மற்றச் சமயத்தவர்களுக்கும் சமயச் சகிப்புத்தன்மை காட்டாமல் கிறித்தவர்களாக மாற்றிக்கொள்ள ஒல்லாந்தர் முயற்சிகள் செய்தனர். புரட்டஸ்தாந்து சமயத்தைத் தழுவிக்கொள்ளாதவர்களுக்கு அரசாங்கத்தில் உத்தியோகம் கொடுக்க மறுத்தனர். அதற்காகத் தங்களுடைய சொந்தச் சமயத்தை இரகசியமாக அனுசரித்து வெளிக்குப். போலிக் கிறித்தவர்களாக நடந்துகொண்டவர்களும் அநேகருளர். ஒல்லாந்தர் ஆட்சியிலுள்ள பகுதிகளிலுள்ள மக்களுக்குச் சமயசுதந்திரமளிக்க வேண்டுமென்றும், அவ்விடங்களிலுள்ள கோயில்கள் கட்டுவதற்குத் தடைசெய்யக் கூடாதென்றும் கொம்பனி அதிகாரிகளைக் கேட்கும்படி மகாநாயக்காவைக் கண்டி அரசன் அனுப்பினுன் (1688). புரட்டஸ்தாந்து சமயக்குருமார் மார்க்கத்தைப் பொறுத்தளவில் ஒருவிதமான சலுகைகளையும் கொடுக்கச் சம்மதப்படவில்லை. ஆனுல் டச்சுத் தேசாதிபதி அர

சனோ அல்லது மகாநாயக்காவோ அதிருப்தியடைய விடுவதற்கு விருப்பமில்லாது, தான் ஒல்லாந்த தேசத்து அதிகாரிகளின் விருப்பத்தையறிந்து விடையளிப்பதற்கு நேரம் தரவேண்டுமென்று கேட்டான். பின்பு அவ்வதிகாரிகள் மறுப்புக்காட்டியமையால் அரசனுடைய கோரிக்கைகள் பயனற்றதாய்ப் போயின.

கரையோரங்களிலுள்ள கோட்டைகளைத் தவிர கொம்பனியின் ஆட்சியிலுள்ள எல்லாப் பிரதேசங்களும் திருப்பிக்கொடுக்கவேண்டுமென்று கண்டியரசன் கேட்டான். அதோடு அரசனுடைய கொடியை உயர்த்திய வர்த்தகக் கப்பல்கள் புத்தளத்திலிருந்து செல்வதற்குப் பன்முறை எத்தனித்தன. போர் தொடங்கக்கூடியநிலை ஏற்பட்டது. கரையோர மாகாணங்களைப் போர்த்துக்கீசரிடமிருந்து கைப்பற்றியதனால் தங்களுக்கு உரிமையுண்டென்றும் தாங்கள் அரசனோடு ஒப்பந்தம்செய்து அவ்வுரிமை கிடைத்ததல்லவென்று டச்சு அதிகாரிகள் கூறினர். இவ்விதமான நிலையேற்பட்டபொழுதிலும் அரசனுக்கு வருடந்தோறும் அனுப்பும் வெகுமதிகளை அனுப்புவதிற் தவறவில்லை. கறுவா சேகரிப்பதற்கு அரசனுடைய அனுமதி தேவையாயிருந்தமையால் வெகுமதியைக் கவனமாக அனுப்பிக்கொண்டிருந்தனர். ஆனால் அரசன் உண்மையில் அவர்களோடு சமாதானத்தையே விரும்பினான். பைல் தேசாதிபதி தனது பதவியினின்று நீங்கிச் செல்ல யோசித்தபொழுது அவனைத் தொடர்ந்து வேலைபார்க்கும்படி அரசன் கேட்டான். அதற்கு உடன்பட்டு அத்தேசாதிபதி 1692 வரையும் அப்பதவியிலிருந்தான். அவ்வாண்டிலே வான் ரீ என்பவன் தேசாதிபதியாக நியமிக்கப்பட்டான். இவனும் தனக்கு முன்னிருந்தவனைப்போல் அரசனோடு சிநேகமுறையில் நடந்துகொண்டான். கறுவா உரிப்பதற்கு அரசன் அனுமதி அளித்தான். அளவு கடந்த கறுவா சேகரித்ததினால் வருடந்தோறும் அனுப்புந்தொகையை அனுப்பிவிட்டு எஞ்சிய தொகையை எரித்துவிட்டான். கறுவா உரிப்போர் மேற்பார்வையாளர் கொடுமைசெய்வதாகக் கூறி கண்டி இராச்சியத்திற்குட் புகுந்தனர். அவர்களுக்கு அரிசி, உப்பு, சாராயம் கொடுத்துச் சாந்தப்படுத்தி அரசன் மேலும் அவ்வேலையைச் செய்யுமாறு கட்டளையிட்டான். ஒவ்வொருவரும் சேகரிக்கவேண்டிய தொகையைக் கொண்டுவந்து சேர்த்தால் அவர்களுக்கு வெகுமதி கொடுப்பது வழக்கம். உபகாரங்கள் கொடுக்கும் தினத்தில் பெருங் கொண்டாட்டங்கள் நடைபெறும். அவ்வேலையாட்களுக்கு வேறும் சில சலுகைகள் கிடைத்தன. ஆயிரத்து அறுநூற்று தொண்ணூற்று நான்கிலும் அடுத்த ஆண்டிலும் மழையின்மையால் சனங்

களுக்கு அதிக கஷ்டமேற்பட்டதோடு கொம்பனிக்கு வரிகளினுல் வந்த வருமானமும் கிடையாமற்போனது. ஆனுல் யானை வியாபாரத்தினுல் பெரும் ஆதாயம் கிடைத்தது. காட்டில் பிடிக்கப்பட்ட யானைகள் மாத்தறையில் கயநாயக்காவினிடம் ஒப்படைக்கப்பட்டன. அயற்கிராமங்களிலிருந்து பெற்ற தென்னேலை, வாழை, புல்லு ஆகியவைகள் யானைகளுக்கு உணவாகின. இவ்வுணவுகளைச் சேகரித்த மக்களுக்கு அதனுல், பெரிய கஷ்டம் ஏற்பட்டது. பின்பு ஏற்படுத்தப்பட்ட புதியமுறை சனங்களுக்குச் சந்தோஷத்தை உண்டாக்கியது. அவ்வொழுங்கின்படி அவ்யானைகள் காங்கேசந்துறைக்கு அனுப்பப்பட்டு வடபாகத்தில் பிடிக்கப்பட்ட மற்றும் யானைகளோடு யாழ்ப்பாணத்தில் விற்கப்பட்டன. அதனுல் யானைகளுக்கு உணவாகத் தென்னேலை யாழ்ப்பாணத்து மக்களே கொடுத்தனர். இதனுலும், மழைக்குறைவினுலும் தென்னைகள் அதிகம் பாதிக்கப்பட்டன. தேங்காய் ஏற்றுமதியும் தடைப்பட்டது. கொம்பனிக்கு வேண்டிய தேங்காய் எண்ணெயை மலபாரிலிருந்தே பெற்றுக்கொள்ள வேண்டியிருந்தது.

**1646**-ல் மஸ்கரன்காஸ் என்ற போர்த்துக்கீசத் தேசாதிபதி தயாரித்த தோம்புகள் கவனயீனமான பாவிப்பினுல் பழுதடைந்ததன் காரணமாக **1675**-ல் யாழ்ப்பாணப்பகுதிக்குப் புதிய தோம்புகள் தயாரிக்கப்பட்டது. வரியறவிடத் தகுதியற்ற காணிகள்கூட இப்புதிய தோம்பிற் சேர்க்கப்பட்டன. யாழ்ப்பாணத்திற் கமுகுகள் மிகக்குறைவாகக் காணப்பட்டபொழுதிலும் கொம்பனி அவைகளின் வருமானத்திலே வரிகளை அறவிட்டது. யாழ்ப்பாணத்து மக்கள் குறைந்த விலைக்கு வெட்டிச்சீவிய பனைமரங்களைக் கொம்பனிக்குக் கொடுக்கவேண்டியிருந்தது. பனை நட்டாயிரம், பட்டாயிரம் வருடங்களுக்கு இருக்குமென்ற தமிழ்ப்பழமொழியையறிந்த ஒல்லாந்தர் அம்மரங்களை ஏராளமாகப் பெற்றமையினுல் பெண்பனைகள் அப்பகுதியிற் குறையத் தொடங்கிவிட்டன. அவைகளிலிருந்து பெற்ற உணவுப் பதார்த்தங்களும் குறைந்தமையினுல் மக்களுக்கு அதிக கஷ்டமேற்பட்டது. தமிழ் மக்கள் பயிரிடுந் தொழிலில் அதிகம் சிரத்தை காட்டினர். யாழ்ப்பாணப்பகுதியிற் காணப்படும் நிலம் செழிப்பற்றதாயிருந்தபொழுதிலும் அப்பகுதியிலுள்ள விவசாயிகள் நிலத்தைக் கொத்தி உழுது பண்படுத்தி அதிக பிரயாசத்துடன் பயிரிடவேண்டும். ஆனுல் அக்கஷ்டங்களைப் பொருட்படுத்தாது விவசாயத்தில் அதிக ஊக்கங்காட்டினர். வேளாளரிற் பயிரிடுந்தொழிலிற் காணப்பட்ட திறமை அவர்களுக்குப் பெருமையைக் கொடுத்தது. சூரிய உதயத்துக்கு முன்பாக எழுந்து வேளாளர் வயல்கள், தோட்

டங்களுக்குச் சென்று பயிர்களுக்கு நீர்ப்பாய்ச்சுவார்கள். அவர் களுடைய மனைவி, மக்களும் கிணற்றிலிருந்து பயிரிட்ட பகுதி களுக்கு நீர்ப்பாய்ச்சுவதற்கு உதவிபுரிவார்கள். தமிழ் மக்கள் தாங் கள் சம்பாதிக்கும் செல்வத்தை நிலங்களை வாங்குவதிலேயே செல வழிப்பர். அதனால் நிலங்களின் விலை நாளடைவில் ஏற்றமடைந் தது. பழைய அரசர்கள் வெட்டிவிட்டிருந்த குளங்கள் எங்கும் காணப்பட்டமையினாலும், போக்குவரவுக்கேற்ற வீதிகள், ஒழுங்கை கள் காணப்பட்டமையினாலும் மக்கள் நிலங்களை வாங்கிச் சொந்த மாக வைத்திருக்க விரும்பினர். யாழ்ப்பாணத்தில் மழைவளங் குன்றியமையினால் நெல்விளைவு குறைந்தது. அதனாலேற்பட்ட உண வுக்கஷ்டம் காரணமாக 35000 அடிமைகள் வரையில் இந்தியாவி லிருந்து விவசாயஞ் செய்வதற்காகக் கொண்டுவரப்பட்டனர். கஷ்ட மதிகரித்ததினால் 1696-ல் கலகங்களேற்பட்டன.

வான் ரீ என்ற தேசாதிபதியினுடைய காலத்தில் (1692-1697) முத்துக்குளிப்பினால் கொம்பனி பெரும் ஆதாயத்தைப் பெற்றது. அதனால் கண்டி அரசனாகிய இரண்டாம் விமலதர்மசூரியனோடு சமா தான முறையிலே தொடர்ந்து நடந்துகொள்ள தேசாதிபதி விருப்ப முடையவனாகவிருந்தான். சமாதானத்தைப் பாதுகாத்துக்கொள்ளும் நோக்கத்தோடு திருகோணமலை, மட்டக்களப்பு, கற்பிட்டி, கொட்டி யாரம் ஆகிய துறைமுகங்களை அரசனும் பாவித்துக்கொள்ள அனுமதி அளிக்கப்பட்டது. அரசன் தஞ்சாவூரிலிருந்து மனைவியைக் கொண்டு வருவதற்கு அரசனுக்குக் கப்பலொன்றைக் கொடுத்துதவினர் (1697). அதுவுமல்லாமல் அரக்கனிலிருந்து புத்தகுருமாரை இலங் கைக்குக் கொண்டுவருவதற்கும் கப்பலொன்றைக் கொடுத்து உதவி செய்தனர். இரண்டாம் இராசசிங்கன் இறந்ததன்பின் புத்தசங்கம் சிறந்தமுறையில் நடக்கவில்லை. பக்திநிறைந்த 5 புத்தகுருமார்களைத் தன்னும் காண்பதரிது. ஆகையால் அரசன் புத்த தந்ததாதுவைச் சேமித்து வைப்பதற்கு முன்றடுக்கு மாளிகை ஒன்றைக் கட்டுவித் தான். பின்பு பர்மாவுக்கு இரு தூதுகோஷ்டிகளை அனுப்பி உயர் வகுப்பைச் சேர்ந்த இரு குருமார்களையும் 34 சாதாரண குருமார் களையும் வரவழைத்தான். இக் காரணங்களால் அரசன் இறக்குமள வும் கொம்பனியின் அதிகாரிகளுக்கும் அரசனுக்குமிடையில் சிநேக மனப்பான்மை காணப்பட்டது. அரசன் போரை வெறுத்து சமா தானம் நிலவச் செய்தமையினால் அதன் பயனாக 150 வருடகாலத் திற்குமில்லாத அமைதியை புத்தசங்கம் பெற்றது. இரு அதிகார் களும், ஐந்து திசாவைகளும் நிர்வாகப்பொறுப்பை ஏற்று நடத்

தினர். வருமானப்பகுதிக்குப் பொறுப்பாக ஏழு "மோகோத்தியாரிகள்" நியமிக்கப்பட்டிருந்தனர். ஒவ்வொருவரும் 900 லஸ்கரீன்களைக்கொண்டுள்ள படையை வைத்திருந்தனர். ஆனால் இவ்வரசனுடைய காலத்தில் படைகளின் சேவை தேவைப்படவில்லை. அரசனுடைய காவற்காரர் ஈட்டிகளைத் தாங்கியிருந்தனர். ஆயிரம் போர் வீரர்களுக்கு மாத்திரம் துப்பாக்கி உபயோகிக்கத் தெரியும். கோயிற் திருவிழாக்களின் உபயோகத்திற்காக அரசனிடமுள்ள 300 யானைகளும் பல கோயில்களிலும் விடப்பட்டிருந்தன.

வான் ரீ என்ற டச்சுத் தேசாதிபதி அதிக அமைதியுடன் ஆட்சிபுரிந்த ஐந்து வருடகாலமும் முடிவடைய டி கீர் என்பவன் தேசாதிபதியாக நியமிக்கப்பட்டான் (1697). கொம்பனியின் கௌரவத்திற்குக் குறைவு ஏற்படாவண்ணம் அரசனோடு நடந்துகொள்ள வேண்டுமென ஒல்லாந்த அதிகாரிகள் தேசாதிபதிக்குக் கற்பித்தனர். "அரசனுடைய கோட்டைகள்" "அரசனுடைய ஊழியர்" என்று பைல் தேசாதிபதி கூறியவிதம் கூறக்கூடாதென புதிய தேசாதிபதிக்கு ஆஞ்ஞையிட்டனர். அவ்வண்ணம் நடந்துகொள்வதால் கொம்பனியினுடைய நலம் பாதிக்கப்படக்கூடுமென எண்ணினர். அரசனைப் புகழ்ந்துரைத்து உபகாரங்களைக் கொடுத்துத் திருப்தி பண்ணிக்கொள்ளலாமென புத்திகூறினர். துறைமுகங்கள் அரசனுடைய பாவிப்புக்குத் திறந்துவிடப்பட்டபின் கொம்பனியின் வர்த்தகத்திற் குறைவு ஏற்பட்டது. அரசன் தன்னுடைய பிரசைகளை வர்த்தகஞ் செய்வதற்குப் புத்தளத்திற்குப் போகவேண்டுமெனக் கட்டளையிட்டு, அக்கட்டளைகளை மீறுவண்ணம் தனது நாட்டுக்கும் கொம்பனியின் ஆட்சிப் பகுதிக்குமிடையிலுள்ள முள்ளுப்படலைகளுக்குக் காவல் வைத்தான். அதனால் கொழும்பில் உணவுக்கஷ்டமேற்பட்டது. டி கீர் இறந்தமையினால் யோன்ஸ் சைமன்ஸ் (1703-1707) தேசாதிபதியாக நியமிக்கப்பட்டான். அரசன் முள்ளுப்படலைகளைத் திறந்துவிட்டமையினால் கொழும்பிலிருந்த உணவுக்கஷ்டம் நீங்கியது.

ஐம்பது வருட ஆட்சியின் பின்னும் நீதிபரிபாலனம் பிரதானமாக இலங்கையின் வடபாகத்தில் நடத்தப்படவில்லையென்பதை கொம்பனி அதிகாரிகள் உணர்ந்தனர். அங்குள்ள மக்கள் வழக்குகள் நடத்துவதில் அதிகமீடுபட்டிருந்தனர். நீதிவான்களும் சட்டவாதிகளும் அப்பகுதியிலுள்ள வழக்கமுறைகளை நன்கறிந்திருக்கவில்லை. சட்டநூல்களும் சட்டவாதிகளுக்குக் கொடுக்கப்படவில்லை. இக்காரணங்கள்பற்றியே நெதலான்ட்ஸ் சர்வகலாசாலையில் சட்ட

நூல் பயின்றவரும், பட்டேவியிலுள்ள உயர்நீதித்தலத்தின் உப தலைவனுமாயிருந்த **யோன்ஸ் சைமன்ஸ்** இங்கு தேசாதிபதியாக அனுப்பப்பட்டான். நெதலாந்திலும், பட்டேவியாவிலுமுள்ள சட்டங்களைக் கொண்டுள்ள இடாப்புத் தயாரிக்கப்பட்டு அவைகள் வருடமொருமுறை பிரசித்தமாக வாசிக்கப்பட்டன. இதைவிட யாழ்ப்பாணத்திற் கவனிக்கப்பட்ட 76 சட்டங்கள் தொகுக்கப்பட்டு அவைகள் அனுசரணைக்குக் கொண்டுவரப்பட்டன **(1704).** யாழ்ப்பாணத்திற்குத் திசாவையாயிருந்த கிளாஸ் ஐசாக்ஸ் என்பவனை நாட்டின் வழக்கமுறைகளைத் திரட்டி ஒரு நூலாக்கும்படி தேசாதிபதி கட்டளையிட்டான். இந்நூல் 12 தமிழ் முதலியார்மார்களால் ஆராயப்பட்ட பின் "தேசவழமை" என்ற சட்ட நூலாக அங்கீகரிக்கப்பட்டன **(1707).** அச்சட்டங்கள்மூலம் நிலங்களின் உரிமை, ஈடு, ஒற்றி ஆகியவை சம்பந்தப்பட்ட வழக்குகள் இப்பொழுதும் ஆராயப்படுகின்றன. சைமன்ஸ் தேசாதிபதி செய்துமுடித்த இரு வேலைகள் இன்றைக்கும் அவனை நினைவூட்டுகின்றன. ஒன்று தேசவழமையாகும். மற்றது குஷ்டரோக நோயாளிகளுக்கெனக் கட்டிய வைத்தியசாலையாகும். கெந்தலையின் அவ்வைத்தியசாலை கட்டிமுடித்த பின் குஷ்டரோகிகள் எல்லோரும் அங்கு செல்லவேண்டுமென்றும் அந்நோயாளிகள் எவராகுதல் கொழும்பு நகரத்திற்குட் பிரவேசிக்கக்கூடாதென்றும் கட்டளையிட்டான். "தேசவழமை" பழையகாலந் தொட்டு வழங்கிவந்த தமிழரின் சட்டங்கள் கொண்டுள்ளதொன்றுகையால் அது நீதிவழங்குவதற்கு மிகவும் பிரதானமான நூலாக இருந்துவருகிறது.

1706-ம் ஆண்டு ஆனிமாதத்தில் விமலதர்மசூரியன் இறந்தான். அவன் ஆண்ட 20 வருடகாலத்திலும் நாடு அமைதியைப் பெற்றது. சமய பக்தியும், நன்மையை விரும்பும் இயல்பும், தயாள குணமும் ஒருங்கே அமைந்த அரசனுவான். மற்றச் சமயத்தவர்களுக்கு சகிப்புத்தன்மை காட்டியுள்ளான். நாட்டைப் பரிபாலனஞ் செய்யும் விஷயத்தில் பிரபுக்களோடும் புத்த குருமார்களோடும் ஆலோசனை செய்து வந்தான். டச்சுக் கொம்பனியோடு சிநேக முறையில் நடந்துகொண்டமையினுல் மக்கள் சந்தோஷமாக வாழத் தக்கதாயிருந்தது. அவனுடைய காலத்தில் பிரபுக்களும் அதிகாரிகளும் அதிக செல்வாக்கைப் பெற்றனர். புத்தசமயமும் வளர்ச்சி அடைந்தது.

## வினாக்கள்

1. 1688ன் பின் செய்துகொண்ட உடன்படிக்கையின் அம்சங்களை ஆராய்க.

2. ஒல்லாந்தர் தங்களுடைய சமயத்தை முன்னேற்றுவதற்கு எவ்வாறு முயன்றனர் ?

3. இரண்டாம் விமலதர்மசூரியனுக்கும் ஒல்லாந்தருக்குமிடையில் ஒற்றுமை ஏற்படாததற்குக் காரணம் என்ன ?

4. அக்காலத்தில் யாழ்ப்பாணத்திலுள்ள பொருளாதார நிலையை ஆராய்க.

5. ஒல்லாந்தரின் பரிபாலனத்தைப்பற்றி விபரிக்குக.

# 4. ஸ்ரீ வீரநரேந்திரசிங்கனும் ஒல்லாந்தரும் (1706-1739)

விமலதர்மசூரியன் இறக்க, அவனுடைய மகன் வீரநரேந்திர சிங்கன் அரசனானன் (1706). அப்பொழுது அவன் பதினேழு வயதுள்ள இளைஞனாகவிருந்தான். அவனை நீக்கி இன்னொருவனைச் சிங்காசனமேற்றுவதற்கு முயன்று நின்ற தலைவர்கள் கைதிசெய்யப்பட்டனர். இரண்டாம் விமலதர்மசூரியன் இறந்ததினாலேற்பட்ட வசதியும், புதிய அரசனுக்கெதிரே காணப்பட்ட பகைமையும், அவனுடைய அனுபவக்குறைவும் ஒல்லாந்தருக்கு நல்ல சந்தர்ப்பத்தை அளித்தது. இவன் அரசனாய் வந்த காலத்திலிருந்த டச்சுத்தேசாதிபதியாகிய **கோர்னேலியஸ் யோன்ஸ் சைமன் (1703 - 1707)**, துறைமுகங்களை கண்டி அரசனுடைய வர்த்தகத்திற்காகத் திறந்துவிட்டமையால் கொம்பனியின் வர்த்தகம் பாதிக்கப்பட்டிருந்ததைக் கண்டான். ஆகையால் அவன் அத்துறைமுகங்களை மூடிவிட்டான் (1707). அவ்விதம் மூடப்பட்டமையால் கண்டி அரசனுடைய பிரசைகள் தங்களுடைய நாட்டிலுள்ள வர்த்தகப் பொருள்களை ஒல்லாந்தருடைய வர்த்தக சங்கத்திற்கு விற்றதோடு சீலை, உப்பு முதலிய பொருள்களை கொம்பனியாரிடமிருந்து வாங்கவேண்டியுமிருந்தது. தொடக்கத்தில் முஸ்லிம் வியாபாரிகளிடம் வாங்கிய விலைக்கே கொம்பனியிடமுமிருந்து அப்பொருள்களை வாங்கினமையால் அரசனுடைய பிரசைகளை அதிகம் தாக்கவில்லை. ஆனல் டச்சுத் தேசாதிபதி கடுமையான சட்டங்களையுண்டாக்கி அவர்கள் பெற்ற ஆதாயத்தை இழக்கச்செய்தமையால் இரு பகுதியாருக்குமிடையில் மனஸ்தாபம் ஏற்பட்டது.

புதிதாக நியமிக்கப்பட்ட தேசாதிபதியாகிய ஹெண்டிக் **பெக்கர் (1707-1716)** என்பவனும் துறைமுகங்களை மூடியபடியேயிருக்க விட்டான். தாழ்பூமியிலுள்ள பிரதானிகளின் தூண்டுதலினல், கண்டியரசன் அத்துறைமுகங்களைத் திறந்துவிடும்படி கேட்டான் **(1712)**. பட்டேவியாவிலுள்ள மேலதிகாரிகளின் கட்டளையின்படி துறைமுகங்கள் மூடப்பட்டமையினல், அவைகளை மீண்டும் திறந்துவிடுவதற்குத் தனக்கு அதிகாரமில்லையென டச்சுத் தேசாதிபதி கூறினன். ஒல்லாந்தருடைய ஆட்சியின் கீழுள்ள பிரதேசங்களிலிருந்து கண்டிக்குச் செல்லும் பாதைகளிலுள்ள முள்ளுப்படலைகள் (கடவைகள்) யாவும் மூடப்பட்டன. அதனுல் கொம்பனியோடு நடந்துவந்த வியாபாரம் தடைப்பட்டது. "உள்நாட்டுப் பொருள்கள் மரங்களிலிருந்து

அழுகட்டும். ஆனால் ஒல்லாந்தர் அவைகளைப் பெறமுடியாது," என்று அரசன் கோபத்தோடு சொன்னான். இவ்விதமான பகைமை யேற்பட்டபொழுதிலும் இருவகையாருடைய தூதுகளும் அனுப்பப் பட்டன. ஒல்லாந்தர் துறைமுகங்களைத் திறந்துவிட்டால் அரசன் முள்ளுப்படலைகளைத் திறந்துவிடுவதற்குச் சம்மதப்பட்டான். ஆனால் கொம்பனி துறைமுகங்களைத் திறந்துவிட விரும்பவில்லை. ஆனால் கண்டியிலுள்ள அதிகாரிகள் அரசனுக்குரிய நிலங்களுக்கூடாக காகிதப் போக்குவரத்துக்கள் செய்யாவண்ணம் கொம்பனியைத் தடுத்தனர். கொம்பனிக்கு நெல் விற்பனைசெய்யவும் மறுத்தனர். அவர்கள் இந்திய வர்த்தகர்களை சீலை கொண்டுவந்து கற்பிட்டிக்கு வடக்கேயுள்ள இடங்களில் இறக்குமதி செய்யும்படி தூண்டிய பொழுது, அப்பகுதியின் கரையோரங்களைக் கொம்பனி காவல் செய்தது. அரசனுக்குரிய உரிமையை நிலைநாட்டுவதற்காக அதிகாரிகள் அக்கரையில் முத்துக்குளிப்பை ஆரம்பித்தனர். அவ்விதமான நடவடிக்கைகள் ஒன்றினாலும் துறைமுகங்களைத் திறப்பதற்குக் கொம்பனி யோசியாமையால் அரசனும் அதிகாரிகளும் கூடிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள முயன்றனர். கொம்பனியோடு வர்த்தகம் நடத்தக்கூடாதென்று பிரசைகளுக்குக் கட்டளையிடப்பட்டது. கொம்பனிக்கு எதிராகப் பலவிடங்களிலும் கலகமேற்பட்டபொழுது கறுவா உரிப்போர் வேலைசெய்ய மறுத்துக் கண்டி இராச்சியத்திற்கு ஓடினர். அரசன் சொன்னாலல்லாது கொம்பனிக்குக் கீழ்ப் படிந்துகொள்ள முடியாதென்று மாத்தறை, காலி, மூன்றுகோறளையிலுள்ள மக்கள் கூறினர். கறுவா வியாபாரத்திற்கு நட்டமேற்பட்டதென நினைந்து அரசனைத் தலையிடும்படி தாழ்மையுடன் கொம்பனி கேட்டுக்கொண்டபொழுது அரசன் அதற்குச் சம்மதிக்கவில்லை. டச்சுத் தேசாதிபதி பல சலுகைகளைக் கொடுத்தமையினால் சிலர் மீண்டும் வேலைசெய்ய ஆரம்பித்தனர். ஆனால் பெரும்பாலோர் மேலும் கலகத்தை விளைவித்து, முழு நிலங்களும் அரசனுக்கேயுரியனவென்றும் தாங்கள் கொம்பனிக்குக் கடமைபுரிய வேண்டியதில்லையென்றுங் கூறினர். கொம்பனி அதிகாரிகள் அனுப்பிய போர்ப் படையும் பின்வாங்க நேரிட்டமையினால் கலகக்காரர் கொழும்பை நோக்கிச் சென்று பல அழிவுகளை உண்டாக்கினர். இந்நிலையைச் சீர்ப்படுத்துவதற்காக வர்த்தக சங்கத்தார் தங்களுடைய முறைகளைத் திருத்தி அமைக்கவேண்டியதாயிற்று.

ஹென்டிக் பெக்கர் கொம்பனியின் நிர்வாகத்தைத் திருத்தி அமைத்து அதனுடைய வருவாயைக் கூட்டுவதற்காக முயற்சி செய்

தான். கொம்பனியின் உத்தியோகத்தர்கள் அதனுடைய நலத்தைக் கருதாது சொந்த வியாபாரஞ் செய்யத் தொடங்கியமையினுல் வர்த்தகத்தினுல் பெற்ற ஆதாயம் குறையத்தொடங்கியது. அவர்கள் பாக்கு விய்யாபாரத்தை இரகசியமாக நடத்தினர். முதற்தரமான பாக்குகளைச் சனங்களிடமிருந்து மலிந்தவிலைக்கு வாங்கி துறைமுகங்களுக்கு வந்த கப்பல்களிலேற்றி விட்டமையால் கொம்பனி சேகரித்தவைகள் பண்டகசாலைகளிலிருந்து பழுதடைந்தன. அதுபோல சீலை வியாபாரத்தையும் களவாக நடத்திவந்தனர். கொழும்புத் திசாவானியின் நிர்வாகமும் சீர்குலைந்த நிலையிலிருந்தது. மாத்தறைப் பகுதியில் விளைவிக்கப்பட்ட நெல்லையும் வர்த்தக சங்கம் பெற்றுக் கொள்ள முடியவில்லை. அப்பகுதியிலுள்ள நல்ல நிலங்கள் உத்தியோகத்தர் சிலரின் நலத்திற்காக விளைவிக்கப்பட்டன. முதலியார்மார்களும் அப்பகுதியின் சில நிலங்களைத் தங்களுடைய சொந்தமாக்கி விட்டனர். விவசாயப்பகுதிக்கும், யானை விற்பனைப்பகுதிக்கும் தலைவராயிருந்த விஜயவர்த்தன முதலியார் என்பவருடைய விஷயங்களில் கொம்பனியின் சேவையிலிருந்த ஒல்லாந்தன் ஒருவன் தலையிட்டமையினுல் அவர் தன்னுடைய வேலையை செவ்வனே நடத்த முடியவில்லை. ஹென்டிக் பெக்கர் அவ் ஒல்லாந்தனை நீக்கிவிட்டான். விஜயவர்த்தன முதலியார் நெற்செய்கையை ஒழுங்காக நடத்தியமையால் சங்கம் பழையபடி ஆதாயத்தைப் பெற்றது. கறுவாவும் ஒழுங்காகச் சேகரிப்பதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

இலங்கையில் வடபகுதியில் சனத்தொகை கூடினமையால் எல்லாப் பக்கங்களிலும் காடுகளை வெட்டி மக்கள் குடியேறினர். அப்பகுதியிலுள்ள சனங்களிடம் வரியறவிடுவதற்காக புதிய தோம்பு ஒன்று தயாரிக்கப்பட்டது. உறுதியில்லாத நிலங்களும் அப்பகுதியில் விற்கப்பட்டன. நெடுந்தீவில் வளர்க்கப்பட்ட குதிரைகளின் விற்பனையால் கொம்பனிக்கு அதிக ஆதாயங்கிடைத்தது. சாயந் தோய்த்த சேலைகள் பட்டேவியாவுக்கும் ஐரோப்பாவுக்கும் அனுப்பப்பட்டன. வியாபாரத்தின்பொருட்டுப் பிடிக்கப்பட்ட யானைகள் யாழ்ப்பாணத்திற்குக் கொண்டுசெல்லப்பட்டு அங்குள்ள இந்திய வர்த்தகர்களுக்கு விற்கப்பட்டன. தேசாதிபதி வருவாயைக் கூட்டிச் செலவைக் குறைத்தமையினுல் அவனுடைய காலத்தில் கொம்பனியின் ஆதாயம் அதிகரித்தது.

பெக்கரின் பின் **ஐசக் அகஸ்தீன் றம்பு** என்பவன் தேசாதிபதியாக நியமிக்கப்பட்டான். வர்த்தகக் கட்டுப்பாட்டினுல் அதிருப்தியடைந்த அரசன் எல்லைப்புறங்களிலுள்ள முள்ளுப்படலைகளை முடிவிட்டானென அறிந்த புதிய தேசாதிபதி அரசனேடு சமாதான

முறையில் நடந்து அவனைச் சாந்தப்படுத்திக்கொள்ள முயற்சித்தான். தற்காலிகமாக வரிகளை நீக்கி மக்களின் ஆதரவைப் பெற்றுக்கொள்ள எத்தனித்தான். அவ்விதமான சிநேகமுறைகளைக் கையாண்டமையினால் கறுவாப்பட்டை யுரிப்போர் வேலைசெய்ய ஆரம்பித்தனர். அரசனும் தன்னுடைய நிலங்களில் கறுவாச்சேகரிப்பதற்கு அனுமதியளித்தான். விலையுயர்ந்த வெகுமதிகளுடன் அரசனுக்குத் தூது அனுப்பப்பட்டது. புத்தளத் துறைமுகத்தைத் திறந்துவிடும்படி அரசன் கேட்டபொழுது பட்டேவியாவிலுள்ள அதிகாரிகளின் அனுமதியில்லாது திறந்துவிட முடியாதெனத் தேசாதிபதி கூறினான். அதனால் எல்லைப்புறங்களிலுள்ள முள்ளுப்படலைகளையும் திறந்துவிட அரசன் சம்மதிக்கவில்லை. நரேந்திரசிங்கனுடைய காலத்தில் ஒன்ருகுதல் திறக்கப்படவில்லை. இத்தேசாதிபதியினுடைய காலத்தில் கொம்பனியினுடைய ஆதாயம் மிகவும் அதிகரித்தமையால், 1640-ல் காலியைக் கைப்பற்றிய காலந்தொட்டு கொம்பனி பெற்றுவந்த ஆதாயத்திலும் பார்க்கப் பெருந் தொகையான ஆதாயம் அப்பொழுதுதான் கிடைத்ததென அவன் கூறினான் (1721). அடுத்த நான்கு வருடங்களாக நடத்திய முத்துக்குளிப்பினாலும் பெரும் ஆதாயங்கிடைத்தது. கறுவாத்தொழிலிலிடுபட்டோர் 1723-ல் கலகமுண்டாக்கியபொழுது அவன் அதை அடக்கித் தலைவர்களைத் தண்டித்தான்.

அக்காலத்தில் இருந்த சமய நிலையைப்பற்றி இனி ஆராய்வோம். ஒல்லாந்தர் தங்களுடைய சமயத்தைப் பரப்பும் நோக்கத்தோடு கத்தோலிக்க சமயத்தவர்களுக்குச் சமய சுதந்திரமளிக்கவில்லை. ஆனால் **யோசேப்பு வாஸ்** சுவாமியும் மற்றும் குருமார்களும் கண்டியரசனுடைய ஆதரவிலிருந்து தங்களுடைய மார்க்கத்திற்குச் சேவைபுரிந்து வந்தனர். நரேந்திரசிங்கன் தன்னுடைய தந்தையைப்போல் அவர்களுக்கு ஆதரவளித்தான். கண்டியிலிருந்து கத்தோலிக்க குருமார் ஒல்லாந்தருடைய ஆட்சியின்கீழுள்ள பிரதேசங்களுக்குச் சென்று சமயத்தொண்டு செய்துவருங்காலத்தில் ஒல்லாந்தர் அவர்களைக் கைதிசெய்ய எத்தனித்ததால் அவர்கள் கண்டிக்கு ஓடித் தப்பினர். ஒல்லாந்தர் தங்களுடைய புரட்டஸ்தாந்து ஆலயத்திற்கு எல்லோரும் போகவேண்டுமென்றும் கத்தோலிக்கப் பிள்ளைகள் தங்களுடைய சமயத்தைப் படிக்கவேண்டுமென்றும் வற்புறுத்தியபொழுது கத்தோலிக்க சமயத்தவர்கள் தங்களுடைய உரிமைக்காக வாதாடத் தொடங்கினர். தங்களுடைய சமயக்கொள்கைகளின்படி தாங்கள் நடந்துகொள்ளவும், தங்களுடைய சமயக்குரு

மார்கள் சமயசேவை செய்யவும் அனுமதியளிக்க வேண்டுமென் றும் மனுவொன்றைத் தயாரித்து ஒல்லாந்த அதிகாரிகளுக்குக் கத்தோலிக்கத் தலைவர்கள் அனுப்பினர். அம்மனுவில் கைச்சாத்திட்ட ஐந்துபேர்களுக்கு அபராதம் விதித்தான். டச்சுக்காரரின் ஆட்சியிலிருந்த நகரங்களிலிருந்து அனுப்பப்பட்ட அதேபோன்ற மனுக்களும் அலட்சியஞ்செய்யப்பட்டன. கத்தோலிக்க சமயத்தினர் பகிரங்க கூட்டங்கள் நடத்த முடியாதென்றும் கத்தோலிக்க குருமார் சிறு பிள்ளைகளுக்கு ஞானஸ்நானம் கொடுக்கக்கூடாதென்றும், கத்தோலிக்க குருமார் தங்குவதற்கு வசதியளிக்கக்கூடாதென்றும், டச்சுத் தேசாதிபதி பிரகடனஞ்செய்தான். மக்களிடத்தே பயங்கரமுண்டாக்குவதற்கே அவ்விதமான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன.

கத்தோலிக்க கொள்கைகளையும் வழிபாட்டையும்பற்றி விபரித்துக்கூறும் பல நூல்களைச் சிங்களப்பாஷையில் எழுதி வாஸ் சுவாமியும் அவருடன் சேர்ந்த இன்னொரு சுவாமியும் வெளியிட்டனர். இன்றைக்கும் அவைகள் சிறந்த நூல்களாகக் கருதப்படுகின்றன. 1711-ல் வாஸ் சுவாமி இறக்க, கத்தோலிக்க பிரசாரகர்கள் கண்டியிலிருந்து விலகிப் புத்தளத்தில் காரியாலயம் ஒன்றை வகுத்துச் சமயச்சேவை புரிந்துவந்தனர்.

ஒல்லாந்தரும் தங்களுடைய சமயத்தைப் பரப்புவதற்காக வேண்டிய முயற்சிகளைச் செய்துவந்தனர். 1739-ல் கொழும்பில் ஒரு அச்சியந்திரசாலையை நிறுவி, விவிலிய நூல் சிங்களத்தில் மொழிபெயர்க்கப்பட்டது. போத்துக்கீசப் பாஷையிலும், சிங்களமொழியிலும், தமிழ்மொழியிலும் பல புத்தகங்கள் அச்சிட்டு வெளியிடப்பட்டன. புதியேற்பாடும் சிங்கள, தமிழ் மொழிகளில் எழுதி வெளியிடப்பட்டன. 1708-ம் ஆண்டு ஒரு சிங்கள இலக்கணமும் ஒல்லாந்தரால் எழுதப்பட்டது. அவர்களுடைய சமயக்குருமார்களுக்கு சுதேச மொழிகள் தெரியாமையால், அவர்களுக்கு யாழ்ப்பாணம், கொழும்பு ஆகிய இரு இடங்களிலும் தாபிக்கப்பட்ட பாடசாலைகளிற் பயின்ற சுதேசிகள் மதப் பிரசாரஞ் செய்வதற்கு உதவிபுரிந்தனர். விக்கிரக ஆராதனைக் கொண்டாட்டங்களிற் பங்குபெறும் புரட்டஸ்தாந்து சமயத்தவர்களுக்கு பகிரங்கமாக சவுக்கடி கொடுக்கப்படுமென்றும் பின்பு ஒரு வருடத்திற்குத் துலங்கிலிடப்படுவார்களென்றும் விளம்பரப்படுத்தினர்.

போர்த்துக்கீசருடைய காலத்திலுள்ள தோம்புகளை ஒல்லாந்தர் பாதுகாத்துவைக்கத் தவறினமையால் புதிய தோம்பு ஒன்றை அவர்கள் தயாரிக்கவேண்டியதாயிற்று. ஆகையால் நிலங்களைப்பற்றிய

விபரங்கள்கொண்டுள்ள தோம்புகளையும், "இராசகாரியா" சேவை புரியும் மக்களின் பெயரைக்கொண்டுள்ள தோம்புகளையும் ஒல்லாந்தர் தயாரித்தனர். முதலாவதுவகைத்தோம்பில் மேட்டுநிலங்கள், பள்ளநிலங்கள், கட்டடங்கள், மரங்கள் ஆகியவைவையைப்பற்றியும் அவைகளிலிருந்து அறவிடப்படும் வரியைப்பற்றியும், இரண்டாவது வகைத் தோம்பில் இராசகாரிய சேவை செய்யவேண்டியவர்களுடைய பெயர்களும் அவர்களுடைய வயதும், தொழிலும் கொடுக்கவேண்டிய வரிகளும் விபரிக்கப்பட்டிருந்தன. காலத்துக்குக்காலம் அவ்வகைத் தோம்புகள் திருத்தங்களோடு வெளியிடப்பட்டன. ஞானஸ்நானம் பெற்றவர்கள் ஒவ்வொரு கிராமத்திலுமுள்ள பாடசாலைச் சபை அதிகாரிகளால் விவாகப்பதிவு செய்யப்பட்டவர்களும் அவர்களுடைய முழுப்பெயர்களும், பிறந்த திகதிகளும், வம்சாவழியும் கொண்டுள்ள தோம்புகளும் தயாரிக்கப்பட்டன. கொழும்பிலுள்ள பழைய சாதன பாதுகாப்பிடத்தில் அத்தோம்புகளை இன்றும் காணலாம்.

**பெக்கராலும், றம்புவா**லும் நடத்தப்பட்ட நல்லாட்சிமுறை **பிற்றர் வைஸ்ற் (1726-1729)** என்ற தேசாதிபதியின் காலத்திலே நிலைகுலைந்தது. இத்தேசாதிபதி தனது அதிகாரத்தைத் துர்ப் பிரயோகஞ் செய்து சங்கத்தைக் கஷ்டநிலைக்குள்ளாக்கினான். கொடூர செயல்களைப் புரிந்தும், மக்களை வதைத்தும், விளக்கமில்லாது கொன்றும் பல துன்பங்களை நாட்டில் விளைவித்ததன் காரணமாக அவன் பட்டேவியா அதிகாரிகளால் விலங்கு பூட்டியபடி பட்டேவியாவுக்கு அனுப்பப்பட்டான். இவனுடைய கொடூரச் செயல்கள் சில குறிப்பிடத்தக்கன. இரவில் அதிகம் களவு நடைபெற்றமையால் போர்வீரர்களே அதைச் செய்தார்களென முறைப்பாடுகளைக் கேட்ட தேசாதிபதி அதைத் தடுப்பதற்காக ஒவ்வொரு இரவும் இரண்டு மணித்தியாலத்திற்கொருமுறை இடாப்புக் கூப்பிடுவதற்கு ஒழுங்குசெய்தான். போர்வீரர்கள் அதனுல் தங்களுக்கு நித்திரைக் குழப்பமேற்படுகிறதென்று விளங்கப்படுத்தியும் ஆறுதல் கிடையாமையால் அவர்களிற் சிலர் கீழ்ப்படியாது நடக்க ஆரம்பித்தனர். கடுந் தண்டனை அவர்களுக்கு விதிக்கப்பட்டதோடு பத்துப்பேர்களுக்கு ஒருவன் சவுக்கடியையும் பெற்றுன். பின்பு சதிசெய்கிறுர்கள் என்ற பயத்தினுல் "**மாஷல்லோ**" என்ற இராணுவச் சட்டத்தையுண்டாக்கி விளக்கம் நடத்துவதற்காக ஒரு இராணுவக் கோட்டையும் நியமித்தான். தேசாதிபதியே அக்கோட்டுத் தலைவனுக அமர்ந்தான். நீதிஸ்தலத்தின் கடமைகளும் தற்காலிகமாக நிறுத்தப்பட்டன. சாட்சிகளிடம் உண்மை கேட்கும் நோக்கத்துடன் பிரம்பினுல் அடிகள்

கொடுத்து அவர்களைத் துன்புறுத்தினர். எரியும் நெருப்புக்குச்சு கள் விரல்களுக்கிடையே கட்டிவிடப்பட்டன. நகங்கள் பிடுங்கப் பட்டன. உருகிய மெழுகு புண்களில் ஊற்றப்பட்டன. இவ்வித மாக இரக்கமற்ற செயல்கள் காணப்பட்டன. சந்தேகப்பட்ட 19 பேர்கள்வரையில் மரணதண்டனை பெற்றனர். தலைவர்களுக்கு மிரு கத்தன்மையான தண்டனைகள் விதிக்கப்பட்டன. ஒரு தலைவனுடைய இரத்தாசயம் முதலில் வெட்டி எடுக்கப்பட்டு, அது அவனுடைய முகத்திலே எறியப்பட்டு பின்பு அவனுடைய தலை கோடரியால் துணிக்கப்பட்டது. பின்பு அவனுடைய உடல் நான்கு துண்டுகளாக வெட்டப்பட்டது. தண்டனை பெற்றவர்களுடைய வீடுகளும் தரை மட்டமாக்கப்பட்டது. இக்கொடிய செய்கைகளினால் பட்டேவியா வுக்கு அனுப்பப்பட்ட அவன் விசாரணையின்பின் மரணதண்டனை பெற்றான். அவனுக்குப்பின் அனுப்பப்பட்ட ஸ்ரீபின் வேர்சுலிஸ் என்ற தேசாதிபதியும் நிலைமையைச் சீர்படுத்தாமையால் அவன் அப்பதவியினின்று நீக்கப்பட்டான். பின்பு கிறிஸ்தியன்பிலாத்து (1732-1734) என்பவன் நல்ல ஆட்சியைத் தாபிப்பதற்காக அனுப் பப்பட்டான்.

நாட்டின் நிலை சீர்கெட்டதற்குக் காரணம் தவறான ஆட்சிமுறை யென்றும், கொம்பனியின் வருமானம் குறைந்ததற்குக் காரணம் டச்சு உத்தியோகத்தர்களின் களவே என்றும் புதிய தேசாதிபதி தேர்ந்தான். வர்த்தகத்தை விருத்திசெய்வதே ஒரு வர்த்தகசங்க உத்தியோகத்தரின் நோக்கமாக இருக்கவேண்டும். அதற்குப் பதி லாக அவர்கள் சொந்த வியாபாரஞ் செய்து ஆதாயத்தைப் பெற்ற னர். இவ்விதமான சீர்கேடுகளைத் திருத்தியமைக்க பிலாத்து முயன் றான். தவறாக நடந்துகொண்ட உத்தியோகத்தர்களை பதவியினின்று நீக்கிவிட்டதோடு நிர்வாகத்தைச் செவ்வனே நடத்துவதற்கு வேண் டிய சட்டங்களையும் உண்டாக்கினான். இவ்விதமான நடவடிக்கை களை எடுத்து கொம்பனியின் வருமானத்தை அதிகரிக்கச் செய்தான். நாட்டிலுள்ள பொருள்கள் எல்லாவற்றிலுமிருந்து யாதோவொரு வரு மானத்தைக் கொம்பனி ஈட்டியது. கறுவாவிலும், பாக்கு வியாபாரத் திலும், யானை விற்பனையிலும் பெரும் வருமானத்தைப் பெற்ற தோடு, தலைவரியை அறவிட்டும், சேவைபுரிவதற்குப் பதிலாக இறுக்க வேண்டிய பணத்தைப் பெற்றும், கொம்பனியின் வருமா னத்தைக் கூட்டினர். மேலும் கொம்பனியின் ஆதாயத்தைக் கூட்டு வதற்காக கோப்பிச்செடிகளை ஒல்லாந்தர் தங்களுடைய ஆட்சியி லுள்ள பகுதிகளில் உண்டாக்கினர். விதானைமார், முதலியார்மார்,

கோறளை ஆகியோருக்கும் மற்றும் கிராமவாசிகளுக்கும் அச்செடிகளை உண்டாக்குவதற்கு அனுமதியை அளித்தனர். அச்செடிகளிலிருந்து வரும் பிரயோசனத்தில் அரைவாசி கொம்பனிக்குக்கொடுக்க வேண்டுமென்றும் மிகுதியை கொம்பனிக்கே ஒரு குறித்த விலைக்குக் கொடுக்கவேண்டுமென்ற நிபந்தனை இருந்தது. கொழும்பு, மாத்தறை, காலி ஆகிய பகுதிகளில் 700000 செடிகள்வரையில் உண்டாக்கப்பட்டன. கோப்பிச்செய்கையை மேற்பார்வையிடுவதற்கு "ஒவசியர்" என்ற உத்தியோகத்தர் ஒருவர் நியமிக்கப்பட்டிருந்தார். கொம்பனிக்குரிய பிரயோசனத்தை அறவிடப்போகும்பொழுது அவ்வுத்தியோகத்தருக்கும் அவருடன் சென்றவர்களுக்கும் விருந்துகளளிப்பதில் அதிக பணஞ் செலவாயிருந்தபடியால் கோப்பிச் செய்கையை அநேகர் கைவிட்டனர். அதையறிந்த பிலாத்து அவ்வுத்தியோகத்தரை நீக்கிவிட கொம்பனியின் வருமானம் அதிகரித்தது.

பலவகையான வெகுமதிகளை ஒல்லாந்தர் கண்டியரசனுக்குக் கொடுத்து அவனைச் சாந்தப்படுத்தி வைத்தனர். ஆனால் துறைமுகங்களை மூடிவைத்திருந்ததினால் அரசன் அதிருப்தியடைந்திருந்தான். அரசனிடமிருந்து பாக்கைக் கூடிய விலைகொடுத்து கொம்பனி வாங்கியபொழுதிலும் அரசன் முள்ளுப்படலைகளைத் திறந்துவிடவில்லை. கொம்பனியினுடைய ஆட்சியிலிருந்த மக்களிலநேகர் கலகத்தையுண்டுபண்ணி அரசனிடஞ் சென்றனர். கொழும்பு திசாவானியிலுள்ள மக்கள் கொம்பனியின் உத்தியோகத்தர்களின் கொடுரச் செய்கைகளினால் அதிருப்தியடைந்தனர். கறுவாப்பட்டையுரிப்போர் வேலைநிறுத்தஞ் செய்தனர். தங்களுடைய முறைப்பாடுகளைப்பற்றிய விசாரணை நடத்தியபின்பே வேலைசெய்வதாகக் கூறினர். காலி, மாத்தறைப் பகுதிகளிலுள்ளவர்களும் அனுதாபங்காட்டி வேலை செய்ய மறுத்தனர். கறுவாப்பட்டையுரிப்போரைவிட ஏனையோரும் அதிருப்தி அடைந்திருந்தனர். பலவிடங்களிலும் காணப்பட்ட கறுவாச்செடிகளைப் பாதுகாக்குஞ் சட்டங்களால் மக்கள் உணவுக்கு வேண்டிய பயிர்களைச் செய்ய முடியாமலிருந்தது. உறுதிகள்மூலம் நிருபிக்க முடியாத நிலங்களில் அரைவாசியை கொம்பனி கவர்ந்து கொண்டது. அவ்விதமான பாகத்தைச் சொந்தக்காரர் குறித்த விலைக்கு வாங்கிக்கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தப்பட்டது. தென்னைகளுக்குக் கூடுதலான வரி அறவிடப்பட்டது. டச்சு உத்தியோகத்தரின் உணவுக்காக கால்நடைகள் கைப்பற்றப்பட்டன. பாடசாலைகளுக்குப் போகாதவர்களுக்குக் குற்றங்கள் விதிக்கப்பட்டன. எங்கும் கலகங்கள் தொடங்கின. கலகக்காரரில் அநேகர் சுட்டுக்

கொல்லப்பட்டனர். கலகத்தை அடக்குவது கஷ்டமாகக் காணப்பட்டது. டச்சுக்காரர் அரசனின் உதவியைக் கேட்டபொழுது அவன் கொம்பனியின் தவருன நிர்வாகத்தினுலேயே அவ்வித நிலை ஏற்பட்டதெனக் கூறி அனுதாபங்காட்ட மறுத்துவிட்டான். கலகக்காரர் ஒல்லாந்தரின் படையைத் துரத்தத்தொடங்கினமையால் அப்படை கொழும்புக்கு ஓட நேரிட்டது. இவ்விதமான நிலை இருக்கின்ற நேரத்தில் பிலாத்துக்குப்பின் (1734) வந்த டச்சுத் தேசாதிபதியாகிய வான்டொம்பேர்க் இறந்தான் (1736). பின்பு வான் இம்கொவ் என்பவன், தேசாதிபதியாக (1736-1740) நியமிக்கப்பட்டான். அவன் ஒல்லாந்தத் தேசாதிபதிகளுள் சிறந்தவனுகக் கைக்கொள்ளப்பட்டான். கோயன்ஸ் தேசாதிபதியாற் கையாளப்பட்ட அடக்கு முறையையாவது அல்லது பெக்கர் தேசாதிபதியினுடைய கடுர முறையையாவது இவன் ஆதரிக்கவில்லை. கலகத்தை அடக்குவதற்காக கறுவா உரிப்போரைச் சாந்தப்படுத்தினுன். அரசனுக்கும் வர்த்தக சங்கத்தாருக்குமிடையில் நல்ல மனப்பான்மையை உண்டு பண்ணினுன். அரசன் அசௌக்கியமான நிலையிலிருந்தபடியால் கொழும்பிலிருந்து ஒரு வைத்தியனை சிகிச்சை அளிக்கும்படி அனுப்பினுன். நோயின் காரணமாக நரேந்திரசிங்கன் இறந்தான் (1739).

## வினுக்கள்

1. *வீரநரேந்திரசிங்கனுக்கும் ஒல்லாந்தத் தேசாதிபதிகளுக்குமிடையில் எக்காரணங்கள்பற்றி ஒற்றுமைக்குறைவு ஏற்பட்டது ?*

2. *ஒல்லாந்தருடைய ஆட்சிக்காலத்தில் கத்தோலிக்க சமயத்தவர்களுக்கு ஏற்பட்ட கஷ்டங்கள் யாவை ?*

3. *பீற்றர் வைஸ்ற் என்பவனுடைய ஆட்சியையும் கிறிஸ்தியன் பிலாந் தின் ஆட்சியையும் ஒப்பிடுக.*

4. *''வர்த்தகமே ஒல்லாந்தரின் பிரதான நோக்கமாகும்'' இக்கூற்றை ஆராய்க.*

---

# 5. நாயக்க அரசரின் ஆளுகை
## (1739-1815)

நரேந்திரசிங்கனே கடைசிச் சிங்கள அரசனுவான். அவனுடைய தாயும் மனைவிமாரும் தென்னிந்தியாவிலுள்ள நாயக்க வமிசத்தி லுள்ளவர்களாகும். நரேந்திரசிங்கன் விவாகஞ்செய்த காலத்தில் அவனுடைய மனைவியின் உறவினர் பலர் கண்டியில் வந்திருந்தார் கள். அவனுக்குப் பிள்ளைகளில்லாமையால் அவன் இறந்தபின் அவ னுடைய மைத்துனனே அரசனுனன். இவன் ஸ்ரீவிஜய இராசசிங்கன் என்ற பெயருடன் ஆளத்தொடங்கினுன்.

ஸ்ரீவிஜய இராசசிங்கன் சிங்காசனமேறிய காலந்தொட்டு கண்டி இராச்சியத்திலுள்ள பழக்கவழக்கங்கள் மாறுதலடைந்தன. அவ னுடைய சிங்களப் பிரசைகளுடைய மொழியோ, சமயமோ, பழக்க வழக்கங்களோ நாயக்க வம்சத்திலுள்ள தமிழரசனுக்குரியவைகளி லும் பார்க்க வித்தியாசமானவையாகக் காணப்பட்டன. அரசனைக் காண்பதற்குப்போன எவரும் சிங்களப் பிரசைகளென்ருலுஞ்சரி, அந்நிய அரசர்களின் தூதுவர்களென்ருலுஞ்சரி சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்காரம் செய்யவேண்டும். அரசனுடைய நகரத்தின் எல்லைக்குள் உயர்குலத்தவர் தன்னும் குதிரையிலேறிச் சவாரிசெய் யவோ அல்லது பல்லக்கிற்செல்லவோ முடியாது. திசாவைகளும் மற்றும் அதிகாரிகளும் அவ்விதமான மரியாதைகளை எதிர்பார்த்த னர். சிங்களத் திசாவைகளுக்கே 'மக்கள்மீது செல்வாக்கிருந்தமை யினுல் அவர்களே திசாவானிகளின் நிர்வாகத்தை நடத்திவந்தனர். அரசனுடைய மந்திரிமார்களாயும், மாகாண ஆட்சி நடத்துபவர் களாயும் சிங்களவர்களே கடமையாற்றினர். அரண்மனையிலுள்ள கடமைகளை நாயக்க வம்சத்தவர்கள் செய்துவந்தனர். ஆகையால் இந்துசமயத்தைச் சேர்ந்த நாயக்கரும், புத்தசமயத்தைச் சேர்ந்த சிங்களரும் ஆகிய இருபாலார் இராசசபையில் இடம்பெற்றனர். தமிழர்கள் ஒல்லாந்த அதிகாரிகளோடு மிதமிஞ்சிய செய்கையினுல் முரண்பட்டுக்கொண்டனர். சிங்களவரோ தாழ்பூமியில் கலகத்தை விளைத்தும், அந்நியருடைய உதவியைத் தேடியும் ஒல்லாந்தருக்கு எதிர்ப்புக் காட்டும் பழைய முறைகளை அனுஷ்டித்து வந்தனர். கொள்கையளவில் வித்தியாசப்பட்ட இரு கட்சியினருமே இலங்கை சுதந்திரத்தையிழக்கக் காரணமாயிருந்தனரெனலாம். ஸ்ரீவிஜய இராச சிங்கனுடைய மனைவியினுடைய தந்தையே அரசனுடைய பிரதான

மந்திரியாக நடந்துகொண்டதுமல்லாது நாயக்க வம்சத்தவர்கள் கௌரவமான பதவிகளையும் பெற்று பல கிராமங்களின் வருமானத்தையும் அனுபவித்தனர்.

ஸ்ரீவிஜய இராசசிங்கன் அரசனுனவுடன், அவனுடைய மனைவியும் அவனும் புத்தசமயத்தைத் தழுவினர். தனது பிரசைகளை சந்தோஷப்படுத்தும் நோக்கத்துடன் புத்தசமயத்தை வளர்க்கிறதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்தான். அக்காலத்தில் புத்தசமய சங்கம் நன்னிலையிலிருக்கவில்லை. குருமார்கள் உலகப்பற்றுடையவராகக் காணப்பட்டனர். வறுமையுடன் வாழ்ந்து சமயச்சேவையை வாழ்க்கையின் இலட்சியமாகக்கொண்ட அக்குருமார் நாட்டிலுள்ள பிரதானிகளைப்போல் சௌகரியமான வாழ்க்கையை விரும்பினர். உணவுக்கும், உடைக்கும் பொதுமக்களிலே தங்கியிருப்பதற்கு நாணமுற்றனர். இவ்விதமான வாழ்க்கையைக் கண்டு அதிருப்தியடைந்த மக்களுக்கு அரசன் அனுதாபங்காட்டினுன். ஆனுல் அச்சூழ்நிலையில் உண்மையாகவும் விசுவாசத்துடனும் ஒருவர் சமயவாழ்க்கையை நடத்திவந்தார். அவர் ஒரு பெரியவராகவே கருதப்பட்டார். அவரே **சரனன்காரா** என்பவராகும். அவர் 1698-ம் ஆண்டு பிறந்தார். பதினுறு வயதிலேயே புத்தசந்நியாசியின் அங்கிகளை அணிந்து சமயபக்தியும் கட்டுப்பாடான வாழ்க்கையையும் வாழ ஆரம்பித்தார். அவருடைய பேச்சுவன்மை வசீகரமும் அவருடைய போதனையைக் கேட்பதற்குத் திரளான மக்களைத் தூண்டியது. புத்தருடைய போதனைகளை சிறந்தமுறையில் தெளிவாக விளக்கிவந்தார். ஒரு பெரும் சமயத்தொண்டனுகக் கருதப்பட்டார். அவர் சிறந்த பிக்குவாக இருந்ததுமல்லாது சிங்களப்பாஷையில் அதிக பாண்டித்தியமும் பெற்றிருந்தார். அவர் பல நூல்களை எழுதியுள்ளார். பாளிமொழியிலுள்ள வைத்தியநூலையும் மொழிபெயர்த்துவைத்தார்.

அக்காலத்தில் சமயத்தொண்டு செய்வதிலே பலர் ஈடுபட்டனர். புத்தசமய பக்தியுடைய பலர் வெள்ளரசு மரங்களை நாட்டினர். பலர் விகாரைகளைத் திருத்தியமைத்து நிலங்களையும் கோயில்களுக்கு ஈந்தனர். அந்நிலங்களுக்குப் பாதுகாப்பாளராக நியமிக்கப்பட்டவர்கள் அவைகளின் பிரயோசனத்தைப் பெற்றனர். புது விகாரை ஒன்று கட்டப்படும்பொழுது, விக்கிரகங்கள் செய்வதற்கும் சுவர்களில் சித்திரங்கள் வரைவதற்கும் அதிக பணம் செலவானது. அவ்வேலைகளைச் செய்யும் கம்மாளர்களுக்கு உணவும் உடையும் கொடுக்கப்பட்டன. வேலைகள் முடிந்தபின்னர், நிலங்கள், ஆபரணங்கள், சிலைகள் முதலியன வெகுமதியாக அவர்க

ளுக்குக் கொடுக்கப்பட்டன. அரசனும் அவ்விதமான வெகுமதியைக் கொடுப்பதுண்டு. கண்டி அரசனின் அனுமதியுடன் அங்கிருந்த கத்தோலிக்க குருமார் சமயப்பிரசாரஞ்செய்து வறிய மக்களை மத மாற்றஞ் செய்வதைக்கண்ட கண்டி அரசன் அவர்களை இராச்சியத்தினின்று துரத்திவிட்டான். பல கத்தோலிக்க தேவாலயங்களையும் இடிப்பித்தான். ஸ்ரீவிஜய இராசசிங்கன் சமயப்பற்றுடையவனுகையால் புத்தகோயில்களைத் திருத்தியமைத்தும், சமயசம்பந்தமான விழாக்களைக் கொண்டாடியும் அவ்விதமான நன்முயற்சிகளைச் செய்தான். அதுவுமல்லாமல் **உபசம்பத** என்ற சமய குரு அபிஷேகத்தைச் செய்து சமய புனருத்தாரணஞ் செய்ய அவாவுற்ருன். அதற்கு வேண்டிய புத்தகுருமாரை சீனுவிலிருந்தும் சீயத்திலிருந்தும் வரவழைத்தான். அரசனுடைய நட்பைப் பெற்றுக்கொள்ளுவதற்காகக் கொம்பனி குருமார்களைக் கொண்டுவருவதற்கு மரக்கலங்களைக் கொடுத்துதவியது.

வான் இம்கொவ் என்ற டச்சுத் தேசாதிபதி கண்டி அரசனேடு சமாதான முறையில் நடந்துகொள்ள விரும்பினுன். இலங்கையில் தங்களுடைய ஆட்சியை நடத்துவதிலும் பார்க்க வர்த்தகத்தைப் பாதுகாப்பதே பிரதானமான நோக்கமாக இருக்கவேண்டுமென பட்டேவியாவிலுள்ள அதிகாரிகளுக்கு அவன் விளங்கப்படுத்தி, அரசனுடைய நட்பைப் பெறுவதற்கு துறைமுகங்களைத் திறந்துவிடுதல் அவசியமெனக் கூறினுன். ஆனுல் பட்டேவியாவிலுள்ள அதிகாரிகள் அதற்குச் சம்மதிக்கவில்லை. ஆகையால் தனக்குப்பின் வந்த தேசாதிபதிக்கு, அரசனேடு சமாதான முறையில் நடந்துகொள்ள வேண்டுமென்று இம்கொவ் புத்திகூறினுன். ஸ்ரீவிஜயன் அரசனுனபின் தந்திரமான முறைகளைக் கையாண்டனர். வழக்கமாக அரசனுடைய இராச்சியத்திலிருந்து பெற்ற கறுவாவைக் கொடுக்க அரசன் மறுத்தமையினுல் 1740-ல் ஒல்லாந்தருடைய கப்பல்கள் கறுவாவைப் பெற்றுக்கொள்ளாது திரும்பின. கொம்பனியின் பிரசைகளும் வரிகொடுக்க மறுத்தனர். ஒல்லாந்தர் தங்களுடைய ஆட்சியிலுள்ள ஒரு கிராமத்தில் ஆலயமொன்றைக் கட்ட ஆரம்பித்தபொழுது அதைக்கட்ட முடியாதென்று அரசன் கட்டளையிட அவனுடைய நட்பையிழக்க விருப்பமில்லாத ஒல்லாந்தர் அக் கட்டளைக்குப் பணிந்தனர்.

பின்பு சீயத்திற்குச் சில கடிதங்களைக் கொண்டு சென்று அவைகளுக்குப் பதிலைப்பெற்று வரவேண்டுமென ஒல்லாந்தரைக் கேட்டுக்கொண்டபொழுது அவர்கள் அதற்கு இணங்கினர். சீயன்

கோறளையிலுள்ள 9 கிராமங்களை அரசன் தன்வசப்படுத்திய பொழுதும் தேசாதிபதி எதிர்ப்புக்காட்டவில்லை. அரசனுடைய உத்தியோகத்தர்கள் நீர்கொழும்புக்கும், கற்பிட்டிக்குமிடையில் கள்ள வியாபாரத்தையும் நடத்தினர். பின் அரசனுடைய மாமன், பாக்குகள் ஏற்றிய தோணிகளை அனுப்ப எத்தனித்தபொழுது ஒல்லாந்தர் அதைத் தடுத்துவிட அவன் ஒல்லாந்தர் யாழ்ப்பாணங் கொண்டுசென்ற யானைகளை அவர்களிடமிருந்து கைப்பற்றி எதிர்ப்புக்காட்டினுன். அவ்விடத்தைவிட்டு எட்டு நாட்களுக்குள் அவனை விலகும்படி அவர்கள் கட்டளையிட அவன் தன்னிடம் வந்த தூதுவர்களையும் துரத்தி மரக்கலங்களைச் சோதிக்கவும் முடியாதெனக் கூறினுன். அவனுடைய ஆதரவைப் பெற்றுக்கொள்வதற்காக அவனுக்கு வெகுமதிகளைக் கொடுத்துச் சமாதானப்படுத்தினர். இங்கிலேயில் மூன்று கோறளை, நான்கு கோறளைகளுக்கு அதிகாரியாயிருந்த திசாவை இருபகுதியார்க்குமிடையில் சமாதானத்தை ஏற்படுத்துவதாகக் கூறிப் புத்த குருமார்களைச் சீயத்திலிருந்து கொண்டுவரவேண்டுமென்று கேட்டபொழுது ஒல்லாந்தர் அதற்கு மறுத்தனர். அவர்களுக்குப் பல தொல்லைகளையும் உண்டாக்கிய பொழுது அவர்கள் அவனுடைய வேண்டுகோளுக்கு இசைந்தனர். சீயத்திலிருந்து குருமார் வந்து சேர்வதற்கு முன்பாக ஸ்ரீவிஜயன் இறந்தான் (1747). ஸ்ரீவிஜயனுடைய இரண்டாவது மனைவி இந்தியாவிலிருந்து வரும்பொழுது அவளுடைய தந்தையாகிய நரணப்பா நாயக்கரும், அவளுடைய இரு தம்பிமார்களும் அவளோடுவந்தனர். அரசனுக்குப் பிள்ளைகளில்லாமையால் அவன் 14 வயதுடைய மூத்தமைத்துனனைத் தனக்குப்பின் அரசனுக வேண்டுமென்று நியமித்திருந்தான். அரசியல் விஷயங்களை அறிந்திராத சிறுபராயத்தவனுகையால் பிரதான இரு திசாவைகளே அரசாங்கத்தை நடத்திவந்தனர். இராச்சிய பாரத்தை ஏற்று நடத்தும் வயது வந்தவுடன் கீர்த்தி ஸ்ரீ இராசசிங்கன் பெயருடன் சிங்காசனமேறினுன் (1751). அவனுடைய வனப்பு வாய்ந்த மேனியும் தோற்றமும் பிரசைகளுக்குச் சந்தோஷத்தைக் கொடுத்தன. 1749ல் அரசன் நாடுகாத்தசாமி நாயக்கருடைய மகளை விவாகஞ் செய்தான். கொம்பனி அனுப்பிய கப்பலில் அவள் வரும்போது அவளுடைய பெற்ரேரும், உறவினரும் அவளோடு கண்டிக்கு வந்தனர்.

புத்தசமயிகளாகிய சிங்களப் பிரசைகள் அச்சமயத்தைச் சேர்ந்த அரசனையே விரும்புவார்களென உணர்ந்த அரசன் அச்சமயத்தை முன்னேற்றுவதற்கு வேண்டிய சேவைகளைச் செய்ய ஆரம்பித்தான். 1750-ல் சீயத்துக்குப் புறப்பட்ட சில சிங்களப் பிர

தானிகள் திரும்பி வரும்பொழுது (1753) 20 புத்தகுருமார்களையும், தூதுவர்களையும் கொண்டுவந்தனர். இலங்கையில் புத்தபிக்குகள் சங்கத்தை, இவர்களே ஆரம்பஞ் செய்தனர். இங்குள்ள பழைய விகாரைகள் எல்லாவற்றிலும் இக்கூட்டத்தைச் சேர்ந்த புத்தபிக்கு களே வசிக்கின்றனர். இலங்கையிலுள்ள சரனன்காரா என்ற புத்த குருவின் இடையருமுயற்சியினால் உபசம்பதம் மீண்டும் தாபிக்கப் பட்டது. அவருடைய விடாமுயற்சியினால் சமயமும் இலக்கியமும் முன்னேற்றமடைந்தன. ஸ்ரீவிஜயன் காலத்திலும், இவ்வரசனுடைய காலத்திலும் சரனன்காராவின் முயற்சியினாற் புத்தசமயம் புனருத் தாரணம் பெற்றது என்று சொல்லலாம். அவர் "சங்கராசா"ப் பதவிக்கு அரசனால் உயர்த்தப்பட்டார். அப்பதவியிலிருந்தபடியே சமயத்தொண்டுகளை யாற்றி நன்மதிப்பைப்பெற்று 1778ல் அவர் இறந்தார்.

நாயக்க வம்சத்திலுள்ள ஒரு அரசன் ஆளுகை நடத்துவதை யும் அவனுடைய உறவினராகிய பல இந்து சமயத்தவர்கள் கண் டியிலிருப்பதையும் கண்ணுற்ற சிங்களப்பிரதானிகள் வெட்க மடைந்து கீர்த்தி ஸ்ரீ இராசசிங்கனுக்கெதிரே சதி செய்தனர். சதி செய்தவர்கள் தண்டிக்கப்பட்டனர். சீயத்திலிருந்துவந்த குருமார் கள் புத்தசமயத்தவர்கள் மத்தியில் இந்து ஆலயங்களிருப்ப தைக் கண்டு அதிசயப்பட்டனர். புத்தசமயம் அரசனுடைய போதிய ஆதரவைப் பெறவில்லையென்று கூறினர். ஆகையால் "பெரஹெரா" விழாநடக்கும்பொழுது தந்ததாதுவும் மற்றும் புத்த சின்னங்களும் கௌரவிக்கப்படவேண்டுமென அரசன் கட்டளையிட்டான். அரசன் விகாரைகளைத் திருத்தியமைத்தான். சமயப்போதனை நடத்தும் மண் டபங்களைக் கட்டிவிட்டதுமல்லாமல் சமயநூல்களும் எங்கும் கொடுக் கப்பட்டன. பண்டைக்காலந்தொட்டு வழிபட்டுவந்த இடங்களை அரசன் தரிசித்தான். மகியன்கானுவில் ஒரு விழாவை நடத்தினான். "பெரஹெரா" விழாவில் அரசனும் பங்குபற்றினான். பொலன்னறு வையைத் தரிசித்துவிட்டுவந்த அரசன் தானும் பெரிய பராக்கிரம பாகுபோல் அரசனுக்குரிய கடமைகளைத் தவறாது செய்வதாக மன வுறுதிகொண்டான். மக்களிடம் சமயபக்தி உண்டானது.

சீயத்திலிருந்துவந்த குருமார் மகாவம்சத்தின் பிரதியொன்றை இங்கு கொண்டுதந்தனர். இங்குள்ள பிரதிகளோடு அதை ஒப்பிட் டுப்பார்க்கும்படி அரசன் கட்டளையிட்டான். பழையகாலந்தொட்டு மகாசேனன்வரைக்குமுள்ள சரித்திரவரலாறே மகாவம்சத்திற் கூறப் பட்டுள்ளது. அதைத் தொடர்ந்து கூறும் வரலாறே "சுலுவம்சம்"

எனப்படும். 42 அத்தியாயங்களைக் கொண்டுள்ள சூலுவம்சாவின் முதற்பகுதி ஸ்ரீமேகவர்ணன் தொட்டு பராக்கிரமபாகுவரைக்குமுள்ள வரலாற்றைக் கூறுகிறது. பதின்மூன்றும் நூற்றுண்டில் இலங்கைக்கு வந்த தர்மகீர்த்தி என்ற பிக்குவே இதை எழுதினதாக நம்பப்படுகிறது. விஜயபாகு தொடக்கம் நான்காம் பராக்கிரமபாகு வரைக்கும் கூறப்பட்ட வரலாறு இரண்டாம் பகுதியாகும். ரிட்டி விகாரையிலிருந்த சித்தார்த்த புத்தரக்ஷித என்பவர் அரசனுடைய வேண்டுகோளுக்கிணங்க ஐந்தாம் பராக்கிரமபாகு தொடக்கம் கீர்த்தி ஸ்ரீ இராசசிங்கன் வரைக்குமுள்ள வரலாற்றை எழுதியும் சூலுவம்சத்தின் மூன்றும் பகுதியையும் எழுதிப் பூர்த்தியாக்கினுன். ஆலயங்களிலுள்ள குருமார்கள் எழுதிவைத்தவைகளே இந்நூல்களை எழுதுவதற்கு ஆதாரமாக விருந்தன. ஒவ்வொரு அரசனையும்பற்றிக் கூறுமிடத்து அவன் சமய வளர்ச்சிக்காகச் செய்த பணிகளையே பிக்குகள் விரிவாகக் குறிப்பிட்டனரேயன்றி ஏனைய கடமைகளைப்பற்றி அதிகம் கூறவில்லை. அதனுலேயே மகாவம்சத்தை மொழிபெயர்த்த கெய்கர் என்பவர் "கூறப்பட்டவைகளல்ல, கூருது விடப்பட்டவைகளே சிங்களச் சரித்திரத்தை விவரிப்பதற்குத் தடையாகவிருக்கும் கஷ்டம்" என்று கூறினுர்.

கொழும்புக்குச் சென்ற முத்துக்களும், குதிரைகளும் அரசனுக்குக் கொடுக்கவேண்டுமென்று கேட்ட (1748) இராசதூதர்களுக்கு அவ்விதம் கொடுக்கமுடியாதென்று தேசாதிபதி கூறினுன். அரசனுடைய இராச்சியத்தினுட் புகுந்த கறுவாப்பட்டையுரிப்போரைத் திருப்பி அனுப்பும்படி தேசாதிபதி அவர்களைக் கேட்டுக்கொள்ள அவர்களும் அதற்கு மறுத்தனர். இனிமேல் சீயத்திலிருந்து குருமார்களைக் கொண்டுவருவதற்குக் கப்பல்கள் கொடுத்து உதவமுடியாதெனத் தேசாதிபதி கூறினுன். அதனுற் கோபமடைந்த அரசனுடைய தந்தை நீர்கொழும்புக்குக்கிட்டப் பிடித்த யானைகளை அரசனுக்குக் கொடுக்கவேண்டுமென்று கேட்டான். முத்துக்குளிப்பை அரசன் நடத்துவதாகவும் கூறினுன். பின்பு கண்டியிலுள்ள பெரிய புத்தகுரு வாத்தியக்காரர் புடைசூழ கொழும்பை அடைந்து ஒல்லாந்தனெருவனிடம் வைத்தியச்சிகிச்சை பெறுவதற்குக் களனியில் தான் இருக்க அனுமதிகேட்டான். களனியில் ஒரு குருஷேத்திரத்தைக் கட்டும் நோக்கத்தோடேயே அவ்விதம் கேட்டதெனப் பயந்து தான் அரசனுக்கு முன் அறிவிப்புச் செய்யாமல் முத்துக்குளிப்பு நடத்துவதில்லையென்று கூறினுன். அவனுடைய பயத்தைப் பயன்படுத்திக்கொண்டு யானை வர்த்தகத்திலொருபகுதியைக் கொடுக்க

வேண்டுமென அரசதூதுவர்கள் புதிதாகவந்த லோட்டன் தேசாதிபதியைக் கேட்டனர் (1753). அவன் பட்டேவியாவிலுள்ள அதிகாரிகளுக்கு அறிவித்தபொழுது அவர்கள் அதை மறுத்துவிட்டனர். அரசன் அதை அறிந்தபின் கொம்பனி ஆட்சிபுரிந்த பகுதிகளிலே குழப்பங்கள் உண்டாயின. கொழும்பு, மாத்தறைத் திசாவானிகளில் கலகங்களேற்பட்டன. அக்கலகமுண்டானதற்குரிய காரணங்களை ஆராயவேண்டும். தானியவரியை அறவிடும்பொழுது அவ்வுத்தியோகத்தர்கள் அதிக அநீதியைச் செய்தனர். சுறூயிடர் என்ற டச்சுத் தேசாதிபதி காணிசம்பந்தமாக உண்டாக்கிய முறைகள் பொதுசனங்களுக்கு அதிருப்தியை உண்டாக்கின.

கறுவா உண்டாக்குவதிலும் பார்க்க தென்னைச்செய்கை மக்களுக்கு அதிக ஆதாயத்தைக் கொடுத்தமையால் கறுவா உள்ள காடுகளை வெட்டி தென்னைச்செய்கையை மக்கள் நடத்திவந்ததைக் கண்ட தேசாதிபதி காடுகளை வெட்டமுடியாதெனக் கட்டளையிட்டான். அக்கட்டளை அலட்சியஞ்செய்யப்பட்டதால் கொம்பனி அந்நிலங்களைத் தம் வசப்படுத்தின. கொம்பனியினுடைய அனுமதியின்றி செய்கைபண்ணப்பட்ட நிலங்களின் வருமானத்தில் அரைவாசியையும், அனுமதிபெற்றுச் செய்யப்பட்ட நிலங்களின் வருமானத்தில் மூன்றிலொன்றையும் கொம்பனி கொடுக்கும்படி வற்புறுத்தியது. அந்த ஒழுங்கின்படி கொடாதவர்களிடம் பணம் கொடுக்கவேண்டுமென்றும், தவறினல் காணிகள் விற்கப்படுமென்றும் கூறியபொழுது, மக்கள் எதிர்ப்புக்காட்டினர். உடனே தென்னைகளைத் தறித்துவிடும்படி தேசாதிபதி போர்வீரர்களை அனுப்பினன். இது அதிக அதிருப்தியை உண்டாக்கியது. அரசனுடைய திசாவைகள் அதிருப்தியடைந்த விவசாயிகளையும், கறுவாப்பட்டையுரிப்போரையும் கலகமுண்டாக்கும்படி ஏவினர். ஒல்லாந்தர் அக்கலகத்தை அடக்கினர். பின்பு அரசனுடைய சேனைப்படைகள் ஹன்வலாவையையுங் கைப்பற்றி, மாத்தறைத் திசாவானிக்குட் புகுந்து மாத்தறைக் கோட்டையையுங் கைப்பற்றி காலியிலுள்ள டச்சுக் கட்டிடங்களையும் இடித்தன. அந்நேரத்திலே ஒல்லாந்தர் சண்டை செய்ய வேண்டுமென்று தீர்மானஞ்செய்து, கண்டி இராச்சியத்திற்குப் படையெடுத்துச் சென்றனர். அங்கு சென்ற படையை கண்டியிலுள்ள மக்கள் பின்வாங்கச்செய்தனர்.

பெற்றுக்கொள்ளக்கூடிய ஆதாயத்தை ஈட்டுவதே கொம்பனியின் பிரதான நோக்கமாகவிருந்தது. அதற்கு நாட்டில் அமைதியும் சமாதானமும் வேண்டும். அதிக ஊதியத்தை அளிக்கக்கூடிய

உத்தியோகப்பதவிகளைக் கொம்பனி ஐரோப்பியருக்கே கொடுத்தது. நிர்வாக ஒழுங்கீனத்தைத் தடுப்பதற்கு தனி அதிகாரி இல்லாமை யால் பாரபட்சமான முறையில் உத்தியோக பதவிகள் அளிக்கப் பட்டன. அரசாங்கசேவையில் தேவைக்கு மிஞ்சிய கடமையாற்று வோர் இருந்தமையால் வருமானத்தின் பெரும்பகுதி அவர்களுக்குப் பணமாகவோ உணவுப்பொருள்களாகவோ கொடுப்பதற்குச் செல விடப்பட்டது. போர்த்துக்கிசர் காலந்தொட்டு சம்பளத்துக்கு மேலதிக மாகக் கொடுக்கப்பட்ட வேதனத்தினல் வர்த்தகத்தில் நட்டம் உண்டானது. நேர்மைக்குறைவும் களவும் காணப்பட்டமையால் அர சாங்கசேவையிலுள்ள அநேகர்மீது நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. ''சோம்பல், கவனயீனம் ஆகியவற்றினுற் பிடிக்கப்பட்ட உத்தியோ கத்தரை நித்திரையிலிருந்து தட்டி எழுப்பவேண்டியிருந்தது. அடிக்கடி எச்சரிக்கையினலும், தூண்டுதலினலும் குற்றங்களினுலும் நான் அவ் வுத்தியோகத்தர்களை உற்சாகப்படுத்தவேண்டியிருந்தது'' என்று சுறா யிடர் தேசாதிபதி கூறினர். நீதி வழங்கும் முறையும் சீர்கேடான நிலையி லிருந்தது. பிரதான நீதிஸ்தலத்திற் கடமையாற்றியோருக்கு சட்ட அறிவு போதாமையால் அவர்களுடைய தீர்ப்புகள் பட்டேவியா அதிகாரிகளால் பலமுறை கண்டிக்கப்பட்டன. பிரபல அதிகாரி களுக்கு நாட்டு மக்களின் பாஷை நன்ருகத் தெரியாதிருந்தமை யும் நீதிபரிபாலனத்திற்குத் தடையாகவிருந்தது. காணிகளைப்பற் றிய விவாதம் ஏற்பட்டால் அது தீர்க்கப்படும்வரையில் அவைகள் பயிர்செய்யப்படாமல் வெறும் நிலமாக, சிலவேளைகளில், பல வரு டங்களுக்கு விடப்பட்டன. அதனுல் வெகுகாலமாக மூடப்பட்டிருந்த ''லான்ட்ருட்ஸ்'' என்ற நீதிஸ்தலங்கள் மீண்டும் கொழும்பிலும், காலியிலும் திறக்கப்பட்டன. யாழ்ப்பாணத்திலுள்ள ''தோம்புகள்'' 15 வருடங்களுக்கொருமுறை புதுப்பிக்கப்பட்டுவந்தன. கடைசியாக 1754-ல் அது புதுப்பிக்கப்பட்டது. மன்னுருக்கும் அவ்வகையான தோம்பு தயாரிக்கப்பட்டது. ஆனுல் தென்பாகத்தில் திருப்தியான முறை காணப்படவில்லை. ஆனுல் மாத்தறைத் திசாவானிக்கு ஒரு புதிய தோம்பு தயாரிக்கப்பட்டது (1739). அதிலே ஒவ்வொரு பகுதியிலுமுள்ள ஆதனங்களும், சொந்தக்காரருடைய பெயரும், அங்கு வசித்த மக்களின் பெயரும், அவர்கள் செய்யவேண்டிய சேவையும், அவர்கள் அநுபவித்த சலாக்கியங்களும் ஆகிய விப ரங்கள் குறிக்கப்பட்டன. கொம்பனிக்குரிய நிலங்களிலுள்ள வரு மானத்தில் மூன்றிலொரு பங்கைக் கொம்பனி பெற்றது. ''பர வேணி'' என்று வழங்கப்பட்ட நிலங்களிற் பலவகையுண்டு. அதிற்

பெரும்பகுதி ''இராசகாரியா'' முறைக்கடங்கியது. அதைப்பெற்ற மக்கள் தங்களுடைய சாதி, குலத்திற்கேற்க அரசாங்கத்திற்குக் கடமை செய்தனர். அந்நிலங்களை விற்கவோ அல்லது ஈடுவைக்கவோ அவர்களுக்கு உரிமைகிடையாது. ஆனால் அவைகளை உரிமைக்காரர் பழைய நிபந்தனைகளுக்கிணங்க அனுபவிக்க முடியும். உரிமைக்காரர் இல்லாது ஒருவன் இறந்தால் ''மலப்பாலு'' என்றழைக்கப்பட்ட நிலங்கள் கொம்பனிக்கேயுரிமையாயின. செழிப்பின்மையால், விடப்பட்ட நிலங்கள் ''நிலப்பாலு'' என அழைக்கப்பட்டன. வயல் நிலங்களில் விளைவிக்கப்பட்ட நெல்லில் அரைவாசி கொம்பனிக்குக் கொடுக்கப்பட்டது. இவைகளைவிட வேறு வருமானங்களையும் கொம்பனி பெற்றது. மீன்வரி, தென்னைவரி, கள்ளுச்சாராய குத்தகைப்பணம், சந்தைவரி, தலைவரி, ஆகிய பலவகை வருமானங்களும் கொம்பனிக்குக் கிடைத்தன. நீர்கொழும்பில் புகையிலைத் தோட்டங்களும், கல்கிசையில் தென்னைத் தோட்டங்களும் கொம்பனிக்கு இருந்தன. யாழ்ப்பாணத்தில் சாயத் தொழிலினாலும், புகையிலை, பனங்கட்டி முதலியவைகளினாலும் வருமானங் கிடைத்தது. மன்னார்ப்பகுதியில் குளக்கரையில் புல் மேய்வதற்கு விடப்பட்ட மாடுகளிலிருந்தும் நெய், தயிர் ஆகிய ஆதாயத்தைப் பெற்றனர். சோனகர், செட்டிகள் காலில் மிதிதடி, செருப்பு அணிந்துகொள்ள விரும்பினால் வரிகொடுக்க வேண்டும். கோப்பி, மிளகுச் செய்கையும் நடைபெற்றன. 1753-ல் சுறுாயிடர் தேசாதிபதி 300,000 இருத்தல் மிளகை ஏற்றுமதிசெய்தார்.

ஒல்லாந்தர் இலங்கைக்கு வந்தகாலந்தொட்டுத் தங்களுடைய சமயத்தைப் பரப்புவதற்குச் செய்த முயற்சிகள் அதிகம் பலனை அளிக்கவில்லை. கத்தோலிக்க சமயத்தை அழித்துவிடவும் விக்கிரக வணக்கத்தைப் பின்பற்றியவர்களை மாற்றிக்கொள்ளவும் பல முயற்சிகளைக் கையாண்டபொழுதிலும் அவர்களுடைய சமயப்பற்று சிறிதேனும் குறையவில்லை. பெக்கர் தேசாதிபதி டச்சுக்காரரின் சமயப் போதனைகளை அலட்சியஞ்செய்த இந்துக்களுக்கெதிரே ஒரு சட்டத்தை உண்டாக்கினார் (1711). எவராகுதல் விக்கிரகவணக்கஞ் செய்வதற்கோ அல்லது விக்கிரகங்களை அலங்கரிப்பதற்கோ இந்து சமய விழாக்களிலோ காணப்பட்டால், அவர் கைதி செய்யப்பட்டு, சிறைச்சாலைக்கு அனுப்பப்படுவார் என்று பிரகடனஞ் செய்தான். டச்சுக்காரரின் ஆட்சியிலுள்ள பகுதிகளிலுள்ள கோயில் பூசகர்களும் வெளியேறவேண்டுமெனவும் கட்டளையிட்டான். அதுவுமல்லாமல் கிறித்தவர்கள் புத்தசமயத்தவர்களை விவா

கஞ் செய்யக்கூடாதெனவும் கட்டளையுண்டாக்கினன். அக்கட்டளை கவனிக்கப்படாமையால் 1769-ல் இன்னொரு சட்டம் உண்டாக்கப் பட்டது. ஒரு கிறீத்த பெண் ஒரு விக்கிரகவணக்கத்தவனை விவா கஞ் செய்தால், இருவரும் இரத்தம் பெருகுமளவும் அடிக்கப்படு வார்களென்றும், குறிசுடப்படுவார்களென்றும், விலங்குபூட்டப்படு வார்களென்றும், சொத்துக்கள் பறித்தெடுக்கப்படுமென்றும், அவர் களுடைய பிள்ளைகள் அடிமைகளாக்கப்படுவார்களென்றும் வெளி யரங்கப்படுத்தப்பட்டது. சமய ஆர்வம் போர்த்துக்கீசருக்கு ஒல்லாந்த ரிலும் பார்க்கக் கூட இருந்ததென்று சொல்லலாம். அரசாங்க உத்தியோகத்தர்போல் சமயக்குருமார்கள் வருடமொருமுறை கிரா மங்கள்தோறும் போவதினுல் சமயப்பிரசாரம் அதிக பயனை அளிக்க வில்லை. 1696-ல் இலங்கையைத் தரிசித்த "கிறிஸ்ரொவ் லாங்ன்ஸ்" என்பவர், "போர்த்துக்கீசர் அளவுகடந்த கர்வத்தால் இலங்கையை இழந்ததுபோல ஒல்லாந்தரும் அளவுகடந்த பொருள் வேட்கையா லும் கிறீத்தசமயப் போதனை நடத்தாமையாலும் இலங்கையை இழந்து போக நேரிடும்" என்று குறிப்பிட்டார். ஆனுல் இந்நிலையைச் சீர் படுத்துவதற்காக சில முயற்சிகளைச் செய்தனர். யாழ்ப்பாணக் கோட்டைக்குள் ஒரு கிறீத்த ஆலயத்தையும் (1692) கோட்டை இராசதானியில் இன்னொரு ஆலயத்தையுங் கட்டினர் (1723). நல்ல குடும்பங்களிலுள்ள வாலிபர்களுக்குச் சமயப்போதனை செய்வதற்குப் பயிற்சியளிக்கும் நோக்கத்துடன் . யாழ்ப்பாணத்திலும் கொழும்பி லும் இரு சமயப் பாடசாலைகளைக் கட்டினர். அவ்வகையான முயற்சி கள் இருந்தபொழுதிலும் கிறீத்துசமயம் முன்னேற்றமடையவில்லை. சமயப்போதனுசிரியர்களுக்கு இந்நாட்டு மக்களின் பாஷையில் போதிக்க இயலாமையே பிரதான காரணமென **பிலாத்து, இம் கொவ்** என்றதேசாதிபதிகள் கூறினர். அந்நிய பாஷையில் நடத் தப்பட்ட போதனைகளை மக்களால் விளங்கமுடியவில்லை என்பது அவர்களுடைய கருத்து. ஆனுல் போர்த்துக்கீசர் சென்ற இடமெல் லாம் சுதேசிகளிற் சிலரைக் குருமார்களாக்கினர். புரட்டஸ்தாந்து சமயத்துக்கு மாறியவர்களும் போலிக்கிறீத்தவர்களாகவே காணப் பட்டனர். கத்தோலிக்க சமயத்தவர்கள் அதிகம் எதிர்ப்புக்காட்டி னர். புத்தளம், கற்பிட்டி, களுத்துறை ஆகிய பகுதிகளில் புரட்டஸ் தாந்து சமயத்துக் குருமாரை அவமதித்து எதிர்த்தனர். சமயப் பயிற்சிபெற்ற ஒரு வாலிபன் ஒல்லாந்துதேசத்திற்குச் சென்று அங்கு ஒரு புத்தகத்தை எழுதி வெளியிட்டான். இலங்கையிலுள்ள குருமார்கள் சுயநலத்திற்கேயல்லாது கடவுளிடம் விசுவாசமும் அன் பும் வைத்துத் தங்களுடைய சேவையைச் செய்யவில்லையென்றும்,

சுதேசமொழிகளைப் பயின்றுகொள்ளாமைக்குச் சோம்பலே காரணமென்றும் அதிற் குறிப்பிட்டான். இவ்விதமான கவனயினங்களைவிட, சில ஒல்லாந்தரின் ஒழுக்கயினமும் சமயப்பிரசாரத்திற்குத் தடையாகவிருந்தது. கொழும்பு நகரத்திலிருந்த 1000 புரட்டஸ்தாந்து மக்களில் 50 பேர்வரையிற்தன்னும் ஞாயிற்றுக்கிழமைகளில் ஆலயத்திற்குப்போவதில்லை. ஊல்வின்தோல் ஆலயம் கட்டப்பட்ட பின்னும் (1749) நிலை திருத்தமடையவில்லை.

கல்வி பயிற்றுவதற்காக நியமிக்கப்பட்ட சபையினர் இரு வித்தியாதரிசிகளை நியமித்தனர். அவர்கள் வருடமொருமுறை பாடசாலைகளுக்குச் சென்று அவைகளின் முன்னேற்றத்தைப்பற்றியும், பாடசாலைத் தோம்புகளைப் பரிசோதித்தும், பாடசாலைகளுக்கும் ஆலயத்திற்கும் போகாதவர்கள் கொடுத்த குற்றப்பணத்தைப்பற்றிய கணக்கைப் பரிசோதித்தும் இன்னோரன்ன விஷயங்களைப்பற்றி ஓர் அறிக்கையைச் சமர்ப்பித்தனர். பாடசாலைத் தோம்புகளில் ஒவ்வொருவருடைய குடும்ப சரித்திரமும், ஞானஸ்நானம் விவாகம் நடைபெற்ற திகதிகளும் குறிக்கப்பட்டிருந்தன. அச்சபையும் ஆர்வங்காட்டித் தொடர்ந்து வேலைசெய்யாமையால் பாடசாலைகளும் சீர்கேடான நிலையிற் காணப்பட்டன. ஆனால் 1736-ல் அச்சியந்திரசாலை தாபிக்கப்பட்டுப் பல நூல்கள் வெளியிடப்பட்ட பின்னும் அதிக திருத்தம் காணப்படவில்லை. பெண்பிள்ளைகளுக்குக் கல்வி புகட்ட ஒருவிதமான ஒழுங்குஞ் செய்யப்படவில்லை.

### வினாக்கள்

1. *நாயக்க அரசன் சிங்காசனமேறியபின் கண்டியில் என்ன புதிய மாற்றங்கள் தோன்றின ?*
2. *ஸ்ரீவிஜய இராசசிங்கனும், கீர்த்தி ஸ்ரீ இராசசிங்கனும் புத்தசமயத்திற்குச் செய்த தொண்டுகள் யாவை ?*
3. *முதலிரு நாயக்க மன்னர்களுக்கும் ஒல்லாந்த வர்த்தக சங்கத்தாருக்குமிடையில் அடிக்கடி ஏற்பட்ட ஒற்றுமைக் குறைவுக்குரிய காரணங்கள் யாவை ?*
4. *டச்சு வர்த்தகசங்கத்தார் எவ்வகையில் தங்களுடைய ஆதாயத்தைப் பெருக்கினர் ?*
5. *ஒல்லாந்தர் தங்களுடைய சமயத்தைப் பரப்புவதற்குக் கையாண்ட முறைகளை ஆராய்க. அவர்களுடைய அம்முயற்சிகள் அதிக அனுகூலத்தை அளியாததற்குக் காரணம் என்ன ?*

---

# 6. நாயக்க அரசரின் ஆளுகை
## ( 1739—1815 ) தொடர்ச்சி

ஒல்லாந்தர் ஆட்சியிலுள்ள பகுதிகளில் மக்கள் 1760 - ல் கலகத்தை உண்டுபண்ணிய பொழுது கீர்த்தி ஸ்ரீ இராசசிங்கன் வெளிப்படையாக நின்று கலகக்காரருக்கு உதவிசெய்து ஹன்வல்லே, மாத்தறை, களுத்துறை ஆகிய இடங்களில் வெற்றிகொண்டான். அந்நேரத்திலே ஒல்லாந்தருடைய கஷ்டநிலையை அறிந்து படையெடுத்துச் சென்று அவர்களை நாட்டினின்று துரத்திவிடுவதற்கு எத்தனித்திருக்கலாம். ஆனல் கண்டி இராச்சியத்தில் அவனுக்குச் சில கஷ்டங்களேற்பட்டமையால் அவ்விதமான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள அவனல் முடியாமற் போனது. சிங்களப் பிரதானிகளில் ஒருசிலர் ஒரு திராவிடன் அரசு செலுத்துவதை எதிர்த்து, அரசனைக் கொன்று சீயதேசத்து அரசவம்சத்தைச் சேர்ந்த புத்த பிக்கு ஒருவனை அரசனுக்கச் சதிசெய்தனர். அவ்விதம் சூழ்ச்சி செய்தோர் போயாமாலு விகாரகைக்கு அரசனை வரவழைத்தனர். அவன் செல்லும் வழியில் ஒரு குழிதோண்டி அதற்குள் கூரிய தடிகளை நாட்டி, அக்குழியை வாழைமடல்களால் மூடி அதற்குமேல் ஒரு சீலையால் மூடிவிட்டனர். முஸ்லிம் வம்சத்திலுள்ள போபால முடியான்சி என்பவன் அவர்கள் செய்திருக்கும் சூழ்ச்சியை கலக்கொடை ருலாவுக்கு அறிவித்தான். உடனே சதிகாரர் கைதிசெய்யப்பட்டனர். சமனக்கொடி என்ற இரண்டாம் அதிகாருக்கும் இன்னும் மூன்று தலைவர்களுக்கும் மரணதண்டனை விதிக்கப்பட்டது. சதிசெய்த ஒருவனுன மொலதாந்து ருலாவினுடைய நிலங்கள் போபால முடியான்சிக்குக் கொடுக்கப்பட்டன. பிலிமத்தளாவை இரண்டாம் அதிகாராக நியமிக்கப்பட்டான்.

அரசன், பின்பு கலகக்காரருடன் சேர்ந்து, போர்ப்படையை எல்லைப்புறத்தைத் தாண்டி ஒல்லாந்தருடைய ஆட்சியின் கீழுள்ள பகுதிகளுக்கு அனுப்பினுன் (1761). டச்சுத் தேசாதிபதியாகிய சுறுாயிடர் திகிலடைந்தார். கொம்பனி யுத்தத்தை விரும்பவில்லை; யுத்தஞ் செய்வதற்கு ஆயத்தமுமில்லை. துப்பாக்கியைக் கையில் ஒருபோதும் எடுத்துக்கொள்ளாத சில ஐரோப்பியரே போர்வீரர் என்ற பெயருடன் கொம்பனியின் போர்ச்சேவையிலிருந்தனர். அவர்களில் அநேகர் சிங்களப் பெண்களை விவாகஞ் செய்துகொண்டு காலத்தை வீணிற் செலவழித்தனர். பீரங்கிகளை உபயோகிக்கவும் அதற்குப் பொறுப்புள்ளவர்களுக்குத் தெரியாது. பொறியியல் அறிஞர் ஒருவராகுதல் கிடையாது. நாட்டிலுள்ள வீதிகள் பாதைகள் ஆகியவை தன்னும் அறிந்திலர். இவ்வாறு தேசாதி

பதி கூறினர். கொழும்பிலுள்ள டச்சு மேலுத்தியோகத்தர்கள் ஆலோசனை செய்வதற்கு இடங்கொடாது சிங்களப்போர்ப் படைகள் பல இடங்களையும் தாக்க ஆரம்பித்தன. பலிங்குப்பனை ருலா தெற்கு நோக்கிச்செல்ல, **தும்பராருலா** ஹன்வல்லையைத் தாக்கி, டச்சுப் போர்வீரர்களைத் தோற்கடித்தான். பலவிடங்களிலும் டச்சுப் போர்வீரர்கள் தோல்வியடைந்ததைக் கேள்வியுற்ற டச்சுத் தலைவர்கள் மனந்தளர்ந்தனர். டச்சுக்காரர் மாத்தறையை விட்டுவிலக நேரிட்டது. அங்குள்ள சிங்களமக்களும் அரசன்பக்கஞ் சார்ந்தனர். இவ்வாறு வெற்றியீட்டிய இருசிங்களச் சேனாதிபதிகளுக்கு அரசன் யானைகளையும், வாள்களையும், நிலங்களையும் வழங்கினான். டச்சுத் தேசாதிபதி அனுப்பிய அவசரச் செய்தி கிடைத்ததும், இந்தியாவிலிருந்து டச்சுப் போர்ப்படைகளனுப்பப்பட்டன. உடனே கண்டிக்குப் படையெடுத்துச் செல்ல ஆரம்பித்தனர். கண்டியில் படைதாங்கிய ஆயிரம் போர்வீரர்கள் வரையில் இருந்த பொழுதிலும், பயிற்சிபெற்ற போர்வீரர்கள் மிகக்குறைவு. பீரங்கிகள் அவர்களிடங் கிடையா. ஆனால் காடுகளடர்ந்த தங்களுடைய நாட்டின் எல்லாப் பகுதியையும் நன்குயறிந்திருந்தனர். எல்லாப் பாதைகளும் தெரிந்திருந்தனர்; மறைந்திருந்து சமர்புரிவதிற் திறமைவாய்ந்தவர்கள்.

படையெடுத்துவந்த டச்சுச்சேனை மலைகளுக்கு அருகாமையை அடைந்து செல்லும் பாதையை வெட்ட ஆரம்பித்தது. ஆனால் அங்கே ஓரடிப்பாதை யன்றி வேறுகிடையா. அம்முயற்சியில் அவர்கள் ஈடுபட்டிருந்த நேரத்தில் மரங்களுக்கு மறைவிலிருந்து சிங்களப் போர்வீரர்கள் துவக்குகளினாலும் அம்புவில்லுகளினாலும் தாக்கினர். அரைவாசியிற் தறித்துவிடப்பட்ட மரங்கள் அச்சேனையின் மீது விழுந்தன. மலைகளிலிருந்து பெருங்கற்கள் உருட்டி விடப்பட்டன. சேனையில் அரைவாசி இவ்வகைகளினால் அழிக்கப்பட்டன. தங்களை எதிர்த்து அவ்வகை அழிவையுண்டாக்கிய எதிரிகள் எங்கு நிற்கிறார்கள் என்றும் அறியாது எஞ்சிய சேனை பின்வாங்கியது. பட்டேவியாவிலுள்ள அதிகாரிகள் துன்பமடைந்தனர். நூறுவருடங்களாக யுத்தம் ஏற்படாவண்ணம் தடுத்துத் தந்திரமாக ஆட்சி புரிந்த ஒல்லாந்தர் மீண்டும் சமாதானத்தை விரும்பினர். ஆகையால் தற்காலிகமான சமாதானத்தைக் கேட்டுக்கொண்டனர். அரசனும் தொடர்ந்து சண்டை செய்ய விரும்பவில்லை.

**1762-ல் வான்எக்** என்பவன் புதிய தேசாதிபதியாக நியமிக்கப்பட்டான். அவன் இந்தியாவிலிருந்து போர்வீரர்களை வரவழைத்தான். அதுபோல் அரசனும் மதுரையிலுள்ள நவாப்புவின் உதவி

யைக் கேட்டபொழுது அவன் மறுத்தமையினுல், அரசன் சென்னை யிலுள்ள ஆங்கிலேயருடைய உதவியைத் தேடினன். அந்நேரத் தில் ஒல்லாந்தருக்கும் ஆங்கிலேயருக்கு மிடையில் சமாதானம் இருந்தமையால் உடன்படிக்கைக்கு மாருகச் சண்டைசெய்ய அவர்கள் விரும்பவில்லை. இருந்தும் இலங்கையில் துறைமுகம் ஒன்று தேவைப்பட்டமையாலும், கறுவா வியாபாரத்திலொருபங்கை எடுத் துக்கொள்ள விருப்பங்கொண்டிருந்தமையினுலும், தாங்கள் உதவி கொடுத்தால் அரசன் அதற்குப்பதிலாக என்ன அளிக்கக் கூடு மென்பதை அறிந்து கொள்ளும் நோக்கத்துடன் **யோன்பிபுஸ்** என்பவனை ஆங்கிலேயர் அனுப்பினர். அவன் கண்டிக்குப் போய்ப் பின்பு திரும்பிச்சென்ற வரலாற்றை பின்வருமாறு கூறியிருந்தான்.

கண்டி இராச்சியத்தின் தலைநகரம் **செங்கடகாலை ஸ்ரீவர்த் தனபுரி** என்றழைக்கப்பட்டது. அந்நகரம் மலைகளாற் சூழப்பட்ட ஒரு பள்ளத்தாக்கிலிருந்தது. ஒவ்வொன்றும் ஒவ்வொரு மைல் நீள முள்ள, இரு வீதிகள் வடக்கிலிருந்து தெற்குத் திசையாகச் செல் கின்றன. இவைகளைக் குறுக்குத்தெருக்கள் சந்திக்கின்றன. தெற்குப் பக்கத்தில் மரங்கள் அடர்த்தியாகவுள்ள இடத்திலேயே அரண்மனை யிருந்தது. நகரத்தின் பிரதானமான பகுதிகளிலுள்ள வீடுகள் ஓடுக ளால் வேயப்பட்டிருந்தன. ஒவ்வொரு இரவும் 8 மணியளவில் ஒரு மணியடிக்கப்பட்டது. கன்னறுவாவிலுள்ள மண்ணினுற் கட் டப்பட்ட வீடொன்றிலேயே தூதுவர்களை வரவேற்பது வழக்கம். பிபுஸ் என்பவனும் அங்கேயே இருந்தான். ஒருநாளிரவு 7 மணியளவில் அரசனிடம் சமர்ப்பிக்கவேண்டிய காயிதம் ஒரு வெள்ளித்தட்டத்தில் வைக்கப்பட்டு, பிபுஸ் என்பவனும், மந்திரி ஒருவனும் கால்நடை யாகச் செல்ல அவர்களுக்கு முன்னே அத்தட்டத்தை ஒருவன் கொண்டு சென்ருன். மேளவாத்தியங்களும் அதிர்ந்தன. அந்நே ரத்தில் பெய்த மழையினுல் உண்டான சேறுபடிந்த உடையுடன் இருவரும் பசியும், களையும் மேலிட இரவு பன்னிரண்டுமணிக்குச் சிறிது முன்பாக அரண்மனையை அ ண் மி ன ர். அரண்மனையின் வெளிப்படலையில் அரசனுடைய மந்திரியொருவன் வந்து அழைக் கும் வரையும் நின்றனர். மந்திரிவந்தழைத்துச் சென்றதும் உட் படலையைத் தாண்டியபின் பிபுஸ் பாதரட்சையை களற்றிக்கொண்டு மேலும் அரண்மனை மண்டபத்திற்குட் புகுந்தான். பிபுஸ் தலைக்கு மேலுயர்த்திய தட்டத்துடன் உள்ளே செல்ல அவனுடன் ஆறு பேர்கள் கூடப்போயினர். அங்கே காணப்பட்ட திரைநீக்கப்பட்ட வுடன் முன்றடி உ ய ர மு ள் ள பீடத்தில் பொன்வேலைகள் நிட்

டப்பெற்ற சிங்காசனத்தில் அரசன் வீற்றிருக்கக்கண்டான். அவன் தேகத்தோடு ஒட்டிய பொன்வேலைகளால் அழகு செய்யப்பெற்ற அங்கியையும், அரையைச் சுற்றிப் பொன்னினூலிழைத்த வார் ஒன்றையுமணிந்திருந்தான். பக்கத்தில் ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட ஒரு சிறு வாளையும், தலையிலே இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற முடியையும், சிங்காசனத்தினருகே இரத்தினங்கள் அலங்கரிக்கப்பட்ட பிடியையுடைய பெரியவாள் ஒன்று இருப்பதையுங் கண்டான். பின்பு அரண்மனையிலுள்ள பிரதானிகள் ஆறு முறை சாஷ்டாங்கமாகவிழுந்து நமஸ்காரஞ் செய்தனர். பிபுஸ் ஒரு முளந்தாளில் நான்குமுறை நிற்கவேண்டியிருந்தது. பின்பு சிங்காசனத்துக்கு முன் விரிக்கப்பட்டிருந்த கம்பளத்தின் அருகே பிபுஸ் சென்று முளந்தாளிட்டு தான் கொண்டுவந்த கடிதத்தை அரசனிடங் கொடுத்தான். அதன்பின்னர் அவன் உட்காரும்படி பணிக்கப்பட்டான். சிங்காசனத்தின் அருகில் முளந்தாளிட்டுநின்ற அதிகாருக்கே அரசன் சொல்லவேண்டியவைகளைச் சொல்ல அவன் சாஷ்டாங்கஞ் செய்து பிபுஸ் என்பவனுக்குப் பக்கத்திலே நின்ற திசாவைக்குச் சொன்னான். இவைகள் மொழிபெயர்ப்பாளனுக்குத் தமிழிலே சொல்ல, அவன் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க, பிபுஸ் இன்னதென அறிந்தான்.

பிபுஸ் செய்த பிரயாணம் பயனற்றதாய்ப்போனது. பிரித்தானியர் ஒரு துறைமுகத்தை அரசனிடமிருந்து பெற்றுக்கொள்ளவும் இன்னும் வர்த்தக சலாக்கியங்களைப் பெற்றுக்கொள்வதற்கும் ஆவலாயிருந்தனரேயன்றி அரசனுக்கு உதவிசெய்ய ஆயத்தமாயிருக்கவில்லை. அரசன் அளிக்கும் சலுகைகள் இன்னவென்று கூறி அவைகளை ஆங்கிலேயருக்குக் கொடுத்தால் அவர்கள் ஒல்லாந்தரைத் துரத்துவதற்கு உதவிசெய்வார்களோவென்று கேட்டபொழுது, பிபுஸ் நிச்சயமான ஒரு பதிலும் சொல்லாதபடியால் அவன் ஒரு முடிவுஞ்செய்யாது திரும்பவேண்டியிருந்தது.

கண்டி அரசனுக்கும் கொம்பனிக்குமிடையில் பகைமை அதிகரித்தது. அரசன் கலகக்காரரைச் சார்ந்து சில பகுதிகளைத் தாக்கிக் கைப்பற்றியுள்ளான். அவ்வண்ணம் தம்வசப்படுத்திய இடங்களைத் திருப்பிக்கொடுக்கச் சம்மதித்திலன். ஒல்லாந்தரைத் துரத்துவதற்காக ஆங்கிலேயரின் உதவியைப்பெறும் நோக்கமும் அரசனிடமிருந்தது. ஆங்கிலேயரால் அனுப்பப்பட்ட பிபுஸ் என்ற தூதன்

**1762**-ல் கண்டிக்கு வந்ததும், தங்களுடைய ஆட்சி நிலைபெறுவதென்றால் கண்டியைக் கைப்பற்றவேண்டுமென கொம்பனி அதிகாரிகள் தீர்மானஞ்செய்தனர். **வான் எக்** என்ற தேசாதிபதி மாத்தறையிலுள்ள கோட்டையை அரண்செய்து சிலாபத்தையும் புத்தளத்தையும் கைப்பற்றினான். பின்பு கொம்பனிக்கு ஊழியசேவை புரிந்த முஸ்லிங்களுக்குச் சலுகைகள்காட்டி அவர்களையுங் கொண்டுள்ள பெருஞ்சேனையுடன் கண்டிக்குப் புறப்பட்டான் **(1763)**. ஆனால் படையெடுத்துச் சென்ற காலம் ஏற்றதாகவிருக்கவில்லை. பெரும் மழை பெய்ததினால் காடுகளுக்கூடாகச் செல்வது கஷ்டமாகவிருந்தது. யுத்த தளபாடங்களைக் கொண்டு செல்வதுங் கஷ்டமாகத் தோன்றிற்று. மலைகளுக்கு அண்மையில் சேனை சேர்ந்ததும் எதிர்ப்பு அதிகரித்தது. மறைவிடமிருந்து சிங்களப் போர்வீரர்கள் அதிகம் தாக்கியமையால் டச்சுச்சேனை கொழும்புக்குத் திரும்ப நேரிட்டது. மீண்டும் வெற்றிபெற்ற கண்டிமக்கள் பெருஞ்சந்தோஷமடைந்தனர். ஒல்லாந்தருடைய வீரத்திற்கும், கௌரவத்திற்கும் இது ஒரு இழுக்காகக் காணப்பட்டது. அதைத் துடைப்பதற்காக இன்னொருமுறை படையெடுத்துச் செல்லத் தீர்மானஞ் செய்தான். இந்தியாவிலும், பட்டேவியாவிலுமிருந்து பெருஞ் சேனையொன்றைத் திரட்டினான். கட்டுக்குளம், கொட்டியாரம் முதலிய பகுதிகளிலிருந்த வன்னியர்களைத் தன்பக்கஞ் சேர்த்தான். கண்டியில் நாயக்க அரசனுக்கு எதிர்ப்புக் காட்டியவர்களின் அனுதாபத்தைப் பெறமுயன்றான். **1765**-ல் இரு பகுதிகளிலிருந்து புறப்பட்டான். ஒன்று கொழும்பிலிருந்தும், மற்றது புத்தளத்திலிருந்தும் புறப்பட்டு குருநாக்கலிலே இரண்டுஞ் சந்தித்தன. முன்னேறிச்சென்ற சேனை கட்டுக்காஸ்தோட்டையைச் சேர்ந்தது. அரசனும், அரச குடும்பத்தினரும் ஓடி ஒளித்தனர். நகரம் அழிக்கப்படுவதைத் தடுப்பதற்காக அரசன் அவர்கள் கேட்பதெல்லாம் கொடுக்கச் சம்மதமென்று சொல்லித் தூது அனுப்பினான். அவர்களிடஞ் சென்ற அரசதூதன் ஏழு, நான்கு, மூன்று, கோறளைகளையும், சப்பிரகமுவாவையுங் கொடுப்பதாகக் கூறினான். அரசன் சரணாகதியடைந்து கொம்பனியின் மேலதிகாரத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றும், வருடந்தோறும் திறைசெலுத்த வேண்டுமென்றும் **வான் எக்** கேட்டான். அரசன் அவ்விதமான இழிவான நிலையை ஏற்கச் சம்மதிக்கவில்லை. உடனே நகரத்தைச் சூறையாடி அரண்மனைக்குட் புகுந்தான். அரசனிருக்குமிடத்தைக் கண்டுபிடிப்பதற்கு முயற்சிசெய்தான். அனுப்பிய படைகளெல்லாம் தோற்கடிக்கப்பட்டன. அரண்மனைக்குத் தீயிட்டுவிட்டு டச்சுத் தேசாதிபதி திரும்பினான். அவர்கள் திரும்பும்

போது காடுகள் பற்றைகளுக்கூடாக அம்புகள் போய்ச் சொரிந்தன. அதனுல் தத்தளித்து நின்றனர். அதைவிட நோயும் அதிகமாகத் தாக்கியது. **வான் எக்** கொழும்புக்குத் திரும்பவேண்டியிருந்தது. இச்சம்பவங்களினுல் மனவருத்தமடைந்த தேசாதிபதி சிறிது நாட்களில் இறந்தான்.

**வான் எக்** இறந்தபின் **இமான் விலெம் பால்க்** (1765-1786) என்பவன் தேசாதிபதியாக நியமிக்கப்பட்டான். நீடித்த யுத்தத்தின் காரணமாக கண்டி இராச்சியத்திலுள்ள நிலங்கள் பயிர்செய்யப் படாமையால் மக்கள் பஞ்சத்தினுல் வருந்தினர். கஷ்டத்தை மேலும் கூட்டுவதற்காக **பால்க்** தேசாதிபதி எல்லைப்புறங்களைச் சூறையாடி திருகோணமலை, புத்தளம் ஆகிய இடங்களிலிருந்து உள் நாட்டுக்குப் படையெடுத்துச்செல்ல ஆரம்பித்தான். துறைமுகங்கள் எல்லாவற்றையும் மூடி வெளிநாடுகளோடு கண்டியரசன் தொடர்பு வைத்திராவண்ணம் தடுத்தான். கஷ்டங்கள் அதிகரித்தமையால் அரசன் சமாதானஞ் செய்துகொள்ள விரும்பினுன். பால்க் கூறிய நிபந்தனைகள் கொம்பனிக்கு அதிகம் சாதகமாகவிருந்தன. காலி, மாத்தறை, கொழும்பு, யாழ்ப்பாணம் ஆகிய திசாவானிகளிலும் மன்னுர், கல்பிட்டி, திருகோணமலை, மட்டக்களப்பு ஆகிய பகுதிகளிலும் ஒல்லாந்தரின் ஆணையை அரசன் ஏற்றுக்கொண்டான். இலங்கையில் கரையோரங்களில் நான்கு மைல் அகலத்துக்கு கரை நிலங்களை அரசன் கொம்பனிக்குக் கொடுத்தான். கண்டி இராச்சியத்திலுள்ள வர்த்தகம், அங்கு கறுவா உரிப்பதற்கு அனுமதி, அங்கு வேண்டிய மரங்களைத் தறிப்பதற்கு அனுமதி ஆகிய சலாக்கியங்களையும் கொம்பனி பெற்றது.. உப்பளங்களுக்குப் போவதற்கு கண்டிமக்களுக்கு அனுமதியளிக்கக் கொம்பனியுடன்பட்டது. கடலோரப் பகுதிகளால் வருமானத்திலேற்படும் நட்டத்திற்காக வருடந்தோறும் நட்டஈடு அளிப்பதற்கு ஒல்லாந்தர் சம்மதப்பட்டனர். இலங்கையின் உள்நாட்டுப்பகுதிகளில் அரசனுடைய ஆணையை ஏற்றுக்கொண்டனர். கண்டியிலே தடுத்துவைக்கப்பட்ட ஐரோப்பியருக்கு விடுதலையளிக்க வேண்டுமென்றும், கண்டியிலிருந்து வெளியேறினவர்கள் திருப்பி அனுப்பப்படுவார்களென்றும் இரு பகுதியாரும் இணங்கிக்கொண்டனர். வெளியேயிருந்துவந்து அரசனைத் தாக்காமல் தாங்கள் பாதுகாத்துக்கொள்ளுவதாக டச்சுக்காரர் வாக்களித்தனர். ஒல்லாந்த அரச தூதுவர்கள் தன்னைக்காண வருஞ் சமயங்களில் அனுசரிக்கும் தாழ்மையான சன்மானங்களை அவர்கள் காட்டவேண்டியதில்லையென்றும் அரசன் கூறினுன்.

இவ்வுடன்படிக்கையின் பிரகாரம் அரசன் பிறநாட்டினரோடு தொடர்பு வைத்திருக்கமுடியாது. அதுவுமல்லாமல் கண்டிமக்களுக்கு வேண்டிய உப்பைப் பெறுவதற்கும் அவர்கள் கொம்பனியிலேயே தங்கியிருக்கவேண்டியதாயிற்று. அரசன் நிபந்தனைகளிற் சிலவற்றை மாற்றிவிடவேண்டுமென்று பன்முறை கேட்டும் அவர்கள் அதற்குச் சம்மதிக்கவில்லை. ஆகையால் உடன்படிக்கையை மீறிநடக்கவேண்டியதாயிற்று. அதைத் தடுப்பதற்கும் கொம்பனியிடம் போதிய படைப்பலமுமில்லை.

இவ்வுடன்படிக்கையின் பயனாகப் பெற்றுள்ள பகுதிகளுக்கு நிர்வாக ஒழுங்கை கொம்பனி ஏற்படுத்தியது. மட்டக்களப்பு, கொட்டியாரம், சிலாபம், புத்தளம் ஆகிய இடங்களுக்கு ஒரு உத்தியோகத்தர் நியமிக்கப்பட்டார். மாதம்பையிலுள்ள மிளகுத் தோட்டங்கள் கொம்பனியின் ஆட்சியில் வந்ததன்பின்பு, திருத்தி அமைக்கப்பட்டன. விவசாயத்தை விருத்திசெய்யும்பொருட்டு கால்வாய்கள் வெட்டப்பட்டன. உப்புச் செய்கையும் ஒழுங்காக நடைபெற்றது. உப்புநீரினால் பழுதடைந்த **முத்துராசவெலை** என்ற வயல்கள் மீண்டும் திருத்திவிடுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன. கோட்டையிலுள்ள அரசன் ஒருவனே நீர்கொழும்புக்குப் போகும் கால்வாயை வெட்டுவித்தான். அந்தக் கால்வாயின் உப்புநீர் விளைநிலங்களுட் சென்று அவைகள் பயிரிடுவதற்கு தகாதவைகளாய்ப் போயின. அவைகளைத் திருத்துவதற்குப் போர்த்துக்கீசர் முயன்றும் அனுகூலமடையவில்லை. இப்பொழுது ஒல்லாந்தர் அதிக பணஞ் செலவுசெய்து அந்நிலங்களைத் திருத்தியமைத்து நன்னீரினாற் பாய்ச்சுவதற்கு வரம்புகள், மதகுகள், கால்வாய்களை வெட்டிவிட்டனர். அந்நிலங்களை விவசாயிகளுக்குப் பயிரிடும் நிலங்களாகக் கொடுத்து வருமானத்தில் பத்திலொன்றை வரியாகவும், பத்திலொன்றை அதைத் திருத்திய செலவுக்காகவும் பெற்றனர். ஆனால் அவர்கள் செய்தவேலை சில வருடங்களுக்குள் பயனற்றதாய்ப் போனது. கறுவாச்செய்கையையும் விருத்திசெய்தனர்.

கீர்த்தி ஸ்ரீ இராசசிங்கன் 1782-ல் இறந்தான். இவனுடைய காலத்திலே சிங்களத் திசாவைகள் அதிருப்தி அடையத்தொடங்கினர். அரசனுக்கெதிரே சதிசெய்தனர். நாயக்கருடைய செல்வாக்கைக் கண்டு பொறாமைகொண்டனர். இவனுடைய காலத்திலேயே ஒல்லாந்தர் முதன்முதலாகக் கண்டிக்குப் படையெடுத்துச் சென்றனர். ஆனால் இவனுடைய காலத்திலே புத்தசமயப் புனருத்தார

ணம் தொடங்கியது. சூலுவம்சா இவனுடைய காலத்திலேயே எழு தப்பட்டது. அநேக விகாரைகளும் கட்டப்பட்டன.

இவ்வரசனுடைய சகோதரன் இராசஇராசசிங்கன் என்ற பெய ருடன் 1780-ல் அரசனுனன். அவன் இளம்பராயத்திலேயே கண் டிக்கு வந்தமையால் அவன் சிங்களவர் மத்தியிலேயே வளர்ந்து கல்வி பயின்றுவந்தான். அவன் அரசனுக வந்தபொழுது ஒருவ ராகுதல் எதிர்ப்புக் காட்டவில்லை.

இக்காலத்தில் கொம்பனியின் ஆட்சியிலுள்ள பகுதிகளில் சம யத்திலும், சமுதாயத்திலும் ஏற்பட்ட மாற்றங்களைப்பற்றி ஆராய் வோம். பால்க் தேசாதிபதி பரந்த மனப்பான்மையுடையன். சமயச் சகிப்புத்தன்மையுடையன். களனி, அத்தனக்காலே முதலிய இடங் களிலுள்ள புத்த வழிபாடுகளில் டச்சுக்காரர் தலையிடவில்லை. புத்த சமயத்தைப்பற்றி புத்தகுருமாரிடம் அவன் கேட்பதுண்டு. முஸ்லீங் களுக்கிடையே சமயமும், சட்டமும் தொடர்புடையனவாகையால் முஸ்லீங்களுடைய சொத்துரிமைபற்றிப் பண்டைக்காலந்தொட்டு வழங்கிவந்த முறைகளை எழுதுவித்து அவர்கள் அதைச் சட்டமா கக் கவனித்துவரவேண்டுமெனப் பணித்தான். கத்தோலிக்கரும் இதுவரையுமுள்ள கட்டுப்பாடுகளினின்று ஓரளவுக்கு நீங்கினர். யாழ்ப்பாணத்தில் இந்துசமய வழிபாட்டுக்குத்தடையாக முன்னிருந்த கட்டுப்பாடுகள் குறைக்கப்பட்டன. யாழ்ப்பாணத்தில் 20 வருடகாலம் வரை செலவழித்த ஒரு ஜேர்மன் வர்த்தகனுடைய மகனுன யோன்ஸ் கிறிஸ்தோபல் ஊல்ஸ் என்பவன் தன்னுடைய அனுபவங்களின் வர லாற்றை ஜேர்மன் பாஷையில் எழுதி ஒரு நூலை வெளியிட்டான் (1782). தமிழ்மக்கள் தன்னேடு அன்பாக நடந்துகொண்டனர். அவர்கள் தங்களுடைய முதாதைகளுடைய உடையையே அணிந் திருந்தனர். சாதிவித்தியாசத்தை நுணுக்கமாகக் கவனிப்பார்கள். சாதிகளின் உயர்வைக் காட்டுவதற்காகப் பட்டங்கள் அளிக்கப் பட்டன. அநேக வேளாளர் தங்களுக்குள்ளே உயர்ச்சிபெறுவதற் காக பணம் செலவழித்தும் அப்பட்டங்களைப் பெற்றனர். ஒரு குடும் பத்தில் தகப்பனே தலைவனுகும். தகப்பன் ஒழுங்குசெய்யும் விவா கத்தைப் பிள்ளைகள் தடையின்றி ஏற்றுக்கொள்வர். மகளுக்கு ஒரு கணவனைத் தேடிவைப்பது அத்தலைவனின் பிரதான கடமையாகும். உள்ள சொத்துக்களிற் பெரும்பாகம் சீதனமாகக் கொடுக்கப் படும். தமிழ்ப்பிள்ளைகள் கல்விகற்பதில் அதிகம் வேட்கையுடையர். இவ்வாறு **ஊல்ஸ்** கூறினுன்.

அமெரிக்க சுதந்திரப்போர் நடந்த காலத்தில் (1776 - 1783) ஆங்கிலேயர் ஒல்லாந்தருக்கெதிரே சண்டைதொடுத்தனர் (1780)

ஆகையால் ஒல்லாந்த வர்த்தகசங்கம் இலங்கையிலுள்ள பகுதிகளைப் பாதுகாக்கவேண்டியிருந்தது. கொழும்பு,காலி, யாழ்ப்பாணம், திருகோணமலை ஆகிய இடங்களைப் பாதுகாப்பதற்கு பெரிய சேனை தேவைப்பட்டது. அப்போது ஒல்லாந்தரிடமுள்ள சேனை ஐரோப்பிய போர்வீரர்களைக் கொண்டுள்ளது. ஆகையால் இலங்கையிலும் போர் வீரர்களைத் திரட்டினர்.

ஒல்லாந்துக் கெதிரே இங்கிலாந்து போர் தொடங்கியவுடன், மக்காட்னிப்பிரபு சென்னைத் தேசாதிபதியாக அனுப்பப்பட்டான். அவன் வந்தவுடன் ஒல்லாந்தருக் கெதிரே சண்டை செய்ய ஆரம்பித்தான். 1782ல் ஆங்கிலக் கடற்படையொன்று **எட்வேட் கியூஸ்** என்பவனின் தலைமையில் இலங்கைக்கு அனுப்பப்பட்டு அது திருகோணமலைக் கோட்டையையும் அதற்கு அண்மையிலுள்ள ஊஸ்ரின்பேர்க் கோட்டையையுங் கைப்பற்றியது. பின்பு மக்காட்னி கண்டி அரசனோடு ஒரு உடன்படிக்கை ஒன்றைச் செய்துகொள்ள விரும்பினான். திருகோணமலையிலிருந்து ஆங்கிலேயப்படைக்கு வேண்டிய உணவைப் பெறுவது மல்லாது ஒரு வேளை இங்கிலாந்தும் ஒல்லாந்தும் சமாதானஞ் செய்துகொள்ளும் நேரத்தில் திருகோணமலையைத் தங்களுடையவசம் வைத்திருப்பதற்கு அனுமதியைப் பெறும் நோக்கத்தோடேயே அவ்விதமான உடன்படிக்கையைச் செய்துகொள்ள விரும்பினான். ஆகையால் தன்னுடைய சொந்தக் காரியதரிசியாகிய **கியூ போயிட்** என்பவனைக் கண்டிக்கு அனுப்பினான். அவன் புறப்படுவதற்கு மூன்று நாட்களுக்கு முன்பாக பிரித்தானியரின் உதவியை வேண்டிநின்ற கீர்த்தி ஸ்ரீ இராசசிங்கன் இறந்தான். புதிய அரசனால் ஒரு தீர்மானமுஞ் செய்ய முடியவில்லை. திசாவைகளிற் சிலர் முதல் அதிகார் பதவிக்குப் போட்டியிட்டுக்கொண்டும், மற்றுஞ்சிலர் டச்சுக்காரரோடு இரகசிய உறவுகொண்டிருந்தனர். மேலும் ஆங்கிலேயர், அரசனோடு ஒரு விதமான பேச்சுவார்த்தையும் நடத்தாது தங்களிஷ்டப்படி திருகோணமலைக்கோட்டையைக் கைப்பற்றியதனால் அவர்களில் அரசனுக்குச் சந்தேகமுண்டானது. முன் நட்பாகவிருந்த ஒல்லாந்தரோடு அவசரமாகச் சண்டையிடுவதற்கு நியாயமென்னவென்று **போயிட்** என்பவனை அரசன் கேட்டான். இங்கிலாந்தரசனாலனுப்பப்பட்டாலல்லாது தான் ஒருவிதமான உடன்படிக்கையு மெழுதிக்கொள்ள விரும்பவில்லை யென்பதையும் அறிவித்தான். **போயிட்** திரும்பிப் போகும் வழியில் பிரான்சியருடைய கையிற் சிக்கினான். அப் பிரான்சியக் கப்பலின் தலைவனான **பேயிலி டீ சவரன்** என்பவன் ஒல்

லாந்தருக்கு உதவி செய்வதற்குவந்தமையால் திருகோணமலையை ஆங்கிலேயர் கைப்பற்றிவிட்டனரென்று அறிந்தவுடன் அங்கு சென்று திருகோணமலைக் கோட்டையையும், ஊஸ்ரின்பேர்க் கோட்டையை யுங் கைப்பற்றினுன். இரு கோட்டைகளும், பிரான்சியருடைய கையில் 1783 வரையும் இருந்தன. அவ்வாண்டிலே அவைகள் ஆங்கிலேயருக்குக் கொடுக்கப்பட்டு பின் ஒல்லாந்தருக்கு மீண்டும் அவர்களாற் கொடுக்கப்பட்டன.

இதற்கிடையில் இராசாதி இராசசிங்கனுக்கும் ஒல்லாந்தருக்கு மிடையில் பகைமை யேற்பட்டது. ஆங்கிலேயர் இலங்கைக்கு வந்தமையால் அரசனுடைய நட்பைக் கொம்பனி விரும்பி அரசன் சிங்காசனமேறியதைப்பற்றித் தாங்கள் சந்தோஷமடைந்திருப்பதாக அவனுக்கு அறிவிக்க ஒரு தூதனை அனுப்பியது. தூதன் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரிக்க வேண்டுமென அரசன் விரும்பினமையால் அவ்விதம் தூதுவன் செய்தான். பின்பு முந்திய அரசனுல் கொம்பனிக்குக் கொடுக்கப்பட்ட கரையோரப் பகுதியைத் திருப்பிக்கொடுக்கும்படி இராசசிங்கன் கேட்டபொழுது கொம்பனி அதற்கு மறுத்தது. அதனுல் கோபங்கொண்ட அரசன் எல்லைப் புறத்திலுள்ள முள்ளுப்படலைகளை மூடிவிட கொம்பனியும் அவ்விதஞ் செய்தது. அதனுல் அரசனுக்கு வர்த்தகத்தை நடத்தவும், உப்பைப்பெற்றுக் கொள்வதற்கும் கஷ்டமேற்பட்டது. 1792-ல் **வான் டி கிராவ்** என்பவன் டச்சுத் தேசாதிபதியாக நியமிக்கப்பட்டான். கண்டியரசன் பிரான்சியரோடு நட்புக்கொள்ள எத்தனித்ததை அறிந்து டச்சுத் தேசாதிபதி கண்டிக்குப் படையெடுத்துச் செல்ல ஆயத்தஞ் செய்தான். ஆனுல் பட்டேவியாவிலுள்ள அதிகாரிகள் அதற்கு அனுமதி அளிக்காது அரசனேடு சமாதான முறையில் நடந்துகொள்ளும்படி தெரிவித்தனர். கொம்பனியிலேயே உப்பைப் பெறுவதற்குத் தங்கியிருந்த அரசன் முள்ளுப்படலைகளைத் திறந்துவிட அவர்களும் அவ்வண்ணஞ் செய்தனர். அரசனுடைய இராச்சியத்திற்குச் சென்று அவனுடைய உத்தரவைப் பெற்றுக் கறுவாவைப் பெற விருப்பமில்லாத கொம்பனி அதிகாரிகள் கறுவாப்பயிரை எங்குமுண்டாக்குவதற்கு முயற்சி செய்தனர். விவசாயத்தை விருத்திசெய்வதற்கு முயற்சி செய்தனர். மன்னுருக்குச் சமீபத்திலுள்ள இராக்ஷத குளத்தைத் திருத்தி யமைத்தனர். வன்னியில் மரவள்ளி உண்டுபண்ணினர். காலுகங்கைக் கரைப் பகுதியில் கரும்பை உண்டாக்கினர்.

1784-ல் இங்கிலாந்துக்கும் ஒல்லாந்துக்குமிடையில் ஒரு உடன் படிக்கை எழுதப்பட்டது. அதன் பிரகாரம் இருபகுதியாரும் ஒருவர்க்கொருவர் உதவிசெய்ய ஆரம்பித்தனர். ஒல்லாந்தருக்கும் கொச்சியிலுள்ள அரசனுக்குமிடையில் பிரித்தானியர் சமாதானத்தைக் கொண்டுவந்தனர். இந்தியாவில் ஆங்கிலேயர் நடத்திய சண்டைகளுக்கு டச்சுக்காரர் போர்ப்படைகளை அனுப்பி உதவி செய்தனர்.

## வினக்கள்

1. கீர்த்தி ஸ்ரீ இராசசிங்கன் ஆரம்பத்திற் பெற்ற வெற்றிகளைப் பயன்படுத்தி ஒல்லாந்தரைத் துரத்தி விடுவதற்கு முயற்சிகள் செய்யாதிருந்ததற்குக் காரணங்கள் யாவை?

2. 1762ல் ஒல்லாந்தர் கண்டிக்குப் படையெடுத்துச் சென்றதற்குக் காரணம் என்ன? அதனாலேற்பட்ட விளைவுகள் யாவை?

3. பிபுஸ் கண்டிக்குச் சென்ற வரலாற்றை விபரிக்குக.

4. 1765ல் ஒல்லாந்தர் பெற்ற வெற்றிகள் யாவை? அவைகளால் உண்டான பலன்கள் நீடித்திராமைக்குக் காரணங்கள் யாவை?

5. 1766-ல் ஒல்லாந்தருக்கும் கண்டியரசனுக்குமிடையில் எழுதப் பட்ட உடன்படிக்கையின் நிபந்தனைகளை ஆராய்க.

6. ஒல்லாந்தருடைய ஆட்சியின் பிற்பகுதியிலே காணப்பட்ட சமுதாய சமய மாற்றங்களைக் குறிப்பிடுக.

---

# 7. ஒல்லாந்தர் ஆட்சியின் தேய்வும் அதனுலேற்பட்ட பலன்களும்

நூருண்டுகளுக்குமேல் இலங்கையில் ஆட்சிபுரிந்த ஒல்லாந்தருடைய அதிகாரம் தேய்வுற்றதற்குப் பல காரணங்களுள. ஐரோப்பாவில் ஸ்பானியர், போர்த்துக்கீசருடைய பலம் குன்ற ஒல்லாந்து தேசம் கைத்தொழிலிலும் வர்த்தகத்திலும் விருத்தியடைந்து கீழ்த்திசையிலும் வர்த்தக தலங்களேயும், குடியரசுகளேயும் தாபித்தது. அரசனுக்கும் பாராளுமன்றத்துக்கும் இடையிலுண்டான முரண்பாட்டினுல் இங்கிலாந்து வேறுவிஷயங்களிற் தலேயிட முடியாமலிருந்தது. பிரான்சும் ஐரோப்பிய யுத்தங்களிலீடுபட்டிருந்தது. அவ்விருநாடுகளும் உள்நாட்டு விஷயங்களேத் தீர்த்துவிட்டபின் அமெரிக்காவிலும் கீழ்த்திசையிலும் தங்களுடைய கவனத்தைச் செலுத்தினர். ஆகையால் ஒல்லாந்தர் தங்களுடைய ஆதிக்கத்தை நீடித்து நிலேநாட்ட முடியாமற்போனது. ஆங்கிலேயரும் கீழ்த்திசையில் வர்த்தகஞ்செய்வதற்கு வந்த காலத்தில் ஒல்லாந்தருக்கும் அவர்களுக்குமிடையில் கடற்சண்டைகள் நடந்தன. ஈற்றில் ஆங்கிலேயரே வெற்றிபெற்றனர். ஆகையால் இரு நாடுகளின் பொருளாதார, அரசியல், இராணுவபலத்தை ஒப்பிட்டுப் பார்க்கவேண்டும்.

1794ல் நெப்போலியன் ஒல்லாந்தைக் கைப்பற்றி ஒரு குடியரசை அங்கே தாபித்தமையால், அக்குடியரசு அரசாங்கமே கீழ்த்திசையில் ஒல்லாந்தரின் வர்த்தகசங்கத்தின் ஆட்சியிலுள்ள நிர்வாகத்தையும் மேற்பார்வையிட வேண்டியதாயிற்று. ஆனுல் ஒல்லாந்தில் புதிதாக ஏற்படுத்தப்பட்ட அரசாங்கத்தை ஸ்திரப்படுத்த வேண்டியதவசியமாகையால் ஏனேய விஷயங்களிற் கவனஞ்செலுத்த முடியாமற்போனது. ஆனுல் இங்கிலாந்துக்கோ அவ்வித கஷ்டமொன்றுமில்லே. அக்காலத்தில் அந்நாட்டின் அரசாங்கமும் பலமடைந்திருந்தது. ஆகையால் கீழ்த்திசை வர்த்தகத்தைக் கைப்பற்றிக்கொள்வது சுலபமும் வசதியாகவுமிருந்தது. ஒல்லாந்தர் நடத்திய கடற்சண்டைகளினுலேற்பட்ட நட்டத்தினுலும், கொம்பனியின் நிர்வாகச் சீர்கேட்டினுலும், கொம்பனிக்கு அதிக பணநஷ்டம் ஏற்பட்டது. அதிகம் ஆதாயத்தைப் பெற்றுக்கொள்ளும் நோக்கம் கொம்பனிக்கிருந்ததல்லாது நிர்வாகத்தைப் பலப்படுத்தவோ, அல்லது பாதுகாப்புக்காக பெரிய சேனேப்படையையோ, கடற்படையையோ வைத்திருப்பதிற் சிரத்தை எடுக்கவில்லே. ஆனுல் பிரித்தானியர

கைத்தொழிற்புரட்சியின் பயனுகச் செல்வமுற்றதினுல் கீழ்த்திசை யிற் சண்டைசெய்வதற்கு வேண்டிய போர்ப்படைகளைத் தயாரிக் கக்கூடியதாகவிருந்தது. மேலும் இங்கிலாந்து கடற்படைப் பலத்தி னுல் கடலாதிக்கத்தையும் பெற்றிருந்தது. ஆகையால் பிரித்தானியர் பொருளாதார, அரசியல், இராணுவ பலத்தைக்கொண்டு அவ்வகை களிற் பலம் குன்றிய ஒல்லாந்தரை தோற்கடிப்பது சுலபமாகக் காணப்பட்டது.

இனி, கீழ்த்திசையிலுள்ள ஒல்லாந்த வர்த்தகசங்கத்தின் நிலையை ஆராய்ந்து பார்ப்போம். கொம்பனியின் உத்தியோகத்தர்களிடையே பல குறைகள் காணப்பட்டன. அவர்களுக்குக் குறைந்த சம்பளம் கொம்பனியால் அளிக்கப்பட்டமையால் அவர்கள் தங்களுடைய சொந்த ஆதாயத்திற்காக வியாபாரத்திலீடுபட்டிருந்தனர். கொம் பனிக்கும் தங்களுக்கும் ஆதாயத்தைப் பெற்றுக்கொள்வதே அவர் களுடைய நோக்கமாகவிருந்தபோதிலும், கொம்பனிக்கு நட்டமேற் பட்டபொழுதிலும் தங்களுடைய நலத்தைப் பாதிக்காவண்ணம் நடந்துகொண்டனர். கொம்பனியினுடைய ஆட்சி தொடங்கிய காலத் தில் ஊக்கமுடையவர்களாக விருந்தபொழுதிலும் பிற்பகுதியில் முயற்சிக் குறைவுடையவர்களாகக் காணப்பட்டனர்.

கண்டியரசனேடு நடந்துகொண்டவகையிலும் அவர்கள் கொம் பனியின் ஆதாயத்தைப் பெருக்குவதிலேயே கண்ணுங்கருத்துமாக இருந்தனர் என்பது வெளிப்படை. நாட்டின் வர்த்தகத்தைக் கைப் பற்றுவதற்காக அரசனுக்குதவிசெய்வதுபோற் காட்டிப் போர்த்துக் கீசரைத் துரத்துவதில் முனைந்துநின்றனர். **கோஸ்டர், டிவேட்** என் பவர்கள் கொல்லப்பட்டதையும் கவனியாது, சுயநலத்தையே பெரி தென நினைந்து, அரசனேடு செய்துகொண்ட உடன்படிக்கையை யும் (1638) மீறி, வெகுமதிகளைக் கொடுத்து அரசனைச் சாந்தப் படுத்தி ஆட்சிபுரியலாயினர். இவ்வகையான செய்கைகளினுல் கண்டி அரசர்களின் பகைமையையும் எதிர்ப்பையும் பெற்றனர். அரசர் களுடைய ஆதரவைப் பெற்றிருந்தால் அவர்களைத் துரத்திவிடுவ தற்குக் கண்டியரசர்கள் முயற்சிசெய்திருக்கமாட்டார்கள். அந்நிய ரும் வருவதற்கிடமில்லை. அவர்கள் ஆட்சிபுரிந்த பகுதிகளிலுள்ள சிங்கள மக்களும் அவர்களை வெறுத்தனர். பெரும் ஆதாயத்தினுல் மக்கள் வெறுப்படையத்தக்க வரிகளையும் விதித்து, கடுமையான சட்டங்களையுமுண்டாக்கினர். அடிக்கடி ஏற்பட்ட கலகங்களிலிருந்து அவர்கள்மீது மக்களுக்கிருந்த வெறுப்புத் தெரியவருகிறது. நாட்

டிலே "இராசகாரியா" முறையும், சாதிக்கட்டுப்பாடும் காணப்பட்டமையால் அவைகளைத் தங்களுடைய நன்மைக்காகப் பாவித்தனர். கொம்பனியிலுள்ள உத்தியோகத்தர்கள் அம்முறைகளைக்கொண்டு கொம்பனிக்கு வேண்டிய சேவைகளை தாட்சணியங்காட்டாது செய்வித்தனர். சம்பளமுள்ள நிர்வாகப் பதவிகளைச் சுதேசிகளுக்குக் கொடுக்காமல், குறைந்த பதவிகளை மாத்திரம் கொடுத்து அவர்கள் புரிந்த கடமைகளுக்கு வேதனமொன்றுமளியாது நிலங்களை மாத்திரம் ஈந்தனர். முஸ்லிங்கள், செட்டிகளிடம் "ஊழியம்" என்று சொல்லப்படுஞ் சேவையைச் செய்வித்தனர். ஆகையால் இவ்வகையான நிலையில் ஆங்கிலேயர் இலங்கைக்குவர ஒல்லாந்தருடைய ஆட்சி அற்றுப்போனது.

நூருண்டுகளுக்குமேல் நடந்த ஆட்சியின் பலன்களை இனி ஆராய்வோம். போர்த்துக்கீசருடைய காலத்திலே கண்டியரசர்களுக்கும் போர்த்துக்கீசருக்குமிடையில் இடையருச்சண்டை நடைபெற்றது. ஆகையால் நாட்டில் அமைதியின்மை காணப்பட்டது. ஆனல் ஒல்லாந்தரோ சண்டையை முற்ருக விலக்கி சமாதான முறையையே கையாண்டனர். அதனுல் இராச்சியத்தில் அமைதியும் ஆறுதலும் காணப்பட்டன. மக்கள் தங்களுடைய தொழிலிற் கவனஞ்செலுத்தக்கூடியதாகவிருந்தது. அவர்களுடைய காலத்தின் பிற்பகுதியிலொருமுறைதான் அவர்கள் கண்டிக்குப் படையெடுத்துச்சென்றனர். ஒல்லாந்தருடைய ஆட்சியிலுள்ள பகுதிகளில் வசித்த மக்கள் ஒல்லாந்தருடைய முயற்சிகளினுல் ஏற்பட்ட கைத்தொழில், கமத்தொழில்களினுல் அதிக நன்மையைப் பெற்றனர். டச்சுக்காரர் பலவிடங்களிலும் கறுவா, நெல், மிளகு, தென்னை, கோப்பி முதலியவற்றைச் செய்கைபண்ணினர். மொறட்டுவாப் பகுதியில் தச்சுவேலையைத் தொடக்கிவைத்தார்கள். யாழ்ப்பாணத்தில் சாயங்காய்ச்சும் தொழிலைத் தொடங்கினர். அப்பகுதியிலும் வன்னியிலும் புகையிலை, பருத்திச்செய்கையை ஆரம்பித்தனர். புத்தளத்துக்கும் கொழும்புக்குமிடையிலுள்ள கால்வாயைத் திருத்தியமைத்தனர். முத்துராசவெலாத் திட்டத்தைப் பூர்த்திசெய்தனர். நெற்செய்கையை ஊக்கப்படுத்தினர். போக்குவரத்து வசதிகளையுண்டாக்கி அதன்பயனக வியாபாரத்தை விருத்திசெய்தனர். பிரதான பட்டணங்கள் வீதிகளாற் தொடுக்கப்பட்டன. கடதாசியை முதன்முதல் இலங்கையில் உபயோகித்தவர்களும், அச்சியந்திரத்தை இலங்கைக்குக் கொண்டுவந்தவர்களும் டச்சுக்காரராகும். அதனுல் மக்களதிக பயனடைந்

தார்கள். குஷ்டரோகிகளுக்காக ஹெந்தலையில் ஒரு வைத்தியசாலையைக் கட்டிவிட்டனர்.

போர்த்துக்கீசர் பிரதான துறைமுகங்களிலே சிறந்த கோட்டைகளைக் கட்டினர். சிங்களவர், போர்த்துக்கீசர், பிரான்சியர், பிரித்தானியர் ஆகியோருடைய தாக்குதலை டச்சுக்காரர் எதிர்ப்பதற்கு வலிய கோட்டைகளைக் கட்டினர். போர்த்துக்கீசரின் கோட்டைகளைத் திருப்பிக் கட்டியபொழுது அக்காலத்திற்கேற்ற போர் ஆயுதங்கள் பீரங்கிகளை ஆங்காங்கே வைத்தனர். கொழும்பு, யாழ்ப்பாணம், காலி ஆகிய இடங்களிலேயே பெரிய கோட்டைகளைக் கட்டினர். **வான் எக்** என்ற தேசாதிபதியே மாத்தறையிலுள்ள கோட்டையைக் கட்டினுன். புத்தள வியாபாரத்தைப் பாதுகாப்பதற்காகக் கற்பிட்டியிலும், யாழ்ப்பாணத் துறைமுகத்தைக் காப்பாற்றுவதற்காக ஊர்காவற்றுறையிலும் கோட்டைகளைக் கட்டினர். இவ்விதமாக மட்டக்களப்பு, திருகோணமலை, களுத்துறை, நீர்கொழும்பு ஆகிய இடங்களிற் கோட்டைகளைக் கட்டினதோடு, உள்ளூரிலிருந்து சிங்களப் படைகள் தங்களைத் தாக்காதவண்ணம் இடையிடையே சிறு கோட்டைகளையுங் கட்டினர். அவர்களுடைய ஆட்சியின் அறிகுறியாக அவர்கள் கட்டிய கோட்டைகள் சிலவற்றை இன்றுங் காணலாம். அக்கட்டிடங்கள் கிரேக்க சிற்பமுறையைத் தழுவியே கட்டப்பட்டன. யாழ்ப்பாணம், காலி ஆகிய இடங்களிற் கட்டப்பட்ட தேவாலயங்கள் அச்சிற்ப முறைப்படியே கட்டப்பட்டன. கொழும்பு, ஆதிருப்பள்ளித்தெருவிலுள்ள ஆலயம் இத்தாலிய சிற்பமுறையையும் அனுசரித்துக் கட்டப்பட்டது. டச்சுக்காரரின் ஆட்சியின் சின்னமாக இன்றைக்கும் விளங்குகின்ற அவர்களுடைய கோட்டைகளும், கட்டிடங்களும், தேவாலயங்களும், உரோமன்-டச்சுச் சட்டமும், டச்சுக்காரரின் சந்ததியாரும், ஆகிய இவைகளெல்லாம் பிரித்தானியராலேயே பாதுகாக்கப்பட்டன. போர்த்துக்கீசருடைய ஆதிக்கத்தின் பின் காணப்பட்டவைகளெல்லாம் ஒல்லாந்தராற் சிதைக்கப்பட்டன. ஆனல் ஆங்கிலேயர் ஒல்லாந்தர் காலத்திலுள்ளவைகளைப் பாதுகாத்தனர். ஒல்லாந்தர் ஆட்சியினுல் ஏற்பட்ட பலன்களுள் நிரந்தரமாக இந்த நாட்டில் இடம்பெற்றது, உரோமன்-டச்சுச் சட்டமாகும். நாட்டிலுள்ள பண்டைக்காலச் சட்டங்கள், வழக்கங்களோடு அவர்கள் புகுத்திய உரோமன்-டச்சுச் சட்டங்கள் இடம்பெற்று இன்றும் நாட்டில் வழங்கிவருஞ் சட்டங்களுக்கு அடிப்படையாகக் காணப்படுகின்றன. வர்த்தகம் விருத்தியடைய, மக்களுடைய கொள்கை

களும் மாறுதலடைய, அதனுல் சமுதாயக் கட்டுப்பாடுகளும் வித்தியாசப்பட பழைய காலந்தொட்டு வழங்கிவந்த முறைகள் நாளடைவில் அற்றுப்போயின. அம்மாறுதல்களுக்கேற்ற சட்டங்கள் உரோமன் - டச்சுச் சட்டங்களிற் காணப்பட்டன.

போர்த்துக்கிசர் கத்தோலிக்க சமயத்தையும், டச்சுக்காரர் புரட்டஸ்தாந்து சமயத்தையும் இலங்கை மக்களிடத்துப் பரப்பி ஐரோப்பிய நாகரிகத்தையும் பரப்பிவிட்டனர். போர்த்துக்கீசச் சமயப்பிரசார முயற்சிகளின் பலனைப்போல் டச்சுத் திருச்சபையின் பிரசாரம் அதிகம் நிலைக்கவில்லை. போர்த்துக்கீசரைப்போல் சமயக்குருமார்கள் இவர்களிடத்திலில்லை. பாடசாலைகளின் மூலமாகவே பிரசாரத்தை நடத்திவந்தனர். மக்களிடையே சகோதரத்துவக் கொள்கையையுண்டு பண்ணி அவர்கள் விட்டமையால் சாதிக்கட்டுப்பாடு ஓரளவிற்குக் குறையத்தொடங்கியது. இதைவிட உரோமன்-டச்சுச் சட்டம் சமத்துவக் கொள்கையும் பரவுவதற்கு உதவியாக இருந்தது. ஓரளவு அவர்களுடைய சமயப்பிரசாரம் புத்தசமயம், இந்துசமயம், கத்தோலிக்க சமயத்தையும் பாதித்தது. ஒழுங்கான கல்விமுறையையும் அவர்களே முதன்முதலாக நிறுவினரெனலாம். அதனுலே மக்களிடையே கல்வி பரவத்தொடங்கியது. டச்சுத் திருச்சபையைச் சேர்ந்தவர்களுக்கு அவர்கள் விசேஷ சலுகைகளைக் காட்டி அரசாங்க உத்தியோகங்களையுங் கொடுத்து, அவர்களிடமிருந்து குறைந்த வரியையும் அறவிட்டனர். அதனுலே அநேகர் அச்சலுகைகளைப் பெறுவதற்காக ஞானஸ்நானம் பெற்று போலிக்கிறீத்தவர்களாக நடந்து வந்தனர்.

பொருளாதார அபிவிருத்திக்கு டச்சுக்காரர் அதிக வேலைசெய்தனர். டச்சுக்காரர் கறுவா, மிளகு, கோப்பித் தோட்டங்களை உண்டாக்கினதன் பயனுகவே இலங்கையில் விவசாயவிருத்தி உண்டானதெனலாம். தங்களுடைய ஆட்சியிலுள்ள பகுதிகளுக்குத் தேவையான உணவுப்பொருள்களை உண்டுபண்ணினர். வர்த்தகவிருத்தியும் இவர்களுடைய காலத்தில் ஏற்பட்டது.

போர்த்துக்கீசப் பாஷையையும், நடை, உடை, பாவனைகளையும் இலங்கை மக்கள் கைக்கொண்டனர். வெகுசிலரே டச்சுப் பாஷையையும் அவர்களுடைய பண்பாட்டையும் பயின்றனர். இருந்தும் டச்சுப் பாஷையிலுள்ள சொற்கள் சுதேசபாஷைகளில் இடம்பெற்றன. போஞ்சி, லாச்சி, வெந்தீசு, கக்கூசு, நொத்தாரிசு ஆகிய சொற்கள் டச்சுப்பாஷையிலிருந்தே வந்தன. அச்சியந்திரம் தாபிக்கப்பட்டு கிறீத்தசமய புத்தகங்கள் சிங்கள மொழியிலும், தமிழ்

மொழியிலும் எழுதி வெளியிட்டதன் பின்பே அம்மொழியிலுள்ள சொற்கள் சில சுதேசமொழிகளில் இடம்பெற்றன.

போர்த்துக்கிசரும் ஒல்லாந்தரும் வருவதற்கு முன்பாக இந்திய நாகரிகத்தைப் பின்பற்றிய இலங்கை மக்கள் அவர்களுடைய வருகையால் ஐரோப்பிய நாகரிகத்தை மேற்கொள்ள ஆரம்பித்தனர். அவ்விதமான மேனாட்டு நாகரிகம் இந்நாட்டில் பல மாற்றங்களை உண்டுபண்ணிவிட்டது.

## வினாக்கள்

1. ஒல்லாந்தருடைய ஆட்சி பலம் குன்றியதற்குரிய காரணங்களை ஆராய்க.
2. "கண்டியரசர்களின் ஆதரவைப் பெற்றிருந்தால் ஒல்லாந்தருடைய ஆட்சி நீடித்திருக்கும்" இக்கூற்றை ஆராய்க.
3. ஒல்லாந்தருடைய ஆட்சியினாலேற்பட்ட பலன்கள் யாவை?

---

# பிரித்தானியர் காலம்
# (1796—1948)

## 1. பிரித்தானியர் வருகை

பதினாறும் நூற்றாண்டு தொடக்கம் நாலு நூற்றாண்டுகளுக்கு மேலாக இலங்கையில் அந்நியருடைய ஆதிக்கம் நிலவியது. போர்த்துக்கீசர், ஒல்லாந்தர், பிரித்தானியர் முறையே ஆட்சிபுரிந்து வந்தனர். பிரித்தானியர் ஆட்சிபுரிந்த பத்தொன்பதாம் இருபதாம் நூற்றாண்டுகளே இலங்கைச் சரித்திரத்தில் முக்கியமான பகுதியெனச் சொல்லலாம். அக்காலத்திலேயே பொருளாதார, சமுதாய, அரசியற் சீர்திருத்தங்கள் காணப்பட்டன. அவைகள் மக்களுடைய வாழ்க்கையை பாதித்து விட்டன. அப்பகுதிகளிற் தோன்றிய மாற்றங்களே தற்போது இலங்கை யிருக்கின்ற நிலைக்குக் காரணமாக விருந்தன. ஆகையால் அக்காலச் சரித்திரத்தைப்பற்றி அறிதல் வேண்டும்.

பிரித்தானியருடைய ஆதிக்கம் இங்கே ஆரம்பமாவதற்கு முன் அவர்களுக்கு இலங்கையோடிருந்த தொடர்பைப்பற்றி ஆராய்தல் வேண்டும். 1588-ல் முதன் முதலாக இலங்கைக்கு வந்த **ரால்வ் பிட்சு** என்ற ஆங்கில வர்த்தகனும், இருவருடங்களின் பின்வந்த **யேம்ஸ் இலங்காஸ்டர்** என்ற ஆங்கில மாலுமியும் காத்திராப் பிரகாரமாக இங்குவந்தனர். இலங்கை ஒருவளம் மிகுந்த நாடென்றும், அந்நாட்டரசனுக்கும் போர்த்துக்கீசருக்குமிடையில் இடையறுப் போர் நடந்தமையினுல் உணவுக் கஷ்டம் ஏற்பட்டதெனவும் **பிட்சு** கூறியுள்ளான். இலங்கைக்கு வந்து தனது காலத்தைச் செலவழித்து இங்கேயே இறந்தவனும் (1629), யாழ்ப்பாணத்தில் சமயப் பிரசாரகனுயிருந்தவனும் **அன்றூ** என்பவனுகும். இவர்களைவிட ஒல்லாந்தருடைய சேனையில் சம்பளத்திற்காகப் போர்ச் சேவை செய்த ஆங்கிலேயருமிருந்தனர். 1659-ல் "பார்சியா வர்த்தகன்" என்ற உடைந்த கப்பலிலுள்ள 13 பிரயாணிகள் கண்டியரசனுடைய இராச்சியத்திலுள்ள கற்பிட்டியிற் கரையேறிய பொழுது அவர்கள் அரசனுடைய திசாவைகளால் கண்டிக்குக் கொண்டுசெல்லப்பட்டனர். கண்டி அரசனுகிய இராசசிங்கன் அவர்களை அங்கிருந்து வெளியேற அனுமதி கொடுக்கவில்லை. அடுத்த ஆண்டில் வர்த்தகத்தின்பொருட்டு "ஆன்" என்ற ஆங்கிலக் கப்பலொன்று கொட்டி

யாரத்தை வந்துசேர்ந்தது. கண்டியரசனுகிய இராசசிங்கன் அங்கு வந்த ஆங்கிலேயர்மூலம் பிரித்தானிய கிழக்கிந்திய சங்கத்தாரோடு தொடர்பு வைக்கலாமென எண்ணி அவர்களை அழைத்துவரும்படி ஒரு திசாவையை அனுப்பினுன். கொட்டியாரத்துக்குச் சென்ற அத் திசாவையால் மாலுமிகளின் தலைவனுன **ரெபேட் நொக்ஸ்** என்பவனும் அவனுடைய மகன் நொக்ஸ் என்பவனும் வேறும் சிலரும் வலோற்காரமாகக் கண்டிக்குக் கொண்டுசெல்லப்பட்டனர். அவர்கள் வெளியேற அரசன் அனுமதி அளிக்காமையால் அவர்கள் கண்டியிலேயே தங்கியிருக்கவேண்டியதாயிற்று. சிலகாலஞ் சென்றபின் ரெபேட் நொக்ஸ் இறந்தான். அவனுடைய மகன் நொக்ஸ் 18 வருடங்களின்பின், **ஸ்ரீபின் றட்லன்ட்** என்ற இன்னெரு ஆங்கிலேயனேடு தப்பிச்சென்ருன். பின்பு ஒல்லாந்தருடைய உதவியுடன் பட்டேவியாவுக்குச் சென்று, அங்கிருந்து இங்கிலாந்துக்குப் புறப்பட்டான்.

இனிச் சென்னையிலுள்ள பிரித்தானிய கிழக்கிந்திய சங்கத்துக்கும் கண்டியரசர்களுக்கு மிடையில் ஏற்பட்ட தொடர்பைப்பற்றி ஆராய்வோம். பதினெட்டாம் நூற்ருண்டில், பிரதானமாக ஏழாண்டு யுத்தம் நடைபெற்ற காலத்தில் (1756-1763) ஆங்கிலேயரும் பிரான்சியரும் இந்தியாவிற் தத்தம் ஆதிக்கத்தை நிலைநாட்டுவதற்காக இடையருப் போரை நடத்தினர். அச்சண்டையிலீடுபட்டிருந்தமையினுல், இலங்கையின் கறுவா வியாபாரத்தைப்பற்றிச் சிந்திக்கவில்லை. இருந்தும் 1759 வரையில் இலங்கையின் முக்கியத்துவத்தைப்பற்றியுணர்ந்தனர். அக்காலத்தில் இந்தியாவின் கீழ்த்திசையிலுள்ள பகுதிகளைக் கைப்பற்றுவதற்காகச் செய்த சண்டைகள் வங்காளவிரிகுடாவில் நடைபெற்றன. இந்தியாவின் கீழ்த்திசையில் கடற்படை வைத்திருக்கக்கூடிய தகுந்த துறைமுகமில்லாமையினுற் சண்டையிற் பழுதுபட்ட கப்பல்கள் திருத்தப்படுவதற்காகப் பம்பாய்க்குக் கொண்டுபோகப்பட்டன. அதுவுமல்லாமல், வடகிழக்குப் பருவக்காற்று அடிக்கும் காலத்தில் உண்டாகும் புயலின் காரணமாக கப்பல்கள் மேற்குப்பக்கத்திற்குக் கொண்டுபோகப்பட்டன. அங்கு கொண்டுசெல்லப்பட்ட கப்பல்கள், சித்திரைமாதம் அப்பருவக்காற்று முடியுங் காலமாகையால், அதுவரைக்கும் பம்பாயில் தங்கிநிற்க வேண்டியதாயிற்று. அத்தருணத்தில் பிரான்சியருடைய கடற்படையொன்று அங்குசென்று, தரைப்படையின் உதவியுடன் சென்னையைத் தாக்கியது. பிரித்தானியருடைய கடற்படை உதவியளிக்க முடியாமற்போனது. இவ்விடர்ப்பாடுகளைத் தடுக்க வங்காளவிரிகுடா

வில் வசதியான ஒரு துறைமுகம் ஆங்கிலேயருக்குத் தேவைப்பட்டது. அக்காலத்தில் டச்சுக்காரர் கையிலிருந்த திருகோணமலையே சிறந்த துறைமுகமாகக் காணப்பட்டது. அதைக் கைப்பற்ற முடியாவிட்டால் கண்டியரசனுடைய ஆட்சியிலிருந்த இலங்கையின் கீழ்த்திசையிலுள்ள இன்னொரு துறைமுகத்தையாகுதல் அவர்கள் தேடிக்கொள்ள வேண்டியதாயிற்று. அவ்வேளையில் அவர்களுடைய அதிட்டமென்று கருதக்கூடியதாக கண்டியரசனான கீர்த்தி ஸ்ரீ இராசசிங்கன் (1747 - 1782) டச்சுக்காரரை இந்த நாட்டிலிருந்து துரத்துவதற்காக ஆங்கிலேயரின் உதவியைக் கோரினன் (1761). அந்நேரத்தில் ஆங்கிலேயருக்கும், ஒல்லாந்தருக்குமிடையில் சமாதானம் நிலவியபடியால் ஆங்கிலேயர் வெளியரங்கமாக உடன்படிக்கையை மீறி நடந்து கொள்ள விரும்பவில்லை. எனினும் இலங்கையின் கறுவா வர்த்தகத்திற் பங்குபெறவும், ஒரு துறைமுகத்தைத் தங்கள் வசமாக்குவதற்கு எண்ணங்கொண்ட பிரித்தானியர் **யோன் பிபுஸ்** என்பவனைக் கண்டிக்கு அனுப்பினர். **1762**-ல் கண்டிக்கு வந்த தூதுவன் தாங்கள் உதவிசெய்தால் அரசன் அளிக்கக்கூடிய சலுகைகள் என்னவென்பதை அறிவதற்கு ஆவலாயிருந்தானேயன்றி, ஒல்லாந்தருக்கெதிரே அரசனுக்கு உதவி செய்வதைப்பற்றி வாக்குப்பண்ண முடியாமலிருந்தான். ஆகையால் ஒரு முடிவுஞ்செய்யாது அவன் திரும்பினன்.

அமெரிக்க சுதந்திரப்போர் நடந்துகொண்டிருக்கும்போது இங்கிலாந்துக்கும் ஒல்லாந்துக்குமிடையில் போர் தொடங்கியது. நடுநிலைமைவகித்த நாடுகளின் கப்பல்கள் சோதிக்கப்படும்போது டச்சுக்காரர் தங்களுடைய கப்பல்களைச் சோதிப்பதற்கு இடங்கொடுக்க முடியாதென்று எதிர்த்தமையால் இருபகுதியாருக்குமிடையில் போர் ஆரம்பமானது. ஆகையால் சென்னைக்குத் தேசாதிபதியாக வந்த **மக்காட்னி**ப் பிரபு இந்தியாவில் டச்சுக்காரர் வசமிருந்த பண்டகசாலைகளைக் கைப்பற்றினன். பின்பு **எட்வேட்கியூஸ்** என்பவன் தலைமையிற் சென்ற கடற்படை திருகோணமலைக் கோட்டையையும், ஊஸ்ரின்பேர்க் கோட்டையையும் கைப்பற்றியது (1782). அதன்பின்னர் மக்காட்னி கண்டி அரசனேடு ஒப்பந்தஞ் செய்ய விரும்பி **கியூபோயிட்** என்பவனை அரசனிடம் அனுப்பினன். இங்கிலாந்துக்கும் ஒல்லாந்துக்குமிடையில் சமாதானமேற்பட்ட காலத்திலும் திருகோணமலையை ஆங்கிலேயருக்குக் கொடுக்கும்படி கேட்பதற்காகவே வெகுமதிகளையுங் கொடுத்து மக்காட்னி அத்தூதுவனை அனுப்பினன். ஆனல் அவர்களுடைய துரதிட்டமாக ஆங்கிலேய

ருடைய உதவியைக் கோரிநின்ற கீர்த்தி ஸ்ரீ இராசசிங்கன் இறந்தான். புதிதாகச் சிங்காசனமேறிய இராசாதி இராசசிங்கன் அவ்வித ஒழுங்கை ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை. மேலும் அவனுக்கு ஒருவிதமான அறிவித்தலுங் கொடாமல், பிரித்தானியர் திருகோணமலையைக் கைப்பற்றியதனுல் அவனுக்கு அவர்களிற் சந்தேகமுண்டானது. ஆகையால் அரசனும், அதிகாரிகளும் எவ்விதமான உடன்படிக்கையையும் எழுதிக்கொள்ள விரும்பாமையால், **போயிட்** திரும்பிச்செல்ல வேண்டியதாயிற்று. போகும் வழியில், ஒரு பிரான்சியக் கப்பலுக்குத் தலைவனுயிருந்த **போயிலி டி சவிரென்** என்பவனுடைய கையிற் சிக்கினுன். ஒல்லாந்தருக்காக உதவிசெய்யவந்த பிரான்சியப்படை திருகோணமலைக்குச் சென்று ஆங்கிலேயரிடமிருந்து அதைக் கைப்பற்றியது. பாரிஸ் சமாதான உடன்படிக்கை **(1783)** வரையும் அது பிரான்சியர் வசமிருந்தது, அப்பொழுது ஆங்கிலேயர் அதைப்பெற்று ஒல்லாந்தர்வசம் கொடுத்தனர். இதுவே ஆங்கிலேயர் முதன்முதல் தங்களுடைய ஆதிக்கத்தை நிலைநாட்டச் செய்த முயற்சியாகும். ஆனுல் **1795**-ல் அவர்கள் எடுத்த முயற்சி கைகூடியது.

**1794**-ல் பிரான்சியப் புரட்சிக்காரர் ஒல்லாந்துக்குப் படையெடுத்துச் சென்று **பற்றேவியாக் குடியரசைத்** தாபித்தனர். இதனுல் ஒல்லாந்து தேசத்து "ஸ்ராத்ஹோல்டர்" என்று சொல்லப்படும் அரசன் இங்கிலாந்து தேசத்திற்கு ஓடினுன். வெகுகாலமாக இலங்கையைக் கைப்பற்றிக் கொள்வதற்குக் காத்திருந்த ஆங்கிலேயர் அது ஏற்ற தருணமென நினைத்தனர். ஒல்லாந்தில் நடந்த அரசியல் மாற்றத்தைப்பற்றி டச்சுத் தேசாதிபதி கேள்வியுற்றவுடன் கொழும்பிலிருந்த அரசியற்சபையின் ஆலோசனையைக் கேட்டார். ஆங்கிலேயர் போருக்கெழுந்தால், ஒல்லாந்திலிருந்து தங்களுக்கு ஒரு வசதியும் வராதபடியாற் தாங்கள் பழைய "ஸ்ராத்ஹோல்டரின்" அதிகாரத்தைப் பின்பற்றி நடப்பதாகக்கூற யோசித்தனர். அதையுங்கேளாமல் அவர்கள் போருக்கெழுந்தால் தாங்கள்கொழும்பு, காலி, திருகோணமலை முதலிய முக்கியமான பகுதிகளைப் பாதுகாப்பதாகத் தீர்மானஞ் செய்தனர். இதற்கிடையில், ஆங்கிலேயர் கப்பல்களையும் துருப்புகளையும் நன்னம்பிக்கைமுனைப் பகுதியிலும், இலங்கையிலும் உட்புகவிடும்படி, ஒல்லாந்து தேசத்து அரசனுகிய உவில்லியத்தை ஆஞ்ஞை இடுமாறு தூண்டினர். அதற்கிணங்கி, அவன் சென்னைத் தேசாதிபதியாகிய **கோபாட்டு** என்பவன்மூலம் இலங்கைக்கு ஒரு கடிதம் அனுப்பினுன். **கோபாட்டு** டச்சுத்

தேசாதிபதிக்கு அக்கடிதத்தை அனுப்பி ஆங்கிலேயர் ஒல்லாந்தர் ஆட்சியிலுள்ள பகுதிகளை தற்காலிகமாகத் தம்வசம் வைத்திருக்க எண்ணங்கொண்டிருப்பதாகவும் சமாதானம் ஏற்படுங் காலத்தில் அதைத் திருப்பிக்கொடுப்பதாகவும் கூறி **அக்நியூ** என்பவனை அனுப்பினுன். டச்சுத் தேசாதிபதி அரசாங்கத்தை ஆங்கிலேயருக்குக் கொடுக்கச் சம்மதியாது ஆங்கிலேயத் துருப்புக்களை வரவேற்க உடன்பட்டார். டச்சுத் தேசாதிபதி திருகோணமலைத் தளபதிக்கு 300 ஆங்கிலத் துருப்புக்களை ஏற்கும்படி கட்டளையிட்டபின், ஒல்லாந்தில் நடைபெற்ற அரசியல் மாற்றத்தைப்பற்றிய செய்தி வந்ததும், ஆங்கிலேயரை வரவேற்காது மறுத்தான். உடனே ஆங்கிலேயத் துருப்புக்கள் திருகோணமலைக் கோட்டையைத் தாக்கி மூன்று நாட்களுக்குள் அதனைக் கைப்பற்றினர். கீழே குறிப்பிடப்பட்டிருக்கும் நிபந்தனைகளுக்கிணங்க டச்சுப்போர்ப்படை சரணுகதியடைந்தது. திருகோணமலையிலுள்ள டச்சுப் போர்ப்படை கோட்டையினின்று விலகி தங்களுடைய போர்க்கலங்களைக் கீழேவைத்துப் போர்ச் சிறையினராகச் சரணுகதியடையவேண்டும். அவர்களுடைய சொந்தமான சொத்துக்களைவிட ஏனைய துப்பாக்கிகள், அரசாங்கப் பொதுச்சாதனங்கள் யாவும், நியமிக்கப்பட்ட உத்தியோகத்தர்களிடம் ஒப்படைக்கவேண்டும். இந் நிபந்தனைகள் நிறைவேறு மளவும் டச்சுச் சேனைத்தலைவர்களிருவர் ஆங்கிலேயப் படைத்தலைவன்வசம் பொறுப்பாளராக இருக்கவேண்டும். இவ்விதமான நிபந்தனைகள் 1795-ம் ஆண்டு ஆவணி மாதம் 26-ந் திகதி ஒல்லாந்தரால் ஏற்றுக்கொள்ளப்பட்டன. பின்பு **ஊஸ்ரின்பேக்**குக் கோட்டையையும், சிறிது நாட்களுள் மட்டக்களப்பு, பருத்தித்துறை, யாழ்ப்பாணம், முல்லைத்தீவு, மன்னுர், கற்பிட்டி, நீர்கொழும்பு முதலிய இடங்களையும் கைப்பற்றினர்.

பின்பு கொழும்பைக் கைப்பற்றுவதற்கு ஆயத்தங்களைச் செய்தனர். யாழ்ப்பாணத்திலிருந்த துருப்புகள் **பாபட்** படைத்தலைவனின்கீழ் நீர்கொழும்புக்கு வந்துசேர்ந்தது. ஸ்ருவர்ட் திருகோணமலையிலிருந்த துருப்புக்களோடு வந்துசேர்ந்தான். இந்தியாவிலிருந்து 4200 இந்தியப் போர்வீரர்களும், 2300 ஐரோப்பியப் போர்வீரர்களும் கொண்டுள்ள சேனை ஸ்ருவர்ட்டின் பொறுப்பிலிருந்தது. சண்டையில்லாது கொழும்பைப் பெற்றுக்கொள்ளும் நோக்கத்தோடு **தோபாட்** பிரபு கொழும்பைப் பாதுகாத்துக்கொண்டிருந்த டிமியூரனுடைய படை ஆங்கிலேயருடைய பக்கஞ் சார்ந்துவிட்டதெனடச்சுத் தேசாதிபதிக்கு அறிவித்தான். டிமியூரனுடைய படை வில

காது தடுப்பதற்கு டச்சுத்தேசாதிபதி முயன்றபொழுது, டிமியூரன் எதிர்த்துச் சண்டையிடுவதாகக் கூறியமையால் தேசாதிபதி அவன் விலகுவதற்குச் சம்மதமளித்தான். கொழும்பின் பாதுகாப்புக்காக விருந்த 900 ஐரோப்பியப் போர்வீரர்களும் நீங்கியதனுல் ஒல்லாந்த ரின் பலம் குறைந்தது. ஆனுல் அப்படை கொழும்பைக் கைப் பற்றுவதற்காக நடத்துஞ் சண்டையில் உபயோகிக்கக்கூடாதெனத் தேசாதிபதி கேட்டுக்கொண்டபடியால் அப்படை இந்தியாவுக்குச் சென்று பிரித்தானியருக்காகச் சண்டைசெய்தது.

இந்த நிலேயில் கண்டியரசனுடைய ஒற்றுமையைப் பெற்றுக் கொள்ளும் நோக்கத்தோடு சென்னேத் தேசாதிபதி **ருேபேட் அன் ருஸ்** என்பவனே கண்டிக்கு அனுப்பினுன். அங்கு சென்ற அத் தூதனே இராசாதி இராசசிங்கன், டச்சுக்காரர் திரும்பி ஒருபோதும் இலங்கைக்கு வராமல் ஆங்கிலேயர் தடுக்கவேண்டுமென்று வாக்குப் பண்ணவேண்டுமெனக் கேட்டான். அதற்கு அவன் இணங்கவில்லே. அரசனுடைய உதவியில்லாது ஆங்கிலேயர் ஒல்லாந்தருடைய ஆட் சியிலுள்ள பகுதிகளேக் கைப்பற்றினுல் அவர்கள் அரசனுடைய நட்பைப் பெற்றுக்கொள்ள விருப்பங்காட்டார்களென அன்ருஸ் கூறியும் அரசன் மனந்திரும்பவில்லே. ஈற்றில் அன்ருஸ், சென்னே அரசாங்கத்தோடு கலந்தாலோசித்து உடன்படிக்கையொன்றை எழுது வதற்குக் கண்டியிலிருந்து சில பிரதிநிதிகளே அனுப்பினுல் நல்ல தென்பதாகக் கூறியதற்கு அரசன் இணங்கினுன். அவ்விதம் அனுப் பப்பட்ட பிரதிநிதிகள் சென்னேக்குச் சென்றனர். ஒல்லாந்தருக்கும் ஆங்கிலேயருக்குமிடையிலுள்ள நட்போ, பகைமையோ ஐரோப்பா வில் இருபகுதியாருக்குமிடையிலுள்ள தொடர்பைப் பொறுத்ததாகை யால் தாங்கள் ஒரு உடன்படிக்கையை எழுதுவது சாத்தியமல்ல வென்று அங்குள்ள அதிகாரிகள் கூறினர். பின் அன்ருஸின் தூண்டுதலினுல் உடன்படிக்கை ஒன்று எழுதப்பட்டது. அதிற் கூறப்பட்ட நிபந்தனேகள்: (1) ஒருவிதமான வரியுமில்லாது வர்த்த கத்திற்காக அரசன் 10 கப்பல்களேயும், தோணிகளேயும் உபயோ கித்துக்கொள்ளலாம். (2) அரசனுடைய ஆளுகைக்குட்பட்ட பகுதி களில் ஆங்கிலேயர் தலேயிடமாட்டார்கள். (3) அரசனுக்குரிய நிலங் களே ஒல்லாந்தர் வலோற்காரமாகக் கைப்பற்றியதாக அரசன் கூறுவதால், அவைகள் விசாரணேசெய்யப்பட்ட பின்னர் சமாதா னம் ஏற்படுங்காலத்தில் மீண்டும் அரசனுக்குக் கொடுக்கப்படும். (4) ஆங்கிலேய வர்த்தகக்கொம்பனி ஒல்லாந்தர் ஆட்சியிலுள்ள பகுதிகளேக் கைப்பற்றியபின் கரையோரப் பகுதிகளில் அரசன்

தேவையான உப்பையும், மீனையும் பெறுவதற்கு ஒரு வசதியான இடத்தைக் கொடுக்கவேண்டும். இவ் உடன்படிக்கை அரசனுக்கே அதிகம் சாதகமாகக் காணப்பட்டது.

இதற்கிடையில் பிரித்தானியருடைய சேனை நீர்கொழும்பிலிருந்து புறப்பட்டு கொழும்பை அண்மியது. அவர்களுடைய கடற்படை முகத்துவாரத்தில் வந்து இறங்கியது. டச்சுக்காரர் தங்களுடைய போர்வீரர்க ளெல்லோரையும் திரட்டிக் கொழும்பில் வைத்துக் கொண்டு, அந்நகரத்தைத் தங்களாலியன்றளவு பாதுகாக்கத் துணிந்தனர். பிரித்தானியருடைய படைகளை எதிர்த்து நிற்கமுடியாது டச்சுப் போர்வீரர்கள் கோட்டைக்குள்ளே புகுந்தனர். ஆங்கிலேயர் அவர்களைச் சரணுகதியடையுமாறு கேட்க அவர்கள் கோட்டைக் குள்ளே தங்களுடைய ஆலோசனைச் சபையைக்கூட்டி அதன் ஆலோசனைப்படி சரணுகதியடையத் தீர்மானஞ்செய்தனர். அவர் கள் காத்திருந்தபடி ஒல்லாந்திலிருந்தோ, பட்டேவியாவிலிருந்தோ, பிரான்சியரிடமிருந்தோ உதவி கிடைக்கவில்லை. கொம்பனியினுடைய பணநிலையும் மோசமாகவிருந்தது. கொம்பனியின் ஊழியர்களுக்கும் பலமாதங்களாகச் சம்பளம் கொடுக்கப்படவில்லை. கொம்பனியின் நிலுவைப்பணமும் அறவிடப்படவில்லை. டச்சுச் சேனையிலுள்ள உள் நாட்டுப் போர்வீரர்களிலும் பலர் விலகினர். இந்தியப் போர்வீரர் களும் விலகினர். எல்லைப்புறங்களில் கண்டிச்சேனையும் காணப் பட்டது. அவர்கள் சரணுகதியடைய உடன்படாவிட்டால் ஆங் கிலேயர் விதிக்கும் நிபந்தனைகளை ஏற்றுக்கொள்ளவேண்டும். இந் நிலையில் அவர்கள் **1796**-ம் ஆண்டு மாசிமாதம் **16**-ந் திகதி சரணு கதியடைந்தனர். அவர்கள் ஏற்றுக்கொண்ட நிபந்தனைகள்: (1) ஒல் லாந்த உத்தியோகத்தருள் விரும்பியோர் இலங்கையிற் தங்கவும், ஏனையோர் வெளியேறவும் உத்தரவுபெறுதல் (2) டச்சுப் போர் வீரர்கள் யுத்தக்கைதிகளாய் ஆங்கிலேயருடைய செலவில் சென் னைக்கு அனுப்பப்படுதல் (3) சமயகுருமார் தங்களுடைய கடமை களை முன்செய்த பிரகாரம் செய்யவிடல் (4) கொம்பனியின் ஊழி யர்கள் **18** மாதங்களுக்குள் கணக்குப் புத்தகங்களைச் சீர்படுத்திச் சமர்ப்பித்தல் (5) தீர்க்கப்படாதிருந்த வழக்குகள் **12** மாதங்களுக் குள் அப்போதிருந்த நீதிஸ்தலங்களில் தீர்த்துவைக்கப்படுதல் (6) நொத்தாரிசுமார்களுடைய உறுதிகளும் மரணசாதனங்களும் முன் னிருந்தபடி கவனிக்கப்படுதல், என்பனவாம். இந்நிபந்தனைகளின் படி டச்சுக்காரர் கொழும்பையும் அதனுடன் சேர்ந்த களுத்துறை, காலி, மாத்தறை முதலிய இடங்களையும் அவ்வவ்விடங்களிலுள்ள


பிரித்தானியர் கைப்பற்றிய
கோட்டைகளும் பிரதான இடங்களும்
முல்லைத்தீவு
மன்னார்
திருகோணமலை
கொட்டியாரம்
கல்பிட்டி
புத்தளம்
மட்டக்களப்பு
குருநாக்கல்
மாத்தளை
கலகந்திரா
நீர்கொழும்பு
கண்டி
வதுளை
கொழும்பு
இரத்தினபுரி
களுத்துறை
காலி
மாத்தறை

பொருள்களையும் ஆங்கிலேயருக்கு அளிக்க உடன்பட்டனர். டச்சுக்காரர் ஆட்சிக்குட்பட்ட பகுதிகளெல்லாம் ஆங்கிலேயருடைய கிழக்கிந்திய சங்கத்தின் ஆட்சிக்குட்பட்டன.

ஆங்கிலேயர் இலங்கைக்கு வந்தகாலத்தில் கண்டி இராச்சியம் இராசாதி இராசசிங்கன் என்ற நாயக்க மன்னனாலும், கடலோரப் பகுதி ஒல்லாந்தராலும் ஆளப்பட்டன. கண்டி அரசனுக்குக்கீழ் அநேக உத்தியோகத்தர்கள் நியமிக்கப்பட்டிருந்தனர். இராச்சியத்தின் பெரும் பிரிவுகளை நடத்தும் பொறுப்பு திசாவைக்கும், சிறு பிரிவுகளை நடத்தும் பொறுப்பு இரட்டமகாத்மாயாவுக்கும் கொடுக்கப்பட்டிருந்தது. சிறு பிரிவுகளின் உட்பிரிவுகள் கோராளைக்கும், கிராமங்கள் கிராமத்தலைவருக்கும் கொடுக்கப்பட்டு, அவர்கள், அதிகார உத்தியோகத்தரின் மேற்பார்வையின்கீழ் கடமைகளை நடத்திவந்தனர். திசாவைகள் இருவர் அதிகாரிகளாக நியமிக்கப்பட்டனர். அவர்கள்தான் அரசனுடைய பிரதான உத்தியோகத்தராவார்கள். திசாவையும் இரட்டமகாத்மாயாவும் பிரசைகளுக்கிடையில் சமாதானம் நிலவச்செய்தும் அரசனுடைய வருமானத்தை அறவிட்டும் சனங்கள் அரசனுக்குச் செய்யவேண்டிய சேவை (இராசகாரியம்) யைப் புரியச்செய்தும் வந்தனர். இன்னும், இவைபோன்று மற்றும் கடமைகளையுஞ் செய்தனர். அவர்கள் சிற்றரசர்கள்போல அதிகம் செல்வாக்குடையவர்களாகக் காணப்பட்டனர்.

பிரசைகளிற் சிலர் அரசனுக்காகப் போர்செய்தும், சிலர் யானை வேட்டையாடியும், சிலர் மரங்களைத் தறித்தும், இவைபோன்ற மற்றுஞ் சேவைகளையும் புரிந்தும் வந்தனர். இவைகளெல்லாம் இராசகாரியம் எனப்படும். இச்சேவைகள் செய்வோருக்கு நிலங்கள் வழங்கப்பட்டன. அரசனுக்காகப் பயிரிட்ட நிலங்கள் கபாடகம் எனப்பட்டன. அதிகாரிகளுக்குக் கொடுக்கப்பட்ட நிலங்கள் நிந்தாகம் எனப்படும். தேவாலயங்களுக்கென விடப்பட்ட நிலம் விகாரகம், தேவாலகம் எனப்படும்.

டச்சுக்காரரின் ஆட்சியின்கீழிருந்த கரையோரப்பகுதிகளிலும் ஏறக்குறைய சிங்களவருடைய ஆட்சிமுறையே சிறு மாற்றங்களுடன் நடைபெற்றுவந்தது. திசாவை உத்தியோகத்தை டச்சுக்காரர்களுக்கும் முதலியார் உத்தியோகங்களைச் சிங்களவருக்கும் கொடுத்தனர். யாழ்ப்பாணப்பகுதியில் டச்சுக்காரர் நிறுவியிருந்த ஆட்சி வேறுபட்டிருந்தது. இங்கே கொம்பனிக்குச் சேவைபுரிந்து மக்கள் நிலங்களைப் பெறுவதில்லை. ஆனால் நிலங்களிலுள்ள வரு

மானத்தில் ஒருபகுதியை டச்சுக் கொம்பனிக்குக் கொடுத்தனர். அங்கே மேலுத்தியோகத்தர்கள் மணியகாரன், உடையார் என அழைக்கப்பட்டனர். வருமானங்களை அறவிடுவதே அவர்களுடைய பிரதான கடமையாக விருந்தமையால், சிங்கள அதிகாரிகளிலும் பார்க்க அவர்களுடைய அதிகாரம் குறைந்ததாகக் காணப்பட்டது.

கரையோரப்பகுதிகளிற் கடமையாற்றிய உத்தியோகத்தர்கள் கொம்பனியினுடைய கட்டளைக்கு அடங்கி நடக்கவேண்டும். நீதிஸ் தலங்களும் காணப்பட்டன. ஆனால் கண்டி இராச்சியத்தில் பிர தானிகளுக்கு அவ்விதமான கட்டுப்பாடு இல்லாமையால் அவர்கள் தங்களிஷ்டப்படி நடப்பதுண்டு. அரசன் சட்டங்களை உண்டாக் காமையால் அவர்கள் பழையமுறைகளை அனுசரித்துவந்தனர்.

அக்காலத்தில் இலங்கையில் கண்டி, கொழும்பு, காலி, யாழ்ப் பாணம் என்ற நகரங்களைவிட மிகுதி கிராமங்களாயிருந்தது. சனங்க ளின் பிரதானமான தொழில் நெற்செய்கையாகும். அவர்கள் குடிசைகளில் வயல்நிலங்களுக் கருகாமையில் வசித்தனர். உயர் நிலங்களில் கமுகு, பலா முதலியன உண்டாக்கப்பட்டன. கிராம வாசிகள் ஒவ்வொருவரும் தங்களுக்குத் தேவையானவற்றைத் தாங் களே உண்டுபண்ணினர். விவசாயிகளுக்குத் தேவையான மண் வெட்டி, கத்தி, கலப்பை முதலியவைகளைச் செய்துகொடுப்பதற்குக் கம்மாளர் இருந்தனர். அதேபோன்று தேவையான யாவும் செய் வதற்கு தொழிலாளர்கள் இருந்தனர். வர்த்தகம் மிகக்குறைவாய் நடைபெற்றது. நாணயங்களும் மிகக்குறைவு, தெருக்களும் கிடையா. ஒரடிப்பாதைகள் காணப்பட்டன. பயிரிடுந் தொழிலோடு சம்பந்தப் பட்ட விஷயங்களைக் கவனிக்கவும் சனங்களுக்கிடையே இருக்கும் பிணக்குகளைத் தீர்க்கவும் **கன்சபா** என்ற கிராமச்சங்கம் ஏற்படுத்தப் பட்டிருந்தது. மக்களின் சமுகவாழ்க்கை சாதிக்கட்டுப்பாட்டினுல் பாதிக்கப்பட்டது. உயர்ந்தசாதி, தாழ்ந்தசாதி என்பன அவரவர் செய்த தொழிலிலிருந்து வகுக்கப்பட்டதொன்ருகும். ஒருவராகுதல் தங்களுடைய சாதியை மாற்றிக்கொள்ள முடியாது. எல்லோரும் தங்க ளுடைய வர்ணத்திலுள்ள குடும்பங்களோடு சேர்ந்து நடக்கவேண் டும். பாதுகாப்புக்காக எல்லோரும் ஒருமித்து வாழ்ந்துவந்தனர். ஒவ்வொருவரும் தங்களிஷ்டப்படி நடந்துகொள்ளாது குடும்பங்க ளின் விருப்பத்திற்கேற்க ஒழுகுவாராயினர். மீறி நடப்போர் தண் டிக்கப்படுவர். கண்டி இராச்சியத்தில் பெரும்பான்மையோர் கல்வி யறிவில்லாதவர்களாகக் காணப்பட்டனர். உயர்ந்த நிலையிலுள்ள ஒருசிலரே விகாரைகளுக்குச் சென்று பிக்குகளிடம் கல்விபயின்ற

னர். கரையோரப்பகுதிகளில், அநேகர் கல்விகற்றவர்களாயிருந்த னர். ஒல்லாந்தரால் தாபிக்கப்பட்ட பாடசாலைகளில் அவர்கள் கல்வி பயின்றனர். ஒல்லாந்தர் தங்களுடைய பண்டகசாலைகளையும், கட்டிடங்களையும் கட்டுவிப்பதற்காக அப்பகுதிகளிலுள்ள மக்களுக்கு தச்சுவேலை, கட்டிடவேலையைப் பழக்கிவிட்டனர். உணவுப்பயிர்களை உண்டாக்கியதுமல்லாது கோப்பி, கறுவா முதலிய வர்த்தகப்பொருள் களையும் உண்டாக்கினர். கண்டி இராச்சியத்தில் ஏறக்குறைய எல்லோரும் புத்தசமயத்தவர்களாயும், கரையோரப்பகுதிகளில் பெரும்பான்மையோர் கிறீத்தவர்களாயுமிருந்தனர்.

ஐரோப்பாவில் ஆங்கிலேயருக்கும் டச்சுக்காரருக்குமிடையில் சமாதானமேற்பட்டவுடன் இலங்கையில் டச்சுக்காரரிடமிருந்து கைப்பற்றிய பகுதிகளை அவர்களுக்குக் கொடுக்கவேண்டிய ஒழுங்கிருந்த படியால், ஆங்கிலேயர் நிலையான ஆட்சிமுறையைத் தாபிக்கவில்லை. கிழக்கிந்திய சங்கத்திற்கு ஆட்சிபுரியும் பொறுப்புக் கொடுக்கப்பட்டது. ஆகையால் சங்கம் தங்களுடைய போர்ச் செலவுகளுக்காக வருமானத்தை அறவிடத் தொடங்கியது. **யேம்ஸ் ஸ்ரூவட் (1795-1796)** என்பவர் இலங்கையிலுள்ள போர்ப்படைகளுக்குத் தள கர்த்தனுயிருந்தார். அவரே சங்கத்தால் நிறுவப்பட்ட இராணுவ ஆட்சியின் முதற் தேசாதிபதியாக நியமிக்கப்பட்டார். அப்போது ''கோட்மாஷல்'' என்ற இராணுவத்தலத்தைவிட வேறு நீதிமன்றங்கள் கிடையா. அவர் திருகோணமலை, யாழ்ப்பாணம், கொழும்பு, காலி முதலிய இடங்களுக்கு அதிகாரிகளை நியமித்தார். இன்னும் டச்சுக்காரருடைய கடுமையான சட்டங்களை நீக்கிச் சனங்களின் ஆதரவைப்பெற முயன்றார். கத்தோலிக்க குருமார் ஒருவிதமான கட்டுப்பாடுமில்லாமல் சமய வழிபாடுகளைச் செய்ய உத்தரவளித்தார். ஸ்ரூவாட்டின் பின் எலிஸ்டோயில் **(1796-1797)** என்பவனும் டி மியூரனும் **(1797-1798)** தேசாதிபதிகளாக நியமிக்கப்பட்டனர்.

ஐரோப்பாவிற் சமாதானமேற்படுங்காலத்தில் கரையோர மாகாணங்கள் மீண்டும் ஒல்லாந்தருக்குக் கொடுக்கவேண்டியிருப்பதால் குறைந்த காலத்திற்குள் கூடிய வருமானத்தைப் பெற்றுக்கொள்வதே ஆங்கிலேய வர்த்தகசங்கத்தின் நோக்கமாகவிருந்தது. ஆகையால் அந்நேரத்தில் மக்களுடைய நன்மையைக் கருதி ஆட்சிபுரியவில்லையென்று சொல்வதற்கிடமுண்டு. விரைவில் தங்களுடைய போர்ச்செலவை யறவிட்டுக்கொள்ள விரும்பினமையால் இலங்கையில் பழையகாலந்தொட்டு வழங்கிவந்த வருமானம் அறவிடும் முறையை அறிந்துகொள்ளவோ அல்லது அதை அனுசரித்து நடக்

கவோ கவனமெடுக்கவில்லை. வருமானத்தின் ஒரு பகுதியைப் பண மாகவோ அல்லது விற்றுப் பணமாக்கக்கூடிய விளைபொருட்களை பெற்றுக்கொள்வதையோ விரும்பிய சங்கத்தின் அதிகாரிகளுக்கு இந்நாட்டில் வழங்கிவந்த நிலமானியமுறை பயனளிக்காது. ஆகை யால் சென்னையில் வழங்கிவந்த வருமான முறையை இங்கே புகுத் தினர். அம்முறைகளைப்பற்றியறியாத கிராமத்தலைவர்களை நீக்கிவிட்டு சென்னையிலுள்ள வருமான மறவிடும் உத்தியோகத்தர்களை இங்கே நியமித்தனர். இவ்விதமான மாற்றங்களால் சிங்கள மக்கள் சீற்ற மடைந்தனர். அதுவுமல்லாமல் சென்னையிலிருந்து வந்தவர்கள் தமிழராவர்.

**றெபேட் அன்ருஸ்** என்பவர் வருமானம் அறவிடுவதற்குப் பொறுப்பான அதிகாரியாகவும், **யோன்யேர்விஸ்** உதவி அதிகாரி யாகவும் நியமிக்கப்பட்டனர். வருமானத்தை அறவிடும் வசதிக்காக அவர்கள் கரையோர மாகாணங்களை திருகோணமலை, யாழ்ப் பாணம், கொழும்பு என்ற மூன்று பெரும் பகுதிகளாகப் பிரித்த னர். வரியை வசூலிக்கும் பொறுப்பு, ஏலத்திலே கூறும்பொழுது பெருந்தொகையான பணத்தைச் சங்கத்துக்குச் செலுத்துவதற்கு சம்மதிப்பவனுக்கே விடப்பட்டது.

அவன், கிழக்கிந்திய சங்கத்துக்கு அப்பணத்தைக் கொடுத்து விட்டு, வரிகளை அறவிடத்தொடங்கினுன். இவ்விதமானமுறை அனு சரணைக்குக் கொண்டு வரப்பட்டவுடன் தென்னிந்தியாவிலிருந்து அநேக உத்தியோகத்தர்கள் இங்குவந்தனர். சமாதானமேற்பட்டவுடன் ஒல்லாந்தரே கரையோரமாகாணங்களின் ஆட்சியைப் பெற்றுக்கொள் வார்கள் என்ற எண்ணத்தினுல், தாமதமின்றி சேகரிக்கக்கூடிய பணத்தைச் சேகரித்துக் கொள்ளவேண்டுமென எண்ணங்கொண்ட னர். மக்களிடமிருந்து கொடுக்கவேண்டிய தொகைக்கு மேலதிகமாக வரியறவிடுவோர் வசூலித்ததுமல்லாமல், பல அநீதியான செய்கை களையுஞ் செய்தனர். அவர்களுடைய கந்தோர் கச்சேரியெனப்பட்டது.

வருமானம் அறவிடும் முறையும், செலுத்த வேண்டிய தொகை யும், அறவிடும் உத்தியோகத்தர்களும் எல்லாம் புதிதாகக் காணப் பட்டன. இதுவரையும் சனங்கள் நிலங்களைப்பெற்று அதற்குப்பதி லாக அரசாங்கத்துக்குச் சேவை புரிந்தனர். இப்போது சனங்கள் வரிகளைப் பணமாகச் செலுத்த வேண்டியதாயிற்று. வருமானப்பகு தியில் "ஔமில்டர்", "கொட்வால்", "குமாஸ்தா" என்னும் உத்தி யோகத்தர்களிருந்தனர். "ஔமில்டர்" என்ற உத்தியோகத்தர்கள்

வரியறவிடும் பகுதி அதிகாரிகளாக யிருந்ததோடு, வரிகொடுக்கத்தவறி னோரைத் தண்டிக்கும் சட்ட அதிகாரிகளாகவும் கடமையாற்றினர். அப்பொழுது காணப்பட்ட குறைகளைப்பற்றிச் சிங்கள மக்கள் நீதி பதிகளுக்கு முறையிட்டால் அவர்கள் ஒரே நாட்டினராகையால் வரியற விடுவோர் சார்பிலே தங்களுடைய தீர்ப்பைக் கொடுத்தனர். இக்காரணங்களால் மக்களிடையே அதிருப்தி உண்டானது. **1796**-ல் முத்துக்குளிப்பு நடைபெற்றது. சங்கம் எதிர்பார்த்த ஆதாயத் திலும் பார்க்கக் குறைவாகக் காணப்பட்டது. கொம்பனியின் உத் தியோகத்தர்களின் நேர்மைக் குறைவினுலேயே அது ஏற்பட்டது. மற்றும் வருவாய்களிலிருந்தும் குறைந்த ஆதாயம் கிடைத்ததற்கு "ஔமில்டர்" என்ற உத்தியோகத்தர்களே காரணமாயிருந்தனர். திருகோணமலைப் பகுதியில் பாக்கிலிருந்து பெற்றவருமானமும், யாழ்ப்பாணப்பகுதியிலிருந்து பெற்ற வருமானமும் குறைவாகவே காணப்பட்டது. அவ்வுத்தியோகத்தரில் நம்பிக்கை குறைந்தது. அவர்களுடைய கொடூரச் செய்கைகளினுலும் மக்கள் கோபமடைந் தனர். உப்பு, மீன், கள்ளு, சாராயம் ஆகியவைகளிற் பெற்ற வரி யையும், தலைவரி, ஆயப்பணம் என்பவைகளையும் விட புகையிலை, ஆமைபிடித்தல், இரத்தினக்கல் வெட்டுவேலை, ஆபரணம், தென்னை ஆகியவற்றிலும் வரிகளை விதித்துத் தங்களுடைய வருமானத்தைக் கூட்டினர்.

இவ்விதமான புதிய மாற்றங்கள் எல்லாம் எல்லோரிடமும் அதிருப்தியை உண்டாக்கின. அதிகார், திசாவை, முதலியார், விதானை ஆகியோரே தங்களுடைய வருமானத்தை இழந்தமையி னுல் முதலில் வெறுப்பையுங் கோபத்தையுங் காட்டினர். இங்கி ருந்த ஒல்லாந்தரும் ஆங்கிலேயர் சூறையாடுகிறார்களென்ற கதையை உண்டுபண்ணி விட்டனர். மக்களும் சங்க அதிகாரிகளின் கொடு ரச் செய்கைகளினுலும், தலைமைக்காரர், டச்சுக்காரரின் தூண்டுதலி னுலும் எதிர்ப்புக்காட்ட ஆரம்பித்தனர். ஆயுதப் பிரயோகஞ் செய்தே வரியறவிடவேண்டிய நிலைபரமேற்பட்டது. அச்செய்தியைக் கேள்வி யுற்ற **கோபாட்** பிரபு இலங்கைக்கு நேரே வந்து பார்வையிடத் தீர்மானஞ் செய்தார்.

கோபாட்பிரபுவின் வருகையைப்பற்றி **றெபேட் அன்ரூஸ்** அறிந்தவுடன் தான்கண்டிக்குச் சென்று, சென்னையில் அரசனுடைய தூதுவர்கள் கைச்சாத்திட்ட உடன்படிக்கையின் அங்கீகாரத்தை, அரசனிடமிருந்து பெறுவதற்கு யோசனை செய்தான். அவ்விதம் அரசனுடைய சம்மதத்தைப் பெற்றுக்கொள்வது கஷ்டமில்லையென

நினைந்து அங்கு புறப்பட்டான். இதற்கிடையில் பிரான்சியப்படை ஒன்று வந்து ஆங்கிலேயரைத் துரத்தப்போவதாக டச்சுக்காரர் சொல்லி அரசனுடைய மனத்தை மாற்றிக்கொண்டமையால் அரசன் உடன்படிக்கையைப்பற்றி ஆறுதலாக ஆராய்ந்து பார்க்கலாமென அன்ரூஸ் என்பவனிடங் கூறினன். அன்ரூஸ் கோபத்துடன் கொழும்புக்குத் திரும்பினன். அரசனுக்கு அதிகம் சாதகமாயிருந்த அந்த உடன்படிக்கையை அரசன் அங்கீகரிக்க மறுத்தமை ஆங்கிலேயரின் நன்மைக்கென ஆங்கிலேயர் பின்பு அறிந்து கொண்டனர்.

ஆங்கிலேயருடைய கிழக்கிந்திய சங்கத்தாரின் தவறுன, நிர்வாகம் **1797**-ல் ஒரு கலகத்தை உண்டுபண்ணியது. அவர்கள் விதித்த வரிகள் எல்லாவற்றிலும் தென்னைவரியே மக்களிடம் அதிக சீற்றத்தை உண்டுபண்ணியது. இராசகாரியா முறைப்படி நிலங்களை வைத்திருந்தோர் இப்பொழுது அரசாங்கத்திற்கு ஒரு சேவையுஞ் செய்யவேண்டியதில்லாமையினுல் அவர்கள் வருமானத்திற்கு ஒன்றுங் கொடுக்காதவர்களென்று இவ்விதமானவரியை அறவிட ஆரம்பித்தனர். தென்னைமரங்களின் வருமானத்திலிருந்து மாத்திரம் வரியையறவிடாது, மரங்கள் காய்த்தாலென்ன, காயாவிட்டாலென்ன வரிகொடுக்கவேண்டியிருந்தமையினுல் மக்கள் அது அநீதியெனக் கண்டனர். அதுவுமன்றி வரிக்காகப் பொருள்கள் எதையும் வாங்கமறுத்து பணமாகக்கொடுக்கவேண்டுமென வற்புறுத்தினர். எதிர்ப்பு அதிகரித்தமையினுல் **டோயில்** என்ற தேசாதிபதி அவ்வரியைத் தற்காலிகமாக நிறுத்திவிட்டுச் சென்னை அரசாங்கத்துக்கு அறிவித்தான். உடனே சென்னைத் தேசாதிபதியாகிய **கோபாட்** பிரபு ஒரு விசாரணைக்குழுவை நியமித்தார். டிமியூரன், அக்நியூ, அன்ரூஸ் என்பவர்களே அக்குழுவின் அங்கத்தவர்களாகும். முதலிருவரும் அதிகம் சிரத்தை எடுத்து விசாரணை செய்து நிர்வாகத்திலும், வருமானமுறையிலும் காணப்பட்ட குறைகளை எடுத்துக் காட்டியதோடு மக்களுக்கிருந்த குறைகளையும் நிவிர்த்திசெய்தனர். டிமியூரன் ஒல்லாந்தருடைய பழைய சாதனங்களையும் ஆராய்ந்து ஒல்லாந்தர் கையாண்டவருமான முறையையும் அவர்கள் **1766**-ல் கண்டி அரசனேடு எழுதிய உடன்படிக்கையையும் எடுத்துக்காட்டினுன்.

விசாரணைக் குழு தமது முயற்சியை ஆரம்பிப்பதற்கு முன்ரெபேட் அன்ரூஸ் தென்னைவரியை மீண்டும் புதுப்பித்த படியால் கலகம் பலவிடங்களிலும் தொடங்கியது. திருகோணமலையிலுள்ள மக்களால் "ஒளமில்டர்" ஒருவன் கொல்லப்பட்டான். கொழும்புப்பகுதியிலேற்பட்ட கலகக்காரரை அடக்குவதற்கு இந்தியப் போர்வீரர்களை அனுப்பவேண்டி நேர்ந்தது. தென்னை வரியே கலகத்திற்கு உடனடியான காரணமாயிருந்தபடியால்

அக்குழுவினர் வரியை நிறுத்திவிட்டனர். கௌரவமுள்ள சிங்களவன் ஒருவனே நீதிபதியாக நியமிக்கப்பட வேண்டுமென்றுங் குறிப்பிட்டனர். கொழும்பு, காலி, மாத்தறைக்குப் புதிதாக நியமிக்கப்பட்ட நீதிவான்கள் வருமானப் பேரதிகாரிக்குக் கீழ்க்கடமையாற்ற வேண்டுமென அன்ருஸ் கூறியபொழுது, நீதிவான்கள் வருமான உத்தியோகத்தர்களோடு தொடர்பில்லாதவர்களாக இருக்க வேண்டுமென, மற்ற இருவரும் அபிப்பிராயப்பட்டு, அப்பொழுது ஏற்பட்ட கலகம் வருமான அதிகாரியே நீதிவானுகக் கடமை ஆற்றி வந்தமையினுலேயே உண்டானது, என்றும் கூறினர். அக்குழு, விசாரணையை ஆரம்பித்து ஒருவருடஞ் சென்றபின் **டிமியூரன்** சனங்களுக்குப் பின்வருமாறு அறிவித்தல் கொடுத்தான். ''இந்நாட்டு மக்களுடைய நன்மைக்கும், சந்தோஷத்திற்குமாக ஆங்கிலேயத் தேசாதிபதி இந்நாட்டிற் பண்டைக்காலந் தொட்டு வழங்கிவந்த முறைகளை மீண்டும் அனுசரித்து நடப்பாரென்றும், நிலங்களின் சொந்தக்காரர் அரசாங்கத்துக்குச் சேவைபுரிவதல்லாது நிலங்களுக்காக வரிசெலுத்த வேண்டியதில்லையென்றும், முதலியார்மார்களும் மற்றும் சிங்கள உத்தியோகத்தர்களும் பழையபடி தங்களுடைய கடமைகளைச் செய்வதற்கு அனுமதி அளிக்கப்படுவார்களென்றும்'' அவர் குறிப்பிட்டார்.

அக்குழுவினர் தங்களுடைய விசாரணையை முடித்து அறிக்கையைச் சமர்ப்பிப்பதற்குமுன், இலங்கையிலேற்பட்ட கலகத்தைப்பற்றிக் கேள்வியுற்றவுடன் இங்கிலாந்து அரசாங்கம் கிழக்கிந்திய சங்கத்தினின்று நிர்வாகத்தை எடுத்துக்கொள்ளத் தீர்மானித்தது. சங்கத்தார் தங்களுடைய போர்ச்செலவுகளை அறவிட முடியவில்லையென்று அம்மாற்றத்தை எதிர்த்தபொழுது இங்கிலாந்து அரசாங்கம் இந்தியாவிற் செய்த ஒழுங்கை இலங்கையிலும் ஏற்படுத்தின. அதன்பிரகாரம், வர்த்தக விஷயங்கள், வருமானம் வசூலித்தல் ஆகியவை மாத்திரமே கிழக்கிந்திய சங்கத்தின் பொறுப்பிலே விடப்பட்டன. நீதிநிர்வாகம், இராணுவ அதிகாரம், மற்றும் அரசாங்க நிர்வாகமனைத்தும் இங்கிலாந்து அரசாங்கத்தால் அனுப்பப்பட்ட தேசாதிபதியின் பொறுப்பிலே விடப்பட்டது. அத்தேசாதிபதி குடியரசு நாடுகளின் காரியதரிசிக்கமைவாக நடக்கவேண்டியதோடு, சென்னைக் கிழக்கிந்திய சங்கத்தார் கற்பிக்கிறவைகளையும் கவனிக்க வேண்டும். இதுவே **இரட்டை ஆட்சி** எனப்படும். முதற் தேசாதிபதியாக நியமிக்கப்பட்ட **பிரடரிக் நோர்த் 1798**-ம் ஆண்டு ஐப்பசி மாதம் இலங்கைக்கு வந்துசேர்ந்தார். இதற்கிடையில் விசாரணைக் குழுவினரும் தங்களுடைய அறிக்கையை வெளியிட்டனர்.

அதனுடைய பிரதான அம்சங்கள்: (1) தென்னைவரி நீக்கப்படுதல் (2) நிலங்களைப்பெற்று அரசாங்கத்துக்குச் சேவைபுரியும்முறை மீண்டும் தாபித்தல் (3) மீண்டும் முதலியார்மார்களை நியமித்தல் (4) நேர்மையான நிர்வாகம் (5) கறுவா உற்பத்தியை விருத்திசெய்தல் (6) உப்பு வியாபாரத்தின் முழு உரிமையைப் பெறுதல் (7) ஊழியத்திற்குப் பதிலாக முஸ்லிங்களிடம் தலைவரியை விதித்தல் (8) புகையிலை, பாக்கு, சீலை, சாராயம் ஆகியவைகளில் ஏற்றுமதி, இறக்குமதி வரியை விதித்தல் என்பனவாம். சங்கத்தார் கண்டியரசனோடு எழுதுவதற்கு யோசித்த உடன்படிக்கையை கண்டியரசன் ஏற்றுக்கொள்ள மறுத்தது சங்கத்தின் நன்மைக்கென்றும் குறிப்பிட்டனர்.

நோர்த் பிரபு அக்குழு விடுத்துள்ள அறிக்கையின்படி ஆட்சி புரியத் தொடங்கினர். அவர் அரசியல் நிர்வாகத்தைத் திருத்தி அமைக்கும் நோக்கத்துடன் பல மாற்றங்களை உண்டாக்கினர். நாட்டின் பாதுகாப்பு, நீதி, அரசியல், பொருளாதாரம், வைத்தியம் முதலியவை செவ்வனே நடத்தப்படுவதற்கு வேண்டிய மாற்றங்களைச் செய்தார். அன்ருஸ் வருமானப்பகுதியின் மேலுத்தியோகத்தராகவும், கண்டிக்கு அனுப்பப்படும் அரச தூதனுகவும் கடமையாற்றிய இரு பதவிகளையும் நோர்த் நிறுத்திவிட்டு, கொழும்பு, காலி, மட்டக்களப்பு, திருகோணமலை, யாழ்ப்பாணம் ஆகிய இடங்களுக்கு வரி அறவிடுவதற்குத் தனி உத்தியோகத்தர்களை நியமித்தார். சென்னையிலிருந்துவந்த உத்தியோகத்தர்களிற் பல தவறுகள் காணப்பட்டமையால் அநேகர் வேலையினின்று நீக்கப்பட்டனர். வருமானப் பகுதிக்குள்ள மேலுத்தியோகத்தரை நீக்கிவிட்டு, அவருடைய கடமைகளை "வருமான, வர்த்தக அதிகாரி"களுக்குக் கொடுத்தார். அவ்வுத்தியோகத்தர்களே மாகாண அதிபதிகளென்று இன்றும் அழைக்கப்படுகின்றனர்.

வைத்தியம், கல்வி, தபாற் போக்குவரவுக்கு வேண்டிய கந்தோர்கள் தாபிக்கப்பட்டன. மொழிபெயர்ப்புக்காக **மகா முதலியார்** என்ற உத்தியோகத்தர் தேசாதிபதியோடு இருப்பதுண்டு. "மகா முதலியார் தேசாதிபதிக்குப் பக்கத்தே எப்பொழுதும் காணப்படுவார். என் முன்னிலையில் ஆசனத்திலமரமாட்டார். சப்பாத்தணிந்திருக்கமாட்டார்" என்று நோர்த் கூறியது குறிப்பிடத்தக்கது. கௌரவமான பட்டங்களைப் பெறுவதே முதலியார்மாருடைய நோக்கமாகும். 1799-ல் **கொட்றிங்டன் எட்மன்ட் காரிங்டன்** என்னெருரு நியாயதுரந்தரர் நீதிச்சட்டங்களைத் தொகுத்துவைத்தார். சுப்

பிறிங்கோட்டுக்கு நேரர்த் பிரபுவே தலைமைதாங்கினர். ஆறுமாதங் களுக்கொருமுறை அக்கோடு பலபாகங்களிலும் சந்திப்பதுடன் கீழ்க்கோடுகளின் தீர்ப்பைப்பற்றிய மனுக்களை விசாரணை செய்வதுண்டு. யாழ்ப்பாணம், காலி, கொழும்பு ஆகிய இடங்களில் கீழ்க் கோடுகள் தாபிக்கப்பட்டன. ஒல்லாந்தர் காலத்திலுள்ள "லான்ட் ரூட்ஸ்" என்னும் கோடுகள் யாழ்ப்பாணம், காலி, கொழும்பு, திருகோணமலை, மட்டக்களப்பு, முல்லைத்தீவு, மன்னர், நீர்கொழும்பு, சிலாபம், கற்பிட்டி, களுத்துறை ஆகிய இடங்களிலே தாபிக்கப் பட்டன.

அக்காலத்தில் கண்டி இராச்சியம் எவ்விதமான நிலையிலிருந்த தென்பதைப்பற்றி இனி ஆராய்வோம். சிங்கள அதிகாரிகள் பிலிமத்தளாவை என்ற முதல் அதிகாரியின் தலைமையில் நாயக்க மன்னனாகிய இராசாதி இராசசிங்கனுக்கெதிரே சூழ்ச்சிசெய்தனர். பிலிமத் தளாவை முதல் அதிகாரியாக இருந்தமையினால் அதிக செல்வத் தைச் சேகரித்ததோடு நாட்டிலே அதிக செல்வாக்குடையவனாகவும் காணப்பட்டான். ஆகையால் சிங்கள அரசை மீண்டும் தாபித்து விடுவதற்கு அவனே தகுந்தவனாகக் காணப்பட்டான். தாழ்பூமியில் உண்டான கலகத்தைப் பயன்படுத்தி இராசாதி இராசசிங்கனை அரச பதவியினின்று நீக்கினான் (1798). மற்ற அதிகார்களுடைய எதிர்ப்பு இருந்தமையினால் பிலிமத்தளாவை தானே அரசனாவதற்கு முடியா மற்போனது. ஆகையால் அரசனை நியமிக்காது அரசாங்கத்தை நடத்தினான். ஆனால் இராசாதி இராசசிங்கன் தன்னுடைய மைத் துனனாகிய முத்துச்சாமி என்பவனைத் தற்காலிகமாக நியமித்தான். பிலிமத்தளாவை தான் சிங்காசனமேறும் நோக்கத்தோடு முத்துச் சாமியை ஏற்றுக்கொள்ளாததுமல்லாமல் இன்னும் வேறெருவரை யும் அரசனாக நியமிக்க விரும்பவில்லை. அரசனின் உறவினரும் மற்றும் அதிகாரிகளும் பிலிமத்தளாவை அரசனாக வருவதைத் தடுத்து நின்றனர். அவ்வாண்டிலேயே (1798) இராசாதி இராசசிங்கன் இறந் தமையினால், பிலிமத்தளாவை தன் எண்ணத்திற்கிசைந்து நடக்கக் கூடியவனும், தனக்குத் தருணம் கிடைக்கும்பொழுது இலேசாக நீக்கிவிடக்கூடியவனுமாகிய கண்ணசாமி என்பவனை அரசனாக்கி னான். கண்ணசாமி, இராசாதி இராசசிங்கனின் ஒரு மனைவியின் சகோதரியினுடைய மகனாவான். அவன் **ஸ்ரீ விக்கிரம இராசசிங் கன்** என்ற பெயருடன் அரசனானான். இந்நாட்டில் நாயக்கரால் புகுத்தப்பட்ட அரசுரிமைச் சட்டங்களின்படி இராசாதியின் மைத் துனருள் ஒருவனே அரசனாக நியமிக்கப்படவேண்டும். இராசாதியின்

நான்கு மனைவியருள் முதலிரு மனைவியரும் சகோதரிகளாவர். அவர்களுக்கு முத்துச்சாமி, கண்ணசாமி, புத்தசாமி, சின்னசாமி, ஐயசாமி, அப்புசாமி, றங்கசாமி என்னும் சகோதரர்களும் மற்ற இரு மனைவியருக்கும் கந்தசாமி என்ற ஒரு சகோதரனும் இருந்தார்கள். இவர்களுட் பலர் நோர்த் தேசாதிபதியை உதவிசெய்யும்படி கேட்டபொழுது அவன் அதற்கு மறுத்துவிட்டான்.

ஆங்கிலேயரின் உதவியுடன் தனது எண்ணத்தைப் பூர்த்தி செய்துகொள்ளலாமென்று எண்ணிய பிலிமத்தளாவை அவர்களுடன் ஒரு முக்கியமான விஷயத்தைப்பற்றி ஆலோசனை செய்வதாக ஆங்கிலேயத் தேசாதிபதிக்கு அறிவித்தான். அவ்வண்ணம் இருபகுதியாருக்குமிடையில் சீதாவாக்கையில் நடந்த சம்பாஷணையில், கண்டியைக் கைப்பற்றித் தன்னை அரசனுக்கினுல்தான் அவர்களுக்கு வர்த்தக உரிமைகளைக் கொடுப்பதாக அதிகார் சொன்னுன். அதற்கு நோர்த் பிரபு இணங்கவில்லை. சுயேச்சையாக ஆளமுடியாதிருந்த கண்டி அரசன் பிலிமத்தளாவையின் அதிகாரத்தினின்று விலகிக்கொள்ள முயற்சிகள் செய்தான். அவன் அதிகாரின் பகைவனுடைய மக்களையே மனைவிமாராக்கியதோடு அவனுடைய பகைவர்களின் புத்திமதியையும் கேட்டு நடந்தான். பின்பு அதிகார் சீதாவாக்கையில் பிரதானிகளுடைய கூட்டமொன்றைக் கூட்டி அதற்கு ஆங்கிலேயரையும் வரவழைத்தான். ஸ்ரீ விக்கிரம இராசசிங்கன் பெயரளவில் அரசனுகவிருக்க, தான் நீதிபரிபாலனம், உள்நாட்டு நிர்வாகம் ஆகியவைகளுக்குப் பொறுப்பாக இருக்கவேண்டுமென்று அதிகார் கூறியபொழுது பிரித்தானிய தேசாதிபதி அதற்கு மறுத்து, எவ்விதமான உடன்படிக்கையையும் அரசனேடேயே எழுதுவதற்குச் சம்மதமெனத் தெரிவித்தான். அதிகார் அதற்கு இணங்கி ஒரு தூதுவனைக் கண்டிக்கு அனுப்பும்படி சொன்னுன். **மக்டோவால்** என்பவன் அனுப்பப்பட்டான். பிலிமத்தளாவையின் சூழ்ச்சிகளையுணர்ந்த தேசாதிபதி அரசனுடைய பாதுகாப்புக்காக ஒரு படையையும் அவனுடன் அனுப்பினுன். அப்படை வருவதைக்கண்ட கண்டிமக்கள் பயத்துடன் ஓடி ஒளித்தனர். அரசனும் தப்பி ஓட ஆயத்தஞ் செய்தான். அதிகாரின் பகைவனுன ஒரு திசாவை அரசன்பக்கஞ் சார்ந்து ஒரு சேனையைத் திரட்டி ஆங்கிலப்படையை எதிர்க்க முயற்சித்தான். உறுவன்வலையில் படையை நிறுத்திவிட்டு ஒருசிலரோடு மாத்திரம் மக்டோவால் சென்ருல் அரசன் அவர்களை வரவேற்பான் என்று சொல்லி அதிகார் கன்னறுவாவில் இருபகுதியாரும் சந்திக்கத்தக்கதாக ஒழுங்குசெய்தான். அவ்வாறு சந்தித்த

பொழுது, பிரித்தானியருடைய பாதுகாப்பை ஏற்றுக்கொள்ள முடியா தென்று அரசனுடைய தூதுவர்கள் கூறி உடன்படிக்கையைப் பற்றிக் கலந்தாலோசிக்கச் சம்மதித்தனர். இருபகுதியாருக்குமிடை யில் பகையை உண்டுபண்ணிவிடலாமென எண்ணி முயற்சித்தும் அதிகார் அனுகூலப்படவில்லை. கண்டியை ஆங்கிலேயரின் பாது காப்பில் வைத்திருக்க அரசன் இணங்கினுல், தாங்கள் அதிகாரை யும் அவருடன் சார்ந்துநிற்போரையும் கைதுசெய்துவிடுவதாக மக்டோவால் கூறியும் அதற்கு அவர்கள் உடன்படவில்லை. பின்பு அரசனைச் சந்தித்து உபகாரங்களைக் கொடுத்துவிட்டு அவன் கொழும்புக்குத் திரும்பினுன். கண்டி அரசனுக்கும் பிரித்தானியருக்கு மிடையில் ஏற்பட்ட முதல்முயற்சி பலனளிக்கவில்லை.

கண்டியிலுள்ள மக்கள் அரசனை நீக்கிவிடுவதற்குப் பிரித்தா னியருடைய படையெடுப்பை விரும்பியபொழுதிலும் பிலிமத்தளாவை யின் அதிகாரத்தைக் கூட்டிவிடவோ அல்லது அவனை ஆதரிக்கவோ ஒருவரும் விரும்பவில்லை. பிலிமத்தளாவை, தான் இதுவரையும் செய்த சூழ்ச்சிகள் ஒன்றும் அனுகூலமடையவில்லையென நினைந்து சாதுரியமான இன்னெரு சூழ்ச்சியை யோசித்தான். அரசனுக்கும் ஆங்கிலேயருக்குமிடையில் பகைமையையுண்டாக்கிவிட்டால் ஆங் கிலேயர் தன்னுடைய யோசனைக்கு இணங்கிவிடுவார்களென்று ஆலோசிக்கலானுன். ஆங்கிலேயருக்கெதிரே அரசன் நடவடிக்கை கள் எடுக்கக்கூடியதாக அவனை ஏமாற்றிப் பகையை உண்டு பண்ண முயற்சித்தான்.

கரையோர மாகாணங்களிலுள்ள மக்கள் அணியும் ஆபரணங்க ளில் ஒரு வரியை அறவிடுவதற்கு நோர்த் தேசாதிபதி ஒரு சட் டத்தை உண்டாக்கினுன் (1800). பொன், வெள்ளி, முத்து, கண் ணுடி, சங்கு, எலும்பு இன்னும் மற்றும் உலோகங்களினுற் செய் யப்பட்ட ஆபரணங்களை அணிந்தோர் அவ்வரியைக் கொடுக்க வேண்டியிருந்தது. இதுவே "டாம்பீகவரி" எனப்படும். தென்னை வரியைப்போல இவ்வரியும் மக்களிடையே அதிக அதிருப்தியை உண்டாக்கியது. பலவிடங்களிலும் கலகம் உண்டானது. கலகத்தை விளைவித்த தலைவர்கள் கண்டி இராச்சியத்திற்குச் சென்றனர். பிலி மத்தளாவையும் அக்கலகத்திற் பங்குபற்றினதாகக் கருதப்பட்டது.

இச்செய்திகளெல்லாவற்றையும்பற்றிக் கேள்விப்பட்ட பிரித்தா னிய அரசாங்கம் கரையோர மாகாணங்களின் அரசாங்கத்தைச் சென்னை அரசாங்கத்தினின்று நீக்கி, அதற்குத் தனிப்பட்ட நிர்

வாகத்தை ஏற்படுத்திவிடத் தீர்மானஞ்செய்தது. 1802-ல் குடியரசு ஆட்சிமுறை இலங்கையில் தாபிக்கப்பட்டது. **ஒரு இராசப்பிரதிநிதி மூலம் அரசனால் ஆளப்படும் முறை முடிக்குரிய குடியரசு ஆட்சிமுறையெனப்படும்.** இராசப்பிரதிநிதிக்கு உதவியாக ஒரு சபையுமிருந்தது.

## வினாக்கள்

1. இலங்கையில் டச்சுக்காரருடைய ஆட்சியிலுள்ள பகுதிகளை கைப்பற்றுவதற்கு ஆங்கிலேயருக்கிருந்த சந்தர்ப்பங்களை ஆராய்க.
2. பிரித்தானிய கிழக்கிந்திய சங்கத்தின் நிர்வாகத்திற் காணப்பட்ட குறைகளை எடுத்துக்காட்டுக.
3. 1797-ல் கலகம் ஏற்பட்டதற்குக் காரணம் என்ன?
4. விசாரணைக் குழுவினர் விடுத்த அறிக்கையின் பிரதான அம்சங்கள் யாவை?
5. நோர்த் தேசாதிபதியின் ஆட்சிமுறையைப்பற்றி விபரித்து எழுதுக.
6. கண்டி இராச்சியத்தின் நிலையை ஆராய்க.
7. முடிக்குரிய குடியரசு ஆட்சி என்பது யாது? இலங்கை எப்பொழுது அவ்வித ஆட்சிமுறையைப் பெற்றது?

## 2. பிரித்தானியரும் கண்டி இராச்சியமும்

வங்காளவிரிகுடாவில், திருகோணமலை சிறந்த ஒரு துறைமுகமாகக் காணப்பட்டமையால், பிரித்தானியர் ஐரோப்பாவிலே சமாதானமேற்பட்டவுடன் இலங்கையை தங்கள் வசமாக்கினர். எமியன்ஸ் உடன்படிக்கையின் பிரகாரம் பெற்றுள்ள இந்நாட்டின் ஆட்சி நிர்வாகத்தை இராசப்பிரதிநிதிமூலம் நடத்த ஆரம்பித்தனர். தேசாதிபதிக்கு ஆலோசனை கூறுவதற்காக சபை ஒன்றும் நிறுவப்பட்டது. பிரதம சேனைத்தலைவனும், பிரதான நீதிபதியும், அரசாங்கக் காரியதரிசியும், இன்னும் இருபேருமே அச்சபையின் அங்கத்தவர்களாகும். இலங்கையில் ''சிவில் சேர்விஸ்'' என்ற உயர்தர உத்தியோக சேவையும் முதன்முதலாக ஆரம்பிக்கப்பட்டது. இச்சேவையில் நியமிக்கப்பட்டோர் வருமான அதிபர்களாகவும், பெரிய நீதித்தாபனங்களின் நீதிவான்களாயும் கடமையாற்றினர்.

1801-ல் இங்கிலாந்து அரசனுல் அனுப்பப்பட்ட சட்டசாதனத்தின் பிரகாரம் தேசாதிபதி நீதிபரிபாலனக் கடமைகளினின்று விலக்கப்பட்டு, நீதிபரிபாலனத்திற்கு வேண்டிய ஒழுங்குகள் செய்யப்பட்டன. நாட்டின் வழக்கங்களுக்கேற்பச் சட்டங்களைத் தொகுத்து வைத்த **எட்மன் கரிங்டன்** என்பவன் பிரதம நீதிபதியாயும் ஹென்றி லஷிங்டன் என்பவன் சுப்பிறிங்கோட்டு நீதிபதியாயும் நியமிக்கப்பட்டனர். புதிய சுப்பிறிங்கோடாகிய உயர்தர நீதிமன்றம் 1802-ம் ஆண்டு மாசிமாதம் 8-ந் திகதி திறக்கப்பட்டது. மாகாணக் கோடுகளும் நிறுவப்பட்டன. டச்சுக்காரர் தாபித்த ''லான்ட்ருட்ஸ்'' என்ற கோடுகள் செய்த கடமைகளை இப்புதிய மாகாணக்கோடுகள் நடத்திவந்தன. சமாதான நீதிவான்களும் நியமிக்கப்பட்டனர். அவர்கள் சிறு வழக்குகளை விசாரணைசெய்தனர். கீழ்க்கோடுகளின் தீர்ப்பைப்பற்றியனுப்பப்படும் மனுக்கள், தேசாதிபதி, பிரதம நீதிபதி, நீதிபதி ஆகியோரைக்கொண்டுள்ள மனு விசாரணைக் கோட்டினுல் ஆராயப்பட்டன.

விசாரணைக் குழுவினர் அறிக்கையிற் குறிப்பிட்ட பிரகாரம் ''இராசகாரியா'' முறை மீண்டும் தாபிக்கப்பட்டது. ஆனுல் அதை திரும்பவும் நீக்கிவிடவேண்டியிருந்தது. அம்முறை வழங்கிவரும் போது முதலியார்மார், கிராம அதிகாரிகள் ஆகியோர் அதிகம் செல்வாக்கைப் பெற்றனர். அம்முறையை நீக்கிவிட்டால், கைத்தொழில் வர்த்தக விருத்தி ஏற்படுமென்பது நோர்த் தேசாதிபதியின் அபிப்பிராயமாகும். மேலும் வருமானமும் அதிகரிக்கும் என்

றும் யோசித்தார். சேவைக்குப்பதிலாக மக்கள் வரிகொடுத்தனர். மேட்டு நிலங்களின் விளைவில் பத்திலொன்றும், பள்ள நிலங்களின் வருமானத்தில் ஐந்திலொன்றும் வரியாகக் கொடுக்கப்பட்டன. இந் நிலமானிய சேவையை நிறுத்திவிட்டதனால் கறுவா வியாபாரத்துக்கு நட்டமேற்பட்டது. இலங்கையின் அரசியல் நிர்வாகத்தினின்று கிழக் கிந்தியசங்கம் நீக்கப்பட்ட பொழுதிலும் இங்கிருந்து கறுவா ஏற்றுமதிசெய்யும் உரிமை அதற்கிருந்தது. அவ்வுரிமை 1833 வரையு மிருந்துவந்தது.

இலங்கையின் கரையோர மாகாணங்களிலே தங்களுடைய ஆதிக்கத்தை நிலைநாட்டியதனால், எவ்வகையிலும் பலமுள்ள ஆங் கிலேயர் மத்தியபாகத்திலுள்ள சிங்கள இராச்சியத்தை எப்போதா வது கைப்பற்றுவர் என்பது வெளிப்படை. உப்பு, சீலை முதலிய பொருள்களைப் பெறுவதற்கு ஆங்கிலேயருடைய உதவி கண்டி மக்களுக்கு எப்பொழுதும் தேவையாயிருந்தது. மருதானைப்பகுதியி லுள்ள கறுவாத் தோட்டங்களிலிருந்து தேவையான கறுவாவை அவர்கள் பெற்றுக்கொள்ளத் தக்கதாகயிருந்தமையால், கண்டியரச னிடம் அதைப் பெற்றுக்கொள்ளவேண்டியதில்லை. முத்துக்குளிக்கு மிடங்கள் அவர்கள்வசமிருந்தமையினால் அவர்கள் போதிய ஆதா யத்தைப் பெற்றனர். கண்டி இராச்சியத்தில் அவர்கள் தங்களுடைய இராணுவ அதிகாரத்தை நிலைநாட்டிவிட்டால் எல்லைப்புறங்களைக் காவல்புரியும் செலவு குறைந்துவிடும். கரையோரப்பகுதியைக் காவல் செய்தால் மாத்திரம் போதும். ஆங்கிலேயர் கண்டிமீது படை எடுத்துச் செல்வதற்குக் கண்டி அரசனும் அவனுடைய பிரசை களும் நடந்துகொண்டவிதமும் அவர்களுக்குச் சாதகமாகக் காணப் பட்டது. போர்த்துக்கீசரைத் துரத்திவிடுவதற்காகக் கண்டி அரசன் ஒல்லாந்தரோடு நட்புக்கொண்டமையால் அவர்கள் கண்டிக்குப் படையெடுத்துச் சென்றனர். பிரித்தானியருடைய உதவியைக்கோரி நின்றமையால் ஒல்லாந்தர் கண்டிமீது படையெடுத்துச் சென்ற னர். 1797-ல் கொம்பனியின் ஆட்சியிலுள்ள பகுதிகளிலே கலக மேற்பட்டபொழுது கண்டியரசன் கலகக்காரர்பக்கத்தையே சார்ந் தான். அதனால் ஆங்கிலேயர் எல்லைப்புறங்களைக் காவல்செய்ய வேண்டியிருந்தது. பிரித்தானியரோடு உடன்படிக்கை எழுதுவதற் கும் கண்டியரசன் இணங்கவில்லை. கொழும்பையும் திருகோண மலையையும் இணைத்துக் கண்டிக்கூடாக வீதியொன்றை அமைப் பதற்கு அரசன் இடங்கொடுக்கவில்லை. அதனால் அரசன் அவர்கள் மீது சந்தேகங்கொண்டான். வர்த்தகத்தை விருத்திசெய்வதற்கு

நோக்கம்வைத்திருந்த ஆங்கிலேயருக்கு கண்டி இராச்சியத்தின் எல்லைப்புறங்களில் வர்த்தகப்பொருள்களுக்கு விதிக்கப்பட்ட வரியும் தடையாயிருந்தது. அக்காலத்திலிருந்த கண்டியரசர்கள் நாயக்க வமிசத்தைச் சேர்ந்தவர்களாகையால் சிங்களப்பிரசைகள் அவர்களை நீக்கிவிட்டு சிங்கள அரசனெருவனை சிங்காசனமேற்ற எண்ணங் கொண்டிருந்தனர். அந்நேரத்தில் பிலிமத்தளாவை அரசனுக்கெதிரே சூழ்ச்சி செய்துகொண்டிருப்பதையறிந்த நோர்த் தேசாதிபதி அரசனுடைய பாதுகாப்புக்காக ஒரு படையொன்றைக் கண்டியில் வைத்திருக்க அரசனுடைய சம்மதத்தைக் கேட்க அரசன் அதற்கு இணங்கவில்லை. ஆனல் அரசனுக்கு அந் நேரத்தில் ஒருவித அபாயமுமில்லை. பிலிமத்தளாவைக்கு உதவி செய்வதற்கு ஆங்கிலேயர் மறுத்த பொழுதிலும் அவன் தான் அரசனுகவேண்டுமென்ற ஆசையை நீக்கவில்லை. ஆகையினுல் இரு பகுதியாருக்குமிடையில் சண்டையை உண்டுபண்ணிவிட்டாற் தான் அனுகூலமடையலாமென யோசனை செய்தான். புத்தளத்திலுள்ள பிரித்தானிய பிரசைகளாகிய சில முஸ்லீம் வர்த்தகர்கள் கண்டிக்குச் சென்று புகையிலை, உப்பு, மீன், சீலை முதலிய பொருள்களை விற்று அங்கே பாக்கை வாங்கிச் சென்றனர். பிலிமத்தளாவையின் தூண்டுதலினுல் அவர்களிடமிருந்த பாக்குப் பறித்தெடுக்கப்பட்டு அவர்களும் துன்புறுத்தப்பட்டனர். இதை அறிந்தவுடன் நோர்த்தேசாதிபதி, அவ் வர்த்தகர்களுக்கு நட்டஈடு அளிக்கப்படவேண்டுமென்று அரசனைத் தூதுவர்கள் மூலம் கேட்டான். கண்டியிலுள்ள அரசியல் நிர்வாகம் இவ் விஷயங்களைப்பற்றி உடனடியாக நடவடிக்கை எடுப்பதற்கு ஏற்றதாகக் காணப்படவில்லை. அரசனுடைய உத்தரவின்படி தங்களுடைய பொருள்களைப் பெற்றுக்கொள்வதற்குக் கண்டிக்குச் சென்ற அவ் வர்த்தகர்கள் அங்கு ஒரு மாதத்திற்கு மேல் தாமதிக்கப்பட்டனர். பின்பு அவர்கள் திருப்பி அனுப்பப்பட்டு இரண்டு மாதங்களின் பின் வந்து அப்பொருள்களைப் பெற்றுக்கொள்ளலாமென்ற கட்டளையைப் பெற்றனர். பின்னரும் அவர்களுடைய பொருள்கள் கொடுக்கப்படாமையால், அப் பொருள்கள் அல்லது அவைகளின் பெறுமதி உடனே கொடுக்கவேண்டுமென நோர்த் தேசாதிபதி வற்புறுத்தி நின்றும், அரசன் ஒன்றுக்குமிணங்கவில்லை. ஆகையால் 1803-ல் கண்டிக்குச் சென்று, படைப்பலத்தைக் கொண்டு நட்டஈட்டைப் பெற்றுக்கொள்ளத் தீர்மானித்தான். இரு பகுதியாருக்குமிடையில் சண்டை உண்டாவதற்கு பிலிமத்தளாவையே காரணமாயிருந்தான்.

போர்த்துக்கீசரும் ஒல்லாந்தரும் கண்டியைக் கைப்பற்றிக் கொள்ள முடியாமலிருந்ததற்குக் காரணம் என்னவென்று நோர்த் சிறிதேனும் யோசிக்கவில்லை. கண்டி நாட்டின் இயற்கை அரண்கள் பகைவரின் படையெடுப்பினின்று காத்து வந்தன. கண்டியைக் கைப்பற்றுவதற்கு மூன்று இயற்கைத் தடைகளிருந்தன. படையெடுத்துச் செல்லும் சேனைகள் அடர்ந்த காடுகளுக்கூடாகவோ அல்லது உயர்ந்த மலைகளை ஏறியோ செல்லவேண்டியிருந்தன. அதுவுமல்லாமல் மழை காலங்களில் ஆறுகள் பெருக்கெடுத்தோடுவதால் காட்டுப்பாதைகள் வழியே செல்வது கஷ்டமாகக் காணப்பட்டது. அந்நேரத்தில் மலைநாட்டுக்கும் தாழ்பூமிக்குமிடையில் போக்கு வரத்தும் கஷ்டமாக விருந்தது. கொழும்பு, திருகோணமலை ஆகிய இரு இடங்களிலுமிருந்து படையெடுத்துச் சென்றனர். 2000 போர் வீரர்களைக் கொண்டுள்ள சேனையோடு **கேய் மக்டோவால்** கொழும்பிலிருந்து புறப்பட்டான். திருகோணமலையிலிருந்து **பார்பட்** 2000 போர்வீரர்களோடு புறப்பட்டான். ஒன்று **கலகெதரைக்** கணவாய் மூலமும், மற்றது மாத்தளைக் கூடாகவும் சென்று கட்டுக்காஸ்தோட்டையிற் சந்தித்து கண்டியுட் புகுந்தனர். அவைகளின் வரவைக் கண்ட அரசனும் அதிகார்மார்களும், மக்களும் அரண்மனைக்கும் கோயில்களுக்கும் தீயிட்டு விட்டு ஓடி ஒளித்தனர். ஆங்கிலேயர் தீயை அணைத்து விட்டு நகரத்தைக் கைப்பற்றினர். ஆங்கிலேயர் முத்துச்சாமியை அரசனுக்கி அவனுடன் ஒரு உடன்படிக்கையுமெழுதினர். முத்துச்சாமி அவர்கள் செய்த உதவிக்காக சப்தகோறளையை அவர்களுக்குக் கொடுத்தான். இதனுற் கோபமடைந்த அதிகார் ஆங்கிலேயரோடு நட்புக் காட்டித் தான் அரசனைக் காட்டி கொடுப்பதாக அவர்களுக்குக் கூறினன். அவ்வண்ணம் ஹங்குறுவன் கெத்தாவுக்குச் சென்ற ஆங்கிலேயப்படை அதிகம் எதிர்ப்பைப் பெற்றது. அரசன் அங்கு காணப்படாமையால் அவனைத் தொடர்ந்து செல்லுமாறு அதிகார் தூண்டிய பொழுது சேனைத் தலைவன் இவன் மீது சந்தேகங் கொண்டு மறுத்துவிட்டுத் திரும்பினன். அதிகார் திருகோணமலைக்கும் கண்டிக்குமுள்ள போக்கு வரவு வசதிகளைத் தடுத்து விட்டான். இதற்கிடையில் பிரித்தானிய போர்வீரர்கள் காட்டுமார்க்கமாக வந்ததினல் மலேரியாக் காய்ச்சலினல் பீடிக்கப்பட்டனர். மக்டோவாலும் சுகயீனத்தினிமித்தம் நோயுற்ற போர்வீரர்களையும் கூட்டிக்கொண்டு கொழும்புக்குத் திரும்பினன். **பார்பட்டும்** நோய்வாய்ப்பட்டுத் திரும்ப நேர்ந்தது. ஆகையால் **டேவி** என்பவனின் பொறுப்பில் ஆங்கிலேயப் போர்ப்படை கண்டியில் விடப்பட்டது.

தென்மேற்குப் பருவக்காற்றுக் காலமாகையால் அதிக மழை பெய்ததினுல் ஆறுகள் பெருக்கெடுத்தோடின. கண்டிக்கும் கொழும்புக்குமுள்ள போக்குவரவு வசதிகள் தடைப்பட்டன. உணவுக் கஷ்டமும், நோயும் ஆங்கிலேயப் படையை வருத்தின. இந் நிலையில் அதிகார் கண்டி அரசனைத் தேடிப்பிடிப்பதற்கு 600 போர் வீரர்களை அனுப்பும்படி டேவியைக் கேட்டபொழுது அவன் அதற்கு மறுத்தான். பின்பு அந்நிலையில் ஆங்கிலேயருடைய போர்ப்படையை கண்டிச் சேனை சூழ்ந்துகொண்டது. பத்து மணித்தியாலங்களாக நடந்துகொண்ட சண்டையின் பின் டேவி சரணுகதியடைய நேரிட்டது. பின்பு முத்துச்சாமியையுங் கூட்டிக்கொண்டு ஆங்கிலேயப் படையைக் கண்டியை விட்டு நீங்கித் திருகோணமலைக்குச் செல்லுமாறு அதிகார் டேவிக்குக் கட்டளையிட்டான். போர்க்கருவிகள் தன்னிடம் ஒப்படைக்க வேண்டுமென்றும் தான் நோயாளிகளையும் காயப்பட்டவர்களையும் கவனித்துக் கொள்வதாயுஞ் சொன்னுன். அவ்வண்ணஞ் சென்ற சேனைக்கு வழியில் அநேக துன்பங்களை விளைவித்தான். அச்சமயத்தில் மகாவலிகங்கை பெருக்கெடுத்தோடியமையால் அப்பாற்செல்ல முடியாமல் ஆற்றங்கரையில் ஓரிரவு தங்கியிருக்க வேண்டி நேர்ந்தது. மறுநாட்காலை அரசன் அனுப்பிய தூதன் அங்கு சென்று முத்துச்சாமியை அரசனிடம் அனுப்பவேண்டுமென்று கேட்டபொழுது டேவி அதற்கு மறுத்தான். ஆங்கிலேயப் படை முழுவதும் அழிக்கப்படுமென்று பயமுறுத்தப்பட்டபொழுது டேவி முத்துச்சாமியைக் கை விட்டான். முத்துச்சாமி உடனே கொல்லப்பட்டான். பின்பு டேவி மற்றவர்களினின்று நீக்கப்பட்டு கண்டிக்குக் கொண்டு செல்லப்பட்டான். அவன் தனது காலத்தைச் சிறையிலே கழிக்கவேண்டியதாயிற்று. மற்றும் போர் வீரர்கள் கண்டிக்குக் கொண்டு செல்லப்பட்டு அங்கே உயிரை யிழந்தனர். நோய்வாய்ப்பட்டிருந்த போர் வீரர்களும் கொலை செய்யப்பட்டனர். டேவி விடுதலையடையப்பெருது பரிதாபமான நிலையிற் காலங்கழித்து 1812-ல் இறந்தான். இவ்வாறு பிரித்தானியர் அடைந்த நட்டமும், தோல்வியும் அவர்களுடைய மதிப்புக்கு ஒரு இழுக்காகக் காணப்பட்டன.

இவ் வெற்றிப் பிரலாபத்திஞல் கண்டி அரசன் தாழ் பூமியைத் தாக்க ஆரம்பித்தான். ஆங்குள்ள மக்களும் அரசன் பக்கஞ் சார்ந்தமையால் நோர்த் இராணுவச் சட்டத்தை உண்டாக்கினுன். கொழும்பு, மன்னுர், நீர்கொழும்பு, யாழ்ப்பாணம், முல்லைத்தீவு, மட்டக்களப்பு, திருகோணமலை ஆகிய இடங்கள் ஒரே நேரத்திற்

தாக்கப்பட்டன. இந்தியாவிலிருந்து வந்த படையின் உதவியோடு கலகம் அடக்கப்பட்டது. அரசன் தன்னுடைய சேனையோடு கொழும்பைத் தாக்க ஆரம்பித்தபொழுது ஆங்கிலேயர் இச் சேனையைத் துரத்தி அதைப் பின் தொடர்ந்து சென்று பலவிடங்களையும் நிக்கிரையாக்கினர். இரண்டாவது முறை கண்டிக்குப் படையெடுத்துச் செல்ல நோர்த்தேசாதிபதி போட்ட திட்டம் பின் போடப்பட்டது.

1805-ல் மெயிட்லன்ட் தேசாதிபதி அனுப்பப்பட்டார். இவர் நிர்வாகத்தைத் திருத்தியமைக்கும் முயற்சியில் ஈடுபட்டார். நோர்த் தேசாதிபதியினுடைய காலத்திலே தாபிக்கப்பட்ட முடிக்குரிய குடியேற்ற நாட்டுப் பரிபாலனத்தை பலமுறச் செய்யவேண்டுமென நினைத்து பல மாற்றங்களை உண்டாக்கினர். இராணுவப் பலத்தைக் கொண்டு ஆட்சிபுரிய யோசிக்காது சிறந்த நிர்வாக முறையினுல் மக்களுடைய ஆதரவைப் பெறுவதற்கு எண்ணங்கொண்டார். நோர்த்தேசாதிபதி நிலமானிய முறையை நீக்கியமையினுல் பல கஷ்டங்கள் தோன்றின. சாதிக்கட்டுப்பாட்டின்படி மக்கள் தொழிலை நடத்தி வந்தனர். தங்களுடைய குலத்திற் கொவ்வாத தொழிலைச் செய்வதற்கு விருப்பமற்றவர்களாயும் கூலிவேலை செய்வதற்கு மறுப்புடையவர்களாயும் இருந்தமையினுல் எவ்விதமான சம்பளத்தையும் பெற்றுக்கொள்ள முடியுமென்றாலும் பிரஸ்தாப வேலைத் தலங்களில் வேலைசெய்ய மக்கள் மறுத்தனர். இவ்விதமான மனப்பான்மை இருப்பதை விசாரணைக் குழுவினர் சுட்டிக்காட்டியிருந்த போதிலும் நோர்த்தேசாதிபதி பண்டைக் காலந் தொட்டு வழங்கி வந்த நிலமானிய முறையை நீக்கிவிட்டு வேலை செய்வதற்குக் கூலியாட்கள் கிடையாமல் இந்தியாவிலிருந்து வேலையாட்களைக் கொண்டு வந்தார். மெயிட்லன்ட் தேசாதிபதியும் கூலியாட்கள் கிடையாமல் பிரஸ்தாப வேலைகளைச் செய்து முடிப்பதற்குக் கஷ்டப்பட்டார். உணவின்றிக் கஷ்டமடைந்தாலும் கூலிவேலை செய்து உழைக்கிறதற்கு இங்நாட்டு மக்கள் விரும்பமாட்டார்கள் என்று மெயிட்லன்ட் கூறினர். ''இராசகாரியா'' முறையை நீக்கியதனுலேயே இந் நிலை ஏற்பட்டதென அவர் உணர்ந்தார். இந் நிலையை நீக்கி விடுவதால் வருமானம் அதிகரிக்குமென நோர்த் காத்திருந்ததும் பயனற்றதாய்ப் போனது. நெல்லை அல்லது கறுவாவை விளைவிப்பதிற் சனங்கள் சிரத்தை காட்டவில்லை. அரச சேவையினின்று விடுதலை பெற்ற மக்கள் தாங்கள் பெற்ற சுதந்திரத்தைப் பயன்படுத்தவில்லை. அவர்கள் ஒழுங்கீனமான வாழ்க்கையை நடத்த ஆரம்பித்

தமையால் கொலை, களவு முதலிய பாதகச் செயல்கள் கூடின. ஆகையால் கிராமங்களில் "பொலிஸ் விதானைமார்" நியமிக்கப்பட்டனர். நில மானிய முறை இந் நாட்டின் நிலைக்கு ஏற்றதொன்ருகு மென்றும், பொருளாதார நிலை மாறுதலடையுமளவும் பழைய முறையே தகுந்ததென்றும் எடுத்துக்காட்டி மெயிட்லன்ட் தேசாதிபதி அதைத்தாபித்தார்.

மெயிட்லன்ட் தேசாதிபதி நீதி வழங்கும் முறையிலும் வேண்டிய திருத்தங்களை செய்து வைத்தார். கொழும்பு, யாழ்ப்பாணம், காலி, புத்தளம், திருகோணமலை ஆகிய இடங்களிலே மாகாண நீதித்தலங்கள் தாபிக்கப்பட்டன. மாகாண நீதிபதிகள் இல்லாத நேரங்களில் வருமான அதிகாரிகள் நீதிபதிகளாகக் கடமையாற்றினர். அலெக்சாந்தர் யோன்ஸ்டன் என்ற பிரதம நீதிபதி முஸ்லிங்களுடைய பழைய வழக்கங்கள் முறைகளுக்கேற்ப சட்டங்களைத் தொகுத்து வைத்தார். கத்தோலிக்க சமபத்தவர்களுக் கெதிரே ஒல்லாந்தராலுண்டாக்கப்பட்ட சட்டங்களை மெயிட்லன்ட் தேசாதிபதி நிராகரித்து விட்டார். அதனால் கத்தோலிக்க சமயத்தவர்கள் சமய வழிபாட்டுச் சுதந்திரத்தைப் பெற்றதோடு ஏனைய மக்களைப்போல சகல உரிமைகளையும் பெற்றனர் (1806). மெயிட்லன்ட் தேசாதிபதி உண்டாக்கிய மாற்றங்கள் அலெக்சாந்தர் யோன்ஸ்டனுடைய உதவியுடன் ஆக்கப்பட்டன. யோன்ஸ்டன் இலங்கையின் எல்லாப் பாகங்களுக்குஞ் சென்று செய்யவேண்டிய திருத்தங்களைப் பற்றி தான் வெளிப்படுத்திய அறிக்கையிற் குறிப்பிட்டார். விவசாயத்தை விருத்தி செய்வதற்காக அழிந்துபோயிருந்த குளங்கள் திருத்தப்பட வேண்டுமெனக் குறிப்பிட்டார். கொழும்பைத் தவிர்ந்த ஏனைய இடங்களில் ஐரோப்பியர் நிலங்களைச் சொந்தமாக வைத்திருக்க முடியாதென்ற பிரமாணத்தை நீக்கி ஐரோப்பியருக்கும் இந்தியருக்கும் இலங்கையில் தங்களுடைய பணத்தை விவசாயஞ் செய்வதில் முதலிடுவதற்கு அனுமதியளிக்கப்பட வேண்டுமென்றும் அபிப்பிராயப்பட்டார். ஒரு கிருஷிக பாடசாலையும், கைத்தொழிற் பாடசாலையும் தாபிக்கப்படவேண்டுமென்றும் விளக்கியுள்ளார். அவர் குறிப்பிட்ட அரசியல் மாற்றங்கள் முற்போக்குடையனவாகக் காணப்பட்டன. சட்ட நிரூபண சபை யொன்று நிறுவப்பட வேண்டுமென்றும், அச்சபைக்கு ஒவ்வொரு தொகுதிகளிலுமிருந்து தெரியப்பட்ட அங்கத்தவர்கள் அனுப்பப்பட வேண்டுமென்றும் அபிப்பிராயங் காட்டினுர். சுதேசிகள் "சிவில் சேவிஸ்" என்ற உயர்தர உத்தியோக சேவையிற் சேர வசதி

உண்டாக்க வேண்டுமெனவும் கூறினர். அடிமைத்தனம் இலங்கையில் நீக்கப்பட வேண்டுமென்றும், குற்றம் சாட்டப்பட்டோருக்கு "யூரிமார்" முன்னிலையில் பூரண விளக்கம் நடத்தப்பட வேண்டுமென்றும் குறிப்பிட்டார். அவரே இங்கிலாந்துக்குச் சென்று தன்னுடைய பிரேரணைகளை குடியேற்ற நாட்டு மந்திரியுடன் கலந்தாலோசித்து அவருடைய அனுமதியைப் பெற்று வரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்பட்டார். அவர் குறிப்பிட்டவைகளிற் பின் வருவன அனுமதிக்கப்பட்டன. (1) யூரிமார் முன்னிலையில் விளக்கம் நடத்தும் முறை (2) அடிமைத்தனத்தை ஒழித்து விடல் (3) இராசகாரிய முறையை நீக்கி விடுதல் (4) கறுவா வியாபாரத்தின் ஏகபோக உரிமை நீக்கப்படுதல் (5) ஐரோப்பியர் சொந்த நிலங்களை வைத்திருக்க முடியாதென உண்டாக்கப்பட்ட சட்டத்தை நீக்கி விடுதல். இவ்விதமான கொள்கைகளைக் கொண்டுள்ள சாதனம் ஒன்றை அவர் வரும் பொழுது இங்கு கொண்டுவந்தார் (1810). யூரிமார் முன்னிலையிலும் விசாரணை நடத்தும் முறை கீழ் நாடுகளில் முதன் முதலாக இலங்கையிலேயே கொண்டுவரப்பட்டது. ஒவ்வொரு வழக்கும் விசாரணை செய்யும் பொழுது 13 யூரிமார்கள் தெரிந்தெடுக்கப்பட்டனர். பின்பு அத் தொகை 7 யூரி மார்களாகக் குறைக்கப்பட்டது.

கரையோர மாகாணங்களிலே முதலியார்மார் அதிக செல்வாக்குடையவர்களாக இருந்தமையினல் அவர்களுடைய அதிகாரத்தைக் குறைக்கும் நோக்கமாக அவர்களுடைய சேவைக்காகக் கொடுக்கப்பட்ட நிலங்களை நோர்த் தேசாதிபதி எடுத்துவிட்டுச் சம்பளத்தைக் கொடுத்தார். மெயிட்லன்ட் தேசாதிபதியும் அக்கொள்கையையே கையாண்டார். முதலியார் செய்துவந்த நீதி பரிபாலனக் கடமைகள் நீதிவான்களுக்குக் கொடுக்கப்பட்டன. சமாதான நீதிவான்களின் மேற்பார்வையில் இதுவரையும் முதலியார்மார் கிராமங்களிற் செய்த வேலைகள் விதானைமாருக்குக் கொடுக்கப்பட்டன. ஆசிரியர்மார்களிடம் நிலங்களைப் பற்றிய விபரங்களைக் கொண்டுள்ள தோம்புகள் ஒப்படைக்கப்பட்டமையால் பிரதானிகளிடமிருந்து மக்களைப் பற்றி பிரித்தானிய மேலுத்தியோகத்தர் ஒன்றும் அறியவேண்டியதில்லை. "சிவில் சேவிஸ்" முன்னிலும் பார்க்கத் திறமையாகத் தாபிக்கப்பட்டது. அச் சேவையிலுள்ள உத்தியோகத்தர்கள் சொந்த முறையில் வர்த்தகம் நடத்தாமற் தடுக்கப்பட்டமையினல் அவர்கள் முழு நேரத்தையும் தங்களுடைய கடமையை ஆற்றுவதிலேயே செலவிட்டனர். சுதேச மொழிகளிற் தேர்ச்சி பெற்ற அவ்வுத்தியோகத்தர்களுக்கு வெகுமதிகள் கொடுக்கப்பட்டன.

அந்நேரத்திலே கண்டி இராச்சியத்திலிருந்த நிலை, பிரித்தானியர் அதைக் கைப்பற்றிக் கொள்வதற்குச் சாதகமாயிருந்தது. அரசன் பிரதானிகளுடைய அதிகாரத்தைக் குறைத்து விடவும், பிரதானிகள் அரசனை நீக்கிவிடவும் முயற்சிகள் செய்தமையினால் இரு பகுதியினருக்குமிடையில் சச்சரவுகள் ஏற்பட்டன. பிரதானிகள் மக்களை வருத்தியதினால் அவர்கள் அரசனிடம் முறையிட அவன் பிரதானிகளைக் கடுமையான முறையில் நடத்தத்'தொடங்கிய பொழுது அரசன்மேல் அவர்களுக்கிருந்த வெறுப்பு அதிகரித்தது. மக்களாலும் அரசனாலும் வெறுக்கப்பட்ட அதிகாரிகள் பிரித்தானியரோடு சேர்ந்து சூழ்ச்சிகள் செய்ய ஆரம்பித்தனர். இருபகுதியாருக்குமிடையிலிருந்த அதிருப்தியைப் பயன்படுத்தி கண்டி இராச்சியத்தை ஆங்கிலேயருடைய அதிகாரத்தின் கீழ்க் கொண்டு வரும் நோக்கத்துடன் **யோன் டி ஒயிலி** என்ற பிரித்தானிய வருமான அதிகாரி கண்டிப் பிரதானிகளோடு தொடர்பு வைத்திருந்தான். கண்டி இராச்சியத்தைக் கைப்பற்றுவதினால் பிரித்தானியர், தாங்கள் பெற்றுக்கொள்ளக்கூடிய நலத்தை முன்னமே அறிந்திருந்தனர். **டன்டாஸ்** என்ற குடியரசு நாட்டு மந்திரி, ''கண்டி இராச்சியத்தில் தலையிட்டுக் கொள்ளும் உரிமையைப் பெறவேண்டும். அப்பகுதியின் இராணுவ அதிகாரமும், உள்நாட்டு நிர்வாகமும் எங்களுடையதாக இருக்கவேண்டும்'' என்று கூறினர் (1800). அக்காலந் தொட்டு 1818 வரையும் அவர்களுடைய மனப்பான்மை அவ்விதமாக இருந்து வந்தது.

இரண்டாம் அதிகாராகிய மிகாஸ்தனை என்பவன் 1806-ல் இறக்க, அரசன் அவனுடைய சொத்துக்கள் யாவற்றையும் பறித்துத் தன்னுடைய நாயக்க வம்சத்திலுள்ள உறவினருக்குக் கொடுத்து அவனுடைய திசாவானியைப் பிரித்து இரண்டு அதிகார்மார்களுக்குக் கொடுத்தான். இரு அதிகார்மார்களுக்குச் சேவை புரிய வேண்டியிருந்தமையினால், ஏழு, நான்கு கோறளைகளிலும் சப்பிரகாமுவாவிலுமுள்ள மக்கள் கலகத்தை உண்டுபண்ணினர். அரசன் அதை அடக்கமுடியாமலிருக்க பிலிமத்தளாவை அடக்கு முறைகளினற் கலகத்தை நிறுத்தி விட்டான். அதிகார் கலகத்தை அடக்குவதில் அனுகூலமடைந்ததினால் பொருமையுற்ற அரசன் அதிகாரிகள், பிரஜைகள் ஆகியோருடைய உற்சாகத்தைக் குறைத்து விட எண்ணி பயனற்ற வேலைகளில் அவர்களை ஈடுபடுத்தினன். புதிய வீதிகளை அமைப்பதற்கும், தலத மாளிகையைக் கட்டுவதற்கும், கால்வாய்களை வெட்டுவதற்தும் அவர்களுடைய சேவையைப் பயன்படுத்தினன். இராசகாரியாச்சேவை மூலம் நடைபெற்ற அவ்

வேலைகளுக்குத் தொழிலாளிகள் வலோற்காரமாக அனுப்பப்பட்ட மையால் மக்களுக்கு அரசன் மீது அதிக வெறுப்பும் கோபமும் உண்டானது. ஆங்கிலேயருடைய ஆட்சியின் கீழுள்ள பகுதிகளுக்கருகாமையிலே வசித்த மக்கள் அதிக அதிருப்திகொண்டிருந்தமையால் தினசரிவேலைகள் முடிந்தவுடன் அவர்கள் கண்டியை விட்டு விலக வேண்டுமென அரசன் கட்டளையிட்டான். அதிக செல்வாக்கைப் பெற்றிருந்தபொழுதிலும் பிலிமத்தளாவை அரசனுக முடியவில்லை. ஆகையால் தன்னுடைய மகனை சிங்காசனமேற்றும் நோக்கத்துடன் கீர்த்தி ஸ்ரீ இராசசிங்கனின் மகளுடைய மகளை அவனுக்கு விவாகஞ் செய்து வைக்க ஏற்பாடுகள் செய்தான். அதனுற் சீற்றங் கொண்ட அரசன் அவனை மகாநடுவா என்ற நீதித்தலத்தில் விசாரணை செய்து அவன் பல கொடுமைகளை விளைத்தானென்று குற்றஞ் சாட்டி அவனை அதிகார்ப் பதவியினின்று நீக்கி விட்டுச் சிறைச்சாலைக்கு அனுப்பினுன். சிறிது காலத்திற்குப் பின் அவனுக்கு விடுதலை அளித்தான். எல்லா அதிகாரத்தையும் இழந்த அதிகார், அரசனை அவனுடைய படுக்கை அறையில் குத்திக் கொல்லுமாறு ஒருவனைத் தூண்டி விட்டான். அரசன் விழிப்பாயிருந்தமையால் கொலைஞன் அச் செயலைச் செய்யமுடியாமற் போனது. பிலிமத்தளாவை, அவனுடைய மகன், அவனுடைய மருமகன் ஆகிய மூவருக்கும் விசாரணையின் பின் மரணதண்டனை விதிக்கப்பட்டது (1812). ஆனுல் அவனுடைய மகன் சார்பில் மற்றும் பிரதானிகள் பேசினமையால் அவன் அத் தண்டனையினின்று நீக்கப்பட்டான். அவர்களுடைய சொத்துக்களும் பறிக்கப்பட்டன. பின்பு அரசன் சந்தேகங் கொண்ட எல்லோரையும் கொன்றுவிட்டான். அவர்களுள் கீர்த்தி ஸ்ரீ இராசசிங்கனின் மகனும் ஒருவனுதம்.

மெயிட்லன்ட் தேசாதிபதியின் பின் **பிரௌன்றிக்** தேசாதிபதியாக நியமிக்கப்பட்டான் (1812). இவனுடைய காலத்திலேயே கண்டி இராச்சியம் ஆங்கிலேயராற் கைப்பற்றப்பட்டது. ஆனுல் பிரௌன்றிக் தேசாதிபதி இலங்கைக்கு அனுப்பப்பட்ட பொழுது கண்டி அரசனேடு சிநேகித முறையில் நடந்துகொள்ள வேண்டுமென ஆங்கிலேய அதிகாரிகளாற் கற்பிக்கப்பட்டிருந்தான். வர்த்தகத்தைப் பெருப்பித்துக்கொள்ளும் நோக்கத்துடன் கண்டி அரசனேடு ஒரு வர்த்தக உடன்படிக்கையை எழுதுவதற்கு முயற்சித்த பொழுது அதற்கு அவன் உடன்படவில்லை. பின்னர் கண்டி இராச்சியத்தைக் கைப்பற்றுவதே நலமென நினைந்து அங்குள்ள அதிருப்தியடைந்த பிரதானிகளோடு தொடர்பு வைத்துக்கொண்டான்.

ஆனுல் அரசனும் தனக்குக் கீழ்ப்படியாத பிரதானிகள் ஆங்கிலே யருடைய ஆதரவைப் பெறுகின்ருர்களென நினைந்து அவர்கள் மீது படையெடுத்துச் செல்ல ஆயத்தம் செய்கிருன் என்ற வதந்தியும் பரவியது. பிரான்சியருடைய படைத் துணையை அரசன் எதிர் பார்த்திருப்பதாகவும் அறிந்தனர். பிரௌன்றிக் தேசாதிபதி ஏற்ற தருணம் கிடைக்கும் பொழுது கண்டியைக் கைப்பற்றுவதாகத் தீர்மானித்தான்.

பிலிமத்தளாவை முதல் அதிகாரப் பதவியினின்று நீக்கப்பட்ட பின் **எகலப்பொல** என்பவன் முதல் அதிகாரமாக நியமிக்கப்பட்டான். பிலிமத்தளாவையிலும் இவனே அதிக செல்வாக்குடையவனுகக் காணப்பட்டான். அவனுடைய உறவினரிலநேகரும் திசாவைகளாயிருந்தனர். நாயக்கருக்கு எதிர்ப்புக் காட்டி அதிருப்தியுற்ற கட்சிக்குத் தலைவனுக இவன் விளங்கினுன். இவனின் பகைவனுன மொலிக்கொடை என்பவனை ஸ்ரீ விக்கிரமராசசிங்கன் இரண்டாம் அதிகாரமாக நியமித்தான். பிரதானிகள் மீது அதிக சீற்றங் கொண்ட அரசன் அவர்களைத் தண்டிக்கவும் பழிவாங்கவும் முயன்ருன். பிரதானிகளுக்கு உறவான பிக்குகளைக் கூடக் கொடுமையான முறையில் நடத்தினுன். அவர்களில் ஒருவரைக் கொன்று விட்டான். பிரித்தானியர் ஆட்சிசெய்த பகுதிகளுக்குக் கிட்டவுள்ள பகுதிகளில் தனக்கு எதிர்ப்புக் காட்டிய குடும்பத்தினரை அப்பகுதிகளிலிருந்து அரசன் துரத்தி விட்டமையால் கலகமேற்பட்டது. திசாவானிகளைப் பிரித்துத் திசாவைகளின் செல்வாக்கைக் குறைத்தும் திசாவைகளுக்கு மாற்றங்கள் அளித்தும், மக்களை வருத்திய பொழுது அவர்களைத் தண்டித்தும், இவ்வாறுன நடவடிக்கைகளை அரசன் எடுத்தான். ஆகையால் பிரதானிகள் அரசனை நீக்கிவிட வேண்டுமென்று தீர்மானித்து ஆங்கிலேயரோடு சூழ்ச்சி செய்து அரசனுக்கெதிரே சனங்களையும் தூண்டி விட்டனர். அரசன் கடுமையாக நடந்து கொண்டபொழுதிலும் விரும்பத்தகாதவன் என்று கூறுவதற்கிடமில்லை பிரதானிகள் மக்களை வருத்திய பொழுது அவர்களுக்குப் பாதுகாப்பளிக்கும் நோக்கத்தோடேயே அரசன் பிரதானிகள் மீது நடவடிக்கைகளை எடுத்து அவர்களுடைய வெறுப்பைப் பெற்ருன்.

ஸ்ரீ விக்கிரம இராசசிங்கன் இரு மனைவியரை விவாகஞ் செய்து அவர்களுடைய பிள்ளைகளிறந்தமையினுல் பின்னரும் இரு மனைவியரை விவாகஞ் செய்தான். விவாகம் நடைபெற்ற பொழுது எல்லாத் திசாவானிகளிலிருந்தும் உபகாரங்கள் வழக்கம்

போல் அனுப்பப்பட்டன. ஆகையால் எகலப்பொலேயினுடைய திசாவானியிலுள்ள மக்கள் அவ்விதஞ் செய்யத் தவறினர். எகலப்பொலேயில் அதிக கோபங்கொண்டிருந்தமையால் அவன் அனுப்பிய உபகாரத்தை அரசன் திருப்பி அனுப்பிவிட்டான். எகலப்பொலே, பணம் சம்பாதிக்கும் நோக்கத்தோடு தன்னுடைய திசாவானியிலுள்ள மக்களை வருத்திச் சிலருடைய சொத்துக்களையும் பறித்துவிட்டு அச் செயல்கள் அரசனுடைய கட்டளைப்படியே செய்ததாகக் கூறினன். அதனுற் கோபமடைந்த மக்கள் ஆங்கிலேயர் வந்தால் தாங்கள் அவர்களுடன் சேர்வதாக **யோன்-டி ஒயிலி** என்பவனுக்கு அறிவித்தனர். கொழும்பிலுள்ள வருமான அதிகாரியாகிய இவன் வேவுகாரரின் மூலம் கண்டியின் நிலைபரத்தைப் பற்றி அறிந்திருந்தான். அவன் வேவுகாரர், தூதுவர், கண்டிமக்கள் ஆகியோர் மூலம் அறிந்த விவரங்களை ஒரு புத்தகத்தில் பதிந்து வைத்தான். அப் புத்தகம் பல செய்திகளையும் விளக்கினமையால் கண்டியின் நிலையைப்பற்றி அறியத்தக்கதாகவிருந்தது.

சப்பிரகாமுவாவுக்கு பாக்கு வியாபாரஞ் செய்ய வந்த இந்திய வர்த்தகனெருவன் தன்னிடமுள்ள பணம் தன்னிடமிருந்து அநுப்பி எடுக்கப்பட்டதென்று அரசனிடம் முறையிட்ட பொழுது அரசன் எகலப்பொலாவையை கண்டிக்கு வரும்படி கட்டளையிட்டான். அவன் அவனுடைய கட்டளையை அலட்சியஞ் செய்தமையால் அவன் பதவியினின்று நீக்கப்பட்டான். மொலிக்கொடை, முதல் அதிகாராக நியமிக்கப்பட்டான். எகலப்பொலே பிரித்தானியரை உதவி கேட்டு படையொன்றை அனுப்பும்படி வேண்டியும் பிரெளன்றிக் தேசாதிபதி மறுத்து விட்டான். அரசன் மொலிக்கொடையை ஒரு படையுடன் சென்று அவ்விராச துரோகியைக் கொண்டு வரும்படி கட்டளையிட்டான். அவன் பிரித்தானியரிடம் பாதுகாப்புக்காக ஓடினன். சப்பிரகாமுவாவுக்குச் சென்ற மொலிக்கொடை கலகக்காரரை துரத்திவிட்டு அவர்களுள் 47 பேரைக் கைது செய்தான். எகலப்பொலே பிரித்தானியரிடம் சென்று சூழ்ச்சி செய்கிறுன் என்றறிந்த அரசன் அவனுடைய மனைவி மக்களிலே பழி வாங்கினுன். இரக்கமற்ற முறையில் அவர்கள் கொல்லப்பட்டனர். **டி ஒயிலி**யோடு தொடர்பு வைத்திருந்தவர்களும் கொல்லப்பட்டனர். எழுபதுபேர் வரையில் கொலை செய்யப்பட்டனர்.

ஆங்கிலேயர் கரையோர மாகாணங்களில் அமைதியை நிலைநாட்டுவதற்குக் கண்டி இராச்சியத்தோடு சிநேகமாக நடந்து கொள்ள வேண்டுமெனவுணர்ந்து கண்டி அரசனுக்கும் தங்களுக்குமிடையில் சிநேக மனப்பான்மையையுண்டுபண்ணிக் கொள்ள பல முறை முயற்

சித்தும் அனுகூலமடையவில்லை. போர்த்துக்கீசரும், ஒல்லாந்தரும் கண்டி அரசர்களோடு எழுதிய உடன்படிக்கைகள் பயனளிக்கவில்லை யென அறிந்தனர். அன்ரூஸ், மக்டோவால் மூலம் ஆங்கிலேயர் அனுப்பிய தூதுகளும் பயனளிக்கவில்லை. படைப் பலத்தை உபயோகித்து அவ்விராச்சியத்தைக் கைப்பற்றிக் கொள்ளவும் விரும்பவில்லை. ஆனால் கண்டி இராச்சியத்தை ஆங்கிலேயருடைய பாதுகாப்பில் கொண்டுவருவதே அவர்களுடைய நோக்கமாகவிருந் தது. கண்டி இராச்சியத்தில் அந் நேரத்திலே காணப்பட்ட அமை திக்குறைவு தங்களுடைய எண்ணத்தைப் பூர்த்திசெய்வதற்கு ஏற்ற தருணத்தை அளிக்கிறதென பிரௌன்றிக் தேசாதிபதியும், டிஓயி லியும் அபிப்பிராயப்பட்டனர். உடனே பிரௌன்றிக் எகலப்பொ லையை வரவழைத்து அவனுக்கு பாதுகாப்பளிப்பதாகக் கூறினன். அதிருப்தி அடைந்த ஒரு அதிகாரின் வேண்டுகோட்கிணங்கிப் படையெடுத்துச் செல்லல் யுக்தியல்லவென்று நினைத்து மொலிக் கொடை, இன்னும் மற்றும் பிரதானிகளைக் கலந்தாலோசித்து அவர்களும் இணங்கி நடந்து கொள்வார்களெனத் தேசாதிபதி யறிந்து கொண்டான். பின்பு படையெடுத்துச் செல்வதற்கு வேண்டிய காரணமுந் தோன்றியது. பத்துப் பிரித்தானியப் பிர சைகள் வர்த்தகஞ் செய்வதற்குக் கண்டிக்குச் சென்ற பொழுது அவர்கள் பிரித்தானியரின் வேவுகாரரெனச் சந்தேகப்பட்டு அவர் களை அரசன் கைது செய்தான். அவர்களுடைய அங்கங்கள் வெட்டப்பட்டமையால் எழுவர் உடனே இறந்தனர். மூவர் கொழும் புக்குச் சென்று தங்களுக்குச் செய்த கொடூரச் செயலைத் தேசா திபதிக்குத் தெரிவித்தனர். தேசாதிபதி விசாரணை ஒன்றுஞ் செய் யாமல், உடனே படைகளைத் திரட்டிச் சண்டை செய்ய ஆயத்தஞ் செய்தான். எட்டு வீரப்படைகள் கொழும்பு, திருகோணமலை, அம் பாந்தோட்டை, காலி, மட்டக்களப்பு முதலிய இடங்களிலிருந்து கண்டியை நோக்கிப் புறப்பட்டன (1815). கொழும்பிலிருந்து வந்த படை றுவன்வலையை அடைந்தபின் பிரௌன்றிக் தான் படை யெடுத்துச் செல்லும் நோக்கத்தை விளக்கி ஒரு அறிவித்தலைக் கொடுத்தான். அது கண்டி இராச்சியத்தின் எல்லாப் பகுதிகளிலும் பிரசித்தி செய்யப்பட்டது. கண்டி அரசன் விளைத்த தாங்கொணுக் கொடுமைகளுக்கெதிரே எழுந்த அந்நாட்டு மக்களின் வேண்டுகோ ளுக் கிணங்கி அவர்களுக்கு ஆதரவு அளிக்கும் முகமாகவும், சமீ பத்தில் பிரித்தானிய பிரசைகளுக்கு உண்டாக்கிய கொடுஞ் செய லினல் பிரித்தானிய அரசாங்கத்துக்கு அவமானம் ஏற்பட்டதா லும், அவ்விராச்சியத்தில் அமைதியை நிலைநாட்டுவதற்காகவும்,

பிரித்தானியருடைய கௌரவத்தைப் பாதுகாத்துக் கொள்வதற்காகவும், கண்டி மக்களுக்கு விடுதலை அளிக்கவும், தேசாதிபதி தன்னிடமுள்ள படைப்பலத்தை உபயோகிப்பதாகத் தீர்மானித்துள்ளாரென அவ்வறிவித்தலிற் குறிப்பிடப்பட்டது. தாங்கள் எடுத்துக் கொண்ட நன்மையான முயற்சியை நிறைவேற்றுவதற்கு மக்கள் உதவி அளிக்கவேண்டுமென்றும், தங்களுடைய படை நாட்டுக்குள் செல்லும்போது பயமில்லாது தங்கள் இல்லங்களிலேயே இருக்கவேண்டுமென்றும் கேட்டுக்கொண்டனர். மக்களுடைய சமய வழிபாட்டுக்கு ஒரு பங்கமும் நேரிடமாட்டாதென்றும், பண்டைக்கால வழக்கங்கள் முறைகள் கவனிக்கப்படுமென்றும், ஏனைய பிரித்தானிய பிரசைகள் அனுபவித்து வரும் சுதந்திரம், பாதுகாப்பு, நீதி, அமைதி ஆகிய நன்மைகள் இந்நாட்டுமக்களுக்குக் கிடைக்கும் என்றும் தேசாதிபதி குறிப்பிட்டார்.

இவ்விதமான அறிவித்தலைக் கொடுத்திருந்தபொழுதிலும் போர்ப் படைகள் நகரத்தை நோக்கி வருவதைக் கண்டு மக்கள் பயத்தினுல் ஓடி ஒளித்தனர். ஆனுல் சில தலைமைக்காரரும், சில மக்களும், மொலிக்கொடையும் ஆங்கிலேயர் பக்கஞ் சேர்ந்தனர். ஆனுல் ஆங்கிலேயருடைய படைகள் முன்னேறி வருவதை அரசனுக்கு அறிவித்தவுடன், அவன் ஆங்கிலேயர் 1803-ல் பெற்ற அனுபவத்தின் பின்பு படையெடுத்து வரத் துணிய மாட்டார்களென நினைத்துச் செய்தி கொண்டுபோன தூதுவனைச் சிரச்சேதஞ் செய்வித்தான். அதன் பின்னர் தன்னுடைய பிரதானிகள் ஒவ்வொருவராக பிரித்தானியர் பக்கஞ் சேர்ந்துகொள்ளுகிருர்கள் என்றறிந்தவுடன் நகரத்தை விட்டு ஓடி ஒளித்தான். மாசி மாதம் 14-ந் திகதி கண்டி நகரத்தினுள் ஆங்கிலேயர் புகுந்தனர். அரசன் ஒளித்திருந்த இடம் எகலப்பொலையால் கண்டு பிடிக்கப்பட்டு அவன் அரசனைக் கட்டித் தெருவீதி வழியே இழுத்துச் சென்ருன். பின்பு அரசனும் அவனுடைய குடும்பத்தாரும் கொழும்புக்குக் கொண்டுசெல்லப்பட்டனர்.

பின்பு கண்டி இராச்சியத்தில் ஒரு அரசாங்கத்தை ஏற்படுத்துவது ஆங்கிலேயரின் கடமையாயிற்று. அவர்களுக்கு உதவி புரிந்த எகலப்பொலையையும், மொலிக்கொடையையும் திருப்திப்படுத்துவது அவர்களுக்கு அதிக சிரமமாகக் காணப்பட்டது. எகலப்பொலை தான் அரசனுக வேண்டுமென்ற ஆசையுடனிருந்தான். மொலிக்கொடை முதல் அதிகார்ப் பதவியைப் பெறவேண்டுமென்ற கருத்துடையவனுகக் காணப்பட்டான். ஆங்கிலேயர் தாங்கள் செய்ய

யோசித்திருக்கும் ஒழுங்குகளைப் பற்றி இரு அதிகாரிகளோடும் கலந்தாலோசித்தனர். பின்பு ஆங்கிலேயரும் கண்டிப் பிரதானிகளும் கொண்டுள்ள மரபு மன்றமொன்று கூட்டப்பட்டது. அவர்கள் செய்துள்ள ஒழுங்குகள்: (1) நாயக்க அரசர்கள் இராச்சியத்தின் உரிமை முழுவதையும் இழந்து விடுவதாகவும், ஆங்கிலேயர் அரசாட்சி செய்வதாகவும் ஏற்றுக்கொள்ளப்படுதல். (2) அரசனுடைய உறவினரில் ஆண்பாலார் இலங்கையினின்று நீக்கப்படுதல். (3) அதிகாரிகளின் அதிகாரத்திற்குப் பங்கம் இல்லாது பிரித்தானிய அரசன் தேசாதிபதிகள் மூலம் பரிபாலனஞ் செய்தல். (4) புத்த சமயம் பாதுகாக்கப்படுதல். (5) கடூர தண்டனைகள் நீக்கப்படுதல். (6) மரண தண்டனை விதிக்குமுரிமை தேசாதிபதிக்கே உரியது. (7) நாட்டு வழக்கத்தின்படி நீதி வழங்குதல். (8) கண்டிச் சுதேசிகளெல்லோருக்கும் பிரித்தானியரின் சட்டப்படி நீதி வழங்குதல். (9) ஆங்கிலேய அரசின் பேரில் வருமானம் அறவிடப்படுதல் என்பனவாம்.

1815-ம் ஆண்டு பங்குனி இரண்டாந் திகதி இற்றைவரை சுதந்திரமாக விளங்கிய கண்டி இராச்சியம் பிரித்தானியருடைய ஆளுகையின் கீழமர்ந்தது.

ஆனால் இவ்விதஞ் செய்யப்பட்ட ஒழுங்குகள் அதிகார்மாருக்குத் திருப்தியை அளிக்கவில்லை. முன்பு அரசனுக்கு அடுத்தபடியாக அதிகாரத்தைச் செலுத்தி வந்த அவர்கள் ஒவ்வொரு ஆங்கிலேயனும் தங்களிற் பார்க்க உயர்ந்தவனாக நடந்துகொண்டமையைக் கண்டு ஏங்கினர். பிரித்தானியர் எல்லோருக்கும் ஒரே விதமான நீதியை வழங்கினதும் அவர்களுக்குப் பிடிக்கவில்லை. மக்களிற் சிலர் அதிகார்மார் மீண்டும் செல்வாக்கைப் பெற்றுக்கொள்வதை விரும்பவில்லை. சிலர் அரசனை நீக்கி ஆங்கிலேயர் இராச்சியத்தைக் கைப்பற்றியதை விரும்பவில்லை. ஆகையால் மரபு மன்றத்தின் ஒழுங்குகள் ஒரு பகுதியாருக்கும் திருப்தி அளிக்கவில்லை. எகலப்பொலை தனக்கு எல்லோருக்கும் மேற்பட்ட பதவியொன்றைத் தரவேண்டுமென்று விரும்பி நின்ற பொழுது அவ்விதமானதொன்றை உண்டாக்க முடியாமையால் அவனே ஏனையோரினும் பார்க்க அதிருப்தி கொண்டிருந்தான். கொழும்பிலிருந்து வேலூருக்கு அனுப்பப்பட்ட ஸ்ரீ விக்கிரம இராசசிங்கன் 1832-ல் இறந்தான். அவனுடைய ஏக புத்திரனும் 1843-ல் இறந்தமையால் அவ்வரச வமிசம் அற்றுப் போனது.

பிரதானிகளின் உதவியில்லாவிட்டால் கண்டியைக் கைப்பற்றி யிருக்க முடியாதென **பிரெளன்றிக்** தேசாதிபதியே கூறினன். கண்டி அரசனும் அவ்வாறே எண்ணினன். அரசன் ஆங்கிலேய ருடைய கையிற் சிக்கிய பொழுது "என்னுடைய பிரசைகள் நடந்துகொள்ள வேண்டிய முறையில் நடந்திருந்தால் நான் ஒரு ஆண் மகனு அல்லது ஒரு பெண்ணு என்று காட்டியிருப் பேன்" என்று சொன்னன். பிரதானிகள் காரணமாயிருந்தன ரென்பது வெளிப்படை. இருந்தும் முன்பு ஒருபொழுதுமில்லாத ஆயத்தத்தைப் பிரித்தானியர் செய்ததும் கண்டியின் வீழ்ச்சிக்குக் காரணமென்றும் சொல்லலாம்.

கண்டி இராச்சியம் பிரித்தானியரின் கீழ்க் கொண்டுவரப்பட்ட தேயல்லாமல், அந்நாட்டு மக்கள் அவர்களுடைய ஆட்சியை விரும்பவில்லை. "நீங்கள் அரசனை நீக்கிவிட்டீர்கள், இனி உங்களி டம் ஒன்றையும் கேட்கவில்லை, இனிமேல் எங்களை விட்டு நீங்கள் நீங்கலாம்" என்று கண்டியிலுள்ள ஒரு பிரதானி கூறினன். மூன்று நூற்றுண்டுகளுக்குச் சுதந்திரத்தை அனுபவித்து வந்த கண்டியி லுள்ள மக்கள் பிரித்தானியருடைய ஆளுகையை சிறிதேனும் விரும் பவில்லை. அதிகாரத்தையும், செல்வாக்கையும் இழந்து விட்டதாகக் கண்டிப் பிரதானிகள் எண்ணினர். எல்லா மக்களும் சமமான முறையில் நடத்தப்பட்டமையினுல் பிரதானிகள் பிரித்தானியரை விரும்பவில்லை. பிரித்தானியருடைய ஆளுகை, கிறீத்தவருடைய ஆளுகையே யென நினைத்து **புத்த சங்கமும்** அச்சமடைந்தது. சிங்கள அரசர்களிடம் பெற்ற ஆதரவை புத்த குருமார் இப்பொ ழுது பெற்றுக்கொள்ளவில்லை. புத்த குருமார் பிரித்தானிய தேசா திபதிக்கு மரியாதை செய்ய வேண்டியிருந்தது. ஆகையால் தங்க ளுடைய சமயப் பாதுகாப்புக்காக ஒரு புத்த அரசன் தேவையென அவர்கள் உணர்ந்தனர்.

கண்டியிலுள்ள மக்கள் அந்நியருடைய ஆளுகையை வெறுத் தனர். அக் காலத்திலுள்ள சமுதாயத்திற்கு அடிப்படையாகவுள்ள சாதிப் பாகுபாட்டை பிரித்தானியர் அலட்சியஞ் செய்ததும் அவர் களுக்குப் பிடிக்கவில்லை. பழைய வழக்கங்கள் மாறுதல் அடை தலைக் கண்டு வெறுப்புற்றனர். **வெலாசை**யிலுள்ள முஸ்லிங்கள் திசாவையின் அதிகாரத்தை நீக்கி முஸ்லிம் ஒருவனை தங்களுக்குத் தலைமைக்காரனுய் நியமிக்கும்படி பிரித்தானிய அரசாங்கத்தாரைக் கேட்டுக் கொண்டமையால் மரைக்காயர் என்ற முஸ்லீம் அவ்வண் ணம் நியமிக்கப்பட்டான். அதனுல் அப் பகுதிக்குள்ள திசாவையின்

அந்தஸ்து, அதிகாரம், வருமானம் குறைந்தன. இவ்விதம் பல காரணங்கள் ஒன்று சேர்ந்து ஆங்கிலேயருக்கும் பிரதானிகளுக்கு மிடையிலுள்ள மனப்பான்மையை வேறுபடச் செய்தன. இங்கிலேயி லேயே கலகம் (1817-1818) ஏற்பட்டது.

நாடு கடத்தப்பட்ட அரசவமிசத்திலுள்ள ஒருவன் பல குரு மார்களோடு வெலாசைக்கு வந்திருப்பதாக, வதுளையிலிருந்த **உவில் சன்** என்பவன் கேள்வியுற்றவுடன் அவன் அவ் விடத்திலுள்ள முஸ்லிம் தலைமைக்காரனை விசாரணை செய்யுமாறு அனுப்பினான். அவ்வாறு அனுப்பப்பட்டவன் கைது செய்யப்பட்டதையறிந்த உவில்சன் ஒரு போர்ப் படையுடன் சென்று சுடப்பட்டு இறந்தான். இச் செய்தியைக் கேள்வியுற்ற **டிஒயிலி** மக்களின் மன நிலையை அறியுமாறு எகலப்பொலையை அனுப்பினான். அவன் சென்ற பொழுது தனது எதிரியான மொலிக்கொடையினுடைய மாமனாகிய ரத்வத்தையை வழியிற் சந்தித்து அவனை அவமானப்படுத்திவிட்டு வெற்றிப் பிரலாபத்துடன் பிரௌன்றிக் தேசாதிபதியை சந்தித் தான். தன்னுடைய மைத்துனனான **கெப்பித்திப்பொலையை** அனுப்பினால் அவனே வெலாசையிலேற்பட்ட கலகத்தை அடக்கக் கூடியவனென எகலப்பொல தேசாதிபதிக்குக் கூறிய பொழுது தேசாதிபதி அதற்கு உடன்பட்டான். ஆனால் சீக்கிரத்தில் வெலாசை, விந்தனை, தும்பறை ஆகிய இடங்களிலே உண்டான கலகக்கார ருக்கு அவன் தலைவனானான். கொழும்பிலிருந்து போர்ப் படைகளை அனுப்புவதற்குப் பல கஷ்டங்களேற்பட்டன. களனிஆறு பெருக் கெடுத்தமையால் போக்கு வரவு செய்ய முடியாமலிருந்தது. அங்கு அனுப்பப்பட்ட சிறு போர்ப்படைகளும் காட்டுக்கூடாகச் செல் லும்போது தாக்கப்பட்டன. மேலும் அனுப்பப்பட்ட போர்ப்படை களால் கெப்பித்திப்பொலையையோ அல்லது அரச வமிசத்தவ னென்று கூறிய சாலக்காரனையோ கைது செய்ய முடியவில்லை. மொலிக்கொடையைத் தவிர்ந்த ஏனைய பல பிரதானிகள் கலகக் காரரோடு சேர்ந்தனர். இந் நிலையில் கண்டி முழுவதிலும் தேசாதி பதி இராணுவச் சட்டத்தை உண்டாக்கினான். கலகக்காரரோடு சேர்ந்து கொள்ளாத பிரதானிகளின் உதவியுடன் கலகத்தை அடக்கிவிட முயன்றான். ஆனால் அது பலனளிக்கவில்லை. தேசாதி பதி கண்டியை விட்டு விலகவும் யோசனை செய்தார். சென்னையி லிருந்து வந்த போர்ப்படைகள் கலகத்தை அடக்குவதற்கு உதவி யாயிருந்தன. மொலிக்கொடையின் செல்வாக்கும் ஆங்கிலேயருக் குச் சாதகமாயிருந்தது. சீக்கிரத்தில் கலகக்காரரின் தலைவர்கள் ஆங்கிலேயத் துருப்புக்களின் கையிற் சிக்கினர். கெப்பித்திப்போ

லேயும் கைது செய்யப்பட்டான். அரசபதவியையேயன்றி வேறென்றையும் விரும்பாத எகலப்பொலேயை திருப்திப்பண்ண ஆங்கிலேயப் அதிகாரிகளால் முடியவில்லை. கலகம் தொடங்கியவுடன் அவன் கொழும்புக்குக் கொண்டுபோகப்பட்டான். பிரௌன்றிக்கின் பின் வந்த தேசாதிபதியால் எகலப்பொலே மோரிஸஸ் என்ற இடத்திற்கு அனுப்பப்பட்டு அவன் அங்கு 1829-ல் இறந்தான்.

ஒரு வருடமாக நடந்த அக் கலகத்தில் பல பிரதானிகளும், கண்டிமக்களும் இறந்தனர். ஆங்கிலேயரில் ஆயிரம் பேர்கள் வரையிலும், கண்டி மக்களில் பதினாயிரம மக்கள் வரையிலும் இறந்தனரெனக் கணக்கிடப்பட்டது. அக்காலத்திற் கண்டி மக்கள் தோல்வியடைந்ததற்குப் பல காரணங்களுள. ஒரு விதமான ஆயுதங்கள் இல்லாமற் கலகம் உண்டாக்கப்பட்டது. பிரதானிகள் தங்களுக்குள் ஒரு தலைவனைத் தெரிந்துகொள்ளவில்லை. அதுவுமன்றி அவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து கொள்ளாது ஒவ்வொரு பிரதானியும் தனக்குச் செல்வாக்குள்ள பகுதியிலே கலகத்தை உண்டுபண்ணினதினால் ஆங்கிலேயர் கலகத்தை அடக்கிவிடக் கூடியதாகவிருந்தது. முதல் அதிகாராக நியமிக்கப்பட்ட மொலிக்கொடை பிரித்தானியருக்கு ஆதரவளித்தான். மொலிக்கொடையின் திசாவானிக்கூடாகப் பிரித்தானியர் கொழும்பிலிருந்து கண்டிக்குப் போர்வீரர்களை அனுப்பக் கூடியதாகவிருந்தது. கண்டி மக்கள் வெளியிலிருந்து உணவைப் பெற்றுக்கொள்ளாதவாறு பிரித்தானியர் தடுத்தனர். பிரித்தானிய துருப்புகள் கிராமங்களிற் பல அழிவுகளை உண்டுபண்ணின. கிராமவாசிகள் காட்டுக்குள் ஓடினர். கலகத்தை நிறுத்திப் பிரித்தானியர் மீது விசுவாசம் காட்டுபவருக்கு மன்னிப்பு அளிக்கப்படுமென்று தேசாதிபதி பிரகடனஞ் செய்த பொழுது மக்கள் கிராமங்களுக்குத் திரும்பினர். அதுவுமன்றி கண்டி அரசவமிசத்தவன் என்று கிளம்பி மக்களுடைய ஆதரவைப் பெற்ற சாலக்காரன் ஒரு புத்த குருவென்றும் அறிந்து கொண்டனர். தந்ததாது எவர்கள் வசம் இருக்கிறதோ அவர்களே ஆளும் உரிமையையுடையவர் என்ற நம்பிக்கையும் மக்களிடமிருந்தது. பிரித்தானியர் தந்ததாதுவைக் கைப்பற்றினவுடனே மக்களிடம் மனத்தைரியங் குறைந்து விட்டது. அக் கலகத்தை அதிக பிரயாசையுடன் அடக்க வேண்டியிருந்தமையினால் பிரித்தானியர் கண்டியைக் கைப்பற்றியது இப்பொழுதென்றே சொல்லலாம். கண்டிப் பிரதானிகளே இக் கலகத்திற்குக் காரணமாயிருந்தமையினால் மரபு மன்றத்தில் (1815) அவர்களுக்கு அளிக்கப்பட்ட சலுகைகளை அவர்களிட

மிருந்து எடுத்துவிட்டு நிர்வாகத்தைத் திருத்தி அமைக்கத் தேசாதிபதி யோசனை செய்தார்.

புதிதாகக் கொண்டுவரப்பட்ட அரசியல் ஒழுங்கை பிரதானிகளும் பிரசைகளும் ஏற்றுக்கொள்ள வேண்டியிருந்தது. முழு அதிகாரமும் பிரித்தானியருடைய கையிலேயே இருந்தது. பிரித்தானிய அரசாங்கத்தின் அனுமதியின்றி ஒருவிதமான அதிகாரத்தையுஞ் செலுத்த முடியாது. அதனால் பண்டைக் காலந் தொட்டு அனுபவித்து வந்த சலுகைகளை இழக்க நேரிட்டது. ஆனால், அவர்களுக்கு அரசாங்கம் குறித்த சம்பளத்தைக் கொடுத்து வந்தது. கண்டி இராச்சியத்தின் நிர்வாகம் தேசாதிபதியின் கையிலிருந்தது. கண்டி இராச்சியம் பதினொரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொன்றும் ஒவ்வொரு அதிபதியின் மேற்பார்வையில் விடப்பட்டது. அவ்வதிபதிகள் இராணுவ உத்தியோகத்தர்களாவர். கரையோரமாகாணங்களிலிருந்தது போல் கண்டியிலும் வருமானத்தில் பத்திலொரு பங்கு வரியாக அறவிடப்பட்டது. 1815-ல் நடைபெற்ற மரபு மன்றத்தில் புத்தசமயத்திற்கு அளிக்கப்பட்ட தனிப்பட்ட உரிமை நீக்கப்பட்டு புத்தசமயத்தோடு மற்றும் புற சமயங்களும் அங்கே இடம் பெற்றன.

மரபு மன்றம் (1815) நாயக்க ஆதிக்கத்தை நீக்கிவிட்டு பிரதானிகளுக்கு அதிகாரத்தை அளித்ததென்றால் 1818-ல் ஏற்படுத்தப்பட்ட மாற்றம் பிரதானிகளின் அதிகாரத்தை நீக்கி, கண்டி மக்களுடைய எழுச்சிக்கு வசதி அளித்தது எனலாம். மக்கள் பிரதானிகளின் கொடுமையான அதிகாரத்தினின்று விலகி பிரித்தானியப் பிரசைகள் அனுபவிக்கும் சுதந்திரத்தைப் பெற்றனர். சீக்கிரத்தில் கரையோர மாகாணங்களும் கண்டிப் பகுதியும் ஒரே நிர்வாகத்தின் கீழ்க் கொண்டுவரப்பட்டமையால் இலங்கை பொருளாதார, சமுதாயத் துறைகளிலே முன்னேற்றமடையத் தொடங்கியது.

## வினாக்கள்

1. *1803-ல் ஆங்கிலேயர் கண்டிக்குப் படையெடுத்துச் சென்ற வரலாற்றை எழுதுக.*
2. *மெயிட்லன்ட் தேசாதிபதியினுடைய காலத்தில் ஏற்பட்ட மாற்றங்கள் யாவை?*
3. *1815-ல் பிரித்தானியர் கண்டிக்குப் படையெடுத்துச் சென்றதற்குக் காரணங்கள் யாவை? அவர்கள் வெற்றி பெறுவதற்கு என்ன சாதகமாயிருந்தன?*

4. 1815-ல் நடைபெற்ற மரபு மன்றத்தில் என்ன தீர்மானங்கள் செய்யப்பட்டன.

5. "1817-ல் கண்டியில் ஏற்பட்ட கலகத்தின் காரணங்களை ஆராய்க?"

6. "1818-ம் ஆண்டிலேயேதான் பிரித்தானியர் கண்டி இராச்சியத்தைக் கைப்பற்றினர் என்று சொல்லலாம்" இக் கூற்றை ஏற்றுக்கொள்வதற்குக் காரணங்கள் உண்டா?

---

# 3. பொருளாதார சமுதாய மாற்றங்கள்

## (1796—1832)

கண்டிக் கலகத்தின் பின் அங்கு அமைதியும், ஒழுங்கும் நிலவக் கூடிய முறையில் பிரௌன்றிக் தேசாதிபதி நிர்வாகத்தை நடத்தினர். கரையோரப் பகுதிக்கும் கண்டி இராச்சியத்துக்குமிடையில் போக்குவரத்து வசதிகளை உண்டாக்குவதற்கு யோசனை செய்தார். அவர் உத்தியோகம் வகிக்கும் காலம் முடிவடைந்த பின் எட்வேட் பார்ன்ஸ் தேசாதிபதியாக நியமிக்கப்பட்டார் (1821). ஆனல் பார்ன்ஸ் இராணுவ அதிகாரியாக நியமிக்கப்பட்டமையால் அவர் இந்தியாவுக்குச் செல்ல வேண்டியிருந்தது. 1824-ல் அவர் மீண்டும் இலங்கைக்குத் தேசாதிபதியாக நியமிக்கப்பட்டார். 1831 வரையும் கடமையாற்றிய காலத்தில் அவர் வீதிகளை அமைத்துப் போக்குவரவு வசதிகளை யுண்டுபண்ணியதோடு விவசாய விருத்திக்கு வேண்டிய வழிவகைகளையும் ஆராய்ந்தார். அவர் செய்த முயற்சிகள் நாட்டின் பொருளாதார விருத்திக்கு மிகவும் சாதகமாயிருந்தன.

பார்ன்ஸ் தேசாதிபதி இலங்கையில் தெருக்களே அவசிய தேவையென அறிந்தார். இலங்கையிற் காணப்படும் வீதிகள், பார்ன்ஸ் தேசாதிபதியையும் அவனுடன் உதவியாய் நின்று வேலை செய்த **ஸ்கின்னர்** என்பவரையும் நினைவூட்டுகின்றன. கண்டியில் வீதிகள் காணப்படாமையால் அங்கு உண்டான கலகத்தை அடக்கிவிடுவது கஷ்டமாயிருந்தது. அங்கு காணப்பட்ட பாதைகள் மிகவும் ஒடுங்கியவைகளாகக் காணப்பட்டன. மக்கள் கால் நடையாக அல்லது யானைமீது செல்வது வழக்கம். நகரத்திற்குச் செல்லும் வழிகளும் ஒடுங்கிய செங்குத்தான கரடு முரடான பாதைகளாயிருந்தன. படையெடுத்துச் செல்லுஞ் சேனையினுடைய உணவையும்,. மற்றும் பொருட்களையும் கூலியாட்களே சுமந்து சென்றனர். கரையோர மாகாணங்களிலும் நல்ல வீதிகள் காணப்படவில்லை. டச்சுக்காரர் அமைத்த வீதிகளே காணப்பட்டன.

கண்டியில் 1818-ல் செய்த பிரகடனத்தின் பிரகாரம் மக்கள் இராச காரிய முறையிலிருந்து விடுதலை பெற்றிருந்த பொழுதிலும், வீதிகளமைக்கும் பிரசித்த வேலைகள் யாவும் செய்வதற்கு அம் முறையை அனுசரணைக்குக் கொண்டு வரும் உரிமையை அரசாங்கம் வைத்திருந்தது. அவ்வாண்டிலேயே கரையோர மாகாணங்களிலும் அம் முறை நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டது. பொறி

யியல் விற்பன்னரின் உதவியுடன் கொழும்புக்கும் கண்டிக்குமிடையில் வீதியமைப்பதற்கு வேண்டிய பாதை வகுக்கப்பட்டது. இரண்டு வருடங்களுக்குள் கொழும்புக்கும் கண்டிக்குமிடையில் இரு தெருக்கள், ஒன்று **பிறேசர் ஸ்கின்னர்** மேற்பார்வையில் நான்கு கோறளைக் கூடாகவும், மற்றொன்று **டோசன்** மேற்பார்வையில் கடுகனுவைக் கூடாகவும் திறக்கப்பட்டன. முதல் வீதி செல்வதற்குக் களனி ஆற்றுக்கு மேல் ஒரு பாலம் போடப்பட்டது. இரண்டாவது வீதி திறப்பதற்காக ஒரு மலைக்கூடாக 500 அடிச் சுரங்கம் ஒன்று வெட்டப்பட்டது. தலத மாளிகையைக் கைப்பற்றி மகாவலி கங்கைக்குமேற் பாலம் போட்டு, ஒரு மலைக்கூடாக வீதியொன்றைத் திறந்து விட்டாலன்றி ஒரு அந்நிய சாதியினராகுதல் கண்டி நாட்டைக் கைப்பற்றிக்கொள்ள முடியாதென்ற ஒரு நம்பிக்கை சிங்கள மக்களிடையே இருந்தது. பார்ன்ஸ் தேசாதிபதி காலத்தில் இவைகள் நிறைவேறியன. பின்பே கண்டி மக்கள் பிரித்தானியருடைய ஆளுகைக்கு எதிர்ப்புக் காட்டாது விட்டனர். 1820-ல் கண்டிக்கும் கொழும்புக்குமிடையில் வீதி அமைப்பதற்குத் தொடங்கிய வேலை 1825-ல் முடிவடைந்தது. சனங்களும் வண்டிகளும் ஏராளமாக இப் பாதைகளாற் சென்றன. பின்பு கண்டி எல்லாப் பிரதான நகரங்களோடும் இணைக்கப்பட்டது. அங்கிருந்து தம்பளை, மட்டக்களப்பு, வதுளை, அனுரதபுரி, நுவரெலியா, நீர்கொழும்பு, சிலாபம் முதலிய இடங்களுக்கு வீதிகள் அமைக்கப்பட்டன. இலங்கையின் முழுக் கரையோரப் பகுதிகளிலுமுள்ள பிரதான இடங்கள் ஒன்றோடொன்று இணைக்கப்பெற்று ஏறக் குறைய 763 மைல் நீளமுள்ள தெருக்கள் திறக்கப்பட்டன. சிறிது காலஞ் செல்ல கொழும்பிலிருந்து புத்தளம், நீர்கொழும்பு, யாழ்ப்பாணம், திருகோணமலை ஆகிய இடங்களுக்கு வீதிகள் திறக்கப்பட்டன.

வீதிகள் எங்குமமைக்கப்பெற்றமையால் தபாற் போக்குவரத்து எளிதாயிருந்தது. ஒல்லாந்தருடைய காலத்தில் வரிகள் கொடாத சலாக்கியத்தைப் பெற்ற சிலர் மூலம் கடிதங்களனுப்பப்பட்டன. 1802ன் பின் ஆங்கிலேயர் சம்பளங் கொடுத்து, சில உத்தியோகத்தர்களை நியமித்து அவர்கள் மூலம் நாளுக்கொருமுறை கடிதப் போக்கு வரவு வசதிகளை ஏற்படுத்தினர். இப்பொழுது தெருக்கள் எல்லாவிடங்களிலும் அமைக்கப்பட்டமையால் தபாற் போக்கு வரவுச் சேவை முன்னேற்றமடைந்தது. வீதிகள் எங்கும் அமைக்கப்பட்டமையினுல் பிரித்தானியருடைய ஆளுகை பலமடைந்தது. போக்கு வரவு வசதிகளும் அதிகரித்தன. விவசாய

விருத்தியும் ஏற்பட்டது. முழு இலங்கைக்கும் ஒரே ஆட்சி முறையை நிறுவவும் சாதகமாயிருந்தது; இலங்கையின் பல பாகங்களும் ஒன்றோடொன்று தொடர்புடையதாக விருந்தன.

பதினெட்டாம் நூற்றுண்டில் ஒல்லாந்தரும் பிரித்தானியரும் ஐரோப்பாவிலே தங்களுடைய நாடுகளில் விவசாயத்தை விருத்தி செய்தனர். அடுத்தடுத்து ஒரே பயிரைச் செய்கை பண்ணுமல் மாறி மாறி வித்தியாசமான பயிரைச் செய்கை பண்ணி அதிக பயனை ஈட்டினர். இலங்கையிலும் அவ்விதமான முறையைப் பிரித்தானியர் கையாண்டு தாவர ஆராய்ச்சித் தோட்டத்தில் உருளைக் கிழங்கு, முள்ளங்கி முதலிய பயிர்களை உண்டுபண்ணினர். நெற் பயிரைப் பிடுங்கி நடும் முறையை உற்சாகப்படுத்தியதோடு முத்துச் சம்பா போன்ற நெல்லை விளைவிப்பதற்கும் ஊக்கமளித்தனர். டச்சுக் கிழக்கிந்திய சங்கத்தார் கோப்பி, பருத்தி, கரும்பு என்னும் வர்த்தகப் பொருள்களை உற்பத்தி செய்தனர். கொழும்பில் கறுவாக் காடு என்னும் பகுதியில் கறுவாவையும் அதிகமாக விளைவித்தனர். பிரித்தானியரும் அவ் வகையில் ஊக்கமளித்தனர். கொழும்பைத் தவிர்ந்த மற்றைய பகுதிகளில் ஐரோப்பியர் நிலங்களைத் தங்கள் வசம் வைத்திருக்கக் கூடாதென்று கிழக்கிந்திய கொம்பனியாரின் பிரமாணங்களிருந்தன. வர்த்தகத்தையும் வருமானத்தையும் கூட்டும் நோக்கத்தோடு மெயிட்லன்ட் தேசாதிபதி அக் கட்டுப்பாட்டை நீக்கிவிட்டார். அதன் பயனுக பருத்தி, கோப்பி ஆகிய தோட்டங்கள் ஐரோப்பியராற் திறக்கப்பட்டன. கரையோர மாகாணங்களில் அத்தோட்டங்கள் அதிகபயனை அளிக்காமையால் மலைநாட்டிற் தோட்டங்கள் திறக்கப்பட்டன. முதன் முதலாக **ஜோர்ஜ் பேட்** என்பவர் ஒரு கோப்பித் தோட்டத்தை 1823-ல் கம்பளைக்கு அணித்தாயுள்ள சிங்கப்பிட்டி என்னுமிடத்தில் திறந்தார். பின்னர் கன்னறுவாவிலும் ஒன்றைத் திறந்து வைத்தார். பின்பு மாகாண அதிபர்கள் சிலரும் கோப்பிச் செய்கையில் ஈடுபட்டனர். தோட்டங்களில் வேலை செய்வதற்குத் தொழிலாளர் கிடையாமையால் பார்ன்ஸ் தேசாதிபதி தென்னிந்தியாவிலிருந்து தொழிலாளரை வரவழைத்தார். கோப்பி, பருத்தி ஆகியவைகளை விருத்தி செய்வதற்காக பார்ன்ஸ் தேசாதிபதி அப் பொருள்களின் ஏற்றுமதிச் செலவை நீக்கிவிட்டார். அத் தோட்டங்களின் நில வரியையும் பன்னிரண்டு வருட காலத்திற்கு நீக்கிவிட்டார். தோட்டங்களிலிருந்து கொழும்புத் துறைமுகத்திற்கு அனுப்பும் கஷ்டமும் கொழும்பு-கண்டி வீதி யமைத்தபின் நீங்கியது. இது வரையும் தலைச்

சுமையிற் கொண்டுசெல்லப்பட்ட அப் பொருள்கள் வீதிகள் அமைக்கப்பட்ட பின் மாட்டு வண்டிகளிலே அனுப்பப்பட்டன. தென்னையிலிருந்து அதிக வருமானங் கிடைத்தது. இவ்வாறு வர்த்தகப் பொருள்கள் விளைவிக்கப்பட்டமையால் நாட்டின் பொருளாதார நிலை சீரடையத் தொடங்கியது.

இக் காலத்தில் சமுதாய நிலையும் மாறுதலடைந்தது. சிங்கள அரசர்களைப் போல் போத்துக்கீசரும், ஒல்லாந்தரும் இராச துரோகக் குற்றங்களுக்கு மக்களை வதைத்தும் அங்கவீனஞ் செய்தும் வந்தனர். ஆனல் ஐரோப்பாவில் அக் காலத்தில் விரிந்த மனப்பான்மையும், மனுஷீகத் தன்மையும், சமய சகிப்புக் கொள்கைகளும் நிலவி வந்தன. அக் கொள்கைகளினலுந்தப்பட்ட ஆங்கிலேயர் இலங்கையில் கரையோர மாகாணங்களைக் கைப்பற்றியவுடன் அவ்வித கொடூர தண்டனைகளை நிறுத்திவிட்டனர். 1815-ன் பின் கண்டியிலும் அவ்வண்ணம் நீக்கிவிட்டனர். அடிமையை ஒழித்து வறியவர்களுக்கு அனுதாபங் காட்டிவந்த ஆங்கிலேயர் இலங்கையிலும் அவ் வழிகளிற் திருத்தங்களை உண்டாக்கினர். தமிழ்ப் பகுதிகளிலும், கண்டிப் பகுதிகளிலும் அடிமைகள் காணப்பட்டனர். ஒல்லாந்தருடைய காலத்தில் வீட்டுத் தளபாடங்கள் ஏலத்தில் விற்கப்படும்பொழுது அடிமைகளும் விற்கப்பட்டனர். நோர்த் தேசாதிபதி காலந்தொட்டு ஆங்கிலேயத் தேசாதிபதிகள் அடிமைகளின் விடுதலைக்கு உழைத்து வந்தனர். ஆனல் அவர்களுடைய முயற்சிகள் 1833லேதான் பயனளித்தன. அக்காலத்தில் அம்மை நோயினற் பிடிக்கப்பட்டோர் காடுகளிலே கட்டப்பட்டிருந்த குடிசைகளுக்கு அனுப்பப்பட்டனர். அதனல் அந் நோயாளரிலநேகர் காட்டுமிருகங்களுக்கிரையாகினர். நோர்த் தேசாதிபதி அந் நோயாளர்களுக்குப் புறம்பான வைத்தியசாலைகளைக் கட்டிவிட்டார். 1802-ல் அவர் பால் கட்டும் முறையை உபயோகித்து அந் நோய் பரவாதவண்ணம் தடைசெய்தார். போர்த்துக்கீசர் ஒல்லாந்தர் காலத்தில் சமய வழிபாட்டிற் பல தடைகள் ஏற்படுத்தப்பட்டிருந்தன. ஆங்கிலேயர் சமய சுதந்திரத்தை அளித்தனர்.

ஆரம்பத்தில் ஆங்கிலேயர் வர்த்தகத்திலும் அரசியலிலும் சிரத்தை எடுத்தனரேயன்றி கல்வியை முன்னேற்றுவதில் அதிகம் கவனஞ் செலுத்தவில்லை. ஆனல் ஒல்லாந்தர் தங்களுடைய சமயத்தைப் பரப்புவதற்கும் அதில் மக்களுக்கு நம்பிக்கையுண்டாக்குவதற்குமாக ஆலயத்தின் மேற் பார்வையில் பாடசாலைகளைத் தாபித்

துக் கல்வியைப் புகட்டினர். கிறீத்தவர்களாய் மாறியவர்கள் வேதத்தை வாசித்தறியக் கூடியவர்களாயிருந்தனர். பிரித்தானிய கிழக்கிந்திய சங்கம் கல்வியைப் பரப்புவதிற் சிரத்தை காட்டாத பொழுதிலும் நோர்த் தேசாதிபதி மக்களிடையே கல்வியறிவு அத்தியாவசியமானதென உணர்ந்தார். அவர் சில பாடசாலைகளைத் தாபித்து ஆசிரியர்களுக்குச் சம்பளத்தையும் கொடுத்தார். பின்பு சம்பளங் கொடுப்பதற்குப் போதிய பணம் அரசாங்கத்திடமில்லாமையால் பாடசாலைகள் **1803**ன் மேல் பழைய நிலைக்கு வந்தன. ஆனல் ஐரோப்பாவில் ஏற்பட்ட சமயக் கிளர்ச்சியின் காரணமாக இலங்கையிலும் கிறீத்த சமயத்தைத் தழுவியவர்கள் புத்தசமயத்திற்கும், இந்து சமயத்திற்கும் மாருது தடுத்து வைப்பதற்காகப் பாடசாலைகளைத் தாபித்துக் கல்வியைப் பரப்ப முயன்று நின்றனர். **பிரௌன்றிக்** தேசாதிபதி பலவிடங்களிலும் பாடசாலைகளைத் தாபித்தார். பார்ன்ஸ் தேசாதிபதி, பாடசாலைகளை நடத்திய பாதிரிமார்களுக்கு அரசாங்கம் கொடுத்த பணவுதவியை நிறுத்திவிட்டபடியால் **1820**ன் மேல் பாடசாலைகள் ஊக்கமாக நடத்தப்படவில்லை. ஆனல் மார்க்க சபைகள் பாடசாலைகளை நடத்த ஆரம்பித்தன.

பல ஆண்டுகளாக கரையோர மாகாணங்களில் புத்தசமயமும் இந்து சமயமும் பழைய காலத்திற் பெற்ற ஆதரவைப் பெறவில்லை. போர்த்துக்கீசர் அச்சமயங்கள் தலையெடுக்க விடாமல் தடுத்துக் கோயில்களையும் அழித்தனர். ஒல்லாந்தர் அச் சமய வழிபாடுகளைத் தடுத்து வைத்ததோடு அச் சமயத்தவர்கள் கிறீத்தவர்களாக மாற வேண்டுமென்றும் வற்புறுத்தினர். அடிக்கடி ஏற்பட்ட சண்டைகள், விகாரைகளின் வாழ்க்கையிற் குழப்பமுண்டாக்கியதோடு புத்த சங்கத்தின் நிலையையும் சீர்குலைத்து விட்டன. புத்த சமயக் கொள்கைகளும் மாற்றமடைந்தன. சமுதாயத்தில் சாதிக் கட்டுப்பாடே அடிப்படையாக இருந்தது. புத்த சங்கத்திலே தாழ்ந்த சாதியினர் சேர முடியாது. பிரித்தானியர் ஆளத் தொடங்கிய பின்னும் புத்த, இந்து சமயங்களில் வளர்ச்சி ஏற்படவில்லை. ஆங்கிலேயர் கிறீத்த சமயத்தையும், அதன் ஆலயங்களையும் ஆதரித்ததோடு அரசாங்க உத்தியோகங்களையும் கிறித்தவர்களுக்கே கொடுத்தனர். தற்கால சமுதாயத்திற் கேற்ற வண்ணம் கிறித்த சமயக் கொள்கைகளும், ஒழுங்குமிருந்தபடியால் அச் சமயம் முன்னேற்றமடைய புத்த சமயமும், இந்து சமயமும் நிலமானிய முறை நிலவிய காலத்திற் கேற்றனவாக இருந்தன. ஆனல் கண்டியைக் கைப்பற்றிய பின், பிரதானமாகக் கண்டிக் கலகத்தின் பின்

ஆங்கிலேயர் புத்த சமயத்திற்கு இடையூறு விளைத்திலர். புத்த சமயத்திற்கு மாருக ஒன்றுஞ் செய்யவில்லை. 1802-ல் தாழ்ந்த சாதியினரிற் சிலர் பர்மாவுக்குச் சென்று பிக்குகளாகத் தீட்சை பெற்று சங்கத்திற் சேர்ந்த பொழுதிலும் சாதி வேற்றுமை அற்றுப் போகவில்லை. பழைய காலத்திலிருந்த புத்த குருமார் இந்தியாவி லேற்பட்ட புதிய சமயக் கொள்கைகளைக் கைக்கொண்டு அவை களை இலங்கையிலும் பரப்பினர். ஆனுல் பிரித்தானியருடைய காலத்தில் குருமார் ஆங்கில அறிவில்லாமையால் இந்தியாவிலேற் பட்ட மாற்றங்களை அறிந்திலர். ஆகையால் மேனுட்டுக் கொள்கை களும் நாகரிகமும் இலங்கையிற் பரவத் தொடங்கின.

இலங்கையில் இராசகாரியா முறை பண்டைக்காலந்தொட்டு வழங்கி வந்தது. அது இலங்கைச் சமுதாயத்திற் கேற்றதாகக் காணப்பட்டதேயன்றி பிரித்தானியர் போன்ற மேல் நாட்டவர்க ளுக்கு அது அநீதியானதாயும் அடிமைத்தனத்தை நிலைநாட்டும் ஒரு முறையாகவும் காணப்பட்டது. கைத்தொழில் வர்த்தக விருத்திக்கு அது தடையானதென ஆங்கிலேயர் உணர்ந்தனர். அம்முறையின்படி மக்கள் குறித்ததொழிலையே செய்துகொண்டிருந்தமையினுல் வர்த்தகம் கைத்தொழிலில் அவர்கள் ஈடுபட முடியாது, மேலும் அதிகாரிகள் அளவு கடந்த அதிகாரத்தைப் பெற்று மக்களை வருத்தினர். இராசகாரிய முறை இருக்குமளவும் பிரித்தானியருடைய ஆளுகை பலமடையா தெனவும் உணர்ந்தனர். பாதைகள், பாலங்களைத் திருத்தியமைப் பதற்குச் செய்த இலவச வேலையும், அரசனிடம் பெற்ற நிலங் களுக்காகச் செய்த சேவையும் ஆகிய இரண்டு சேவையுமே இராச காரிய முறையின்படி செய்த சேவைகளுமாம். இரண்டாவது சேவை சாதிக்கட்டுப்பாட்டோடு சம்பந்தப்பட்டதாகும். உயர்ந்த சாதியினர் தாழ்ந்த குலத்தவர் செய்யும் வேலைகளைச் செய்வது மரியாதைக் குறைவென எண்ணினர். போர்த்துக்கீசரும், ஒல்லாந் தரும் இராசகாரிய முறையைக் கவனித்து நடந்தனர். ஆங்கிலே யரும் ஆரம்பத்தில் அம்முறை பலவிதமான வேலைகளைச் செய்விப்ப தற்குப் பயன்படுமென நினைந்து அதைக் கவனித்து நடந்தனர். நோர்த் தேசாதிபதி இராசகாரிய முறையை நீக்கியவுடன் பல கஷ்டங்களேற்பட்டன. அதனுல் மெயிட்லன்ட் தேசாதிபதி அதை மீண்டும் புகுத்தினுர். பிரௌன்றிக் தேசாதிபதி கண்டிக் கலகத்தின் பின் அங்கே இராசகாரிய முறையை நீக்கிவிட்டார். ஆனுல் சில சேவைகள் செய்வதற்கு இலவச சேவை தேவைப்பட்டமையால் அது முற்ருக நீக்கப்படாதிருந்து சில வருடங்களுக்குப் பின்னும் நடைபெற்று வந்தன.

## வினாக்கள்

1. பார்ன்ஸ் தேசாதிபதி செய்த முக்கிய சேவைகள் யாவை?
2. வீதிகள் அமைக்கப்பட்டதனால் உண்டான நன்மைகள் யாவை?
3. சமுதாய, பொருளாதாரத் துறையிலேற்பட்ட மாற்றங்களை ஆராய்க.

# 4. கோல்புறூக் அரசியற் சீர்திருத்தம்

ஒல்லாந்தர் ஆட்சியிலிருந்த கரையோர மாகாணங்கள் பிரித்தானியருடைய ஆதிக்கத்தில் வந்த காலந் (1802) தொட்டு அவைகளின் நிர்வாகத்தை அவர்கள் நடத்திவந்தனர். 1815-ல் கண்டி இராச்சியத்தைக் கைப்பற்றியபின் முழு இலங்கையின் நிர்வாகப் பொறுப்பும் அவர்களுடைய கையிலேயே இருந்து வந்தது. வருடந்தோறும் செலவு கூடிக்கொண்டு போனமையால் வரவு, செலவை சமன்படுத்த முடியாமற் போனது. வர்த்தகத்திலேயே அதிக கவனஞ் செலுத்திய ஒல்லாந்தர் அதிக ஆதாயத்தைப் பெற்றனர். ஆனல் ஆங்கிலேயருக்கு வருடந்தோறும் நஷ்டமேற்பட்டதற்குரிய காரணங்களை ஆராயவேண்டும். ஒல்லாந்தர் வர்த்தகக் கொம்பனியின் உத்தியோகத்தர்களாகையால் வர்த்தகப் பொருள்கள் ஒவ்வொன்றிலும் ஆதாயத்தைப் பெறும் நோக்கமுடையவர்களாயிருந்தனர். அதுவுமல்லாமல் இந்நாட்டில் வழங்கி வந்த பண்டைக் காலமுறையையே தழுவி நடந்தனர். தொழில் செய்பவர்களுக்கு நிலங்களையே வழங்கி வந்தனர். ஆனல் ஆங்கிலேயரோ உத்தியோகத்தர்களுக்கு பணமாகச் சம்பளத்தைக் கொடுத்தனர். மேலும் அதிக ஆதாயத்தை ஈட்டும் நோக்கம் அவர்களிடமில்லை. நிர்வாகச் செலவு அதிகரிக்க அதற்குத் தேவையான பணத்தைப் பெறுவதற்கு வேண்டிய புதிய வருவாய்களுமில்லை. மக்களுடைய பணநிலையும் குறைவாயிருந்தமையால் வரிகளை அறவிடவும் முடியவில்லை. அதிகரித்த செலவினுலேற்பட்ட நட்டத்தைப் பிரித்தானிய அரசாங்கமே கொடுத்து வந்தது.

அக்காலத்தில் இலங்கையிலிருந்த அரசாங்கம் அநீதியாகவும், கொடூரமாகவும், இட்டமான முறையிலும் நிர்வாகத்தை நடத்தியது என்று கூறப்பட்டது; வர்த்தகம் குறைந்த நிலையில் இருந்ததென்றும், மக்கள் வறுமைப்பட்டிருந்தனரென்றும், வலோற்காரமான முறையில் அவர்களால் வேலை செய்விக்கப்பட்டதென்றும் பிரித்தானிய அரசாங்கம் இங்கிருந்த ஐரோப்பியர் மூலம் அறிந்தது. ஆகையால் பிரித்தானிய அரசாங்கம் **கோல்புறூக்** தலைமையில் ஓர் விசாரணைக் குழுவை 1829-ல் இலங்கைக்கு அனுப்பியது. அடுத்த ஆண்டில் நீதி வழங்கும் முறையைப்பற்றி ஆராய **கமறன்** என்பவன் அனுப்பப்பட்டான். அக் குழுவினர் ஆங்கிலம், தமிழ், சிங்களம் ஆகிய மூன்று மொழிகளிலும் மக்களுக்கு அறிவித்தல் அனுப்பிய பொழுது அநேக மனுக்கள் அவர்களுக்கு அனுப்பப்பட்டன. அர

சாங்க உத்தியோகத்தர்களும் 435 வினுக்கள் கொண்டுள்ள பத்திரத்தையும் அனுப்பினர். பின்பு ஊவா, கீழ்மாகாணங்களைத் தவிர்ந்த ஏனைய பகுதிகளுக்குப் பிரயாணஞ் செய்து பலரோடும் கலந்து சம்பாஷித்துத் தேவையான விஷயங்களைத் திரட்டினர். கன்சபாக் கூட்டங்களிலும் பங்குபற்றினர்.

1832-ல் இங்கிலாந்துப் பாராளுமன்றத்தில் உண்டாக்கப்பட்ட சீர்திருத்தச் சட்டத்தின் அடிப்படையான கொள்கைகளினுலும் அங்கு ஏற்பட்ட அடிமை நீக்க உணர்ச்சியினுலும் **அதாம்சிமித், ஜெரெமி பென்தாம்** என்னும் பெரியார்களின் உயர் நோக்கங்களாலுமுந்தப்பட்ட அக் குழுவினர் இலங்கையிலிருந்த நிர்வாகத்திற் பல குறைகளைக் கண்டனர். ஆங்கிலேயருடைய உயர்ந்த அரசியற் கொள்கைகள் இலங்கைக்கும் உகந்தனவென எண்ணினர். ஆனுல் அவ்வகையான அரசியற்தாபனங்களை ஏற்றுக்கொள்ள நாடு தகுந்த நிலையிலிருக்கின்றதாவென்பதை அவர்கள் யோசிக்கவில்லை. அவர் விசாரணையின் முடிவில் இரண்டு அறிக்கைகளை விடுத்தனர் (1832). கோல்புறூக் பின்வருமாறு குறிப்பிட்டார். ''கரையோர மாகாணங்களிலும் கண்டிப் பகுதிக்கும் வெவ்வேறு ஆட்சி முறை இருப்பது தகுந்த முறையல்ல. கண்டியில் பிரத்தியேகமான ஆட்சிமுறை பிரதானிகளின் செல்வாக்கை நிலைநாட்டுவதாகும்.'' இதுவரையில் கரையோர மாகாணங்களில் சிங்களவர் வசித்த இடங்களுக்கும், தமிழர் வசித்த இடங்களுக்கும், கண்டி நாட்டிற்கும் வெவ்வேறு ஆட்சி முறை ஏற்படுத்தப்பட்டிருந்தது. இம் மூன்று பகுதியையும் சேர்த்து ஒரே நிர்வாக முறையைத் தாபிக்கவேண்டுமென்பதே அவ்வறிக்கையின் முக்கிய அம்சமாகும். அப்பொழுது இலங்கையிற் காணப்பட்ட 16 ஆட்சிப் பிரிவுகளையும் நிர்வகிப்பது செலவை அதிகரிக்கச் செய்தமையால், இலங்கை முழுவதும் வடமாகாணம், தென் மாகாணம், கீழ் மாகாணம், மேல் மாகாணம், மத்திய மாகாணம் என ஐந்து மாகாணங்களாகப் பிரிக்கப்பட வேண்டுமென்றும், அவைகளின் தலைநகரங்கள் முறையே யாழ்ப்பாணம், காலி, திருகோணமலை, கொழும்பு, கண்டி என்பனவாக இருக்கவேண்டுமென்றும் குறிப்பிட்டார். அவ்வாறு ஒரே நிர்வாகத்தை முழு இலங்கைக்கும் ஏற்படுத்துவதனுல், மலைநாட்டுச் சிங்களவர், தாழ் பூமியிலுள்ள சிங்களவர், தமிழர் ஆகியோரிடத்து ஒற்றுமை உண்டாகுமென்பது வெளிப்படை. இவ்விதமான பாகுபாட்டினுல் கண்டியிலுள்ள மக்களுக்கே கஷ்டமேற்பட்டது. ஒரே நிர்வாகம் நிறுவப்பட்டமையால் கண்டியிலுள்ள நிலங்களையும், செல்வத்தையும் ஐரோப்பியரும்,

இந்தியரும், தாழ்பூமியிலுள்ள சிங்களவரும், இந்தியரும் அநுபவிக்க வசதியுண்டானது. கண்டியிலுள்ள விவசாயிகளின் பொருளாதார, சமுதாய நிலைகள் குன்றந்தொடங்கின. முன்னிருந்த கண்டி இராச்சியத்தின் சில பாகங்கள் மற்றைய மாகாணங்களோடு சேர்க்கப்பட்டன. நிர்வாக மேலுத்தியோகத்தரின் கந்தோரிலிருந்து கண்டியே தூரத்திலிருந்தது. ஆனால் கண்டியே முன்னேற்றமடையாத பகுதியாயிருந்தபடியால், அப்பகுதியிலேயே கவனஞ் செலுத்த வேண்டியதாகவிருந்தது.

இங்கிலாந்தில் அப்பொழுது மத்திய வகுப்பினருக்கு வாக்குரிமை அளிக்கப்பட்டது. அரசாங்கத்தில் மக்கள் கூடிய பங்கைப் பெற்றனர். ஆனல், இலங்கையில் தேசாதிபதி கட்டுப்பாடதிகமில்லாத அரசன் போல் ஆளுவதைக் கண்டு, தேசாதிபதியின் அதிகாரத்தைக் குறைக்கவேண்டுமெனக் கோல்புறூக் அபிப்பிராயப்பட்டார். இலங்கையிலிருந்த இரு சட்டங்கள் தேசாதிபதிக்குப் பெரும் அதிகாரத்தை அளித்தன. அரசாங்கத்தின் எதிரியெனக் கைக்கொள்ளப்பட்ட ஒருவன் அல்லது நாட்டின் அமைதிக்குப் பங்கம் விளைவித்தவன் தேசாதிபதியால் ஒருவிதமான விளக்கமுமில்லாது சிறைச்சாலையிலிடவோ அல்லது நாடு கடத்தப்படவோ அவருக்கு இருந்த அதிகாரம் ஒன்றாகும். தேசாதிபதியின் அவ்விதமான அதிகாரச் செய்கையை ஆராய்ச்சி செய்ய நீதிஸ்தலங்களுக்கும் அதிகாரமில்லாமையே மற்றதாகும். கோல்புறூக்கின் அறிக்கையின்படி அவ்விரு அதிகாரங்களும் நீக்கப்பட்டன. அதன் பயனாக தேசாதிபதி தன்னிட்டப்படி நடந்துகொள்ள முடியாது. இதுவரையும் நிர்வாக ஆட்சியை நடத்துவதற்குத் தேசாதிபதிக்கு ஆலோசனை கூறுவதற்குச் சில உத்தியோகத்தர்களைக் கொண்டுள்ள சபையொன்றிருந்தது. ஆனல் கண்டிப்பகுதியைப் பொறுத்தளவில் சட்ட நிரூபண, சட்ட நிர்வாக விஷயங்களை நடாத்துவதிலே தேசாதிபதிக்கு ஒரு கட்டுப்பாடுமில்லை. ஆகையால் தேசாதிபதியின் செய்கைகளைக் கட்டுப்படுத்துவதற்காக ஒரு சட்ட நிர்வாகசபையையும், நாட்டின் பல விஷயங்களைப் பற்றிக் கலந்துரையாடுவதற்காகவும் மக்களைப் பாதிக்காத சட்டங்களை உண்டாக்குவதற்கும் ஒரு சட்ட நிரூபண சபையையும் நிறுவவேண்டுமெனவும் குறிப்பிட்டனர். சட்டநிரூபண சபையின் விவாதங்களில் தேசாதிபதி கலந்துகொள்ளக் கூடாதெனவும் விரும்பினர்.

**சட்டநிரூபண** சபையில் 9 உத்தியோகப் பற்றுள்ள அங்கத்தவர்களும், 6 உத்தியோகப்பற்றற்ற அங்கத்தவர்களும் நியமிக்கப்

பட்டனர். சட்ட நிர்வாக சபையில் 9 உத்தியோகப் பற்றுள்ள அங்கத்தவர்களில் 6 பேர் அங்கத்துவம் வகித்தனர். உத்தியோ கப்பற்றுள்ள அங்கத்தவர்கள் அரசாங்கத்திற்குச் சார்புடையவர் களாயிருந்தனர். உத்தியோகப்பற்றற்ற அங்கத்தவர்களிலே 3 அங்கத்தவர்கள் ஐரோப்பியரும் எஞ்சிய மூன்று பேரும் தமிழர், சிங்களவர், பறங்கிகள் ஆகியோரின் பிரதிநிதிகளுமாவர். ஐரோப்பிய அங்கத்தவர்கள் வர்த்தகம் விவசாயத்திலிடுபட்டவர்களாகையால் அவ் விருசாராரின் பிரதிநிதிகளாகும். சிங்களவர், தமிழர் பறங்கிகளின் பிரதிநிதிகள் ஆங்கிலேயக் கல்வி கற்ற மத்திய வகுப்பினரைச் சேர்ந்தவர்களாகும். இந்நாட்டில் 98வீத மக்களுக்குப் பிரதிநிதிகளில்லை யெனலாம். விவசாயிகளின் பிரதிநிதிகளில்லாமையால் அவர்க ளுடையநிலை வெகுகாலமாகத் திருத்தமடையவில்லை.

சட்டங்களை உண்டாக்கவோ அல்லது அவைகளை நடைமுறைக் குக் கொண்டுவருவதற்கோ பெரும்பான்மையான அங்கத்தவர்க ளின் ஆதரவு தேவைப்பட்டது. ஆனால் அத்தியாவசியமான விஷ யங்களில் இரு சபைகளின் தீர்மானங்களைத் தேசாதிபதி நிராகரித்து விடலாம். ஆனால் அச்சந்தர்ப்பங்களிலே தேசாதிபதி குடியேற்ற நாடுகளின் காரியதரிசிக்கு விஷயங்களை விளக்கிக் காட்ட வேண் டும். இலங்கையிற் தற்பொழுது காணப்படும் பாராளுமன்றத் தாப னம் இந்த அரச சபைகளாகிய வித்திலிருந்தே முளைத்ததென்று சொல்லலாம். மத்திய வகுப்பினரின் பிரதிநிதிகள் ஜனநாயக அர சியல் அநுபவத்தை இவைகளிலிருந்தே பெற்றனர். 1832-ல் இச் சபைகள் தாபிக்கப்படாவிட்டால் இலங்கை 1948-ல் டொமினியன் அந்தஸ்தைப் பெறுவதற்குத் தகுதியற்றதாயிருந்திருக்கும்.

உள்நாட்டுப் பழைய தாபனங்களை ஆராய்ந்த பொழுது "இராச காரியா" முறை சம்பளங்கொடாது வேலையை வற்புறுத்தியமை யால் அது அடிமைத்தனம்போற் காணப்பட்டது. அடிமை வியாபா ரத்தை 1807-ல் நிறுத்திவிட்ட ஆங்கிலேயருக்கு அடிமைத்தனம் சமுதாயத்திற்கு ஒரு இழுக்குப் போற் காணப்பட்டது. அதுவுமல் லாமல் அம்முறை சாதிக்கட்டுப்பாட்டை அடிப்படையாகக் கொண் டுள்ளது. இலங்கையில் சாதிக்கட்டுப்பாடு அதிக நுணுக்கமாகக் காணப்பட்டது. இங்கே நான்கு வகையான அடிமைகள் காணப் பட்டனர். (1) கடனுக்காகத் தங்களை விற்றவர்கள், குறித்த காலத் திற்குள் அக் கடனைக் கொடுத்து மீட்டுக்கொள்ளக் கூடியவர்கள், (2) பெற்றோர்களால் அடிமைகளாக விற்கப்பட்டோர்கள், (3) அரச னால் அடிமைகளாகத் தண்டிக்கப்பட்டோர், (4) அடிமையாகவிருந்த

ஒரு தாயின் பிள்ளைகள். இலங்கையிலிருந்த அடிமைகள் சொத்துக்களை வைத்திருக்கவோ, சந்ததியாருக்குக் கொடுக்கவோ முடியும். அரசாங்கத்தில் உத்தியோகம் வகிக்கவும் முடியும்; ஒரு அடிமை வேறடிமைகளையும் வைத்திருக்கலாம். ஆகையால் அடிமைகள் எசமானுக்குச் செய்யவேண்டிய கடமைகளைச் செய்துவிடவேண்டியதாகும். பெரும்பாலும் எசமானுடைய நிலங்களைப் பயிரிடுவதே அவர்களுடைய முக்கிய கடமைகளாகும். யாழ்ப்பாணத்தில் மூன்று வகையான அடிமைகளிருந்தனர். முதல் வகுப்பைச் சேர்ந்தவர்கள் எசமானுடைய வீட்டு வேலைகளைச் செய்தனர். ஏனைய இருவகுப்பினரும் எசமானுடைய நிலங்களிற் பயிரிட்டனர். ஆனால் அவ்வடிமைகளும் சொத்துக்களை வைத்திருக்க முடியும். 1817-ல் 22000 அடிமைகள் யாழ்ப்பாணத்திலிருந்தனரென்பது உத்தேசம். ஆனால் கண்டி இராச்சியத்தில் அடிமைகள் எசமானுடைய சொந்தப் பொருள் போற் பாவிக்கப்பட்டனர். அவர்களும் பயிரிடுந் தொழிலைச் செய்து வந்தனர். சில அடிமைகள் விதானைமாராகவும் கடமையாற்றி வந்திருக்கின்றனர். 1829-ல் 2113 அடிமைகள் வரையில் கண்டிப் பகுதியிலிருந்திருக்கின்றனர். கரையோர மாகாணங்களில் அடிமைத்தனம் குன்றிவிட்டது. சாதிக்கட்டுப்பாட்டை அடிப்படையாகவுள்ள 'இராசகாரியா'' முறை நீக்கப்பட வேண்டுமென்று கோல்புறூக் குறிப்பிட்டார். அதுவுமல்லாமல் அம்முறை மக்கள் தங்களிட்டப்படி விரும்பிய தொழிலைச் செய்வதற்கும், ஓரிடத்திலிருந்து இன்னோரிடத்திற்குப் போய் இருப்பதற்கும் தடையாகவிருந்தது. மக்கள் எல்லோரும் சமமான உரிமையைப் பெறுவதற்கும் தடையாகவிருந்தது. மேலும் மக்களுக்கு வழங்கப்பட்ட நிலங்கள் ஒரே அளவாகவும் இருக்கவில்லை. ஒரே அளவான வருமானத்தையுங் கொடுக்கவில்லை. அம்முறையின்படி அரசாங்கத்திற்கு வேலை செய்யுங் காலத்தில் சொந்த நிலங்கள் பயிரிடப்படாமலிருந்தன. பிரித்தானியரால் இராசகாரிய முறையின்படி செய்வித்த வேலைகள், வீதிகள் அமைப்பதிலும், கட்டடங்கள் கட்டுவதிலும் செய்யப்பட்டன. பழைய காலத்தில் அவர்செய்த வேலைகள் மிகவும் இலேசாகக் காணப்பட்டன. கண்டியிலுள்ள பிக்குகள் அம்முறை நீக்கத்திற்கு எதிர்ப்புக் காட்டினமையால், ''தேவாலகம்'' என்று தேவாலயங்களுக்கிருந்த நிலங்களில் வேலைசெய்யும் வழக்கம் 1870 வரையும் நீடித்திருந்தது.

இராசகாரியமுறை நீக்கப்பட்டதோடு வர்த்தக ஏகபோக உரிமைகளும் நீக்கப்பட்டன. அரசாங்கத்தார் வசமிருந்த கறுவாவியாபார

ஏகபோக உரிமைபோன்ற வர்த்தகக் கட்டுப்பாடுகள் நீக்கப்பட்டன. அவ்விதமான உரிமைகள் மக்களின் முயற்சியைக் குறைத்துவிட்டன. அவ்விதம் தேங்காய், எண்ணெய், மிளகு, கோப்பி ஆகிய பொருள்களின் ஏற்றுமதி அரசாங்கத்தாற் கைவிடப்பட்டன. நில வரியையும் கோல்புறூக் ஏற்றுக்கொள்ளவில்லை. ஏற்றுமதிப்பொருள்களில் அறவிடப்பட்ட சுங்கவரியும் உள்நாட்டுப் பொருள்களின் விற்பனைக்குத் தடையாகவிருந்ததெனக் குறிப்பிட்டார். "இராசகாரிய முறை" நிராகரிக்கப்பட்டதனுல் சாதிவேற்றுமையின்றி மக்கள் சம உரிமையைப் பெற்றனர். ஆகையால் இலங்கைச் சரித்திரத்தில் இது ஒரு பெரும் முக்கியத்துவத்தைப் பெற்றதெனலாம். வர்த்தக, விவசாய விருத்திக்கும் வசதியுண்டானது.

செலவைக் குறைப்பதற்காக "சிவில்சேவிஸ்" என்ற உயர்தர உத்தியோக சேவையிலுள்ளவர்களின் தொகையைக் குறைத்துவிட்டார். அவர்களுடைய சம்பளங்களையுங் குறைத்து இளைப்பாறும் பொழுது கிடைக்கும் வேதனத்தையும் இல்லாமற்செய்துவிட்டார். இருந்தும் இங்கிலாந்திலிருந்து பெரும் உத்தியோகப்பதவிக்கு நியமனஞ்செய்யும் உரிமை அரசாங்கத்திற்கே இருந்தது. சாதிவித்தியாசமின்றி இலங்கையிலுள்ள சுதேசிகள் அச்சேவையிலே சேரமுடியும். ஐரோப்பியர் சுதேசிகள் என்ற வேற்றுமையும் நீங்கியது. "இராசகாரியமுறை" நீக்கப்பட்டதும் அரசாங்க ஏகபோக உரிமை நிராகரிக்கப்பட்டதோடும், சட்டநிருபணசபை தாபிக்கப்பட்டதோடும், நீதிவழங்கும் முறையும் நிர்வாகமும் வெவ்வேருகக் கடமையாற்றியமையினுலும் சிவில்சேவிஸின் முக்கியத்துவம் குறைக்கப்படலாமென்ற எண்ணம் கோல்புறூக்கின்மனதில் இருந்தது. கன்சபா என்ற கிராமச்சபைகள் கடமையாற்றிவந்தமையினுல் உயர்தர அச்சேவையின் கடமைகள் குறையும் என்றும் அபிப்பிராயப்பட்டார். ஆனுல் இலங்கையிலுள்ள கிராமச்சங்கங்கள் நிலமானியமுறை நிலவியகாலத்திற்கேற்றதல்லாது தற்கால அரசாங்கமுறைக் கேற்றதல்லவென்பதையும், அவைகள் மேலுத்தியோகத்தர்களின் மேற்பார்வையிலேயே நடைபெறவேண்டுமென்பதையும் அவர் உணர்ந்திலர். சிவில் சேவிஸ் உத்தியோகத்தர்களின் சம்பளம் குறைக்கப்பட்டவுடன் அதிவிவேகிகள் அச்சேவையை விட்டு விலகி இங்கிலாந்திற்குச் சென்றனர். ஆகையால் சுதேசிகள் அச்சேவையிற் சேரக்கூடியதாக ஆங்கிலக்கல்வி பயிற்றுவதற்கு ஆங்கிலப்பாடசாலைகள் தாபிக்கப்படவேண்டுமென்றும் குறிப்பிட்டார். அரசாங்கசேவையிற் சேர்வதற்கும் ஆங்கிலக்கல்வி தேவைப்பட்டது. நிலமானியமுறையிற்

பழகிய சமுதாயம் வர்த்தக சமுதாயமாக மாறுவதற்கும் ஆங்கிலக் கல்வி அவசியமானதென அபிப்பிராயப்பட்டார். அதனுல் தாய் மொழியைக் கற்பதனுல் அதிக பயனுண்டாகவில்லை.

நீதிவழங்கும் முறையில் **கமறன்** மேல்வரும் மாற்றங்களைத் தனது அறிக்கையிற் குறிப்பிட்டார். (1) நீதிவழங்கும் பகுதியையும் நிர்வாகப் பகுதியையும் வெவ்வேருக அமைத்தல், (2) கரையோர மாகாணங்களிலும் கண்டியிலுமிருந்த நீதிஸ்தலங்கள் வித்தியாச மின்றி ஒரேவிதமானவையாக நிறுவுதல், (3) நீதிபரிபாலனத்தில் ஐரோப்பியருக்கும் சுதேசிகளுக்கும் வித்தியாசங் காட்டாமை, (4) "சுப்பிறிங்கோடு" எனப்படும் உயர்தர நீதிமன்றத்தைத் தாபித்தல், (5) அப்பொழுதிருந்த நீதித்தலங்களுக்குப் பதிலாக மாகாணக் கீழ்க் கோடுகளைத் தாபித்தல். நீதிவழங்கும்பகுதியில் அரசாங்க நிர்வாகத்தை நடத்துவோரின் செல்வாக்கு இருத்தல், நீதிபரிபாலனம் செய்வதற் குத் தடையாகவிருக்குமென்பதை உத்தேசித்தே இருபகுதியும் வெவ் வேறு தாபனங்களாக நிறுவப்பட்டன. இலங்கை முழுவதற்கும் ஒரே அரசாங்கம் நிறுவப்பட்டமையினுல் எல்லாப்பகுதியிலும் ஒரேவித மான நீதிபரிபாலனம் நடைபெறவேண்டுமென்பதும் அவருடைய கருத்தாகும்.

பல நூற்றுண்டுகளாக கிராமங்களின் விஷயங்கள் கன்சபா மூலம் நடத்தப்பட்டுவந்தன. கிராமத்தில் ஒழுங்கை நிலைநாட்டியும், விவாதங்களைத் தீர்த்தும், வருமானத்தை அறவிட்டும், குற்றஞ்செய் தோரை நீதிவான்கள் முன்னிலைக்குக் கொண்டுசென்றும், விவசா யத்தை விருத்திசெய்தும் இன்னேரன்ன கடமைகளை அக்கிராம சபைகள் நடத்திவந்தன. அவைகள் "இராசகாரியா" மூலமேவிவ சாயிகளைக்கொண்டு வேலைசெய்வித்தனர். இராசகாரியமுறை நீக்கப் பட்டதனுல் கிராமசபைகளும் அதிகாரத்தை இழந்துவிட்டன. அதுவு மல்லாமல் அவைகள் செய்துவந்த நீதிவழங்கும் கடமைகளும் புதிய நீதித்தலங்கள் தாபிக்கப்பட்டமையால் அவைகளிலிருந்து நீக்கப் பட்டன. அதனுல் கிராமங்களிலேயே தங்களுடைய விவாதங்களைத் தீர்த்துக்கொண்டுவந்த விவசாயிகள் இப்பொழுது அவ்வசதியை இழக்கநேரிட்டது.

அப்பொழுது தேசாதிபதியாயிருந்த **பார்ன்ஸ்,** விசாரணைக் குழுவினர் விடுத்த அறிக்கையைப்பற்றிப் பின்வருமாறு கூறினுர். "இலங்கையில் தற்போதுள்ள சமுதாயத்தில் விசாரணைக் குழு வினர் குறிப்பிட்ட மாற்றங்கள் பரிகசிக்கக்கூடியவையாகும். கறுத் தவர்களும், வெள்ளைக்காரரும் சமுதாயத்தில் சமமானமுறையில்

நடந்துகொள்வார்கள் என்பது ஒருபோதும் நடைபெருது. இரு பகுதியாரில் ஒருவர் மேலோங்கிய நிலையிலிருக்கவேண்டும். மக்கள் பங்குபெறும் அரசாங்கம் ஏற்றதல்ல. தற்பொழுது இருக்கின்ற நிலைக்கு மக்களுக்கு இப்பொழுது இருக்கிறதிலும் பார்க்கக் கூடிய பங்கு அரசாங்கத்திலிருப்பது கூடாது." இவ்விதமாக அவர்கள் செய்த திருத்தங்களைக் கண்டித்துப்பேசினர்.

பார்ன்ஸ் தேசாதிபதியின் பின் **சேர் ரொபேட் உவில்மட் கோட்டன்** தேசாதிபதியாக நியமிக்கப்பட்டார் (1831). இவருடைய காலத்தில் முத்துக்குளிப்பினுல் அரசாங்கம் பெரும் ஆதாயத்தை (227,000 பவுண்) பெற்றமையால் விசாரணைக் குழுவின் அறிக்கையிற் குறிப்பிட்டவைகள் எல்லாம் நடைமுறைக்குக் கொண்டுவரப் பட்டன. இராசகாரியமுறை நீக்கப்பட்டமையால் பகிரங்கவேலைகளைச் செய்விப்பதற்கு இந்தியாவிலிருந்து கூலியாட்களைக் கொண்டுவர வேண்டியிருந்தது. அவ்விதமான பல கஷ்டங்களின் காரணமாக இலங்கையிலுள்ள ஒவ்வொருவரும் இரண்டு கிழமைகளுக்கு வீதிகளைத் திருத்தும்வேலையைச் செய்யவேண்டுமென்றும், விருப்பமில்லாதோர் அதற்குப்பதிலாக தலைவரி கொடுக்கவேண்டுமென்றும் சட்டமொன்று உண்டாக்கப்பட்டது (1848). கொழும்பில் முஸ்லிங்களும், செட்டிகளும் நிலம் சொந்தமாக வைத்திருக்கமுடியாதென்ற சட்டம் நிராகரிக்கப்பட்டது (1832). அவர்கள் இந்நாட்டுக்கு அந்நியரெனக் கருதப்பட்டு அவ்விதச்சட்டத்தை ஒல்லாந்தர் உண்டாக்கிவைத்தனர். கறுவாவின் ஏகபோக உரிமை நீக்கப்பட்டு அது ஏற்றுமதி செய்வதற்கு சுங்கவரியும் விதிக்கப்பட்டது. 1833-ல் கொண்டுவரப் பட்ட திருத்தச் சாதனத்தின்பிரகாரம் நீதிபரிபாலனம் இலங்கையிலுள்ள உயர் நீதிமன்றத்தில் (சுப்பிறீங்கோடு) விடப்பட்டது. அதற்குப் பிரதம நீதிபதியும் இரு உபநீதிபதிகளும் நியமிக்கப்பட்டனர்.

1833-ல் சட்டநிருபணசபையும், சட்டநிர்வாகசபையும் தாபிக்கப்பட்டன. சட்டநிர்வாகசபையிலுள்ள உத்தியோகப்பற்றுள்ள அங்கத்தவர்கள் வருமானம், செலவு ஆகிய விஷயங்களிலே தேசாதிபதிக்கு ஆலோசனை கூறினர். அரசாங்க நிர்வாகம் தேசாதிபதியில் மாத்திரம் தங்கியிராது அவ்வங்கத்தவர்களும் அதிற் பங்குபற்றினர். சட்டநிருபணசபையில் 9 உத்தியோகப்பற்றுள்ள அங்கத்தவர்களும், 6 உத்தியோகப்பற்றற்ற அங்கத்தவர்களுமிருந்தனர். இச்சபையிலேயே சட்டங்கள் யாவும் உண்டாக்கப்பட்டன. இச்சபையின் முதற்கூட்டம் (1834) நடைபெற்றபொழுது உத்தியோகப்பற்றற்ற 6 அங்கத்தவர்களும் நியமிக்கப்படவில்லை. அந்நேரத்தில் சிங்கள

வர் தமிழருக்குள்ளே அரசாங்க சேவையிலுள்ளோரைத்தவிர போதிய ஆங்கிலக் கல்வியறிவுடையோரில்லாமையால் தேசாதிபதிக்கு அங்கத்தவர்களைத் தெரிவுசெய்தல் கஷ்டமாகவிருந்தது. நியமனஞ்செய்வதற்குத் தாமதமிருந்தபடியால் பெருங்கிளர்ச்சி ஏற்பட்டது. தேசாதிபதி அரசாங்க சேவையிலிருந்தவர்களிலே நியமனஞ் செய்வதற்குப் பிரித்தானிய அரசாங்கத்திற்கெழுதி அதன் அனுமதியைக் கேட்டார். பின்னர் **யோசேப்பு றிட், றுபேட் யெப்ரி, பேட்** ஆகிய வர்த்தகர்களையும், முதலியார் **பிலிப்ஸ்,** முதலியார் **குமாரசாமி, கில்லிபிரான்ட்** ஆகியோரை அங்கத்தவர்களாக நியமித்தார். அறிக்கையிலே குறிப்பிட்ட ஏனைய மாற்றங்களும் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டன.

1833-ம் ஆண்டு இலங்கைச் சரித்திரத்தில் ஒரு பிரதானமான ஆண்டாகும். பல நூற்றுண்டுகளாக ஒற்றுமைக்குறைவும், சச்சரவுகளும் நிகழ்ந்த நாடு சமாதானத்தையும் ஒரே நிர்வாகத்தையும் பெற்றது. அதன்பின் எல்லாத்துறைகளிலும் இலங்கை முன்னேற்றமடையத் தொடங்கியது. பொருளாதார நிலையும் திருத்தமடைந்தது.

## வினுக்கள்

1. *1830-ல் விசாரணைக் குழுவொன்று ஏன் நியமிக்கப்பட்டது?*
2. *கோல்புறூக் குழுவினரின் அறிக்கையை ஆராய்க.*
3. *"கோல்புறூக் குழுவினர் அறிக்கையிற் குறிப்பிட்ட மாற்றங்கள் இலங்கை அப்பொழுதிருந்த சமுதாய, பொருளாதார நிலைகளுக்கு ஏற்றனவல்ல" இக்கூற்றை ஆராய்க.*
4. *"சட்டநிருபண, சட்டநிர்வாக சபைகள் இலங்கை பாராளுமன்ற ஜனநாயக முறையைப் பெறுவதற்கு வித்தாக இருந்தனவெனலாம்" இதன் உண்மையை ஆராய்க.*

---

# 5. பொருளாதார அபிவிருத்தியும் சமுதாய முன்னேற்றமும்

**(1833—1872)**

போர்த்துக்கீசர் ஒல்லாந்தர் ஆட்சிக் காலத்திலே கறுவா வர்த்தகமே அவர்களுக்கு பெரும் ஆதாயத்தைக் கொடுத்தது. **1835** வரையும் பிரித்தானியரும் அவ்வர்த்தகத்தினுற் அதிக லாபத்தைப் பெற்றனர். பின்னர் யாவாவிலிருந்து அனுப்பப்பட்ட கறுவாவுக்கு அதிக மானமேற்பட்டமையால் இலங்கை நடத்திய வர்த்தகம் குன்றத் தொடங்கியது. ஆனுல் அக்காலத்தில் இலங்கையில் நடத்தப்பட்ட கோப்பிச்செய்கை பொருளாதார நிலையில், ஒரு புரட்சியை உண்டாக்கி விட்டது.

ஐரோப்பியர் இலங்கைக்கு வருவதற்கு முன்னரே இந்நாட்டிற் கோப்பியைப் பற்றித் தெரிந்திருந்தும் கோப்பிப் பானத்தைத் தயாரிக்கும் முறையை அறிந்திலர். ஒல்லாந்தர் கோப்பிச் செய்கையை ஆரம்பித்தாலும் **1739**-ன் பின் அதைச் செய்கை பண்ணுவதைக் கைவிட்டனர். ஆனுல் கண்டிப் பகுதியில் அப்பயிர் செழிப்பாக வளர்ந்தமையால் அங்கு உண்டாக்கப்பட்டது. மலைநாட்டுக்கும் கொழும்புக்குமிடையில் புதிய வீதிகள் அமைக்கப்பட்டபின் போக்கு வரவு வசதிகள் ஏற்பட்டதனுல், துறைமுகங்களுக்கு அனுப்புஞ் செலவு மிகவுங் குறைந்தது. ஐரோப்பிய தனவந்தர்களும் பெருந் தொகையான பணத்தைச் செலவழித்துக் கோப்பித் தோட்டங்களைத் திறந்தனர். முதன் முதல் கோப்பிச் செய்கையை ஆரம்பித்தவர் **ஹென்றி பேட்** என்பவராகும். 1825-ல் **சேர் எட்வேட் பார்ன்ஸ்** தேசாதிபதியே பேராதனையில் ஒரு கோப்பித்தோட்டத்தைத் திறந்தார்.

இலங்கையிலிருந்து அனுப்பப்பட்ட கோப்பியின் தீர்வைப் பணம் இங்கிலாந்தில் மேற்கிந்திய தீவுகளிலிருந்து வந்த கோப்பியின் தீர்வையளவுக்குக் குறைக்கப்பட்டது (1835). அப்பகுதிகளில் அடிமைகளுக்கு விடுதலை அளிக்கப்பட்டமையால் அங்கிருந்து அனுப்பப்பட்ட கோப்பியின் தொகை குறைந்து விட்டது. ஆகையால் இலங்கையிலிருந்தனுப்பப்பட்ட கோப்பிக்கு ஐரோப்பாவிலதிக மானம் ஏற்பட்டது. கோப்பி, பருத்தி ஆகியவைகளின் செய்கையை ஊக்கப்படுத்துவதற்காகத் தேசாதிபதி வரிகளையுந் தீர்வைப் பணத்தையும் அவைகளிலிருந்து நீக்கிவிட்டார். **ரைட்லர்** என்பவர் **யமைக்காவில்** மூன்று வருடகாலம் கோப்பிச் செய்கையைப் பற்றிப் படித்து

இலங்கையில் அதைச் செய்யும் முறையை விளக்கிக் காட்டினர். சீக்கிரத்தில் கோப்பிச் செய்கை மலைநாடெங்கும் பரவியது. 1835-ல் 20,911 அந்தர் கோப்பி ஏற்றுமதி செய்யப்பட்டது; 1845-ல் 200,000 அந்தர் கோப்பி ஏற்றுமதி செய்யப்பட்டது. கோப்பிக்கு அந்நேரத்திலிருந்த மானத்தினுல் மக்கென்சித் தேசாதிபதியும் (1837-1841) மேலுத்தியோகத்தர்கள், இராணுவ அதிகாரிகள், நீதிவான்கள், சிவில் சேவிஸ் உத்தியோகத்தர்கள் ஆகிய பலரும் கோப்பிச் செய்கையில்ஈடுபட்டனர். இந்தியாவிலும்,இங்கிலாந்திலுமிருந்து வந்த பல தனவந்தர்கள் கோப்பிச் செய்கையில் ஊக்கங்காட்டினர். பெரும் ஆதாயத்தைப் பெறுவதற்கு ஆவல்காட்டினரே யன்றி செய்கை பண்ணும் நிலத்தைப்பற்றி அல்லது செய்கைபண்ணும் முறைகளைப்பற்றிக் கவனம் எடுக்கவில்லை. கூலியாட்கள் கிடைக்காமையால் செலவுமதிகரித்தது. தீர்வையில்லாத வர்த்தக முறையை பிரித்தானிய அரசாங்கம் அனுஷ்டித்தமையால் பிறேசில், யாவா முதலிய இடங்களிலிருந்து மலிந்த விலைக்குக் கோப்பி அனுப்பப் பட்டது. 1846-ல் பிரித்தானியாவிலேற்பட்ட பணக் கஷ்டத்தினுல் இலங்கையிலுள்ள கோப்பித் தோட்ட முதலாளிகள் அங்கிருந்து கடன் எடுக்க முடியாமற்போனது. அதனுல் மூன்று வருடகாலமாக கோப்பிச் செய்கையில் மந்தம் ஏற்பட்டது.

1853-ன் பின் மறுபடியும் கோப்பிச் செய்கை விருத்தியடைந்தது. அடுத்த முப்பதாண்டுகளாக கண்டிப்பகுதி முழுவதும் கோப்பிச் செய்கை அதிகரித்ததுமல்லாமல் குருநாக்கல், நாவலப்பிட்டி, கம்பளை, நுவரெலியா, மாத்தளை, அப்புத்தளை, சப்பிரகாமுவாப் பகுதி ஆகிய இடங்களெல்லாம் கோப்பித் தோட்டங்கள் காணப் பட்டன. 1855 - ல் 500,000 அந்தர் ஏற்றுமதிசெய்யப்பட்ட கோப்பி 1870-ல் 1,000,000 அந்தராக அதிகரித்தது. 1847-ல் 60,000 ஏக்கர் நிலத்திற் கோப்பி செய்கைபண்ணப்பட்டது. ஆனுல் 1878-ல் 275,000 ஏக்கர் நிலத்திற் கோப்பித் தோட்டங்கள் காணப்பட்டன. 1870 வரையில் கோப்பிப்பயிர் ஒருவகை நோயினுல் அழியத் தொடங்கியது. பத்து வருடங்களுக்குள் அந்நோய் எங்கும் பரவிப் பெரும் நஷ்டத்தை உண்டாக்கியது. அதனுல் ஏற்றுமதி மிகவும் குறைந்தது. 1890-ல் 75,000 அந்தர் கோப்பி ஏற்றுமதி செய்யப் பட்டது. 400 ஐரோப்பிய தோட்ட அதிகாரிகள் இலங்கையிலிருந்து வெளியேறினர்.

கோப்பிச் செய்கை குன்றியவுடன் **சிங்கோனு** செய்கை பண்ணப்பட்டது. மலேரியாக் காய்ச்சலுக்குக் கொடுக்கப்படும் "குயி

னின்" என்ற மருந்து இச்செடியின் பட்டையிலிருந்தே எடுக்கப் படுகிறது. 1872-ல் 500 ஏக்கர் நிலத்தில் சிங்கோனுப் பயிரிடப் பட்டது. இங்கிலாந்திற்கு இலங்கையிலிருந்து அனுப்பப்பட்ட சிங் கோனுவுக்கு அதிக மானமுண்டானது. கோப்பிச் செய்கையில் அதிக நட்டமேற்பட்டதினுல் அநேகர் சிங்கோனுவை செய்கை பண்ண ஆரம்பித்தனர். 60,000 ஏக்கர் நிலத்தில் அது செய்கை பண்ணப் பட்டது. யாவாவிலும் சிங்கோனு விளைவிக்கப்பட்ட படியாலும் தேவைக்கு மிஞ்சிச் செய்கைபண்ணப்பட்டபடியாலும் சிங்கோனுவின் விலை குறையத் தொடங்கியது.

சிங்கோனுச் செய்கை பயனளிக்காமையால் தேயிலைச் செய் கையிலிடுபட்டனர். கோப்பி, செய்கை பண்ணப்பட்ட உயர் நிலங் களிற் தேயிலைத் தோட்டங்கள் தோன்றின. தேயிலைக்கேற்ற சுவாத்தியமாகையால் மலை நாட்டுப் பகுதியில் தேயிலை செழிப் பாக உண்டானது. 1883-ல் 35,000 ஏக்கர் நிலத்தில் பயிரிடப்பட்ட தேயிலைச் செடி அடுத்த ஆண்டில் இருமடங்கான நிலப்பரப்பில் பயிரிடப்பட்டது. தேயிலைச் செய்கை மேலும் மேலும் அதிகரிக்கத் தொடங்கியது. 1889, 1911, 1929, ஆகிய வருடங்களில் முறையே 35,000,000, 186,000,000, 250,000,000 இருத்தல் தேயிலை இலங்கையிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டது. 1839-ல் தான் தேயிலை முதன் முதல் இலங்கைக்குக் கொண்டுவரப்பட்டது. தேயிலைத் தோட்ட முதலாளிமார், துறைமுகங்களுக்கு அனுப்பும் வசதிகள் காணப்பட்டமையாலும், தெருக்கள், புகையிரத வீதிகளிருந்தமை யாலும் குறைந்த விலைக்குத் தேயிலையை அனுப்பக்கூடியதாக விருந்தது. தேயிலைத் தோட்டத்தில் வேலை செய்யும் கூலியாட் கள் தென்னிந்தியாவிலிருந்து கொண்டுவரப்பட்டனர். தொழிலாள ருக்கு, வசிக்குமிடங்களும், இலவச வைத்திய சிகிச்சைபெறும் வசதியும் அளிக்கப்பட்டன.

இருபதாம் நூற்றுண்டு ஆரம்பகாலந் தொட்டு றப்பர் உண் டாக்கப்பட்டது. 1876-ல் தாவர ஆராய்ச்சிப் பகுதியார், சில றப் பர் மரங்களைக் கொண்டுவந்து பேராதனையில் உண்டுபண்ணினர். தேயிலைச் செய்கையினுலதிக லாபங் கிடைத்தபடியால் ஒரு சிலரே றப்பர்ச் செய்கையிலிடுபட்டனர். 1900 வரையில் 2000 ஏக்கர் நிலத்தில் மாத்திரம் றப்பர்த் தோட்டங்கள் காணப்பட்டன. தொடக்கத்தில் மூன்று வகையான றப்பர் மரங்கள் உண்டாக்கப் பட்டன. அவை பிறேசிலிலுண்டாக்கப்பட்ட மரங்கள், பனமாவிற் காணப்பட்ட மரங்கள் அமேசன் பள்ளத்தாக்கிலுள்ள "பாரு" றப்

பர் என்பவையாம். மூன்ருவது வகையே இலங்கைச் சுவாத்தியத்திற்கு ஏற்றதாகக் காணப்பட்டது. மோட்டோர் வண்டிகள், மின்சாரம் ஆகிய கைத்தொழில்களுக்கும் றப்பர் தேவைப்பட்டமையால் றப்பர் விலை அதிகரித்தது. 1910-ல் இலங்கையிலிருந்து 20,000,000 ரூபா பெறுமதியான றப்பர் ஏற்றுமதி செய்யப்பட்டது.

வர்த்தகப் பொருள்களுள் தேங்காயும் ஒன்ருகும். கோப்பி, தேயிலை, றப்பர்த் தோட்டங்கள் ஐரோப்பியர், இந்தியர், ஆகிய பிற நாட்டவர்களாற் திறக்கப்பட்டன. ஆனுற் தென்னை இலங்கையிலுள்ளவர்களாலேயே பயிரிடப்பட்டன. அதிற் பெற்ற பயன்கள் பலவாகையால், அது நாட்டின் செல்வத்தைப் பெருக்குவதில் ஒரு பிரதானமான வர்த்தகப் பொருளாகும். அது இலங்கையின் மேற்கு, தெற்குக் கரையோரப்பகுதிகளிலே அதிக செழிப்பாக வளர்கிறது. பின்பு அது மட்டக்களப்பு, யாழ்ப்பாணப் பகுதிகளிலும் உண்டாக்கப்பட்டது. புத்தளம், சிலாபம் ஆகிய பகுதிகளில் தென்னைத் தோட்டங்கள் தோன்றின. 1870ல் இலங்கையின் ஏற்றுமதிப் பொருள்களில் நான்கு வீதம் மாத்திரம் அனுப்பப்பட்ட தென்னையின் பிரயோசனம் 1920 - ல் இருபத்தேழு வீதமாக அதிகரித்தது.

கோப்பிச் செய்கையை விருத்தி செய்வதிற் கவனஞ் செலுத்தினதல்லாது பிரித்தானியர் ஆரம்பத்தில் நெற் செய்கையில் அதிகம் சிரத்தை எடுக்கவில்லை. அழிந்துபோன குளங்களையுந் திருத்தவில்லை. வரட்சிப் பிரதேசத்தில் வறுமையினுலும் நோயினுலும் மக்கள் வருந்தியதைக் கண்ணுற்ற பிரித்தானியர் நெற் செய்கையை ஊக்கப்படுத்த ஆரம்பித்தனர். பின்பு அழிந்து கிடந்த பல குளங்களைத் திருத்தி விவசாயத்தை விருத்தி செய்தனர்.

இனி விவசாய விருத்தியின் பயனுக ஏற்பட்ட விளைவுகளைப் பற்றி ஆராய்வோம். தோட்டங்கள் திறக்கப்பட்டு வர்த்தகப் பொருள்கள் செய்கைபண்ணப்பட்டதனுல் உண்டான பிரதான பலன், போக்கு வரவு வசதிகள் அதிகரித்தமையாகும். பிரித்தானியர் ஆட்சிபுரிவதற்கு முன்பாகக் கிராம வாசிகள் தங்களுக்குத் தேவையான உணவுப் பொருள்களை உண்டுபண்ணினர். அக்காலத்தில் வீதிகள் தேவைப்படவில்லை. வர்த்தகப் பொருள்கள் செய்கை பண்ணப்பட்ட பின், பிறநாடுகளுக்கு அனுப்புவதற்காக அவைகள் கொழும்புக்கு அனுப்பப்பட்டன. ஆகையால் வீதிகளும், போக்கு வரவு வசதிகளும் இன்றியமையாதனவாகக் காணப்பட்டன. தோட்ட முதலாளிகள் நன் நிலையிலுள்ள வீதிகள் வேண்டு

மென்றும் புதிய வீதிகளமைக்கப்பட வேண்டுமென்றும் அரசாங்கத்தைக் கேட்டுக்கொண்டனர். அரசாங்கமும் இசைந்து மேல் மாகாணம், சப்பிரகாமுவாமாகாணங்களிலே புதிய வீதிகளை அமைத்தது. கல்லுப்பரவிக் கொழும்பு - கண்டி வீதி திருத்தியமைக்கப்பட்டது. அதனால் வண்டிகள் விரைவாகச் செல்லக்கூடியதாகவிருந்தது. 1847-ல் கோப்பிச் செய்கையில் மந்தமேற்பட்ட பொழுது அரசாங்கத்தின் வருமானங் குறைந்ததினால் வீதிகளமைக்கும் வேலை தடைப்பட்டிருந்தாலும் அடுத்த ஆண்டில் உண்டாக்கப்பட்ட ரோட்டுச் சட்டத்தின்படி ஒவ்வொரு ஆணும் 6 நாள் வேலை, வீதிகளைத் திருத்துவதற்காகச் செய்யவேண்டி இருந்தது. அல்லது ஒவ்வொருவரும் ரூ. 1-50 சதம் வரி கொடுக்க வேண்டும். **அண்டேசன்** தேசாதிபதி கம்பளை, எட்டியாந்தோட்டையை இணைத்து கொழும்புக்கும் கண்டிக்குமிடையில் இன்னொரு வீதியை அமைத்தார். மத்தியமாகாணத்தில் இன்னும் பல வீதிகள் அமைக்கப்பட்டன. **உவாட், ரொபின்சன்** ஆகிய தேசாதிபதிகள் தொடர்ந்து வீதிகளமைக்கும் வேலையிலீடுபட்டனர். **கிறிக்கறி**த்தேசாதிபதி யாழ்ப்பாணம், மாங்குளம் - முல்லைத்தீவு, புத்தளம் - அனுராதபுரம் வீதிகளைத் திறந்தார். இன்னும் பல புதியவீதிகள் வடமத்திய, வடமேல், வடமாகாணங்களில் திறக்கப்பட்டன.

1853 - ன் பின் கோப்பிச்செய்கை மீண்டும் விருத்தியடையத் தொடங்கப் புகையிரத வீதிகள் அமைப்பதற்கு ஆலோசனை செய்யப்பட்டது. கோப்பி ஏற்றுமதியும் அதிகரித்துக்கொண்டு போனமையால் தேவைக்குத் தக்கபடி விரைவில் வண்டிகள் மூலம் அனுப்புவது கஷ்டமாயிருந்தது. **பிறேசிலில்** விளைவிக்கப்பட்ட கோப்பி ஐரோப்பிய நாடுகளுக்கு அனுப்பப்பட்டபடியால் வியாபாரத்திற் போட்டி ஏற்பட்டது. ஆகையால் கோப்பித் தோட்டங்களிலிருந்து விரைவாகக் கொழும்புக்கு அனுப்பவேண்டிய வசதிகள் தேவைப்பட்டன. ஆகையால் தோட்ட முதலாளிகளின் தூண்டுதலினால் புகையிரத வீதிகளைத் திறக்க அரசாங்கம் ஆலோசித்தது. கொழும்பிலிருந்து கண்டிக்கு ஒரு வீதியைத் திறக்கும் நோக்கத்துடன் 1858-ல் வேலை ஆரம்பிக்கப்பட்டது. ஒரு பிரித்தானிய கொம்பனியிடம் ஒப்படைக்கப்பட்ட அவ்வேலை இருமடங்கான செலவையுண்டுபண்ணுமென அறிந்து 1861-ல், அரசாங்கம் வேலையை நிறுத்திவிட்டது. பின்பு ஆரம்பித்த வேலை 1867-ல் முடிவடைந்தது. அது பொல்காவலை, றம்புக்கணை ஆகிய இடங்களுக்கூடாகவும்

பல சுரங்கங்களுக் கூடாகவும் சென்றதுமல்லாமல் பல செங்குத்தான மலைகளின் மீதும் பாதைவகுக்கப்பட்டு கண்டியைக் கிட்டியது. அந்தப் புகையிரத வீதி காத்திருந்ததிலும் பார்க்கக் கூடிய பலனை அழித்தது. குறைந்த செலவோடும் ஒழுங்காகவும் கோப்பி உணவுப் பொருள்கள், பயணி முதலியன அனுப்பக்கூடிய வசதி ஏற்பட்டது. 1873-ல் கம்பளைக்கும், அடுத்த ஆண்டில் நாவலப்பிட்டியாவுக்கும் புகையிரத வீதி திறக்கப்பட்டது. நனுஓயா, அப்புத்தளை, பண்டாரவளை, வதுளை ஆகிய இடங்களும் புகையிரதவீதியாலிணைக்கப்பட்டன. இவ்விதமாக தோட்டங்களுள்ள இடம் யாவும் இவ்வசதியைப் பெற்றன. கரையோரப் பாதையொன்று பிரயாணிகள் செல்வதற்குக் கொழும்பிலிருந்து மாத்தறை வரையும் திறக்கப்பட்டது (1895). றிச்சுவே தேசாதிபதியினுடைய காலத்தில் கொழும்புக்கும் காங்கேசன்துறைக்குமிடையில் புகையிரதவீதி அமைக்கப்பட்டது. மாகோவிலிருந்து மட்டக்களப்புக்கும், திருகோணமலைக்கும், மதவாச்சியிலிருந்து தலைமன்னாருக்கும் பாதைகள் திறக்கப்பட்டன. இவ்விதமாக 960 மைல் நீளமுள்ள புகையிரத வீதிகள் இலங்கை முழுவதிலும் காணப்படுகின்றன. 1858 - ன் பின் இலங்கையிலுள்ள பிரதான இடங்களுக்குத் தந்தி, பேசும்தந்திமூலம் தொடர்பு உண்டாக்கப்பட்டது. **மக்கலம்** காலத்தில் பிரதான நகரங்களும், கந்தோர்களும் அவ்விதம் இணைக்கப்பட்டன.

வர்த்தகப் பொருள்கள் விருத்தியடைந்ததன் பயனாகக் கொழும்புத் துறைமுகம் திருத்திக் கட்டப்பட்டது. இலங்கைக்குப் போர்த்துக்கீசர் வருவதற்கு முன்னரும் கொழும்புத் துறைமுகமே இலங்கையின் விளைபொருள்கள் அனுப்பப்படும் பிரதான துறைமுகமாக விளங்கி வந்தது. பின்பு கறுவாவும், 1837 - ன் பின் கோப்பியும் அத்துறைமுகத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டன. ஆனால் கொழும்புத் துறைமுகத்திற்கு, தண்ணீர் ஆழமில்லாதபடியால் பெருங் கப்பல்கள் வரமுடியாமலிருந்தது. ஆகையால் கப்பல்கள் ஒருமைல் தூரத்துக்கப்பாலிருந்து வடகிழக்குப் பருவக்காற்று வீசுங் காலத்திற்றான் துறைமுகத்திற்கு வரக்கூடியதாகவிருந்தது. சூயஸ் கால்வாய் வெட்டப்பட்டபின் (1869), கப்பல்கள் அப்பாதையால் வந்து காலித்துறைமுகத்தை அடைந்தன. ஆனால் அத்துறைமுகத்தில் அதிக கற்பாறைகள் காணப்பட்டமையால் கப்பல்களுக்கு அபாயமேற்பட்டது. அதைவிடப் பல கப்பல்கள் தங்குவதற்கும் வசதியாகக் காணப்படவில்லை. அதைத் திருத்துவதற்கு பெரும் பணத்தொகை வேண்டியமையால் கொழும்புத் துறைமுகத்தையே

திருத்துவதற்குத் தீர்மானஞ் செய்யப்பட்டது. பின்பு தென்மேற்குப் பருவக்காற்றினின்று பாதுகாப்பதற்காக ஒரு நீரிணையை கொழும்புத் துறைமுகத்திற் கட்டுவதற்கு 1871-ல் ஆயத்தஞ் செய்யப்பட்டது. அதனுடைய அத்திவாரக்கல்லை ஏழாம் எட்வேட் இளவரசர் நாட்டினுர் (1875). அதை முடிப்பதற்குப் பத்துவருட காலம் எடுத்தது. 660 ஏக்கர் பரப்பை, அந்த நீரிணை அடக்கி இருக்கிறது. பின்னர் கொழும்புத் துறைமுகத்தின் வர்த்தகம், வருமானம், தீர்வைப்பணம் படிப்படியாக அதிகரிக்கத் தொடங்கியது. 1883-ல் துறைமுகத்திலிருந்து கிடைத்த வருமானம் 3 இலட்சம் ரூபாவாகும். அத்துறைமுகம் லண்டனிலிருந்து சீனு, யப்பான், அவுஸ்திரேலியாவுக்குப் போகும் கப்பல்களுக்கு மத்தியதானத்தைப் பெற்றிருக்கிறபடியால் சாமான்கள் ஏற்றிச் செல்லும் கப்பல்களும், பிரயாணிகளைக் கொண்டுசெல்லுங் கப்பல்களும் அங்கு தங்கிச் செல்வது வழக்கம்.

வர்த்தகப் பொருள்களின் பெருக்கத்திஞல் பொருளாதாரத் துறையிலும் அநேக மாற்றங்கள் காணப்பட்டன. பிரதானமாக வர்த்தக விருத்தி காணப்பட்டது. பிரித்தானியர் இலங்கைக்கு வந்தகாலத்தில் இலங்கையின் உள்நாட்டு வர்த்தகம் மிகக் குறைவாக இருந்தது. ஆனுல் வீதிகள் அமைக்கப்பட்ட பின் வர்த்தகம் சிறியளவுக்குக் கூடியது. இராசகாரியாவும் வர்த்தக ஏகபோக உரிமையும் நீக்கப்பட்டபின் சனங்கள் சொந்தமான முறையில் விவசாயம் வர்த்தகம் செய்ய ஆரம்பித்தனர். தோட்டங்களிலுண்டாக்கப்பட்ட வர்த்தகப் பொருள்கள் பிறநாடுகளுக்கனுப்பப் பட்டதேயல்லாது, உணவுக்கு வேண்டிய பொருள்கள், இந்நாட்டில் கிடைத்தவைகளை விட, எஞ்சியவை அந்நிய நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டன. அதனுல் உள்நாட்டு வர்த்தகமும் பிறநாட்டு வர்த்தகமும் முன்னேற்றமடைந்தன. 1840-ல் பிறநாட்டு வர்த்தகத்திலுலே பெற்ற பணம் ரூபா 10,000,000 ஆகும். 1877-ல் அது 100,000,000 ரூபாவாக அதிகரித்தது. பிரித்தானியர் வருவதற்கு முன்பு பணம் அதிகமாக ஒருவரிடமுமில்லை. செல்வமென்று சொல்லக் கூடியது அரசனுற் கொடுக்கப்பட்ட நிலங்களாகும். ஆனுல் தோட்டங்கள் திறக்கப்பட்ட பின் மக்கள் தோட்டங்களில் விரும்பினுல் வேலை செய்யலாம், விரும்பாவிடில் செய்யாமல் விடலாம். அவ்விதமான சுதந்திரம் முன்பு அவர்களுக்குக் கிடையாது. அதுவுமல்லாது செய்த வேலைக்கு இப்பொழுது சம்பளத்தைப் பெற்றனர். தோட்ட முதலாளிகளுக்கும் பெருந்தொகையான பணம் தேவைப்பட்டது. ஆகையால் அவர்கள் வங்கிகளிலே கடன் எடுத்

தனர். லண்டனிலுள்ள வர்த்தகனொருவனே முதன் முதலாக இலங்கையில் ஒரு வங்கியை நிறுவினுன் (1841). தோட்டங்களை நடத்துவதற்கு அது பயன்பட்டமையால் அதற்கு அரசாங்கமும் ஊக்கமளித்தது. 1843-ல் அதனுடைய கிளைத்தாபனமொன்று கண்டியில் நிறுவப்பட்டது. கடதாசி நாணயங்களை அச்சடித்துவிடும் உரிமையையும் அதற்கு அளிக்கப்பட்டது. வங்கிகள் தாபிக்கப்பட்டமையால் தோட்டங்கள் அதிகரித்ததுமல்லாமல் வர்த்தக விருத்தியும் ஏற்பட்டது.

தோட்டங்கள் தாபிக்கப்பட்டமையால் பிறநாட்டிலிருந்து தொழிலாளரைக் கொண்டுவர வேண்டியதாயிற்று. இந்நாட்டு மக்கள் தங்களுடைய சாதிக்கொவ்வாத வேலையைச் செய்யமாட்டார்கள். இனிச் சம்பளத்திற்கு வேலை செய்வதும் கௌரவக் குறைவென்றும் எண்ணினர். அங்கிலேயில் தோட்டங்களிலே வேலை செய்வதற்குத் தொழிலாளர் கிடையாமையால் தென்னிந்தியாவிலிருந்து கொண்டுவரவேண்டி இருந்தது. அங்கிருந்து தொழிலாளர் வருவதற்கு இராமேஸ்வரத்திற்கும் மன்னுருக்குமிடையில் கப்பல்கள் ஓடுவதற்கு வேண்டிய வசதிகளை உவாட் தேசாதிபதி செய்தார். மன்னுருக்கும் மதவாச்சிக்குமிடையில் தெருக்களும், புகையிரத வீதியும் திறக்கப்பட்டமையால் தொழிலாளர் போக்கு வரவு செய்யத்தக்கதாக இருந்தது. தொழிலாளரை அன்பாக நடத்தும்படி அரசாங்கம் முதலாளிமாரை வற்புறுத்தியது. தொழிலாளர் வரிகளினின்றும் நீக்கப்பட்டனர். பிரயாணச் செலவையும் அரசாங்கம் குறைத்துவிட்டது.

தோட்டங்கள் விருத்தியடைந்ததன் பயனுக பல நகரங்கள் தோன்றின. அதன் பயனுக ஏற்பட்ட வர்த்தக முன்னேற்றமும் நகரங்கள் தோன்றுவதற்கு உதவியாயிருந்தன. இக்காரணங்களாலேயே கொழும்பு, காலி, கண்டி பிரதான நகரங்களாயமைந்தன. தோட்டங்களுக்கண்மையிலும் சிறு நகரங்கள் தோன்றின. புதிதாகத் தோன்றிய நகரங்களால் பலபிரச்சனைகள் தோன்றின. நெருக்கமாக விடுகள் கட்டப்பட்டமையாலும், தண்ணீர் வசதிக் குறைவு ஏற்பட்டமையாலும், தொற்றுநோய்கள் பரவியமையாலும் அரசாங்கம் வேண்டிய வழிவகைகளைத் தேடவேண்டியிருந்தது. இப்பிரச்சனைகளைத் தீர்த்துவைப்பதற்காக அரசாங்கம் கண்டி, கொழும்பு, காலி ஆகிய பெரும் நகரங்களில் மாநகரசபைகளைத் தாபித்துவிட்டது (1866). அரசாங்கம் மற்றும் சில நகரங்களில், சுகாதார சபை, மாநகரசபை ஆகியவைகளையுந் தாபித்தது.

விவசாய அபிவிருத்தி, நிர்வாக முறையிற் திருத்தங்கள் காணப் படுவதற்குக் காரணமாயிருந்தது. ''சிவில் சேவிஸ்'' என்ற உயர் தர உத்தியோக சேவை திறமையாயிருந்தாற்றான் நல்ல அரசாங் கமும் நடைபெறும். நாட்டிலுண்டாக்கப்பட்ட வர்த்தகப் பொருள் களிலிருந்து கூடிய வருமானம் கிடைத்தமையினால் சிவில் சேவிஸ் சேவை திருத்தி அமைக்கப்பட்டது. 1845-ல் அவ்வுத்தியோகத்தர்க ளுக்கு சம்பளங் கூட்டப்பட்டதோடு 55 வயது வரையும் சேவை புரிந்து இளைப்பாறுபவர்களுக்கு உபகாரச் சம்பளமும் கொடுக்க ஒழுங்கு செய்யப்பட்டது. அச்சேவையிற் சேர்வோர் சிங்களம், தமிழ் ஆகிய இரு மொழிகளையும் கற்ற பின்னரே நிரந்தரமான பத விக்கு உரித்தாளராவர். கோப்பிச் செய்கையிலிடுபட்ட அவ்வுத்தி யோகத்தர் அதிற் சிரத்தை காட்டாது தங்களுடைய முழு நேரத்தை யும் கடமை செய்வதற்கே செலவழிக்க வேண்டுமென்று கற்பிக் கப்பட்டனர். அரசாங்க வேலைகள் செய்யப்படுவதற்காக ஒவ் வொன்றுக்கு ஒவ்வொரு இலாகா நிறுவப்பட்டது. வீதிகளமைப்ப தற்குப் பகிரங்க வேலைப்பகுதியொன்றும், தொழிலாளருக்கும், ஏனைய நோயாளிகளுக்கும் வைத்திய சிகிச்சை செய்வதற்காக வைத்தியப் பகுதி ஒன்றும், விவசாயத்தை விருத்தி செய்வதற்காக ஒரு விவசாயப் பகுதியையும், புகையிரத வீதிகளை அமைப்பதற் காக ஒரு இலாகாவும் தாபிக்கப்பட்டன. நாட்டின் அபிவிருத்திக் காக முன்னிருந்த ஐந்து மாகாணங்களும் ஒன்பதாக்கப்பட்டன. செலவைக் குறைப்பதற்காகவே கோல்புறூக் இலங்கையை ஐந்து மாகாணங்களாகப் பிரித்தார். ஆனால் நிர்வாகத்தைத் திறமையாக நடத்துவதற்காக இலங்கை இப்பொழுது 9 மாகாணங்களாகப் பிரிக் கப்பட்டது.

கோல்புறூக்கின் அறிக்கையின் பிரகாரம் நீதி பரிபாலனப் பகுதி யும் நிர்வாகப்பகுதியும் வெவ்வேறாகத் தாபிக்கப்பட்டன. ஆனால் சில பகுதிகளில் இரு கடமைகளையும் ஒரே உத்தியோகத்தர்களே பார்த்து வந்தனர். வருமானம் அறவிடும் கடமையும் நீதி வழங்கும் கடமையும் ஆகிய இரண்டும் வெவ்வேறு உத்தியோகத்தர்களுக்கு தோட்டப்பகுதிகளிலே 1860-ல் கொடுக்கப்பட்டன. உவாட் தேசாதி பதியே 1856-ல் சிறு வழக்குகளை விசாரணை செய்யும் அதிகாரத்தைக் கிராமச் சங்கங்களுக்குக் கொடுத்தார். குற்றங்களைப்பற்றி விசாரணை செய்யும் அதிகாரமும் அவைகளுக்கு றொபின்சன் தேசாதிபதியாற் கொடுக்கப்பட்டது (1871).

வருமானத்தைக் கூட்டும் நோக்கத்தோடேயே அரசாங்கம் வர்த்தகப் பொருள்களின் விருத்திக்கு ஊக்கமளித்தது. ஆனால்

முதலாளிமார் வர்த்தகர்களுடைய கோரிக்கைகளுக்கும் அரசாங்கம் வசதியளிக்க வேண்டியிருந்தது. இருபகுதியினருடைய பிரதிநிதிகளும் தோட்டங்களின் நன்மைக்காகப் போக்கு வரவு வசதிகளை யுண்டுபண்ண வேண்டுமென்ற கோரிக்கைகளை விடுத்தபொழுது, அரசாங்கம் மறுப்புக் காட்ட, அவர்கள் சட்டநிரூபண சபையின் சீர்திருத்தங்களுக்கு வாதாடினர்.

அரசாங்கத்தின் நடவடிக்கைகள் சில புதினப்பத்திரிகைகள் மூலம் முதலாளிகளாலும் வர்த்தகர்களாலும் கண்டிக்கப்பட்டன. 1832-ல் தொடங்கிய அரசாங்க 'கசற்'' என்ற பத்திரிகையில் பொதுசனங்கள் தங்களுடைய அபிப்பிராயங்களைத் தெரிவித்தனர். பிரித்தானிய அரசாங்கம் பத்திரிகை நடத்துவதற்கு மறுப்புக் காட்டியது. பின்பு ஐரோப்பிய வர்த்தகர்கள் சேர்ந்து ''ஒவ்சேவர்'' என்ற பத்திரிகையை வெளியிடத் தொடங்கினர் (1834). அரசாங்கத்தின் நிர்வாகத்திற் காணப்பட்ட குறைகள் இப்பத்திரிகை மூலம் கண்டிக்கப்பட்டன.

இனி, பிரதானிகள், விவசாயிகளின் வரலாற்றைப்பற்றியும், மத்திய வகுப்பினரின் எழுச்சியைப் பற்றியும், அரசியற் சீர்திருத்தத்தைப்பற்றியும் ஆராய்வோம்.

**அலக்சாந்தர் ஸ்ரீவாட்** மக்கன்சி (1837-1841) கோட்டனின் பின் தேசாதிபதியாக நியமிக்கப்பட்டார். இவருடைய காலத்திலே பணக்கஷ்டமேற்பட்டது. முத்துக்குளிப்பினால் ஆதாயம் கிடைக்கவில்லை. கறுவா வியாபாரத்தின் ஏகபோக உரிமையினாற் பெற்ற லாபமும் அற்றுப்போனது. தோட்டங்களின் அபிவிருத்திக்காக வீதிகள் திறக்கப்பட்டதால் அதிக செலவு ஏற்பட்டது. வைத்தியசாலைகள், பாடசாலைகள் தாபிக்கப்பட்டமையால் அதிக பணஞ் செலவானது. ஆனால் **சேர் கொலின் கமெல்** (1841-1847) தேசாதிபதியாக வந்தபொழுது கோப்பிச் செய்கையினால் பெரும் ஆதாயங் கிடைத்து பணநிலை திருத்தமடைந்தது. இவருடைய காலத்திலேயே சிவில் சேவிஸ் சேவை திருத்தி அமைக்கப்பட்டது. அவ்வுயர்தர உத்தியோக சேவையிலுள்ளோர் வர்த்தகஞ் செய்யாது தடுக்கப்பட்டனர். அவர்கள் சுதேச பாஷை கற்க வேண்டுமென வற்புறுத்தப்பட்டது. பொலிஸ் கோடுகளையும் தாபித்தார். அடிமையை நீக்கி விட்டார். 1847-ல் **ரொறிங்டன்** தேசாதிபதியாக நியமிக்கப்பட்டார். பிரித்தானிய முதலாளிகள் பெருந்தொகையான பணத்தை, வர்த்தகப் பொருள்களை உண்டாக்குவதில் செலவழித்தால் நாட்டின் செல்வம் பெருகுமென்று அரசாங்கம்

காத்திருந்தது. நாட்டுமக்கள் பங்குபெற்றுக் கொள்ளாத அந்தச் செல்வம் நிலை நிற்கமாட்டாதென்பது வெளிப்படை. தேசாதிபதியும் அரசாங்க உத்தியோகத்தர்களும் காலி, கண்டி, கொழும்பு, நுவரெலியா முதலிய இடங்களைத் தெரிந்தனரேயன்றி ஏனைய இடங்களை அறிந்திலர். ஆகையால் கொழும்பிலும் அயற்பகுதியிலும் பாடசாலைகளை நிறுவி அவ்விடங்களிலே கல்வியைப் பரப்பினர். இவ்வாறு செய்யப்பட்ட மாற்றங்கள் யாவும் பெரும் ஸ்தானங்களை வகித்தோரைப் பயன்படுத்தியதேயல்லாது பொது மக்களுக்குப் பயனளிக்கவில்லை.

இலங்கை முழுதும் ஏற்படுத்தப்பட்ட ஒரே நிர்வாகமும், அரசியல், நீதிவழங்கும் முறைகளிற் சீர்திருத்தமும், வர்த்தகவிருத்தியும், வருமான ஏற்றமும் ஆகிய இவைகளொன்றும் விவசாயிகளுக்குப் பயனளிக்கவில்லை. அரசாங்கம், வர்த்தகர் விவசாயிகளின் தேவைகளைப்பற்றிக் கவனஞ்செலுத்தினதல்லாது, விவசாயிகளைப்பற்றிச் சிறிதேனும் சிரத்தை காட்டவில்லை. அவர்களுடைய குறைகளை எடுத்துக் கூற அவர்களுடைய பிரதிநிதிகளுமில்லை. பழைய காலத்திலும் பின்னும் விவசாயிகளுக்கு வேண்டிய நீர்ப்பாய்ச்சும் வசதிகளை அரசாங்கம் செய்து வந்தது. ஆனால் தற்போதுள்ள அரசாங்கம் தோட்டங்களை விருத்தி செய்வதிலும், முதலாளிகளுக்கு வேண்டிய வசதிகளை உண்டாக்குவதிலுமே ஊக்கங்காட்டியது. பழைய காலத்திலே பயிரிடப்பட்ட வரட்சிப் பகுதிகளிற் சிறிதேனும் கவனங் காட்டவில்லை. நோய், மழைக்குறைவு காரணமாக அனுரதபுரிப் பகுதியில் சனத்தொகை குறைந்ததுமல்லாது அங்குள்ள விவசாயிகளின் நிலை பரிதாபப்படக்கூடியதாக இருந்தது. ஊவாமாகாணத்திலும் நீர்ப்பாய்ச்சும் வசதிகள் பிரதானமாகக் கண்டிக் கலகத்தின் பின் குறைந்தமையினுல் விவசாயிகளுக்கு அதிக நஷ்டம் ஏற்பட்டது. கால்வாய்களும், குளங்களும் அழிந்துபோன நிலையிலிருந்தன. மழைக் குறைவு ஏற்பட்டதாலும் குளங்கள் அழிந்துபோன நிலைமையிலிருந்தமையினுலும் மக்கள் தொகை குறைந்து போயின. எஞ்சியிருந்த மக்களும் நோயுற்றவர்களாகவும், வறுமைப் பட்டவர்களாயுங் காணப்பட்டனர்.

1848-ல் கண்டி மக்களிடையே காணப்பட்ட அதிருப்திக்கு கோல்புறுக் சீர்திருத்தங்களே காரணமாகும். கோல்புறுக்கின் அபிப்பிராயப்படி கண்டி இராச்சியமும் இலங்கையின் ஏனைய பகுதிகளும் ஒரே அரசாங்கத்தின் கீழ்க் கொண்டுவரப்பட்டன. மேலும் தோட்டங்கள் திறக்கப்பட்டபின் அந்நியர்கள் மலைநாட்டிற்குட் புகுந்

தனர். ஐரோப்பிய தோட்ட முதலாளிமார்களும், இந்தியத் தொழிலாளர்களும், முஸ்லிம் வர்த்தகர்களும் தோட்டங்களிலே உத்தியோகங்களிலமர்ந்த தாழ்பூமிச் சிங்களவர்களும், இலங்கைத் தமிழர்களும் ஆகிய பலரும் அங்கு சென்றனர். தோட்டங்கள் தோன்றினமையால் விவசாயிகளின் சாதாரண வாழ்க்கைநிலை மாறுதலடைந்தது. அங்கு சென்ற அந்நியர்கள் புதிதாகத் திறக்கப்பட்ட தவறணைகளில் குடித்துச் சீர்கேடான முறையில் நடந்துகொண்டனர். களவு, கலகம், ஒழுங்கீனம் அதிகமாகக் காணப்பட்டன. சிவில்சேவிஸ் சேவையிற் சேர்ந்தோர்கள் திறமையற்றவர்களாயும், கடமையிற் கவனயீனமானவர்களாயும், சொந்தத் தோட்டங்களிலேயே கூடிய சிரத்தை எடுக்கிறவர்களாயுமிருந்தமையினால் விவசாயிகளின் நிலை திருத்தமடைவதற்கு வசதியேற்படவில்லை.

பழைய காலத்திலே விவசாயிகளுக்கு வேண்டிய நீர்ப்பாய்ச்சும் வசதி போன்ற பல வசதிகளையும் கிராமச்சங்கங்கள் மேற்பார்வை செய்து வந்தன. நாட்டு வழக்கங்களை மீறியவர்களையும், கடமையைச் செய்யத் தவறினவர்களையும் கிராமச்சங்கங்கள் தண்டித்தன. இப்பொழுது அவ்வித அதிகாரத்தை அவைகள் செலுத்த முடியாது. இராசகாரியா முறை நீக்கப்பட்டபின் விவசாயிகளின் ஒற்றுமையை அவர்கள் பெற முடியவில்லை. நீதிஸ்தலங்கள் தாபிக்கப்பட்டபின் அவைகளின் கட்டளையை மீறினவர்களைத் தண்டிக்க முடியாமற் போனது. விவசாயிகள் நீதிஸ்தலங்களுக்கு விவாதங்களைத் தீர்த்துக்கொள்வதற்குப் போனால் நாட்டுவழக்கங்களை நன்றாகத் தெரியாத நீதிவான்கள் சரியான தீர்ப்பைக் கொடுப்பதில்லை. தங்களுக்காகப் பேசுவதற்கு நியாயாதிபதிகளை ஏற்படுத்தவும் விவசாயிகளிடம் பணமில்லை. முற்காலத்திற் கிராமச்சங்கங்களினாலே தீர்க்கப்பட்ட விவாதங்கள் இப்பொழுது நீதிவான்கள் முன்னிலையிற் கொண்டுவரப்பட்டன. அவ்விவாதங்களினால் விவசாயிகளிடையே ஒற்றுமைக் குறைவு ஏற்பட்டது.

சட்டநிரூபண சபையில் விவசாயிகளினுடைய குறைகளை எடுத்துக் கூறுவதற்கு அவர்களுடைய பிரதிநிதிகளில்லை. தோட்டங்கள் திறக்கப்பட்டபின் அந்நியர்கள் அங்கு சென்று மலைநாட்டின் செல்வத்தை அனுபவித்தனர். விவசாயிகளின் தேவைகளைக் கவனித்து வந்த கிராமச்சங்கத்தின் அதிகாரங்களும் எடுக்கப்பட்டன. ஆகையால் விவசாயிகளின் பொருளாதார சமுதாய நிலைகள் குன்றின. இவ்விதமான நிலையை அரசாங்கம் அறிந்துகொள்ளவில்லை. விவசாயிகளின் நிலையைப்பற்றி அரசாங்கத்திற்கு அறிவிக்கக்கூடிய

வர்கள் கண்டிப் பிரதானிகளாகும். ஆனல் 1818-ன் பின் அவர்கள் அதிகாரங் குறைக்கப்பட்டதோடு அரசாங்கம் அவர்களை அலட்சியஞ் செய்தது.

அந்நேரத்தில் கோப்பி வியாபாரத்தில் மந்தம் ஏற்பட்டதனுல் வருமானங் குறைந்தது. ஆகையால் ரொறிங்டன் தேசாதிபதி பல புதிய வரிகளை விதிக்க ஆரம்பித்தார். அவைகள் துப்பாக்கி வரி, நாய்வரி, வீதிவரி, விருந்தைவரி, கடைவரி என்பனவாம். இவைகள் வறிய விவசாயிகளை அதிகம் தாக்கின. வீதிவரி பிரதானமாக மக்களிடையே சந்தேகத்தை உண்டுபண்ணினமையால் அவர்கள் இராசகாரியமுறை மீண்டும் கொண்டுவரப்பட்டதென்று எண்ணினர். இரண்டாவது அவ்வரி ஐரோப்பிய தோட்ட முதலாளிகளுக்கு உதவி செய்வதற்காகவே விதிக்கப்பட்டதென்றும் யோசித்தனர். காட்டுக்கூடாகச் செல்லும் ஒடுங்கிய பாதைகள் போதுமானவை. யாசித்துச் சீவிக்கும் புத்த குருமாரும் வரிகள் கொடுக்கவேண்டியிருந்தது. முத்திரை விகிதமும் கூட்டப்பட்டது. கடைகள், மாட்டுவண்டிகள் வைத்திருந்தோர் வருடம் ஒரு பவுண் கொடுக்கவேண்டியிருந்தது. துப்பாக்கி வைத்திருந்தோரும் நாய்களை வைத்திருந்தோரும் வருடம் குறித்த தொகையை வரிப்பணமாக இறுக்கவேண்டியிருந்தது. ஒவ்வொருவரும் வருடத்தில் ஆறு நாட்களுக்கு வீதிகளைத் திருத்தும் வேலை செய்யவேண்டுமென்றும் தவறினோர் வரியிறுக்க வேண்டுமென்றும் விதிக்கப்பட்டது. முத்திரைச் செலவு கூட்டப்பட்டதனுல் வழக்குகளிலீடுபட்டோருக்குக் கஷ்டமேற்பட்டது. கிராமங்களில் ஒவ்வொரு வீட்டிலும் நாய் ஒன்று வளர்க்கப்பட்டது. அதற்கு வரி கட்டுவதனுலும் கஷ்டமேற்பட்டது. விவசாயிகள் தங்களுடைய பயிரைப் பாதுகாப்பதற்காகத் துப்பாக்கிகளை வைத்திருக்கவேண்டியதவசியம். அதற்கு வரி கொடுக்கவேண்டியிருந்ததால் அதிக கோபங்கொண்டனர். மேலும் வரிகொடுப்பதற்கு அவர்களிடம் பணமும் இல்லை. அப்படிக் கொடுக்கக் கூடியவர்களும், பல நாட்களின் வேலையை இழந்து அவ்வரியைச் செலுத்துவதற்குக் கச்சேரிக்குப் போகவேண்டியிருந்தது. அவ்விவசாயிகள் கோபத்தினுல் நடந்துகொண்ட முறையைக் கண்டு அனுபவமற்ற சில ஐரோப்பிய உத்தியோகத்தர்கள் கலகத்திற்கு அறிகுறியென நினைத்தனர்.

1848-ம் ஆண்டு ஆடி மாதம் பெருந்தொகையான விவசாயிகள் கண்டியிலுள்ள மாகாண அதிகாரி முன் சென்று துப்பாக்கி வரிக்கெதிரே மறுப்புக்காட்டினர். அங்குள்ள தலைமைக்காரர்களுக்கு

வரிகளைப்பற்றி விளக்கிக் காட்டியவுடன் விவசாயிகள் வீடு சென்றனர். சில நாட்களின் பின் பெருந்திரளான சனங்கள் கொழும்புக்குச் சென்று தேசாதிபதிக்கு முறையிடப் போன பொழுது அவர்களைத் திரும்பிச் செல்லுமாறு கிறிஸ்தோபர் எலியட் கேட்டுக்கொள்ள அவர்கள் வீடு சென்றனர். தாழ்பூமியிலும், மலைநாடுகளிலும் இவ்வித சம்பவங்கள் நடைபெற்றன. மாத்தளையில் திரளான சனங்கள் சேர்ந்து சில வீடுகளைச் சூறையாடி, தாழ்பூமியிலுள்ள **புரங் அப்பு** என்ற ஒருவனைக் கண்டிக்கு அரசனுக்க முயற்சித்தனர். **கொங்கலக்கொடை பண்டா** என்னும் இன்னொரு சாலக்காரனும் **தம்புளை**யிற் தோற்றமளித்தபொழுது அவனையும் அரசனுக்க முயற்சித்தனர். ரொறிங்டன் தேசாதிபதி அதிசீற்றங்கொண்டு போர்ப்படையையுந் திரட்டி, இந்தியாவிலிருந்தும் உதவி பெற்றுக் கண்டி, மாத்தளை, குருநாக்கல், தம்புளை ஆகிய இடங்களிலே இராணுவச் சட்டத்தை உண்டாக்கினுன். கண்டியிலிருந்து மாத்தளைக்குச் சென்ற பிரித்தானியத் துருப்புக்கள் வழியிற் சந்தித்த கலகக்காரரில் 40 பேரைச் சுட்டுக்கொன்றனர். பின்பு இராணுவப் படைகள் மாத்தளையைக் கைப்பற்றி கலகக்காரரைக் கைது செய்து அநேகரைச் சுட்டுக் கொன்றனர். இக்கலகத்தில் ஒரு ஐரோப்பியனுதல் கொல்லப்படவில்லை. ஆனுல் ரொறிங்டன் தேசாதிபதி துர்ப்புத்தியாளரின் யோசனைப்படி இராணுவச் சட்டத்தை நீடிய காலத்திற்கு வற்புறுத்தியதுமல்லாது 200 கலகக்காரரைக் கொன்றும் பலரைச் சிறைச்சாலையிலுமிட்டான். அநேகருக்கெதிரே இராசதுரோகக் குற்றச்சாட்டுக் கொண்டுவரப்பட்டு பதினேழு பேர் வரையில் குற்றவாளிகளாகக் காணப்பட்டனர். புரங் அப்புவும், கொங்கலக்கொடை பண்டாவும் சுட்டுக் கொல்லப்பட்டனர். கலகக்காரனில் ஒருவனைப்பற்றிச் செய்திகொடுக்கத் தவறினதற்கு ஒரு புத்தகுரு இராணுவக்கோட்டின் தீர்ப்பின் விளைவாகச் சுட்டுக் கொல்லப்பட்டான். பிரதான நீதிபதி முதலாகப் பலர் தேசாதிபதியின் செய்கையைக் கண்டித்தனர். இவ்வித தீவிரச் செய்கைகள் இங்கிலாந்துக்கு எட்டியவுடன் பாராளுமன்றம் ஒரு விசாரணைக் குழுவை நியமித்தது. ரொறிங்டனை திருப்பி அழைப்பதாகத் தீர்மானஞ் செய்யப்பட்டது. தன்னுடைய அந்தரங்கக் கடிதங்கள் விசாரணைக் குழுவினருக்குச் சமர்ப்பிக்கப்பட்டதெனக் கேள்வியுற்ற தேசாதிபதி தன்னுடைய பதவியினின்று நீங்கினுர்.

இலங்கைச் சரித்திரத்தில் தற்கால ஆரம்பம் 1832-ல் தொடங்கினதெனலாம். கோல்புறுக் சீர்திருத்தங்களின் பின்னர் இலங்கை

ஒரே மத்திய அரசாங்கத்தைப் பெற்றது. வர்த்தகப் பொருள்களில் விருத்தி ஏற்பட்டதனுல், விவசாய நாடு, வர்த்தக நாடாக மாறியது. நிலமானியமுறை அற்றதோடு, பிரதானிகளின் அதிகாரமும் குறைக்கப்பட மத்திய வகுப்பினரின் எழுச்சி காணப்பட்டது. ஆங்கிலக் கல்வி பரவியதோடு அரசியல் தாபனங்களும் தோன்றி பாராளுமன்ற ஜனநாயகத்தைப் பெறுவதற்கு அடிகோலிவைத்தன வென்று சொல்லலாம்.

விவசாயிகளுடைய பரிதாபமான நிலையைப்பற்றி அறிந்த விசாரணைக் குழுவினர் அவர்களுக்கு வேண்டிய திருத்தங்களைச் செய்ய வேண்டுமென அரசாங்கத்தாரிடம் வற்புறுத்திக் கூறினர். **1845**-ன் பின் நீர்ப்பாய்ச்சும் வசதிகளையும் உண்டாக்கி, கிராமச் சங்கங்களை முன்னிருந்த நிலைக்குக் கொண்டுவந்தும், பாடசாலைகளை நிறுவியும் இன்னும் கிராமவாசிகளுக்கு வேண்டிய உதவியைப் புரிந்தும் அரசாங்கம் விவசாயிகளின் நிலையைத் திருத்துவதற்கு முயற்சிகள் செய்தது. உவாட் தேசாதிபதி கீழ்மாகாணத்திலும் தென்மாகாணத்திலும் நீர்ப்பாய்ச்சும் வசதிகளை யுண்டாக்கியபடியால் விவசாயிகள் நெல் விளைவிக்க ஆரம்பித்தனர். வதுளை, கண்டி, மாத்தளைப் பகுதிகளிலுள்ள குளங்களை அங்குள்ள மக்கள் திருத்திப் பயிரிட்டனர். **கிறிக்கறி, கோடன்** தேசாதிபதிகள் காலத்தில் அனுரதபுரப் பகுதி, ஊவா, சப்பிரகாமுவாப் பகுதிகளிலுள்ள விவசாயிகள் உதவிகளைப் பெற்றனர். வரட்சிப் பகுதியிலும் அவ்வண்ணமே நீர்ப்பாய்ச்சும் வசதிகள் உண்டாக்கப்பட்டன. கிராமச்சங்கங்கள் கடமையாற்றத் தொடங்கியபின் விவசாயிகளின் பொருளாதார சமுதாய நிலைகள் மாற்றமடைந்தன. அவர்களுக்கிடையே காணப்பட்ட விவாதங்கள் கிராமச் சங்கங்களாற் தீர்த்து வைக்கப்பட்டன.

மலேரியா போன்ற நோய்களினுற் பிடிக்கப்பட்ட கிராம மக்களுக்கு **கிறிக்கறித்** தேசாதிபதி நிறுவிய வைத்தியசாலைகளில் சிகிச்சை அளிக்கப்பட்டது. **மக்கலம்** தேசாதிபதி காலத்தில் ஐக்கியநாணய சங்கங்கள்மூலம் கடன் எடுக்க விவசாயிகளுக்கு வசதி அளிக்கப்பட்டது. தற்காலத்தில் கிராமவாசிகள் தங்களுடைய கிராமங்களில் மாத்திரம் இருந்து கொள்ளாது, நாட்டின் பல பாகங்களுக்கும் புகையிரதம், மோட்டோர் வண்டி, பிரயாணிகள் செல்லும் பெரும் மோட்டோர் வண்டிகள்மூலம் பிரயாணஞ் செய்கின்ருர்கள். அதனுல் அவர்களுடைய மனப்பான்மை திருந்துவதோடு சமுதாய பொருளாதார நிலையும் மாற்றமடைகின்றன. சர்வசன வாக்குரிமை கிடைத்தபின்னர் விவசாயிகள் அரசாங்கத்திற் தங்களுக்

திருக்கும் உரிமைகளைப்பற்றி அறிந்து கொண்டனர். அவர்களுடைய பிரதிநிதிகளும் கிராமவிருத்திக்காக உழைத்து வருகின்றனர்.

கோல்புறாக் குழுவினர் குறிப்பிட்ட பிரகாரம் அரசாங்கம் கல்விச் சபையொன்றை 1834-ல் தாபித்தது. பிரதான அரசாங்க உத்தியோகத்தர்களும், கொழும்பிலுள்ள ஆங்கிலக் குருமார்களும் அதில் அங்கத்துவம் வகித்தனர். மாகாணங்களிலே உப சபைகள் நியமிக்கப்பட்டன. அவைகளிலே மாகாண அதிபதிகளும், நீதிவான்களும், அங்கத்துவம் பெற்றனர். அக்காலத்திலுள்ள அநேக ஆங்கில பாடசாலைகள் பாதிரிமார்களால் நடத்தப்பட்டமையால் குருமார்களுக்கு அச்சபைகளில் இடங் கொடுக்கப்பட்டன. பாதிரிமார் பாடசாலைகளைத் தாபித்த இடங்களிலே அரசாங்கம் வேறு பாடசாலைகளைத் தாபிக்கக் கூடாதென அச்சபையினர் அபிப்பிராயப்பட்டனர். அரசாங்க சேவையிற் சேர்வதற்கு ஆங்கிலக்கல்வி தேவையாயிருந்தமையால் ஆங்கிலக் கல்வியைப்பயிலப் பலர் முற்பட்டனர். அதனால் சுதேச பாஷைகளைப் பயில்வதிற் கவனங் குறைந்தது.

கொழும்பிலுள்ள ரேயல் கல்லூரி 1836-ல் தாபிக்கப்பட்டது. மூன்று வருடங்களின் பின் கத்தோலிக்க சமயத்தவர்கள் அரசாங்கத்தின் உதவியுடன் ஒரு ஆங்கில பாடசாலையைத் திறந்தனர். 1841-ல் ஒரு மத்திய பாடசாலைச் சபையொன்று நிறுவப்பட்டு ஒரு கத்தோலிக்க அங்கத்தவரும் சேர்த்துக்கொள்ளப்பட்டார். பாதிரிமார் நடத்திய பாடசாலைகளில், வலோற்காரமாக கிறித்தசமயத்தைக் கற்பிக்கக் கூடாதென்று அரசாங்கம் வற்புறுத்தியது. அப்பொழுது அரசாங்க பாடசாலைகள், பாதிரிமார் நடத்திய பாடசாலைகள், தனிப்பட்ட முறையில் முகாமைக்காரர் நடத்திய பாடசாலைகள் என மூன்று பிரிவான பாடசாலைகள் காணப்பட்டன. புத்தசமய, இந்து சமயப் பிள்ளைகள் கிறித்த பாடசாலைகளிலேயே கல்விபயில வேண்டியிருந்தது. அதனால் அச்சமயங்களைச் சேர்ந்த அநேகர் ஆங்கிலக் கல்வி கற்க முடியாதிருந்தமையினால் அரசாங்க சேவையிற் சேர்வதற்கு வசதியேற்படவில்லை. பறங்கியரும், மற்றும் கிறித்தவர்களுமே அதிக பலனை அடைந்தனர்.

மத்திய பாடசாலைச் சபையினர் நன்கொடைப் பணத்தை பாதிரிமாருடைய பாடசாலைகளுக்கும், மற்றும் கிறித்த பாடசாலைகளுக்கும் கொடுத்து உதவினர். நன்கொடைப் பணத்தைப்பெற விரும்பிய மற்றப் பாடசாலைகள் கிறித்த சமயத்தைக் கற்பிக்கவேண்டுமென்ற நிபந்தனை இருந்தது. 1861-ல் 672 மாணவர்களுள்ள 9 ஆங்கிலப்

பாடசாலைகளில் 233 புரட்டஸ்தாந்து சமயப் பாடசாலைகளாயும் 220 கத்தோலிக்கப் பாடசாலைகளாயும் 192 புத்தசமயப் பாடசாலைகளாயும் 127 முஸ்லிம் பாடசாலைகளாயுங் காணப்பட்டன. ரேயல் கல்லூரியோடு சேர்ந்து உயர்தரக் கல்வி பயில்வதற்கு ஒரு பகுதியும் இருந்தது. அது கல்கத்தா சர்வகலாசாலைப் பரீட்சைக்கு மாணவர்களை ஆயத்தஞ் செய்து அனுப்பியது. அந்நேரத்தில் அதிலே 6 மாணவர்கள் மாத்திரம் பரீட்சைக்கு ஆயத்தஞ் செய்தனர்.

அப்பொழுதிருந்த கல்விமுறை திருப்திகரமாய்க் காணப்படாமையால் கல்வி முறையைப்பற்றி ஆராய்ந்து அறிக்கையொன்றை வெளியிடும்படி ஒரு உப சபையைச் சட்டநிரூபணசபை நியமித்தது (1865). அது விடுத்த அறிக்கையில் மத்தியபாடசாலைச் சபை நீக்கப்படவேண்டுமென்றும், அதற்குப் பதிலாக ஒரு வித்தியாபகுதி தாபிக்கப்படவேண்டுமென்றும் குறிப்பிட்டனர். பாடசாலைகளுக்கு நன்கொடைப்பணம் கொடுப்பதற்கு சமயக் கல்வி கற்பிக்கவேண்டுமென்ற நிபந்தனையும் நீக்கப்படவேண்டுமென்றுங் கூறினர். உயர்தரக் கல்வி பயிலக்கூடிய விவேகமுள்ள மாணவர்கள் இங்கிலாந்திற்குச் சென்று சர்வகலாசாலைகளிற் கல்வி பயில்வதற்கு அரசாங்கம் பண உதவி அளித்து ஊக்கப்படுத்த வேண்டுமென்றும், ஆசிரியர்களுக்கு ஒரு பயிற்சிக்கலாசாலை தாபிக்க வேண்டுமென்றுங் குறிப்பிட்டனர். அறிக்கையின் அம்சங்கள் யாவும் சட்டநிரூபணசபையால் அங்கீகரிக்கப்பட்டன. ஒரு வித்தியாபகுதியும் 1869-ல் தாபிக்கப்பட்டு வித்தியாகர்த்தர் ஒருவரும் நியமிக்கப்பட்டார். சுதேச மொழிகளை அறியாத வித்தியாகர்த்தர் தன்னுடைய எண்ணத்தின்படி கல்வி முறையை வகுத்து நடத்தி வந்தார். ஆங்கிலேயப் பிள்ளைகளுக்கு ஏற்றதாக எழுதப்பட்ட பாடப்புத்தகங்களே இங்குள்ள பாடசாலைகளிலும் உபயோகிக்கப்பட்டன. லண்டன், ஒக்ஸ்போட், கேம்பிரிட்ஸ் சர்வகலாசாலைகள் நடத்திய பரீட்சைகளையே இங்கு மாணவர்கள் எடுத்தனர். ஆனுல் ஆங்கிலக் கல்வியைப் பயின்ற சிறுபான்மையினர், ஆங்கில அரசியல் முறைகளைப்பற்றிப் பயின்று அரசியற் சீர்திருத்தங்களுக்கு வாதாடத் தொடங்கினர். கல்விப்பகுதி செய்த வேலைகளிற் சில அதிகபயனை அளித்தன. பாடசாலைகள் அதிகரித்தன. ஆரம்பத்தில் இருந்த அரசாங்கப் பாடசாலைகள் 64 ஆகும். காலஞ்செல்ல 474 பாடசாலைகள் வரையிற் காணப்பட்டன. உதவிப்பணம் பெற்ற பாடசாலைகள் 21 வரையிலிருந்தும் 15 வருடங்களின் பின்பு 1172 பாடசாலைகள் தாபிக்கப்பட்டன. சிறிது காலத்தின்பின் தொழிற்கல்வி பயிற்றும்

கல்லூரியும், கைத்தொழிற் பாடசாலைகளும், கிருஷிக பாடசாலைகளும், பயிற்சி அளிக்கும் பாடசாலைகளும் நிறுவப்பட்டன. **1902**-ல் ஆசிரிய பயிற்சிப் பாடசாலையொன்று தாபிக்கப்பட்டது.

கிறீத்த பாடசாலைகளில் மதமாற்றம் நடைபெற்றமையால் புத்த சமயம் அல்லது இந்துசமயப் பிள்ளைகள் ஆங்கிலக்கல்வி கற்பதை விடவேண்டும், அல்லது கிறீத்த சமயத்தைத் தழுவிக்கொள்ள வேண்டியதாயிற்று. புத்த சமயத்தவர்கள் கல்வியைப் பரப்பும் நோக்கத்துடன் புத்தஞானசபை ஒன்றைத் தாபித்து பத்து வருடங்களுள் **63** பாடசாலைகள் வரையிற் கட்டினர்கள். இலங்கையில் வடபாகத்தில் பிரதானமாக யாழ்ப்பாணக் குடாநாட்டில் கிறீத்த பாதிரிமார் செய்த முயற்சிகள், தமிழ் வளர்ச்சிக்கும் இந்துசமயக் கிளர்ச்சிக்கும் ஊக்கத்தை அளித்தன. வட்டுக்கோட்டையில் அமெரிக்கமிஷனரிமார் தாபித்த கல்விக்கழகம் தற்பொழுது யாழ்ப்பாணக் கல்லூரி என வழங்கி வரும் தாபனம், உயர்தரக் கல்வியை ஆங்கிலத்தில் பயிற்றுவித்ததோடு தமிழ் இலக்கியத்தையும், இந்துசமயத்தையும் கற்பித்து வந்தது. சென்னைச் சர்வகலாசாலை நடத்திய முதல் பி. ஏ. பரீட்சையில் வட்டுக்கோட்டையில் கல்வி பயின்ற தாமோதரம்பிள்ளை, கரோல்ட் விசுவநாதன் என்ற மாணவர்கள் சித்தி எய்தினர் **(1857)**. அவர்கள் அதிக பாண்டித்தியம் பெற்றவர்களாகையால் பல நூல்களை எழுதியும், பல பழைய தமிழ்நூல்களைப் பதிப்பித்தும் வெளியிட்டனர். வட்டுக்கோட்டையிலே பயின்ற வேலுப்பிள்ளை என்ற இன்னொரு மாணவன் சென்னை சர்வகலாசாலையோடு சேர்ந்த கல்லூரியிற் தமிழ்ப் பகுதிக்குத் தலைமை தாங்கியிருந்தார். கரோல்ட் விசுவநாதனுடைய மகன் கனகசபாபதிப்பிள்ளை என்பவர் "எண்ணூறு வருடங்களுக்கு முன்புள்ள தமிழர்" என்ற நூலின் ஆக்கியோனுவார். யாழ்ப்பாண மத்திய கல்லூரியிற் கல்வி பயின்ற ஆறுமுகநாவலர் சமயசேவை புரிந்ததன் பயனுக இந்து சமயம் யாழ்ப்பாணத்திற் புத்துயிர் பெற்றதெனலாம். அவர் தான் கல்வி பயின்ற கல்லூரியில் ஆசிரியராக நியமிக்கப்பட்டுக் கடமையாற்றிவருங் காலத்தில் மிஷனரிமாருடைய கேள்விக்கிணங்கிப் பல கிறீத்த நூல்களை மொழிபெயர்த்தார். இந்து சமயத்தவர்களைக் கிறீத்தவர்களாக மாற்றுவதற்கே தன்னைக்கொண்டு அவ்வித வேலைகளைச் செய்வித்தனரெனவுணர்ந்து அவர் அக்கல்லூரியினின்று நீங்கிச் சைவசமயத்தைப் பரப்புவதற்கு முயற்சிகள் செய்தார். அவர் கிறீத்தவர்களோடு தர்க்கஞ் செய்து பல கண்டனங்களை எழுதினுர். கண்டனங்களைச் சிறந்த தமிழ் நடையில் எழுதினுர். வண்ணுர் பண்ணையில் ஒரு ஆங்கிலப் பாடசாலையையும் தொடங்கி **(1890)**, இந்துசமயப்பிள்ளைகள் ஆங்கிலக்கல்வி பயில்வதற்கு வசதியளித்தார்,

இவ்வண்ணமாகக் கல்வித்துறையிலிடுபட்டு நன்முயற்சிசெய்து வருகின்ற **புத்தஞானசபை, சைவபரிபாலன சபை, இந்து கல்விவிருத்திச்சபை** முதலிய சபைகளின் சேவை பாராட்டத்தக்கது. இதன் பயனாக இலங்கையிலுள்ள பல சாதியத்தாரும் மேனாட்டு நாகரிகத்தை முற்றாகப் பின்பற்றாது, தங்களுக்குரிய பண்பாட்டைக் கைக்கொள்ள முயன்றனர். இதுவுமன்றிச் சுதந்திர உணர்ச்சியும் மக்களிடையே உண்டானது.

1870-ன் பின், இலங்கையில் **தொல்பொருள் ஆராய்ச்சி** நடைபெறத் தொடங்கியது. அனுராதபுரி, பொலன்னறுவ முதலிய இடங்களிலுள்ள அழிந்துபோன கோயில்கள், கல்வெட்டுகள், பழைய சாசனங்கள் ஆராய்ச்சி செய்யப்பட்டன. இன்றும் அவ்வேலை அதிக ஊக்கத்துடன் நடைபெறுகின்றது.

## வினாக்கள்

1. பொருளாதார அபிவிருத்தி ஏற்படுவதற்கு என்ன சாதகமாய் இருந்தன?
2. தோட்டங்கள் திறக்கப்பட்டதால் உண்டான பலன்கள் யாவை?
3. 1848-ல் நடந்த கலகத்தின் காரணங்களை ஆராய்க.
4. கல்வி முன்னேற்றம் அடைவதற்கு யார் ஊக்கங் காட்டினர்? அரசாங்கம் எடுத்த நடவடிக்கைகள் யாவை?
5. புத்தசமயம், இந்துசமயக் கிளர்ச்சிகள் ஏற்படுவதற்குரிய காரணங்களை ஆராய்க.
6. "வர்த்தகப் பொருள்கள் இலங்கையில் உண்டுபண்ணப்பட்டபடியால் பொருளாதார அபிவிருத்தி காணப்பட்டது" இக்கூற்றை ஆராய்க.

---

# 6. மத்திய அரசாங்கமும், தல ஆட்சியும்

**(1891—1924)**

**1833**-ல் நிறுவப்பட்ட இரு சபைகளின் அதிகாரத்தையும் மீறி நடந்துகொள்ளத் தேசாதிபதிக்கு வசதியிருந்தது. உத்தியோகப் பற்றுள்ள அங்கத்தவர்கள் பெரும்பான்மையினராக இருந்தமையினுல் அவருடைய திட்டங்கள் அங்கீகாரம் பெற்றன. இலங்கையிலுள்ள பிரித்தானிய குடியேற்ற வாசிகள் அப்பொழுதுள்ள அரசியல் முறையிற் திருப்தியடையாமல் மாற்றங்கள் அவசியந் தேவையென வாதாட ஆரம்பித்தனர். அவர்கள் சட்டநிருபண சபையை மக்களுடைய பிரதிநிதிச் சபையாக்க விரும்பினர். அதற்கு இங்கிலாந்திலுள்ள அரசாங்கம் சம்மதிக்கவில்லை. ஆனுல் **1839** தொடக்கம் பணவிஷயங்களை மேற்பார்வை செய்யச் சட்ட நிருபண சபைக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டது. அரசியல் மாற்றத்திற்குக் கிளர்ச்சியிருந்தமையால், இலங்கையில் அப்பொழுது இருந்த சமுதாயநிலை, பிரதிநிதித்துவ முறையை சட்டநிருபணசபையில் புகுத்துவதற்குத் தகுந்ததாகக் காணப்படவில்லையெனக் குடியேற்ற நாடுகளின் காரியதரிசி கூறினுர் **(1848)**.

பணவிஷயங்களைச் சட்டநிருபணசபை கட்டுப்படுத்துவதென்ருல் அவ்விஷயங்கள் சம்பந்தமான திட்டங்கள் யாவும் சட்டரீதியாக்கப்படவேண்டுமென இங்கிலாந்திலுள்ள அரசாங்கம் கூறியது. அரசாங்கம் செலவு செய்யும் ஒவ்வொரு விஷயத்தையும் ஆராயும் அதிகாரம் சட்டநிருபணசபைக்கு இருந்தபொழுதிலும் தேசாதிபதி தனக்குரிய அதிகாரத்தைப் பாவித்துச் செலவு செய்தார். இலங்கையிலுள்ள இராணுவப் படைகளின் செலவைப்பற்றி சபையோடு ஆலோசனை செய்யாது குடியேற்ற நாடுகளின் காரியதரிசியும் தன்னிட்டப்படி அதற்கு வேண்டிய பணத்தை வருமானத்திலிருந்து ஒதுக்கி விடும்படி கற்பித்தார்.

வெகுகாலமாக இராணுவத்திற்காகச் செலவு செய்யப்பட்ட பணத்தில் சாம்ராச்சிய அரசாங்கம் ஒரு பகுதியையும், இலங்கை அரசாங்கம் ஒரு பகுதியையும் கொடுத்து வந்தது. ஸ்பானியா, ஒல்லாந்து ஆகிய நாடுகள் தங்களுடைய குடியேற்ற நாடுகளில் செலவு நீக்கி எஞ்சிய வருமானத்தைப் பெற்று வந்தனவென்று ஆங்கிலப் பாராளுமன்ற அங்கத்தினர் சிலர் கூறி, இலங்கையின் வருமானத்திலே அவ்விதம் கிடைக்கும் பணம் பொதுநல வேலைகளுக்குச் செலவிடப்படுகிறதென்றும், அப்பணம் இனிமேல் திறை

சேரிக்குக் கொடுக்கப்படவேண்டுமென்றும் வற்புறுத்தி நின்றனர். இராணுவத்திற்குரிய முழுச்செலவையும் இலங்கை அரசாங்கமே கொடுக்கவேண்டுமென்று குடியேற்ற நாட்டுக் காரியதரிசி அறிவித்தார். சட்டநிருபணசபைக்குப் பணவிஷயங்களைக் கட்டுப்படுத்துவதற்கு அளிக்கப்பட்ட அதிகாரத்திற்கு, காரியதரிசியின் கட்டளை மாறுனதாகக் காணப்பட்டது.

1864-ல் சட்டநிருபணசபைக் கூட்டத்தில் தேசாதிபதி நிகழ்த்திய பேச்சில் இராணுவச் செலவைப்பற்றிக் கூறத்தவறினமையால் உத்தியோகப்பற்றற்ற 6 அங்கத்தவர்களும் அரசாங்கத்திற்கெதிரே நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை நிறைவேற்றினர். அன்றைய தினம் 5 உத்தியோகப்பற்றுள்ள அங்கத்தவர்கள் மாத்திரம் சமுகமளித்திருந்தபடியால் அவர்கள் அதனைப் பயன்படுத்தி அத்தீர்மானத்தை நிறைவேற்றினர். பின்னர் சட்டநிருபணசபை திருத்தியமைக்கப்படவேண்டுமென்று பெரும் கிளர்ச்சி உண்டானது. முழுச்சபையும் இராணுவச் செலவுக்குரிய பணத்தை வரையறுத்துக் கூறின. உத்தியோகப்பற்றற்ற அங்கத்தவர்கள் பண விஷயங்களைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் தங்களுக்கிருக்கவேண்டுமென வற்புறுத்தி நின்றும் அதை அரசாங்கம் மறுத்துவிட்டது. அதனுல் அவ்வங்கத்தவர்கள் பதவியினின்று நீங்கினர். இங்கிலாந்தரசி அவர்களுடைய வேலை நீக்கத்தை ஏற்றுக்கொள்ளுமளவும் அவர்கள் சபையின் அங்கத்தவர்களாவார்கள் என்று **றிச்சேட் மோகன்** என்ற நியாயதுரந்தரர் சுட்டிக்காட்டியவுடன் சபைக் கூட்டங்கள் நடைபெற்றன. பின்னர் ''சிலோன் லீக்'' எனப்படும் அரசியற் சங்கம் ஒன்று நிறுவப்பட்டது. இலங்கையிலுள்ள எல்லா வகுப்பினரும் அதற்கு ஆதரவு அளித்தனர். **ஜோர்ஜ் உவால்** என்பவர் இங்கிலாந்திற்குச் சென்று விளங்கப்படுத்திய பொழுதிலும் அங்குள்ள அரசாங்கம் மறுத்து விட்டது. பின் அரசியற் சீர்திருத்தங்கள் வேண்டுமென்று வாதாடுவதற்காக ''கண்டி கெரல்ட்'' என்னும் அரசியற் பத்திரிகையையும் வெளியிட ஆரம்பித்தனர். ஆனுல் அப்பத்திரிகையில், சில அரசாங்க அந்தரங்க விஷயங்கள் வெளியிடப்பட்டமையால் அரசாங்கத்தினருக்குக் கோபம் உண்டானது.

1868-ல் சட்டநிருபணக் கூட்டமொன்றில் இலங்கைத் தேசாதிபதி பின்வருமாறு கூறினர். ''இந்நாட்டில் பெரும்பான்மையான மக்களிடையே கல்வி பரவித் தங்களுடைய உரிமையை விளங்கிக்கொள்ளுமளவும், பிரதிநிதித்துவ அரசியல் தாபனங்களினுல் அடையும் நன்மையைப் பெற்றுக்கொள்ளும் தகுதியை அடையுமள

வும், நாட்டை ஆளும் பொறுப்பு அரசாங்கத்திலேயே இருக்கவேண்டும்'' என்று பேசினர். இதுவரையும் ஆங்கிலக் குடியேற்ற வாசிகள், பறங்கிகளுடைய உதவியுடன் கிளர்ச்சியை உண்டுபண்ணி வந்தனர். பின்னர் ஆங்கிலக் கல்வி பரவியதனுல் இலங்கை மக்களும் அரசியற் கிளர்ச்சியிலேயே பங்குபற்றினர். ஆங்கிலக் கல்வியையும், ஆங்கில அரசியற் கொள்கைகளையும், ஜனநாயகக் கொள்கைகளையும் பற்றி அறிந்த மக்களிலநேகர் அரசியல் விஷயங்களில் அதிக சிரத்தை எடுத்தனர். அந்நேரத்தில் அரசியற் சீர்திருத்தத்திற்காக வாதாடிய கிறிஸ்தோபர் எலியட், பேர்கூசன், ஜோர்ஜ் உவால் ஆகிய ஆங்கிலக் குடியேற்ற வாசிகள் அரசாங்கத்தோடு சேர்ந்துகொண்டனர். இதுவரையும் அரசாங்க சேவையிலும் கடமையாற்றி நியாயாதிபதிகளாயும், வைத்தியர்களாயுமிருந்து வந்த பறங்கியர், புதிதாக ஆங்கிலக் கல்விகற்ற சிங்களவர், தமிழர், முஸ்லிங்கள் ஆகியோரோடு போட்டியிட வேண்டியிருந்தது.

அரசியலிற் சீர்திருத்தங்கள் வேண்டுமென்ற கிளர்ச்சி நாட்டு மக்களிடம் காணப்பட்டமையால் அதை அலட்சியஞ் செய்துவிட முடியாது. ஆனுல் பிரதிநிதித்துவ சபையொன்றைத் தாபிப்பதற்கு இந்நாடும் அந்நேரத்திற் தகுதியுடையதாகக் காணப்படவில்லை. ஆகையால் இருபகுதியாரும் சமரசமுறையில் ஒரு வழியை வகுக்க வேண்டியிருந்தது. 1889-ல் சட்டநிருபண சபையிலுள்ள உத்தியோகப்பற்றற்ற அங்கத்தவர்கள் தொகை எட்டாக அதிகரிக்கப்பட்டது. கண்டிச் சிங்களவர்களிலொருவரும், முஸ்லிங்களிலொருவருமாக முன்னிருந்த 6 அங்கத்தவர்களோடும் நியமனஞ் செய்யப்பட்டனர். இராணுவச் செலவுங் குறைக்கப்பட்டது. பின்பு சட்ட நிருபண சபையில் வேறு மாற்றங்கள் உண்டாக்கப்பட வேண்டுமென்று குடியேற்ற நாடுகளின் காரியதரிசிக்கு இந்நாட்டு மக்கள் மனுவொன்றை அனுப்பினர் (1909-ல்). அதன் பயனுகப் பின்வருந் திருத்தங்கள் செய்வதாக அறிவிக்கப்பட்டது. திருத்தி அமைக்கப்படும் சபையில் 21 அங்கத்தவர்கள் அங்கத்துவம் வகிப்பார்களென்றும், அவர்களுள் 11 உத்தியோகப்பற்றுள்ள அங்கத்தவர்களும் 10 உத்தியோகப்பற்றற்ற அங்கத்தவர்களும் இருப்பார்கள். உத்தியோகப்பற்றற்ற அங்கத்தவர்களில், நகரவாசிகளுக்கு ஒரு ஐரோப்பிய அங்கத்தவரும், நாட்டுப்பகுதிகளுக்கு ஒரு ஐரோப்பிய அங்கத்தவரும் பறங்கிகளுக்கு ஒரு அங்கத்தவரும், கல்வியறிவுள்ள இலங்கை மக்களுக்கு ஒரு அங்கத்தவருமாக நான்கு அங்கத்தவர்கள் தெரிவுசெய்யப்படுவர். மற்றைய 6 அங்கத்தவர்களும்

நியமிக்கப்படுவர். 1911ம் ஆண்டு பழைய சபை கலைக்கப்பட்டு அடுத்த ஆண்டிலே புதிய சபை கூட்டப்பட்டது.

1912ல் திருத்தி அமைக்கப்பட்ட சட்டநிருபண சபையின் முதன் முதலாகத் தெரிவு செய்யப்பட்ட அங்கத்தவர்கள் இடம்பெற்றனர். சேர். பொன்னம்பலம் இராமநாதனே கல்வியறிவுள்ள இலங்கையரின் பிரதிநிதியாகத் தெரிவு செய்யப்பட்டார். சிங்கள வருக்கும் சோனகருக்குமிடையில் கலகம் ஏற்பட்டபொழுது ஆங்கிலேயர் எடுத்த நடவடிக்கைகளை அவர் கண்டித்துப் பேசிய பொழுது மக்களின் பிரதிநிதி இருப்பதால் பெறக்கூடிய நன்மைகள் இன்னவென எவரும் அறியக்கூடியதாகவிருந்தது. கம்பளைப் புத்தகோயிலில் பெரகரா விழா நடக்கும் பொழுது ஊர்வலஞ் செல்லுகையில் அங்குள்ள முஸ்லீங்களின் பள்ளிவாசலுக்குக் கிட்ட வாத்தியங்கள் நிறுத்தப்படவேண்டுமென அறிவிக்கப்பட்டது. புத்த கோயிலின் அதிகாரிகள் அதைப்பற்றி நீதிஸ்தலத்தின் தீர்மானத்தை எதிர்பார்த்திருந்தனர். கண்டியிலுள்ள பெரியகோடு அவர்களுக்குச் சாதகமாகத் தீர்ப்பைக் கூறியும் சுப்பிறீங் கோடு அத்தீர்ப்பை மாற்றியது. அதனுல் அவ்வதிகாரிகள் ''பிறிவிக் கவுன்சிலுக்கு'' மனுச்செய்தனர். பொறுப்புணர்ச்சியில்லாத சிலருடைய செய்கைகள் கலகத்தை உண்டுபண்ணின. வைகாசி விசாக தினத்திரவு ஊர்வலம் நடைபெற்றபொழுது முஸ்லீம் கோவிலுக்கணித்தாக நடைபெற்ற சம்பவத்தில் 25 பேர் வரையில் கைதிசெய்யப்பட்டனர். அடுத்த இரவு கலகம் தொடங்கியது. பின்பு மேல்மாகாணத்திலும், வடமேல் மாகாணத்திலும் கலகம் தொடங்கியது. இராணுவச் சட்டமுண்டாக்கப்பட்டுப் போர்ப்படைகள் அமைதியைக்கொண்டு வருவதற்கு அனுப்பப்பட்டன. பயத்தை உண்டாக்குவதற்காக அநேகர் சுட்டுக் கொல்லப்பட்டனர். இராணுவச் சட்ட அதிகாரத்தின்கீழ் பிரபலமான பலருக்கெதிரே இராசதுரோகக் குற்றச்சாட்டு கொண்டுவரப்பட்டது. அரசாங்கத்தை நீக்கிவிடும் நோக்கத்தோடேயே கலகம் உண்டாக்கப்பட்டதென்று பிரித்தானிய உத்தியோகத்தர் எண்ணினர். மக்களுக்கு அளவிறந்த கோபம் உண்டானது. இராணுவச் சட்ட காலத்தில் புத்தசமயத்தவர்களை அதிகாரிகள் நாகரிகமுள்ள மனிதர்களுக்குத் தகுதியற்ற முறையில் நடத்தினர் என்பது பலருடைய அபிப்பிராயம். **யேம்ஸ் பீரிஸ், பெரேரா ஜயத்திலக்கா, சேர் பொன்னம்பலம் இராமநாதன்** ஆகிய தலைவர்கள் குடியேற்ற நாடுகளின் காரியதரிசிக்கு இங்குள்ள நிலையைப்பற்றி அறிவித்து ஒரு விசாரணைக் குழுவை நியமிக்கும்படி கேட்பதற்கு முயற்சி செய்தனர். யேம்ஸ் பீரிஸ் தலைமைதாங்கி

நடத்திய பகிரங்கக் கூட்டமொன்றில் செய்த தீர்மானத்தைக் குடியேற்ற நாடுகளின் காரியதரிசிக்கு அனுப்புவதற்குத் தேசாதிபதி மறுத்துவிட்டார். சேர். பொன்னம்பலம் இராமநாதன் இந்தியாவிலுள்ள ஒரு சிநேகிதன்மூலம் இங்கிலாந்திலுள்ள அதிகாரிகளுக்கு அறிவித்துவிட்டு உடனே புறப்பட்டார்.

பின்னர் பிரதம நீதிபதியும், ஒரு நியாயதுரந்தரும் கொண்டுள்ள ஒரு விசாரணைக்குழுவொன்று நியமிக்கப்பட்டது. முதலில் கேகாலையில் சுட்டுக்கொல்லப்பட்ட 10 பேரைப்பற்றிய விளக்கம் நடைபெற்றது. அவர்கள் அநீதியான முறையிலேயே சுட்டுக் கொல்லப்பட்டனர் என்று அக்குழுவினர் அறிவித்தனர். இராணுவச் சட்டத்தை உண்டாக்கியபொழுது தேசாதிபதி இலங்கையிலுள்ள ஒரு உத்தியோகத்தர்களோடும் அல்லது தலைவர்களோடும் கலந்தாலோசிக்கவில்லை. ஐரோப்பிய உத்தியோகத்தர்களின் ஆலோசனைப்படியே நடந்துகொண்டார். சேர். பொன்னம்பலம் இராமநாதன் அப்பொழுதிருந்த நிலையைப்பற்றித் தேசாதிபதியோடு பேசுவதற்குக் கேட்டபொழுது ஒரு மாதத்தின் பின்னரே அவர் பேசுவதற்கு அனுமதி அளிக்கப்பட்டது. இவ்விதமான நிலை ஏற்படாது தடுப்பதற்காக சேர். பொன்னம்பலம் அருணசலம், சேர் யேம்ஸ் பீரிஸ் ஆகியோரின் தலைமையில் மக்கள் வாதாட ஆரம்பித்தனர். இலங்கையில் அரசாங்கத்தை நடத்தும் பொறுப்பு இலங்கை மக்களிலேயே விடப்படவேண்டுமென்ற நோக்கத்தோடு இலங்கைத் தேசிய காங்கிரஸ் நிறுவப்பட்டது. உயர்ந்த உத்தியோகப் பதவிகள் இலங்கை மக்களுக்குக் கொடுக்கப்படவேண்டுமென்றும், மாகாண அதிபர்களும் இலங்கை மக்களிலிருந்தே நியமிக்கப்பட வேண்டுமென்றும் வற்புறுத்தி நின்றனர். அக்காங்கிரஸ் பின்வரும் கோரிக்கைகளை விடுத்தன. சட்ட நிரூபண சபையில் பெரும்பான்மையான பிரதிநிதிகள் பிரதேச வாரியாகத் தெரியப்பட்டவர்களாயும், சட்ட நிர்வாகசபையில் உள்ள அங்கத்தவர்களில் அரைவாசிப்பேராகுதல் இலங்கைச் சுதேசிகளாயுமிருக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டனர். பொறுப்புள்ள அரசாங்கத்தை நிறுவவேண்டுமென்பதே அவர்களுடைய அபிப்பிராயமாகும். ஆனால் இங்கே வகுப்புவாதப்பிரிவினை காணப்பட்டமையால் காங்கிரஸின் கோரிக்கைகளுக்கு மாருகப் பல மனுக்கள் செய்யப்பட்டன.

குடியேற்ற நாடுகளின் காரியதரிசி இலங்கை வாசிகளின் பலதிறப்பட்ட அபிப்பிராயங்களை ஆராய்ந்தபின் சட்டநிரூபண

சபையில் மாற்றங்களை உண்டுபண்ணத் தீர்மானித்தார். தேசாதிபதியின் தலைமையில் 14 உத்தியோகப் பற்றுள்ள அங்கத்தவர்களும் 23 உத்தியோகப் பற்றற்ற அங்கத்தவர்களும் சபையில் இடம் பெறுவர். உத்தியோகப் பற்றற்ற அங்கத்தவர்களிலே 11 பேர் பிரதேசவாரியாகத் தெரிவு செய்யப்படுவரென்றும், எஞ்சியவர்களில் ஐரோப்பியருக்கு 2 இடமும் பறங்கிகள், வர்த்தகர், தாழ்பூமிப் பொருள் உற்பத்திச் சங்கம், முதலிய ஒவ்வொரு பகுதியாருக்கும் ஒவ்வொரு பிரதிநிதியும், கண்டியிலுள்ள இந்தியர், முஸ்லிம்களுக்கு ஒவ்வொரு இடமும் கொடுக்கப்பட்டன. பிரதிநிதித்துவம் பெறாத பகுதிகளுக்கு 3 நியமிக்கப்பட்ட அங்கத்தவர்களுக்கும் இடங் கொடுக்கப்பட்டன. அத்தியாவசியமான விடயங்களில் தேசாதிபதிக்கு அவசரச் சட்டங்களை ஆக்கவும் அதிகாரம் கொடுக்கப்பட்டது. சட்டநிருபண சபையின் நிகழ்ச்சிகளை நிறுத்தவும் தேசாதிபதிக்கு அதிகாரமுண்டு. ஆனால் காங்கிரஸ் அதிருப்தியடைந்து சபையிற் சேர்ந்துகொள்ள மறுத்தபொழுது, தேசாதிபதி இன்னும் வேறு மாற்றங்களைக் கொண்டுவருவதாகக் கூறி காங்கிரசைப் பங்குபற்றிக் கொள்ளத்தக்கதாகச் செய்தார். 1921-ம் ஆண்டு ஆனிமாதம் புதியசபை கூடியது.

பின்பு, சபை கூடியபொழுது, நிர்வாக முறையைத் திருத்தியமைக்கும் பொருட்டு, காங்கிரசின் பிரேரணைகளைக் கொண்டுள்ள தீர்மானமொன்று யேம்ஸ் பீரிஸால் கொண்டுவரப்பட்டது. அவர் கொண்டுவந்த தீர்மானத்தில் 45 பிரதிநிதிகளிருக்கவேண்டுமென்றும், அவர்களுள் 6 பேர்கள் உத்தியோகப் பற்றுள்ளவர்களாயும், எஞ்சிய 28 அங்கத்தவர்களும் பிரதேச வாரிகளாகத், தெரியப்பட்ட ஜனப்பிரதிநிதிகளாயும் இருக்கவேண்டுமென்றும் ஒரு தெரிவுசெய்யப்பட்ட சபைத்தலைவர் இருக்கவேண்டுமென்றும், தேசாதிபதியின் விஷேச அதிகாரம் குறைக்கப்படவேண்டுமென்றும் கோரப்பட்டன. நிர்வாக சபையில் 3 உத்தியோகப் பற்றுள்ள அங்கத்தவர்களும் அவர்களுடன் 3 மந்திரிமார்களும் இருக்கவேண்டுமென்றும் குறிப்பிட்டார். குடியேற்ற நாடுகளின் காரியதரிசி அக்கோரிக்கைகளையும், ஐரோப்பியர், தமிழர், பறங்கிகள், முஸ்லீங்கள் அனுப்பிய மனுக்களையும் ஆராய்ந்து மாற்றங்களை உண்டுபண்ணத் தீர்மானித்தார்.

முன்னிருந்த சபை கலைக்கப்பட்டுப் புதிய சபை 1924-ம் ஆண்டு ஐப்பசிமாதம் கூட்டப்பட்டது. 12 உத்தியோகப் பற்றுள்ள அங்கத்தவர்களும் 34 தெரிவுசெய்யப்பட்ட சனப்பிரதிநிதிகளும்

கொண்டுள்ள சபை ஏற்படுத்தப்பட்டது. அவர்களுள் 23 பேர் பிரதேசவாரியாகத் தெரிவுசெய்யப்பட்டனர். எஞ்சியவருள் 6 பேர் பல்வேறு சாகியத்தாரின் தெரிவு செய்யப்பட்ட அங்கத்தவரும், 5 பேர் நியமனஞ் செய்யப்பட்ட அங்கத்தவர்களுமாவர். தெரிவு செய்யப்படும் அங்கத்தவர்கள் 25 வயதுக்கு மேற்பட்ட ஆங்கிலப் பிரசையாயும், ஆங்கிலம் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களாயும், சொத்துடையவர்களாயுமிருக்க வேண்டும். வாக்காளரும் ஆங்கிலப் பிரசைகளாயும், 21 வயதுக்கு மேற்பட்ட ஆண்களாயுமிருத்தல் வேண்டும்.

தேசாதிபதியே அச்சபைக்குத் தலைமை தாங்கினர். அவர் அவ்விதம் இருக்கமுடியாத சந்தர்ப்பங்களிலே சபையினுலே தெரிவு செய்யப்பட்ட உபதலைவர் கூட்டங்களை நடத்தினர். நாட்டின் நலத்திற்கு அத்தியாவசியமான விஷயங்களில் உத்தியோகப் பற்றுள்ள அங்கத்தவர்கள், தெரிவுசெய்யப்பட்ட அங்கத்தவர்கள் ஆகியோருடைய உதவியுடன் தேசாதிபதி சட்டங்களை உண்டு பண்ண அதிகாரமிருந்தது. ஆனுல் அவ்வண்ணம் எடுத்துக்கொள்ளும் நடவடிக்கை ஒவ்வொன்றையும்பற்றி குடியேற்ற நாடுகளின் காரியதரிசிக்கு அறிக்கை ஒன்றைத் தேசாதிபதி சமர்ப்பிக்க வேண்டும். சட்ட நிர்வாகசபையில் 2 உத்தியோகப் பற்றுள்ள அங்கத்தவர்களும், 4 உத்தியோகப் பற்றற்ற அங்கத்தவர்களும், இன்னும் மூன்று அரசாங்க உயர்தர உத்தியோகத்தர்களும் இடம் பெற்றனர். நீதிபதிகளை நியமனஞ் செய்யும்பொழுதும், மரண தண்டனை பெற்றவர்களுக்கு மன்னிப்பு அளிக்கும்பொழுதும், அரசாங்க உத்தியோகத்தர்களுக்குத் தண்டனை விதிக்கும்பொழுதும் தேசாதிபதி நிர்வாகசபையை ஆலோசிப்பதுண்டு: சட்டநிருபண சபைக்குப் பண விஷயங்களைக் கட்டுப்பாடு செய்யும் அதிகாரமிருந்தமையால் நிர்வாகத்தை நடத்துவதிலே நிர்வாகசபைக்குக் கஷ்டமேற்பட்டது.

மக்கலம் தேசாதிபதி காலத்தில் அரசாங்க முறையிலே கொண்டுவரப்பட்ட மாற்றங்களின் (1912) பயனுக சட்டநிருபண சபைக்கு அங்கத்தவர்கள் தெரிவுசெய்யப்பட்டனர். அதுவுமல்லாமல் சுதேசிகளுக்குள்ளே மத்திய வகுப்பினர் வாக்குரிமையைப் பெற்றனர். மானிங் தேசாதிபதி உண்டாக்கிய மாற்றங்களின் (1924) பயனுக உத்தியோகப் பற்றற்ற அங்கத்தவர்களின் தொகை கூட்டப்பட்டது. ஆனுல் சாதி அடிப்படையில் பிரதிநிதிகள் அனுப்பப்பட்டமையால் அது நாட்டின் முன்னேற்றத்திற்குத்

தடையாக இருக்குமென நினைத்து மேலும் அரசியல் மாற்றங்களை உண்டாக்கவேண்டுமென அரசியற் தலைவர்கள் வாதாடத் தொடங்கினர். அதன் பயனாக ஏற்பட்ட மாற்றங்களைப்பற்றி இன்னொரு அத்தியாயத்திற் படிப்போம்.

மத்திய அரசாங்கத்தைப்பற்றி இதுவரையும் ஆராய்ந்தோம். இனி அக்காலத்திலுள்ள தல ஆட்சியைப்பற்றி அறிதல்வேண்டும். பண்டைக் காலத்தில் மக்கள், கிராமங்களிலே வசித்தபடியால் **''கன்சபா''** போன்ற கிராமச்சங்கங்கள் கிராமங்களின் விஷயங்களை நடத்திவந்தன. மக்கள் தொகை அதிகரித்ததினாலும், நாகரிகம் வளர்ச்சியுற்றதினாலும் சனங்கள் நகரங்களில் வசிக்கத்தொடங்கினர். நகரங்களிலோ, கிராமங்களிலோ வசிப்போர்களுடைய தேவைகளுக்கேற்றவாறு ஆட்சி முறையையும் தாபிக்கவேண்டியதவசியமாயிற்று. கிராமங்களிலே கிராமச்சங்கங்களும், நகரங்களில் நகர சங்கங்களும், மாநகர சங்கங்களும் இன்று எங்களுடைய நாட்டிலிருப்பதை நாம் அறிவோம். மக்கள் சமுதாயத்திற்கேற்ற தாபனத்தை ஏற்படுத்துவது மத்திய அரசாங்கத்தின் கடமையாகும். சமுதாயத்திற்கேற்ற தாபனங்கள் மக்களுடைய தேவைகளைக் கவனித்து வேண்டிய சேவையைப் புரியாதுவிட்டால் மத்திய அரசாங்கமே அதைச் செய்யவேண்டி இருக்கும். தண்ணீர் வசதியை உண்டாக்கி, மின்சார வெளிச்ச விநியோகம் ஆகிய கடமைகளை தல ஆட்சித் தாபனங்கள் கவனித்து வருகின்றன. ஆனால் சுகாதார வேலை, நீதிபரிபாலனம் ஆகியவைகளைப்பற்றிய வேலைகள் மத்திய அரசாங்கத்தின் கடமைகளாயிருக்கின்றன.

தல ஆட்சித் தாபனங்கள் வெகு ஆண்டுகளாக நன்முயற்சிகள் செய்துவருகின்றன. இவ்வகையான தாபனங்களில் குறைந்த படியிலுள்ளது கிராமச்சங்கமென்றும், உயர்ந்த படியிலுள்ளது மாநகர சபை என்றும் சொல்லலாம். பிற்காலத்திலுள்ள கிராமச்சங்கங்களுக்கும் பண்டைக்காலத்திலுள்ள கன்சபாவுக்கும் அதிக வித்தியாசமுண்டு. பழைய காலத்தில் கிராமங்களிலிருந்த பெரியோரே தத்தங் கிராமங்களிலுள்ள விடயங்களைக் கவனித்து வந்தனர். அவர்கள் கிராமத்துக்குத் தேவையான பொது விடயங்களைப்பற்றி ஆலோசிக்கவும், கிராமத்தில் ஒவ்வொருவரும் செய்யவேண்டிய கடமைகளைப்பற்றி ஆராயவும், மக்களிடையே காணப்படும் பிணக்குகளைத் தீர்க்கவும் பல்வேறு வேளைகளில் ஒரு மரநிழலிற் கூடுவது வழக்கம். அத்தருணங்களிலே இருவருக்கும் இடையிலுள்ள சச்சரவுகளைத் தீர்த்துக் குற்றவாளிக்கு ஏற்ற தண்டனை விதிப்பதுண்டு.

**1871**-ல் கிராமச்சங்கங்கள் தாபிக்கப்பட்டு அவைகள் கிராமங்களிற் காணப்படுகின்ற பாதைகள், பாலங்கள், கிணறுகள், வேலிகள், சந்தைகள், சுடுகாடு, இடுகாடு, பாடசாலைகள், சுகாதாரம், மக்களிடையே உண்டாகும் பிணக்குகள் முதலியவைகளைக் கவனிக்க அதிகாரத்தைப் பெற்றன. 25 வயதுக்கு மேற்பட்ட சொத்துள்ள ஆண்களால் அங்கத்தவர்கள் தெரிவு செய்யப்பட்டு மூன்று வருடங்களுக்கு மாத்திரம் இச்சங்கத்தில் அங்கத்துவம் வகித்தனர். இப்பொழுது கிராமமக்கள், இச்சங்கங்களின் நன் முயற்சியினுல் முன்னேற்றமடைந்து வருவதை நாங்கள் கவனிக்கலாம். இவைகளைவிடக் கிராம நீதிமன்றங்களும் தாபிக்கப்பட்டிருக்கின்றன. கிராம நீதிமன்றத்தலைவர் அரசாங்கத்தாலேயே நியமிக்கப்படுகிருர்; அக்கிராம வாசிகள் பேசுகின்ற மொழியிலேயே கிராம நீதிமன்றத்தில் வழக்குகள் விசாரணை செய்யப்படுகின்றன. கடன், நட்டங்கள், நிலம் சம்பந்தமான நூறு ரூபாவுக்கு மேற்படாத வழக்குகள் ஆகியவற்றை விசாரணை செய்வதற்கு அதற்கதிகாரமுண்டு. நியாயவாதிகள் அந்நீதிமன்றத்திற்கு வேண்டியதில்லை. நீதிமன்றத் தலைவருக்கு 25 ரூபாவுக்கு மேற்படாத அபராதம் விதிக்க அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

நகரங்களில் சனநெருக்கம் மிகுதியாய்க் காணப்படுகின்றபடியால், மக்களின் தேவைகளும், பிரச்சனைகளும் அதிகமுண்டு. ஆகையால், அவைகளுக்கேற்ற ஆட்சிமுறையும் தகுந்த தாபனங்களுமின்றியமையாதன. ஆகையால் அவ்விடங்களின் நிலைக்கேற்றவாறு பட்டின சபைகளோ, நகரசபைகளோ, மாநகர சபைகளோ தாபிக்கப்பட்டிருக்கின்றன. நகரங்களிற் பிரச்சனைகள் பலவுண்டு. அவை: தெருக்களமைத்தல், பழுதுபார்த்தல், துப்பரவு செய்தல், வெளிச்சமேற்றல், சந்தைகளை ஏற்படுத்தல், உண்டிச்சாலைகளையும், மீன் இறைச்சிக் கடைகளையும் மேற்பார்வையிடல், வீடுகளினமைப்பைப்பற்றிய ஒழுங்குகளை விதித்தல், சுகாதார நிலைமை, போக்குவரத்து வசதிகளைக் கவனித்தல் என்பனவாம். மக்களின் சுகவாழ்விற்கும், சீர்திருத்தத்திற்குமேற்ற வசதிகளை அளித்தல் நகர சங்கங்களின் முக்கிய கடமையாகும். பெரிய நகரங்களில் மாத்திரம் மாநகரசபைகளுமுண்டு.

**1865**-ம் ஆண்டு கொழும்பு, கண்டி, காலியில் மாநகரசபை தாபிக்கப்படவேண்டுமென்று ஒரு சட்டம் உண்டாக்கப்பட்டது. அதன் பிரகாரம் அந்நகரங்களில் "மியூனிசிப்பாலிற்றி" என்று சொல்லப்படும் மாநகரசபைகள் தாபிக்கப்பட்டன. சில வருடங்

களுக்கு முன்பே யாழ்ப்பாணத்தில் மாநகரசபை ஏற்படுத்தப்பட்டது. பட்டினசபை, நகரசங்கம் என்பவைகளிலும் பார்க்க மாநகர சபைகளின் வேலைகள் அதிகமாகும். இச்சங்கங்களால் வரிகள் மூலம் திரட்டப்படும் பணம், வீதிகளை நல்ல நிலையில் வைத்துப் பேணவும், அவ்வீதிகளுக்கு வெளிச்சமேற்றவும், நன்னீர் வசதிகளை அளிக்கவும், சுகாதாரத்தைக் கவனிக்கவும் உபயோகிக்கப்படுகின்றது. இச்சங்கத்தில், தெரிவுசெய்யப்பட்ட அங்கத்தவர்களே அங்கத்துவம் வகிப்பார்கள். இச்சங்கம் ஒரு தலைவரை உடையதாகவிருக்கும். பிரதிநிதியாகத் தெரிவுசெய்யப்படுபவர் 25 வயதுக்கு மேற்பட்டவராயும், வாக்காளர் 21 வயதுக்கு மேற்பட்டவராயுமிருத்தல் வேண்டும். 1939-ம் ஆண்டு தொடக்கம் மாநகர சங்க அங்கத்தவர்களே சங்கத் தலைவரையும், உதவித் தலைவரையும் தெரிவு செய்துகொண்டு வருகின்றனர். சங்கத் தலைவர் ''மேயர்'' என்றழைக்கப்படுவர்.

ஜனத்தொகை கூடிய கொழும்பு நகரத்தில் ஏனைய நகரங்களிலும் பார்க்கப் பிரச்சனைகள் பலவுள. நகர வாசிகளுக்கு தண்ணீர் வசதியை உண்டாக்குவது மாநகர சபையின் கடமையாகும். ''லபுகமா'' என்ற குளத்திலிருந்து கொழும்பு நகரத்திற்கு தண்ணீர் விநியோகஞ் செய்யப்படுகிறது. அதற்கு வேண்டிய செலவில் மாநகரசபை ஒரு பகுதியையும், மத்திய அரசாங்கம் ஒரு பகுதியையும் கொடுக்கின்றன. நகரத்தினுள் அழுக்குநீர் நிலத்தின்கீழ் வெட்டப்பட்ட அகழிகள் மூலம் கடலுக்குச் செல்கின்றன. அந்தத் திட்டத்தை முடிப்பதற்குப் பெருந்தொகையான பணம் செலவழிக்கப்பட்டது. அரசாங்கத்திடமிருந்து பெற்ற பண உதவியுடன் கண்டி, காலி மாநகரசபைகளும் பல திருத்தங்களை உண்டாக்கி இருக்கின்றன.

கிராமச் சங்கங்களுக்கும், மாநகர சபைகளுக்குமிடையிலுள்ள சபைகள் ''லோகல்போட்'' என்று சொல்லப்படும் தல ஆட்சிச் சபைகளாகும். 1853-ல் அம்மை நோய் தொடங்கியதனால் அது பரவாவண்ணம் சுகாதார முறைகளைக் கையாளுவதற்காக ஒவ்வொரு மாகாணத்திலும் ஒரு தலஆட்சிச்சபை நிறுவப்பட்டது. 1876-ல் உண்டாக்கப்பட்ட சட்டத்தின் பிரகாரம் பிரதான நகரங்களிலே தலஆட்சிச் சபைகள் நிறுவப்பட்டன. மாகாண அதிபதி அல்லது உப அதிபதியின் தலைமையில் 3 தெரிவுசெய்யப்பட்ட அங்கத்தவர்களும் 3 நியமனஞ் செய்யப்பட்ட அங்கத்தவர்களும் அச்சபையின் அங்கத்தவர்களாகும். சட்டங்களை உண்டாக்கவும்

வரிகளை அறவிடவும், வீதிகள், சந்தைகள் ஆகியவைகளைப் பற்றி நடவடிக்கை எடுக்கவும் அச்சபைகளுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டது. மட்டக்களப்பு, அனுராதபுரம், வதுளை, சிலாபம், யாழ்ப்பாணம், களுத்துறை, மாத்தளை, நீர்கொழும்பு, மாத்தறை, புத்தளம், இரத்தினபுரி, திருகோணமலை ஆகிய பெரிய நகரங்களிலே தலஆட்சிச் சபைகள் தாபிக்கப்பட்டன. இவைகளிலும் சிறிய நகரங்களிலே சுகாதார சபைகள் ஏற்படுத்தப்பட்டன.

மக்கட் சமுதாயத்திற் காணப்படுகின்ற பலவகைப்பட்ட பிரச்சனைகளையுந் தீர்த்துவைப்பதே நகரங்களின் முக்கிய வேலையாகும். அவ்வேலைகளைச் செய்து முடிப்பதற்கு எவ்வண்ணம் பணத்தைச் சேர்த்துக்கொள்ளுகின்றன என்பதைப்பற்றிக் கவனிப்போம். வரிகளை விதிப்பதனாலும், மோட்டோர்வண்டி முதலிய வாகனங்களுக்கும், குடிவகை, மருந்து என்பன விற்றல், துப்பாக்கிகளை உபயோகித்தல் என்பனவற்றிற்கு அனுமதியளிப்பதனாலும், சந்தைக் குத்தகைகளை அறவிடுவதனாலும் வேண்டிய பணத்தைச் சேர்த்துக் கொள்ளுகிறது. மாநகரசங்கப் பொறுப்பாளியாக, "மியூனிசிப்பல் கொமிசனர்" என்ற மாநகரசங்க அதிகாரி ஒருவர் நியமிக்கப்பட்டிருக்கின்றார்.

மக்கள் சமுதாய முன்னேற்ற நிலைக்குத் தகுந்தவாறு ஆட்சி முறை தாபிக்கப்பட்டிருக்கிறது என்று அறிந்திருக்கிறோம். இவ்வகையான ஆட்சிமுறையால் மக்கள் தங்களுடைய கருமங்களைத் தாங்களே செய்து முடிக்கின்ற பழக்கத்தைப் பழகிக்கொள்கிறார்கள். இச்சங்கங்கள் செவ்வனே நடைபெறுவதற்கு மக்கள் எல்லோருக்கும் கல்வியூட்டப்படவேண்டும்.

## வினாக்கள்

1. *மக்கலம் தேசாதிபதி காலத்தில் ஏற்பட்ட அரசியல் மாற்றங்களை ஆராய்க.*
2. *மானிங் தேசாதிபதி காலத்திலேற்பட்ட மாற்றங்களையும், மக்கலம் தேசாதிபதி காலத்திலேற்பட்ட மாற்றங்களையும் ஒப்பிடுக.*
3. *நகரங்களிற் காணப்படும் சமுதாய நிர்வாக முறைகள் யாவை?*
4. *மாநகர சங்கங்கள் எங்கே தாபிக்கப்படுகின்றன? நீ அறிந்த ஒரு மாநகர சங்கம் செய்துவருகின்ற கடமைகளை விபரித்து எழுதவும்.*

---

# 7. டொனமூர் அரசியற் சீர்திருத்தங்கள்

**மானிங்** தேசாதிபதி காலத்திலே உண்டாக்கப்பட்ட அரசியல் நிர்வாக மாற்றங்கள் திருப்திகரமாயில்லாமைக்குப் பல காரணங்கள் உண்டு. பெரும்பான்மையான உத்தியோகப் பற்றற்ற அங்கத்த வர்களைக் கொண்டுள்ள சட்டநிருபணசபை, செலவைக் கட்டுப்படுத் தும் அதிகாரத்தைப் பெற்றிருந்தமையால், நிர்வாகசபை நிர்வா கத்தை நடத்துவதற்குத் தடையாக இருந்தது. உத்தியோகப் பற்றுள்ள அங்கத்தவர்கள் சிறுபான்மையினராக இருந்தமையால் தேசாதிபதியினுடைய நிராகரிக்கும் அதிகாரமும் பயனற்றதாகப் போனது. உத்தியோகப் பற்றற்ற அங்கத்தினர் சேர்ந்து அரசாங் கத்திற்கு எதிரே எதிர்ப்புக்காட்டினர். ஆகையால் அக்காலத்தி லிருந்த **சேர் கியூ, கிளிபோட்டு (1925-1927)** என்ற தேசாதிபதி குடியேற்ற நாடுகளின் காரியதரிசிக்கு இங்கிருந்த நிலைமையைப்பற்றி அறிவித்தபொழுது, அவர் **டொனமூர்** பிரபுவின் தலைமையின் கீழ் ஒரு விசாரணைக் குழுவை இலங்கைக்கு அனுப்பினர் (1927). அக் குழுவிலுள்ள மற்ற அங்கத்தவர்கள் **சேர் மத்தேயுநாதன், சேர் சியோபிரே பற்லர், இறம்மன்ட் சீல்சு** என்பவர்களாம். அக் காலத்திலிருந்த நிர்வாகமுறை தகுந்ததோ என்பதைப்பற்றியும், அதன்படி ஆட்சிபுரிவதிலே கஷ்டங்கள் காணப்படுகிறதா என் பதைப்பற்றியும், நிர்வாகமுறை திருத்தி அமைக்கப்படவேண்டுமா என்பதைப்பற்றியும் விசாரணைசெய்து அறிக்கை ஒன்றைச் சமர்ப் பிக்குமாறு இங்கிலாந்திலிருந்து அக்குழு அனுப்பப்பட்டது.

இலங்கையிலே படிப்படியாகப் பொறுப்பாட்சித் தாபனங்களை நிறுவுவதே பிரித்தானியருடைய கொள்கையாகக் காணப்பட்டது. பாராளுமன்ற அரசாங்கமுறை எவ்வாறு இங்கிலாந்தில் நடைபெறு கிறதோ அதற்கேற்ப எவ்வாறு இலங்கையில் அப்பொழுதுள்ள அரசியல்முறை இருக்கிறதென்பது பற்றி அக்குழுவினர் ஆராயத் தொடங்கினர். பாராளுமன்ற அரசாங்க முறையின்படி சட்டநிரு பண சபையிலுள்ள பெரும்பான்மைக் கட்சியிலிருந்தே நிர்வாக சபை நியமிக்கப்படுகிறது. அரசாங்கத்தை நடத்தும் பொறுப்பை ஏற்கும் அந்நிர்வாகசபை சட்டங்களை உண்டாக்குவதற்கு வேண்டிய ஆதரவைச் சட்டநிருபண சபையினின்று பெறக்கூடியதாக இருக்கும். மானிங் தேசாதிபதி காலத்திலே உண்டாக்கப்பட்ட அரசியல் மாற்றங்களின் பயனாக நியமிக்கப்பட்ட நிர்வாகசபை அவ்வகையான

ஆதரவைப் பெறவில்லை. சட்ட நிர்வாகசபைக்குப் பணஞ் செலவிடும் விஷயங்களிற் போதிய அதிகாரமில்லாமையாலும், கூடிய சனப் பிரதிநிதிகளைக் கொண்டுள்ள சட்டநிருபண சபை அவ்விஷயங் களிலே எதிர்ப்புக் காட்டினமையாலும் நிர்வாக ஆட்சிமுறையைச் செவ்வனே நடத்த முடியவில்லை. ஆட்சிமுறையைக் கொண்டு நடத்துவதற்கு அதிகாரமில்லாத சட்டநிருபண சபைக்குக் கூடிய அதிகாரத்தை மானிங் அரசியற் திட்டம் கொடுத்துவிட்டது. சட்ட நிருபண சபையில் பெரும்பான்மையோருடைய உதவியைச் சட்ட நிர்வாக சபை பெறமுடியாமற் போனது. அதனுல் இரு சபைகளுக் கும் இடையில் ஒற்றுமைக்குறைவு ஏற்பட்டது. ஆகையால் அதி காரத்தையும் பொறுப்பையும் பிரித்து வெவ்வேறு சபைக்குக் கொடுக்காமல் இரு அதிகாரங்களையும் உள்ள ஒரு சபையைத் தாபிக்க வேண்டுமென்று அக்குழுவினர் அபிப்பிராயப்பட்டனர். பொறுப் புணர்ச்சியில்லாத சட்ட நிருபண சபைக்குப் பொறுப்புணர்ச்சியுள்ள நிர்வாக சபையின் அதிகாரத்தைக்கொடுப்பது பாராளுமன்ற முறைக் கும் கொள்கைக்கும் முரண்பாடானதொன்ருகும். பிரித்தானிய அர சாங்க முறைப்படி எதிர்க்கட்சியினர் திருத்தங்களை உண்டாக்கும் நோக்கத்தோடேயே நேர்மையான முறையில் கண்டனஞ் செய்வது வழக்கம். எதிர்க்கட்சியிலுள்ளோர் இன்னெரு வேளையில் அரசாங் கத்தை ஏற்று நடத்துவதுமுண்டு. அவ்வண்ணம் அரசாங்கத்தை நடத்தும் பொறுப்புக் கிடைக்கும்பொழுது அக்கட்சியினர் தாங்கள் குறிப்பிட்ட திருத்தங்களை நடைமுறைக்குக் கொண்டுவருவதுண்டு. ஆனுல் இலங்கையில் அந்நேரத்திற் காணப்பட்ட அரசியற் திட்டத்தின்படி, தெரிவு செய்யப்பட்ட அங்கத்தினர் ஒரு நிரந்தர மான எதிர்ப்பைக் காட்டினர். அவ்விதம் கண்டித்துப் பேசுபவர் களுக்கு அரசாங்கம் பொறுப்பை ஏற்று நடத்தும் சந்தர்ப்பம் கிடைக்கமாட்டாது என்பது வெளிப்படை. ஆகையால் அரசாங்கஞ் செய்யும் விஷயங்களைப் பொறுப்புணர்ச்சியற்ற முறையில் அவர்கள் கண்டித்தனர். தெரிவுசெய்யப்பட்ட அங்கத்தவர்கள் உத்தியோகப் பற்றுள்ள அங்கத்தவர்களில் நம்பிக்கை வைக்காது அவர்கள் பிரித் தானிய ஆளுகையைப் பலமுறச் செய்வதற்கு நியமிக்கப்பட்ட உத்தி யோகத்தர்களெனச் சந்தேகங் கொண்டனர். இவ்விதமான நிலையில் இருபகுதியான அங்கத்தவர்களுக்குமிடையில் சிநேக மனப்பான்மை யும் ஒற்றுமையும் காணப்படவில்லை. ஆகையால் அவ்வித இடர் பாடுகளுள்ள முறையை நீக்கி அதிகாரமும் நிர்வாகப் பொறுப்பு முள்ள ஒரே சபையைத் தாபிக்க வேண்டியதவசியமாயிற்று.

அடுத்தபடியாக உத்தியோகப் பற்றுள்ள அங்கத்தவர்களிடமா அல்லது உத்தியோகப்பற்றற்ற அங்கத்தவர்களிடமா அரசாங்கத்தை நடத்தும் பொறுப்பு விடவேண்டும் என்று ஆராய்ந்தனர். 1832-ம் ஆண்டின் பின் படிப்படியாக உத்தியோகப் பற்றில்லாத அங்கத்தவர்களின் அதிகாரம் கூட்டப்பட்டது. ஆகையால் இருவகை அதிகாரத்தையும் அவர்களுக்கே கொடுக்கவேண்டுமென்று அக்குழுவினர் உணர்ந்தனர். அரசாங்கத்தை நடத்தும் முழுப்பொறுப்பைப் பெறுவதற்கும் இலங்கை மக்கள் தகுதியற்றவர்கள் என்பதையும் உணர்ந்தனர். அரசியல்வாதிகள் நிர்வாக அனுபவமில்லாதவர்களாய் இருந்தனர். பாராளுமன்ற அரசியலை நடத்துவதற்குக் கட்சிமுறையும் இன்றியமையாதது. சாதிமத அடிப்படையில் நாட்டுமக்கள் பிரிந்து கொள்ளக்கூடிய அபாயமும் காணப்பட்டது. இங்குள்ள மக்களில் நூற்றுக்கு நான்கு வீதம் வரையிற்றான் வாக்குரிமை பெற்றிருந்தனர். ஆகையால் வாக்குரிமையைப் பெற்ற அந்தச் சிறுபான்மையினரே அரசாங்கத்தை நடாத்தும் முழுப் பொறுப்பையும் பெறுவர். முழுப் பொறுப்பாட்சியும் வழங்கப்படின் பெரும்பான்மையான மக்களுக்கு வாக்குரிமை அளிக்கப்படவேண்டுமென அவ்விசாரணைக் குழுவினர் அபிப்பிராயப்பட்டனர். ஆகையால் 21 வயதிற்கு மேற்பட்ட ஆண், பெண் ஆகிய இருபாலார்க்கும் வாக்குரிமை அளிக்கப்பட வேண்டுமென்று குறிப்பிட்டனர். பிரதிநிதிகளாகத் தெரிவு செய்யப்படுவதோடு வாக்குரிமையைப் பெறுதற்குரிய கட்டுப்பாட்டுடன் ஆங்கிலமும் தெரிந்தவர்களாக இருக்கவேண்டு மென்பதும் குறிப்பிடப்பட்டது.

இரண்டாவது பிரச்சனை சிறுபான்மையரைப் பற்றியதாகும். தமிழரும், மற்றும் சிறுபான்மையினரும் சாதி அல்லது வகுப்புப் பிரதிநிதித்துவம் இருக்கவேண்டுமென்று விருப்பத்தைத் தெரிவித்தபொழுது அக்குழுவினர் பின்வருமாறு குறிப்பிட்டனர். வகுப்புப் பிரதிநிதித்துவம் சுயநலம், சந்தேகம், மனவேற்றுமை ஆகியவையை உண்டுபண்ணி, புதிதாகத் தோன்றுகின்ற அரசியல் உணர்ச்சியைக் கெடச் செய்வதோடு நாட்டின் ஒற்றுமைக்கும் தேசீய உணர்ச்சிக்கும் தடையாகவிருக்கும். அரசியல் அமைப்பில் வகுப்புப் பிரதிநிதித்துவம் இருக்கும் வரையும் பல்வகைச் சாகியத்தாரையும் ஒன்றுபடுத்துவது முடியாது. மேலும் சட்ட நிரூபண சபையில் அங்கத்துவம் வகித்த வகுப்புப் பிரதிநிதிகள் தங்களுடைய சாகியத்தாருக்காகவே உழைக்காது, பொதுநல சேவையிலீடுபட்டு உழைத்து வந்திருக்கின்றனர். ஆகையால் அவ்விதப் பிரதிநிதித்துவத்தை ஒழித்துவிட வேண்டுமெனக் கருதினர்.

மூன்ருவதாக அரசாங்க சேவையின் நிலையைப்பற்றி ஆராய்ந்தனர். சட்டநிருபண சபையின் அங்கத்தவர்கள் அரசாங்க சேவையிலுள்ள குறைகளைக் கண்டித்துப் பேசினர். ஆகையால் உத்தியோக நியமனம் உத்தியோக உயர்வு இன்னும் அவைகளோடு சம்பந்தப்பட்ட விஷயங்களைப்பற்றித் தேசாதிபதிக்கு ஆலோசனை கூறுவதற்காக ஒரு **பொதுசன சேவையாளர்** கொமிசன் நிறுவப்பட வேண்டுமென்றுங் குறிப்பிட்டனர்.

இங்குள்ள நிலையைப் பரிசீலனை செய்தபின் அதிகாரமும், நிர்வாகப் பொறுப்புமுள்ள **அரசாங்க சபை** என்று அழைக்கப்படும் ஒரு சபை தாபிக்கப்படவேண்டுமெனக் கருதினர். அச்சபையில் பிரதேச வாரியாகத் தெரிவு செய்யப்பட்ட 50 அங்கத்தவர்களும் 8 நியமிக்கப்பட்ட அங்கத்தவர்களும் அங்கத்துவம் வகிப்பார்கள். அவர்கள் இரகசியச் சீட்டு மூலம் 7 நிர்வாக சபைகளைத் தெரிந்து கொள்வர். அவை உள் நாட்டு விவகாரம், விவசாயம், தல ஆட்சி, சுகாதாரம், கல்வி, தொழிலும் வர்த்தகமும், போக்கு வரவு என்ற பகுதிகளுக்குரிய நிர்வாக சபைகளாம். ஒவ்வொரு சபையும் ஒவ்வொரு தலைவரைத் தெரிந்த பின், எல்லாச் சபையின் தலைவர்களும், 3 அரசாங்க உத்தியோகத்தர்களுஞ் சேர்ந்த சபையே **மந்திரிமார் சபை**யெனப்படும். பிரதம காரியதரிசியும் நிதிக் காரியதரிசி, சட்டக் காரியதரிசி ஆகிய மூவருமே அம்மூன்று அரசாங்க உத்தியோகத்தர்களாகும்.

தேசாதிபதி புதிதாக அமைக்கப்படும் அரசாங்கத்தின் மேற்பார்வையாளராக இருந்தார். ஆனல் அவருக்குச் சில விசேட அதிகாரங்கள் கொடுக்கப்பட்டன. அரசாங்க சபையால் உண்டாக்கப்படுஞ் சட்டங்கள் யாவும் தேசாதிபதியால் அங்கீகரிக்கப்பட வேண்டும். சில சட்டங்களை மீண்டும் அரசாங்கசபையின் ஆலோசனைக்கு அவர் விட்டு சபையின் மூன்றிலிரு பகுதியாரின் ஆதரவு வேண்டுமெனக் கூறலாம். அங்கீகாரங் கொடுத்த பின்னரும் அது அமுலுக்குக் கொண்டுவராது 6 மாதத்துக்குத் தடை செய்யலாம். மேலும் ஒரு சட்டத்தை இங்கிலாந்து அரசாங்கத்தின் அங்கிகாரத்திற்கு அனுப்பி ஈற்றில் அனுமதியளிப்பதற்கு மறுக்கலாம். தேசாதிபதி அனுமதி அளித்த பின்னரும் இங்கிலாந்து அரசாங்கம் ஒரு சட்டத்தை அங்கீகரிக்காது விடலாம். பிரித்தானிய பாராளுமன்றமும் இலங்கைக்குத் தேவையான நேரத்திலே சட்டங்களை உண்டாக்கலாம். தேசாதிபதியும், சந்தர்ப்பங்களின் தேவைக்கு ஏற்பச் சட்டங்களைப் பிரகடனஞ் செய்யலாம். இவ்வளவு கட்டுப்பாடுகளிருந்தமை

யால் அந்த அரசியற் திட்டத்தின்படி அரசாங்க சபைக்குக் குறைந்த அதிகாரமே கொடுக்கப்பட்ட தெனலாம். ஆனால் இவ்வளவு கட்டுப் பாடுகளிருந்த பொழுதிலும் தேசாதிபதி ஒரு சந்தர்ப்பத்திலாகுதல் சட்டங்களை நிராகரிக்கும் அதிகாரத்தை உபயோகிக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கதொன்றாகும்.

தேசாதிபதியின் விசேட அதிகாரங்களும் நிதிக்காரியதரிசி, பிரதம காரியதரிசி ஆகியோருடைய அதிகாரங்களும், மந்திரிமார்களுடைய அதிகாரங்களைப் பாதிக்கக்கூடியதாக இருந்தன. நிதிக்காரியதரிசி "திறைசேரி" என்று சொல்லப்படும் நிதிப்பகுதி மூலமும், பிரதம காரியதரிசி பொதுசன சேவைகள் மூலமும், அதிகாரத்தைச் செலுத் தினர். அவ்விரு உத்தியோகத்தர்களும் குடியேற்ற நாட்டுக் காரிய தரிசிக்குப் பொறுப்புள்ளவர்களாகையால், பிரித்தானிய சாம்ராச்சிய அரசாங்கம் இலங்கையின் நிர்வாகத்தை அவர்கள் மூலம் கட்டுப் படுத்தினதெனலாம்.

சர்வசன வாக்குரிமை, பிரதேசவாரிப் பிரதிநிதித்துவம், அர சாங்கசபை, நிர்வாக சபைகள், மந்திரிமார் சபை, தேசாதிபதியின் அதிகாரங்கள் ஆகிய பிரதான அம்சங்களைக் கொண்டுள்ள அவ் **டொனமூர்த்** திட்டம் 1931-ல் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டது. அரசாங்க சபையின் முதற்றெரிவு 1931-ம் ஆண்டு ஆனி மாதம் நடைபெற்றது. அப்பொழுது நிறுவப்பட்ட அந்த அரசாங்க சபை யில் 50 சபைப்பிரதிநிதிகளும் 8 நியமனஞ் செய்யப்பட்ட அங்கத் தவர்களும் இடம் பெற்றனர். ஆனால் அத்தேர்தலில் தமிழர் பங்கு பற்ற மறுத்தபடியால் யாழ்ப்பாணப் பகுதிக்குரிய 4 இடங்களும் அரசாங்க சபையிற் காலியாயிருந்தன. தாழ்பூமிச் சிங்களவரில் 28 பிரதிநிதிகளும், கண்டிப் பகுதிக்கு 10 பிரதிநிதிகளும், 2 இலங்கைத் தமிழரும், 1 முஸ்லீமும், 2 ஐரோப்பியரும் தெரிவுசெய்யப்பட்ட னர். சேர் டி. பி. ஜயத்திலகா அரசாங்கசபைத் தலைவராக நியமிக் கப்பட்டார். தேசாதிபதியால் நியமிக்கப்பட்ட 8 அங்கத்தவர்கள், 4 ஐரோப்பியரும், 2 பறங்கிகளும், 1 இந்தியனும், 1 முஸ்லீமும் ஆவர்.

1832-ல் நிறுவப்பட்ட அரசியல் அமைப்பு குடியேற்ற நாடுக ளுக்கேற்ற தொன்றாகும். ஆங்கிலக்கல்வி பரவியதனாலும், அரசியல் அனுபவத்தைப் பெற்றதினாலும் படிப்படியாக அரசியலில் முன்னேறியதற்கு அறிகுறியாக 1931-ல் இப்புதிய அரசியல் அமைப்பு ஏற்படுத்தப்பட்டது. 1931 வரையும் பொதுசனங்கள்

அரசியல் விஷயங்களிற் சிரத்தையுங் காட்டாது, வாக்குரிமையையும் பெருது வாழ்ந்து வந்தனர். அப்பொழுது வழங்கப்பட்ட சர்வசன வாக்குரிமை மக்களுடைய கவனத்தை இழுத்தது என்று சொல்லலாம். பணம், சொத்து, தராதரம், சமயம், சாதி ஆகிய வேறுபாடுகளில்லாது எல்லா மக்களுக்கும் சம உரிமை அளிக்கப்பட்டமை நாட்டின் முன்னேற்றத்திற்கு அறிகுறியாகும். 21 வயதிற்கு மேற்பட்ட ஆண் பெண் இருபாலாருக்கும் வாக்குரிமை அளிக்கப்பட்டமையாற்தான் இப்பொழுது மக்களுக்கு அரசியலில் ஊக்கங்காணப்பட்டது. ஜனநாயக அரசாங்கத்தில் ஒவ்வொருவருக்கும் பங்கிருக்க வேண்டும். மக்கள் தங்களுடைய பிரதிநிதிகளைத் தெரிவு செய்யும்பொழுது கவனத்தோடும் விழிப்போடும் தகுந்த ஒருவரைத் தெரிவு செய்யவேண்டும். கல்வி அறிவும், அரசியல் விளக்கமும் மக்களுக்கு இன்றியமையாதன.

இது வரையும் இன அடிப்படையில் அங்கத்தவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இப்பொழுது பிரதேசவாரிப் பிரதிநிதித்துவமுறை கொண்டுவரப்பட்டது. இதுவும் ஒரு முன்னேற்றமான வழியாகும். இன அடிப்படையில் தெரிந்து அனுப்பப்படும் அங்கத்தவர்கள் தங்களுடைய இனத்தின் நலத்தைக் கருதுவாரே யல்லாது இலங்கை மக்கள் யாபேருடைய நன்மையையும் கருதமாட்டார். நாட்டின் முன்னேற்றத்திற்கு அது தடையாக இருக்கும். தேசீய இனவளர்ச்சிக்கும் அது உகந்ததல்ல. ஆகையால் பிரதேசவாரி பிரதிநிதித்துவம் சிறந்ததென்றே கூறலாம்.

சட்டங்களை உண்டாக்குவதற்கும் அதிகாரமும், நிர்வாகப் பொறுப்பும் வெவ்வேறு சபைகளுக்குக் கொடுக்கப்பட்டிருந்தமையினுல் அரசாங்கம் திறமையாக நடத்தப்பட முடியவில்லை. அதிகாரமும், பொறுப்பும் தற்பொழுது அரசாங்கசபையிலேயே விடப்பட்டமையால் முன்னிருந்த கஷ்டங்கள் நீங்கின. 61 அங்கத்தவர்களைக் கொண்டு அரசாங்கசபையில் நாட்டின் நன்மைக்காகிய பல விஷயங்களும் விவாதத்திற்கு எடுக்கப்படும்பொழுது எல்லா அங்கத்தினரும் பங்குபற்றினர். மூன்று அரசாங்க உத்தியோகத்தர்களும் கூட்ட நடவடிக்கைகளிற் பங்குபற்றினுலும் வாக்கு அளிக்க அவர்களுக்கு உரிமையில்லை. அரசாங்க சபைக்கு உள்நாட்டு விஷயங்களை நடத்துவதற்கே அதிகாரம் கொடுக்கப்பட்டது. ஆனுல் பாதுகாப்பு, வெளிநாட்டு விஷயங்கள் ஆகியவை சம்பந்தமான சட்டங்களை உண்டாக்க அரசாங்க சபைக்கு அதிகாரமில்லை.

இனி நிர்வாகசபைகள் எவ்வாறு கடமையாற்றி வந்தன என்பதைப்பற்றி ஆராயவேண்டும். நிர்வாக சபையின் தலைவர்களைக் கொண்டுள்ள சபையே மந்திரிமார் சபையென அழைக்கப்பட்டது. இம்முறை இலங்கையில் முன்னொருபோதும் இல்லாத முறையாகும். ஒவ்வொரு நிர்வாக சபையின் வேலைத் திட்டங்களும் அரசாங்க சபையால் அங்கீகரிக்கப்பட்டபின் நிர்வாக சபைகளின் தலைவர்களான மந்திரிமார் அவற்றை நடைமுறைக்குக் கொண்டு வருவார்கள். ஆனல் இம் மந்திரிமார் சபைக்குக் கூட்டுப் பொறுப்புணர்ச்சியில்லாமையால் ஒவ்வொரு நிர்வாக சபையும் தங்களுடைய பகுதிக்குரிய வேலைகளைச் செய்தனரேயன்றி எல்லோரும் ஒருமித்து நாட்டின் பொதுநலத்திற்காக வேலைசெய்ய முடியவில்லை. கூட்டுப் பொறுப்புணர்ச்சியில்லாமை இவ்வரசியல் அமைப்பிற் காணப்பட்ட குறையாகும். மற்றும் கடமைகள் எல்லாவற்றிலும் பார்க்க மந்திரிசபையின் முக்கிய கடமை வரவு செலவுத் திட்டத்தைத் தயாரிப்பதாகும். வரவு செலவுத் திட்டத்தை அச்சபை தயாரித்த பொழுதிலும் அது நிதிக்காரியதரிசியாலும் அரசாங்கசபையாலும் அங்கீகரிக்கப்பட வேண்டும். சட்டங்களை உண்டாக்குவதும் அரசாங்க சபையின் கடமைகளிலொன்ருகும். சட்டங்களை ஆக்கவேண்டிய பிரேரணைகள் பெரும்பாலாக மந்திரிமார்களால் அல்லது காரியதரிசிகளாலே கொண்டு வரப்பட்டன. அவ்விதம் ஒரு பிரேரணை அரசாங்கசபைக்குக் கொண்டுவருவதற்கு முன்பாக நிர்வாகசபை ஆராய்வு செய்து பின்னர் சட்டவரைபவர் அதனைச் சட்டத்திற்கிணங்க வரைந்து கொடுப்பார். பின்பு அது அரசாங்கசபையில் விவாதத்திற்கு எடுக்கப்படும். மூன்று முறை சபையில் வாசிக்கப்பட்டபின் தேசாதிபதியின் அனுமதிக்கு அது அனுப்பப்படும். நாட்டின் நன்மையைப் பாதிக்கக்கூடிய சட்டங்களைத் தேசாதிபதி அங்கீகரிக்கமாட்டார். சாதகமான ஏனைய சட்டங்கள் யாவும் அவரால் அங்கீகரிக்கப்படும். அரசாங்க சபைக்கூட்டங்கள் நடக்கும் பொழுது அச்சபையாற் தெரிவு செய்யப்பட்ட ஒரு சபாநாயகர் இருந்து அக்கூட்டங்களை நடத்துவார். அரசாங்க சபையில் 15 வருட காலமாக **சேர் வைத்திலிங்கம் துரைச்சாமி** அவர்களே சபாநாயகராக இருந்து வந்தார்.

டொனமூர் அரசியல் அமைப்பிற் சிறு குறைகள் காணப்பட்ட பொழுதிலும் முன்னிருந்த அரசியல் முறைகளிலும் பார்க்கச் சிறந்ததெனலாம். பொதுசனங்கள், கல்வியறிவுள்ளவர்களுஞ் சரி, கல்வியறிவில்லாதவர்களுஞ் சரி அரசியலிற் தங்களுக்குப் பங்குண்

டென்ற எண்ணத்தினுல் அதிக சிரத்தை காட்டத் தொடங்கினர். அது நாட்டின் முன்னேற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் காரணமாயிருக்கின்றது. தேசிய உணர்ச்சியோ அல்லது அரசியல் அறிவோ சர்வசன வாக்குரிமையாலேயே உண்டானதென்று சொல்லலாம். இலவசக் கல்வியும் அதற்குத் துணைபுரிந்தது.

## விஞக்கள்

1. 1929-ல் விசாரணைக் குழுவொன்று இங்கிலாந்திலிருந்து அனுப்பப்பட்டதற்குக் காரணமென்ன?
2. டொனமூர்க் குழுவினர், இலங்கை அரசியல் முறையில் என்ன குறைகள் காணப்பட்டனவென்று கூறினர்?
3. டொனமூர் அரசியல் அமைப்பிலுள்ள பிரதான அம்சங்கள் யாவை?
4. டொனமூர் அரசியல் அமைப்பு முன்னிருந்தவைகளிலும் பார்க்கச் சிறந்ததென்று கூறுவதற்குக் காரணம் என்ன?
5. டொனமூர் அரசியல் அமைப்பு, இலங்கைச் சுதந்திரத்தைப் பெறுவதற்கு அடிகோலி வைத்ததென்று சொல்வது சரியா?

---

# 8. இலங்கை சுதந்திரம் பெற்ற வரலாறு

கோல்புறுக் அரசியற் சீர்திருத்தங்களின் பின் இலங்கையிலே பொருளாதார, சமுதாய நிலைகள் முன்னேற்றமடைந்தன. "இராச காரிய" முறை நீக்கப்பட்டதனுல் விடுதலை பெற்றவர்கள் சுதந்திர மான முறையிற் தொழில் செய்ய ஆரம்பித்தனர். விவசாயத் தொழிலில் அநேகர் ஈடுபட்டனர். தோட்டங்கள் திறக்கப்பட்டத னுலும் சிங்கள மக்களுடைய நிலை திருத்தமுற்றது. தச்சுவேலை, நெசவு வேலை, கட்டிட வேலைகளுஞ் செய்யத் தொடங்கினர். அதனுல் முன்னிருந்ததிலும் பார்க்க மக்களுடைய வருவாய் அதி கரித்தது. ஆங்கிலக் கல்வி பயின்றவர்கள் அரசாங்க சேவையி லமர்ந்தனர். சிங்களவர், தமிழர், சோனகர் ஆகிய வகுப்பினரு டைய முன்னேற்றங் காணப்பட்டது. மிஷனரிமாருடைய உழைப் பினுல் ஆங்கிலக்கல்வி எங்கும் பரவியது. வர்த்தக விருத்தியும் ஏற்பட்டது. முஸ்லீங்களைப்போல் யாழ்ப்பாணத்திலுள்ள தமிழரும் வியாபாரஞ் செய்வதிலீடுபட்டனர். ஆனுல், யாழ்ப்பாணத்தில் ஆங் கிலக் கல்வியைப் பயில்வதில் மக்கள் அதிக ஊக்கங் காட்டி அரசாங்க சேவையில் அநேகர் சேர்ந்தனர். இக்காரணங்களாலே பத்தொன்பதாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் மத்திய வகுப்பினரின் எழுச்சி காணப்பட்டது.

சமுதாயத்திலும் அதிக மாற்றங்கள் காணப்பட்டன. ஆங்கி லக் கல்வி பரவியமையினுலும், பொருளாதார திருத்தங் காணப் பட்டமையாலும், உத்தியோகம், வியாபாரம் நிமித்தமாக வெளியூர்ப் போக்குவரத்துக் காணப்பட்டமையாலும், சமுதாயத்தினிடையேநிலவி வந்த சாதிக்கட்டுப்பாடு மறையத் தொடங்கியது. சமய சுதந்திரம் பெற்றதன் பயனுக புத்தசமயமும், இந்துசமயமும் வளர்ச்சியடை யத் தொடங்கின.

டொனமூர் அரசியல் அமைப்பின் பின்னர் எல்லாத் துறை களிலும் நாடு முன்னேற்றமடைந்ததைக் கவனிக்கலாம். சர்வசன வாக்குரிமை கிடைத்ததன் பயனுக, மக்கள் அரசாங்க விஷயங் களிற் சிரத்தை காட்டினர். அரசியல் விழிப்பு ஏற்பட்டது. வாக்குரி மையின் பயனை அறிந்துகொண்டனர். வாக்குரிமை பெற்ற ஒவ் வொருவரும் அரசாங்கத்தைத் தெரிந்து கொள்வதிலே தங்களுக்குப் பங்குரிமையும் உண்டென்று சிந்திக்கலாயினர். ஜனநாயக அரசாங்க முறை இன்னதென அறிந்த மக்களுக்குச் சுதந்திர உணர்ச்சி

தோன்றுவதியல்பு. அரசியற் தலைவர்களும் நிர்வாகத்தை நடத்துவதிற் தேர்ச்சி பெற்றனர். இக்காலத்திலே பொருளாதார அபிவிருத்தியுங் காணப்பட்டது. விவசாயத்திலும், கைத்தொழிலிலும் விருத்தியுண்டாக்கத்தக்கதாக அரசாங்கமும் மக்களுக்கு ஊக்கமளித்தது. ஐக்கிய சங்கங்கள் மூலம் விவசாயிகள் கடன்வாங்கக் கூடியதாக இருந்தது. இலங்கை வங்கியும் தாபிக்கப்பட்டது. பிற நாடுகளிற் தங்கியிராது உணவுப்பொருள்களை உண்டுபண்ண ஆரம்பித்தனர். இந்நாட்டுக்குப் போதியளவு செய்கைபண்ணி விட்டாலும், அவ்வழியிற் போதிய ஊக்கங் காணப்பட்டது. பிரித்தானியர் விவசாயிகளுக்கு நீர்ப்பாய்ச்சும் வசதிகளை உண்டுபண்ணி உதவி புரிந்தனரே யன்றி நாடு முழுவதற்குந் தேவையான உணவுப் பொருள்களை உண்டுபண்ணுவதில் முயற்சி எடுக்கவில்லை. டொனமூர் அரசியலமைப்பின் கீழ் மந்திரிப் பதவியிலிருந்த சுதேசிகள் தேசிய முயற்சியிலீடுபட்டனர். **1931**-ன் பின் குடியேற்ற அமைப்பின் கீழுள்ள பொருளாதாரம் தேசிய அடிப்படையினுள் பொருளாதாரமாக மாறியது. பல கைத்தொழிற் சாலைகள் தாபிக்கப்பட்டன. பல விவசாயத் திட்டங்கள் நன்மை அளித்தன. கல்வி பரவத் தொடங்கியது. **1931**-ல் கல்விப் பகுதியிற் செலவிட்ட பணம் **12** இலட்சம் ரூபாவாகும். **1945**-ல் அச் செலவு **34** இலட்சம் ரூபாவாகும். அவ்வாண்டிலேயே இலவசக் கல்வி அளிப்பதற்கு ஒழுங்கு செய்யப்பட்டது. பல சமுதாயச் சீர்திருத்தச் சட்டங்களும் உண்டாக்கப்பட்டன. தொழிற்சாலைச் சட்டம், சாய்ப்புச் சட்டம், தொழிலாளர் நட்ட ஈட்டுச்சட்டம், தொழிலாளர் சம்பளச் சட்டம் ஆகியன பல நன்மையை அளித்தன. இவைகளெல்லாம் தொழிலாளருடைய பொருளாதார, சமுதாய நிலையைத் திருத்தி வைத்தியப் பகுதியிலும் அரசாங்கம் அதிக பணத்தைச் செலவழித்தது. பல துறைகளிலும் முன்னேற்றங்களேற்பட்டன. ஆனல் தொழிலாளருடைய எழுச்சியே முக்கியமாகக் கவனிக்கக் கூடியது. தொழிற் சங்கங்களை நிறுவி தொழிலாளர் தங்களுடைய உரிமைகளுக்காக வாதாடத் தொடங்கினர். பத்தொன்பதாம் நூற்றுண்டிலேற்பட்ட மத்திய வகுப்பினரின் எழுச்சியும் இருபதாம் நூற்றுண்டில் பிரதானமாக **1931**-ன் பின் ஏற்பட்ட தொழிலாளர், பொதுமக்களின் எழுச்சியும் நாட்டின் முன்னேற்றத்திற்கு அறிகுறியாகும். சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்னும் கொள்கைகள் செறிந்தன. பாடசாலைகளிலேயோ, அரசாங்கசேவையிலேயோ, சமயவழிபாட்டிலேயோ சுதந்திரம் காணப்பட்டது. சாதி வேற்றுமை குறைந்தது.

இக்காலத்திலுள்ள அரசியல் நிலையைப்பற்றி இனி ஆராய்வோம். டொனமூர் அரசியல் அமைப்பின்படி அரசாங்கத்தை நடத்தும் முழுப் பொறுப்புங் கிடைக்கவில்லை. இன அடிப்படையிலுள்ள பிரதிநிதித்துவம் இல்லாமற் செய்யப்பட்டதினால் சிறுபான்மையர்க்குப் பயம் உண்டானது. அரசாங்க சபையிலுள்ள இரு பகுதியான அங்கத்தவர்களுக்கு அந்த அரசியல் அமைப்பைப்பற்றி அதிருப்தியுண்டானது. ஒரு பகுதியார் நிர்வாகசபை முறையையும், மற்றப்பகுதியார் இன அடிப்படையிலுள்ள பிரதிநிதித்துவம் நீக்கப்பட்டமையையும் விரும்பவில்லை. E. D. பெரேரா என்பவர் 7 தீர்மானங்களைக் கொண்டு வந்தார். மந்திரிமார்களுக்கும், 3 அரசாங்க உத்தியோகத்தர்களுக்கும் அதிகாரங்கள் கொடுக்கப்பட்டமையால் இரு பகுதியாரின் அதிகாரத்தைப் பற்றியும் தேசாதிபதியின் விசேட அதிகாரங்களைப் பற்றியும் அத்தீர்மானங்களிற் கண்டித்துக் கூறப்பட்டன. அதன் பயனாக ஒரு அரசியற் சீர்திருத்த இயக்கம் தொடங்கியது. மந்திரிமார்கள்சபை மேல் வருந் தீர்மானங்களைச் செய்தது. அரசாங்க உத்தியோகத்தர்களுக்குப் பதிலாக மந்திரிமார் நியமிக்கப்பட வேண்டும் என்றும், மந்திரிமார்களுடைய அதிகாரம் கூட்டப்பட வேண்டுமென்றும், அவர்களைத் தெரிவு செய்யும் முறை மாற்றி அமைக்கப்பட வேண்டுமென்றும், பொதுஜன சேவை கொமிஷன் திருத்தியமைக்கப்பட வேண்டுமென்றும், தேசாதிபதியினுடைய அதிகாரங்கள் குறைக்கப்பட வேண்டுமென்றும் குறிப்பிடப்பட்டது. அத்தீர்மானங்களைப் பெரும்பான்மையான சிங்கள அங்கத்தவர்கள் ஆதரித்த பொழுதிலும் சிறுபான்மையினர் எதிர்ப்புக்காட்டினர். இன அடிப்படையிலுள்ள பிரதிநிதித்துவம் நீக்கப்பட்டமையால் 61 அங்கத்தவர்கள் உள்ள சபையில் 39 இடங்களைச் சிங்களப் பிரதிநிதிகள் பெற்றனர். ஆகையால் அவர்களுடைய அதிகாரம் சிறுபான்மையினரைப் பாதித்து விட்டது என்று கூறினர். அவ்வித நிலையில் தேசாதிபதிக்குக் கிடைத்த விசேட அதிகாரங்களும், அரசாங்க உத்தியோகத்தர்களுடைய அதிகாரங்களும் சிறுபான்மையோருக்குப் பாதுகாப்பாக இருக்கின்றனவென்று அவர்கள் கருதினர். ஆகையால் புதிய மாற்றங்கள் மேலும் கொண்டு வரப்பட்டால், சிங்களச் சாதியினரே அரசாங்கத்தில் முழு அதிகாரத்தையும் பெறுவர் எனக் கூறினர். மந்திரிமார் சபை ஏகமனதாகக் கேட்டுக்கொண்டாலன்றி அரசியல் மாற்றங்கள் செய்ய முடியாதென்று குடியேற்ற நாடுகளின் காரியதரிசி அறிவித்தார். சிறுபான்மையினரின் பிரதிநிதிகளிலிருவர் மந்திரிமார்சபையில் இருந்தமையினால் ஏகமனதான தீர்மானத்தை உண்டாக்கிக் கொள்ள முடியா

மற் போனது. ஒருவிதமான முடிவுக்கும் வரமுடியாமல் அடுத்த தேர்தலுக்குச் சபை கலைக்கப்பட்டது (1935). அடுத்த ஆண்டிலே நடைபெற்ற தேர்தலின்பின் சிங்களப் பிரதிநிதிகள் ஒற்றுமையாக 7 சிங்கள மந்திரிகளையே தெரிந்து கொண்டனர். ஒவ்வொரு நிர்வாக சபையிலும் சிங்களப் பிரதிநிதிகளே பெரும்பான்மையினராகக் காணப்பட்டனர். அதன் காரணமாக அரசியல் மாற்றத்திற்குச் சிறுபான்மையினரின் ஆதரவு இல்லாவிடில் அரசியற் சீர்திருத்தங்கள் செய்ய முடியாதென குடியேற்ற நாடுகளின் காரியதரிசி கூறினர்.

ஸ்ரப்ஸ் தேசாதிபதியின் (1933-1937) பின் நியமிக்கப்பட்ட **சேர் அன்ரு கால்டிக்கொற்** என்னும் தேசாதிபதி இலங்கையின் பல பகுதியாரின் அபிப்பிராயங்களையும் அறிந்த பின்னர் குடியேற்ற நாடுகளின் காரியதரிசிக்கு சீர்திருத்தங்களைப்பற்றிய ஒரு திட்டத்தைச் சமர்ப்பித்தார். 50 வீத இடங்களைக் கோரிநின்ற சிறுபான்மையரின் வேண்டுகோளை ஏற்றுக்கொள்ளாது, சிறுபான்மையர் கூடிய இடங்களைப் பெற்றுக்கொள்ளத்தக்கதாகத் தொகுதிகள் வரையறுக்கப்படவேண்டுமென்று கூறினர். வாக்குரிமையளவில் வேறு கட்டுப்பாடில்லாது முன்னிருந்த முறையே நீடித்து இருக்கவேண்டுமெனவும், தேசாதிபதியின் அதிகாரங்கள் குறைக்கப்படக் கூடாதெனவும் குறிப்பிட்டார். அப்பொழுதிருந்த நிர்வாக சபைகள் மூலம் நிர்வாகத்தை நடத்தும் முறை திருப்திகரமாக இருக்கவில்லை யென்றும், மந்திரிமார்களும், அரசாங்க உத்தியோகத்தர்களும் ஒற்றுமையான முறையில் அதிகாரத்தைச் செலுத்த முடியாதென்றும் கூறினர். மந்திரிமார்களிடம் ஒரே அரசியற் கொள்கைகள் காணப்படவில்லையென்றும், மந்திரிகளிடம் ஒற்றுமையை உண்டாக்குவதற்குப் பிரதம மந்திரி போன்ற ஒரு தலைவர் இல்லையெனவும் அரசியலமைப்பிற் காணப்பட்ட குறைகளை எடுத்துக் கூறினர். அரசாங்க நிர்வாகத்திற்கும் பொறுப்புடைய ஒருவர் இல்லை. மந்திரிமார்களிடம் கூட்டுப் பொறுப்புணர்ச்சியில்லையெனவும், ஒவ்வொரு மந்திரியும் தன்னுடைய நிர்வாக சபையின் தீர்மானங்களை அமுல் நடத்துவதனுல் அவரிடம் தனிப்பட்ட பொறுப்பு இல்லையெனவும் அவர் சுட்டிக் காட்டினர். ஆனுல 1939-ல் இரண்டாம் உலகயுத்தம் தொடங்கியபடியால் அரசியற் சீர்திருத்தங்களை உண்டாக்க முடியாமற்போனது. தேசாதிபதி குறிப்பிட்ட சீர்திருத்தங்கள் அரசாங்க சபையில் விவாதிக்கப்பட்டபொழுது சபை அதனை அங்கீகரிக்கவில்லை. ஆனல் தேசாதிபதி

னுடைய சீர்திருத்த அறிக்கை, இலங்கைக்கு எவ்விதமான சீர்திருத்தம் ஏற்றதெனவென்று வகுப்பதற்கு வழிகாட்டியாய் இருந்தது என்று சொல்லலாம்.

குடியேற்ற நாடுகளின் காரியதரிசி, இலங்கையிலேற்படுத்தப்பட்ட அரசியலமைப்பு திருப்திகரமானதாகக் காணப்படாமையால், புதிய மாற்றங்களைப்பற்றி ஆலோசனைசெய்வதன் பொருட்டு, அரசாங்கத் தெரிவை இரண்டு வருடங்களின் பின்பே நடத்தவேண்டுமென அறிவித்தார் (1940). அடுத்தாண்டில் குடியேற்றக் காரியதரிசி மேல்வருமாறு அறிவித்தார். "பிரித்தானிய அரசாங்கம், அரசியற் சீர்திருத்தம் அவசியமானதும், முக்கிய மானதுமென்று உணர்கின்றது. புதிய அரசியல் அமைப்பை நிர்ணயிப்பதற்கு ஒரு அரசியற் கொமிஷன் விசாரணை செய்து அறிக்கையை விடுத்த பின்னரே அவ்விதம் செய்யலாம். ஆனால் யுத்தம் முடிவடைந்த பின் சிறிய தாமதமுமின்றி அது நம்பிக்கையாக ஆராயப்படும்." இதுவே 1941-ம் ஆண்டுப் பிரகடனம் எனப்படும். மந்திரிமார் சபை இப்பிரகடனத்தை ஏற்றுக்கொள்ளவில்லை.

இரண்டாம் உலகயுத்த ஆரம்பகாலத்தில் இலங்கை அதிக பிரதானமானதாகக் காணப்படவில்லை. 1941-ல் யப்பான், மத்திய வல்லரசு பக்கத்தைச் சார்ந்து யுத்தத்திற் சேர்ந்து கொண்ட பொழுது நேசதேச நாடுகளுக்கு இலங்கை ஒரு பிரதானமான தானமாக விளங்கியது. பர்மா, மலாயா, கிழக்கிந்திய தீவுகள் ஆகிய பகுதிகளை யப்பானியர் கைப்பற்றியமையாலும், கொழும்பில் குண்டுகளை வீசினமையாலும் (1942) இலங்கையைப் பாது காக்க வேண்டியதுமாயிற்று. அதுவுமல்லாமல் இலங்கை மக்களிடம் அதிக பயமுமுண்டானது. அதனால் அரசியற் சீர்திருத்தங்கள் பற்றிய கிளர்ச்சி அமர்ந்துவிட்டது. யுத்தத்திற்கு வேண்டிய உதவி புரியவேண்டுமென்றும், தீவிர வாதிகளின் செல்வாக்கைக் குறைக்க வேண்டுமென்றும் குடியேற்ற நாட்டுக் காரியதரிசி இலங்கை அரசாங்கத்திற்கு அறிவித்தார். 1943-ல் அவர் புதிய அரசியல் அமைப்பின் அடிப்படையான கொள்கைகளைக் கொண்டுள்ள பிரகடனமொன்றை இலங்கைத்தேசாதிபதிக்கு அனுப்பி அரசாங்க சபைக்கு அறிவிக்கும்படி கற்பித்தார். இதுவே 1943-ம் ஆண்டுப் பிரகடனம் எனப்படும். யுத்த முடிவில் இலங்கை அரசாங்கத்திற்கு உள்நாட்டு விஷயங்களில் முழுப்பொறுப்பும் அளிக்கும் நோக்கத்தோடு அரசியற் சீர்திருத்தங்கள் ஆராயப்படுமென அதிற் கூறப்பட்டது. இலங்கையிலுள்ள இராணுவப் படைகளும், கடற் படைகளும்

பிரித்தானியர் கைவசமிருக்குமென்றும், வெளிநாட்டு விஷயங்கள் பிரித்தானிய அரசாங்கத்தின் பொறுப்பிலேயே இருக்குமென்றும் அதிற் கூறப்பட்டிருந்தது. அவ்விதமான கௌரவங்களை அடிப் படையாகவுள்ள அரசியற் திட்டம் ஒன்றை அரசாங்கசபை தயா ரித்த பின் கொமிஷன் ஒன்று நியமிக்கப்படுமென்று அறிவிக்கப் பட்டது. ஆனால் அவ்விதமான திட்டம் அரசாங்கசபையின் மூன்றி லொரு பகுதியாரின் அங்கீகாரத்தைப் பெறவேண்டும். 1944-ம் ஆண்டு மந்திரிமார்சபை, தங்களுடைய திட்டத்தை அனுப்பியது. அத்திட்டத்தையும் சிறுபான்மையருடைய பாதுகாப்பைப்பற்றியும் ஆராய்வு செய்வதற்காக ஒரு குழு அனுப்பப்பட்டது. **சோல்பரிப்** பிரபுவின் தலைமையில் **சேர் பரோஸ், சேர் ரீஸ்** ஆகிய அக்குழு வினர் 1944-ம் ஆண்டு மார்கழி மாதம் இலங்கைக்கு வந்து சேர்ந் தனர். அவர்கள், பத்திரிகை மூலம் இந்நாட்டு மக்களை, அரசியல் மாற்றத்தைப் பற்றிய அபிப்பிராயத்தைத் தெரிவிக்குமாறு விளம் பரம் செய்தனர். பல பிரேரணைகளைக் கொண்டுள்ள மனுக்கள் அவர்களுக்கு அனுப்பப்பட்டன. குறித்த நேரங்களில் அம்மனுக் களை அனுப்பியோர் குழுவினருக்குத் தங்களுடைய அபிப்பிராயங் களை விளக்கிக் காட்டினர். இவ்விதமாகப் பல்வகைப்பட்ட அபிப்பி ராயங்களைக் கேட்டறிந்த பின்னர் பொருளாதார சமுதாய அர சியற் துறைகளில் இலங்கை அடைந்த முன்னேற்றத்தையும் ஆராய்ந்தனர். இலங்கை டொனமூர் அரசியல் அமைப்பின் பின், பலகஷ்டங்களேற்பட்டபொழுதிலும், இத்துறைகளில் நல்ல முன் னேற்றமடைந்திருந்தது. அரசாங்கப் பொறுப்பை ஏற்று நடத்தும் அனுபவமும் அரசியற் தலைவர்களுக்கிருந்தது. யுத்தகாலத்தில் உண வுப் பொருள்களெல்லாவற்றிற்கும் பிரதானமாக அரிசிக்கு இலங்கை பிறநாடுகளிலிருந்தே பெற்றது. ஆங்கிலேயர் பலவிடங்களிலும் யுத்தத்திலிடுபட்டிருந்தமையால் போதிய உணவை அனுப்புவதற்குக் கஷ்டமிருந்தது. அதனால் அவுஸ்திரேலியாவிலிருந்து கோதுமைமா ஏராளமாக இறக்குமதி செய்யப்பட்டது. தேவையான அளவுக்கு அரிசியும் கிடைக்கவில்லை. இலங்கையில் வேண்டியளவு உணவுப் பொருள்களை உற்பத்தி செய்வது அத்தியாவசியமாகத் தோன்றியது. சுதந்திரத்தையுடைய நாடாயிருந்தால் நாட்டின் பல்வகை விருத்தி யும் ஏற்படக்கூடிய விதம் மக்கள் ஊக்கமெடுப்பர். ஆகையால் சுதந்திரத்தையும், பொறுப்பையுமுடைய அரசாங்கம் வேண்டு மென்பதே பலருடைய கொள்கையாயிருந்தது. இக்கொள்கை களை அறிந்த குழுவினர் உள்நாட்டு விஷயங்களில் பூரண பொறுப் புள்ள அரசாங்கத்தை நிறுவவேண்டுமென அபிப்பிராயப்பட்டனர்.

1945-ம் ஆண்டு ஆடிமாதம் 11-ந் திகதி அவர்கள் தங்களுடைய அறிக்கையை வெளியிட்டனர். சிறுபான்மையினருடைய பிரச்சனையைப் பற்றி அதிற் குறிப்பிடப்பட்டது. 1931-ன் பின் பிரபல வேலைகளிற் செலவழித்த பணம் அதிகமாகச் சிங்களவருடைய பகுதிகளிலேயே செலவழிக்கப்பட்டதென்றும், பொதுஜன சேவையில் பெரும்பான்மையினருக்கே உத்தியோக நியமனங்கள் செய்யப்பட்டனவென்றும், அதனுல் சிங்களவர் தமிழர் என்ற பாகுபாட்டைஉண்டாக்கிவிடப்பட்டதென்றும் சிறுபான்மையினர் குறைகூறியிருந்தனர். ஆனுல், சுகாதாரம், கல்வி, விவசாயம் என்பனவற்றிற்குச் சிங்கள மக்கள் வசிக்கின்ற பகுதிகளிலே கூடிய பணம் செலவழிக்கப்பட்டாலும், சனத்தொகையளவில் தமிழர் வசிக்கும் பகுதிகளிலே கூடிய பணஞ் செலவழிக்கப்பட்டிருக்கின்றதென்று அக்குழுவினர் கூறினர். அதை விடப் பொதுஜன சேவையிலும் சிங்களவர், தமிழர் என்ற இன அடிப்படையில் உத்தியோக நியமனங்கள் செய்யப்படவில்லையெனவுங் கூறினர். ஆகையால் அப்பொழுதுள்ள அரசாங்கம் இன அடிப்படையில் பகிரங்க விஷயங்களை நடத்தவில்லை என்பது அவர்களுடைய அபிப்பிராயம்.

1815-ல் நடைபெற்ற மரபு மன்றத்திலே ஏற்படுத்தப்பட்ட ஒழுங்குகளின் பிரகாரம் பிரித்தானியர் ஆட்சிபுரியத் தவறிவிட்டனரென கண்டி மக்கள் கூறிய குறைகளைப்பற்றி அக்குழுவினர் ஆராயத் தொடங்கினர். ஆராய்வு செய்தபின் கண்டியிலே காணப்பட்ட பிரச்சனைகள் பொருளாதார சமுதாயத்தோடு சம்பந்தப்பட்டன வல்லாது அரசியலோடு சம்பந்தப்பட்டனவல்லவென்பதே அவர்களுடைய கருத்தாகும். புதிய அரசியல் அமைப்பின் இலங்கை அரசாங்கம் கண்டி மக்களுடைய குறைகளை நிவிர்த்தி செய்யலாம் என்று கூறினர். அக்குழுவினர் முன்னிலையிற் சாட்சியங்கூறிய சிலர் சர்வசனவாக்குரிமை, கைலஞ்சம், சச்சரவு, கொலை ஆகியவைகளுக்குக் காரணமாய் விட்டதென்றும், வாக்குரிமை எல்லோருக்கும் அளித்தல் நல்லதல்லவெனக் கூறியபொழுது, 1931-ன் பின் இந்நாட்டிலே எல்லாத்துறைகளிலும் முன்னேற்றங் காணப்பட்டமையினுல் சர்வசன வாக்குரிமை நீடித்து இருக்கவேண்டுமென்று தங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிவித்தனர்.

பிரதிநிதித்துவத்தைப் பொறுத்தளவில் ஒவ்வொரு மாகாணத்திலும் 75000 மக்களுக்கு ஒரு பிரதிநிதியும், சிறுபான்மையினர் வசிக்கின்ற கிழ்மாகாணம், வடமாகாணம், வடமத்திய மாகாணங்களில் சனத்தொகைக்கு ஏற்ற பிரதிநிதித்துவத்தை விட ஆயிரம்

சதுரமைல் பரப்புக்கு ஒரு பிரதிநிதியும் தெரியப்பட வேண்டு மென்றுங் குறிப்பிட்டனர். அதனல் அம்மாகாணங்களிலோவ் வொன்றும் மேலதிகமான நான்கு பிரதிநிதிகளைப் பெற்றனர். சிறு பான்மையினருடைய பாதுகாப்புக்காகப் பல அங்கத்தவர்களைக் கொண்டுள்ள தொகுதிகளையும் வகுத்தனர்.

பின்னர், இனிமேல் இங்கு நிறுவ உத்தேசித்திருக்கும் அர சியற் திட்டத்தைப்பற்றி விபரிக்கலாயினர். இதுவே ''சோல்பரித் திட்டம்'' எனப்படும். இலங்கையிலுள்ள பாராளுமன்றம் இங்கிலாந்து மன்னனையும், செனேட் சபையையும், மக்கள் பிரதிநிதிச் சபையை யுங் கொண்டுள்ளது. மகாதேசாதிபதியே இலங்கையில் இராசப் பிரதிநிதியாக இருப்பார். உள்நாட்டு நிர்வாகத்தோடு சம்பந்தப்பட்ட விஷயங்களில் எவ்வாறு பழைய வழக்கத்திற் கிணங்க இங்கிலாந் தரசன் நடந்துகொள்ளுகிருனே அவ்வாறே மகாதேசாதிபதியும் நடந்து கொள்வர். வெளிநாட்டு விடயங்கள், பாதுகாப்பு என்பவற் றைப்பற்றி மகாதேசாதிபதிக்குச் சட்டங்களை உண்டாக்க அதிகார முண்டு. இவ்விரண்டு விஷயங்களும், அரசியற் சீர்திருத்தங்கள் ஆகிய விஷயங்களை மன்னனின் அனுமதியைப் பெறுவதற்காக மகாதேசாதிபதி தடுத்துவைக்கலாம். ஒரு வகுப்பினரைப் பாதிக் கக்கூடிய சட்டங்களையும் அவ்வண்ணம் தடுத்துவைக்க அவருக்கு அதிகாரமுண்டு. எந்தச் சமயத்தவரின் வழிபாட்டைப் பாதிக்கக் கூடிய கட்டுப்பாட்டை அச்சமய அதிகாரிகளின் வேண்டுகோ ளில்லாவிடத்து, இலங்கைப் பாராளுமன்றம் உண்டாக்க முடியாது.

மக்கள் பிரதிநிதிச் சபையில் 101 அங்கத்தவர்கள் இடம் பெறுவர். அவர்களுள் 95 அங்கத்தவர்கள் மக்களாற் தெரிவு செய்யப்பட்ட அங்கத்தவர்களாயும், 6 பேர்கள் தேசாதிபதியால் நியமனஞ் செய்யப்பட்டவர்களாயுமிருப்பர். 101 அங்கத்தவர்களும் பாராளுமன்ற அங்கத்தவர்களென அழைக்கப்படுவர். அங்கத்தவர் களுக்கு ஆங்கிலம் எழுதப், பேசத் தெரிந்துகொள்ள வேண்டு மென்ற தராதரம் நீக்கப்பட்டது. தெரிவு நடந்தபின் 5 வருடங் களுக்குச் சாதாரணமாக பாராளுமன்றம் கலைக்கப்படமாட்டாது. செனேட் சபை என்று சொல்லப்படும் மேற் சபையில் 30 பேர் கள் அங்கத்துவம் வகிப்பர். அவர்களுள் 15 பேர்கள் தேசாதி பதியால் நியமிக்கப்படுவர். எஞ்சிய 15 பேர்களும் மக்கள் பிரதி நிதிகள் சபையால் தெரிந்தெடுக்கப்படுவர். மேற்சபை அங்கத் தவர்கள் 35 வயதுக்குக் குறையாதவர்களாய் இருக்கவேண்டும். நாட்டுக்குப் பிரபல சேவை புரிந்தோர்களிலிருந்தே 15 அங்கத்

தவர்களும் தேசாதிபதியால் நியமனஞ் செய்யப்படுவர். இரண்டு வருடங்களுக் கொருமுறை 5 தெரியப்பட்ட அங்கத்தவர்களும், 5 நியமனஞ் செய்யப்பட்ட அங்கத்தவர்களும் நீங்க வேண்டும். அவ்விடங்களுக்குப் புதிய அங்கத்தவர்கள் சேர்த்துக்கொள்ளப்படுவர். **கபினெட்** சபை எனப்படும் மந்திரிசபையே நிர்வாகத்திற்குப் பொறுப்பாகவிருக்கும். பெரும்பான்மைக் கட்சியிலுள்ள தலைவரே **பிரதம மந்திரி**யாகத் தேசாதிபதியால் நியமிக்கப்படுவர். பிரதம மந்திரியின் ஆலோசனைப்படி ஏனைய மந்திரிமார் மகா தேசாதிபதியால் நியமிக்கப்படுவர். ஒவ்வொரு மந்திரிக்கும வேலைகள் இன்னவென பிரதம மந்திரியால் வரையறுக்கப்பட்டிருக்கும். பாதுகாப்பு, வெளிநாட்டு விஷயங்களும் பிரதம மந்திரியினுற் கையாளப்படும்.

சோல்பரித் திட்டத்தைப்பற்றிக் கலந்தாலோசனை செய்வதற்காக அப்பொழுது அரசாங்க சபைத்தலைவராயிருந்த கௌரவ **D. S. சேனநாயக்கா** இங்கிலாந்துக்கழைக்கப்பட்டார் (1945). இந்தியாவுக்கு ''டொமினியன் அந்தஸ்து'' வழங்கப்பட்டிருக்கின்றது. பர்மாவுக்கும் அவ்விதம் கொடுப்பதாக வாக்குப்பண்ணப்பட்டிருக்கிறது. இலங்கைக்கும் டொமினியன் அந்தஸ்து கொடுக்கப்பட வேண்டுமென்று வாதாடினுர். அவர் பல நியாயங்களை விளக்கிக்காட்டினுர். யப்பானியர், இலங்கையைக் கைப்பற்ற எத்தனஞ் செய்த பொழுது அதிக எதிர்ப்புக் காட்டப்பட்டது. யுத்தம் நடைபெற்ற பொழுது தென்கிழக்கு ஆசியாப்படைகளுக்கு இலங்கை பிரதான தளமாக இருந்தது. தேவையான றப்பர் இலங்கையிலிருந்தே அனுப்பப்பட்டது. வகுப்புவாத பிரிவினையைக் காரணமாகக் கொண்டு டொமினியன் அந்தஸ்தை மறுக்கக்கூடாதெனக் கூறி இங்கிலாந்திலுள்ள அதிகாரிகள் இணங்கத்தக்கதாகச் செய்தார்.

அரசாங்கத்தின் கொள்கையை விளக்கும் **''வெள்ளைப் பத்திரம்''** என்று சொல்லப்படும் பிரகடனம் ஒன்று 1945ம் ஆண்டு ஐப்பசி மாதம் 31ந் திகதி பிரித்தானிய அரசாங்கத்தால் வெளியிடப்பட்டது. இங்கிலாந்து மன்னனின் அரசாங்கம் இலங்கை மக்களின் கோரிக்கைக்கும், விருப்பத்திற்கும் அனுதாபமுடையதென்றும், அவர்கள் ''டொமினியன் அந்தஸ்தை''ப் பெற்றுக்கொள்வதற்கு துணைபுரியச் சித்தமுடையதென்றும் அதிற் குறிப்பிடப்பட்டது. இலங்கையின் அரசியல் முன்னேற்றத்திற் கேற்றவாறு வகுக்கப்பட்ட சோல்பரி அரசியல் அமைப்பின் பிரகாரம் அரசாங்கம் நடத்தப்பட்டுச் சிறிது காலத்தின்பின் டொமினியன் அந்தஸ்து அளிக்

கப்படும் என்று அறிவிக்கப்பட்டது. இங்கிலாந்திலிருந்து திரும்பி வந்த அரசாங்கசபைத் தலைவர் அரசாங்கசபையில் வெள்ளைப் பத்திரத்தை ஏற்றுக்கொள்ளுமாறு சபையைக் கேட்டார். சபையில் வாக்களிக்கத்தக்க 54 அங்கத்தவர்களில் 3 பேர்களைவிட ஏனை யோர் ஏகமனதாக ஏற்றுக்கொண்டனர். பின்னர் 1946ம் ஆண்டு வைகாசி மாதம் 15ந் திகதி இலங்கையில் அரசியல் அமைப்பைப் பற்றிய பிரகடனம் ஒன்று மாட்சிமை தங்கிய இங்கிலாந்து மன் னரால் வெளியிடப்பட்டது.

இதற்கிடையில் இங்கிலாந்திலே தொழிற்கட்சி அரசாங்கத்தை நடத்தும் அதிகாரத்தைப் பெற்றது. இந்தியாவுக்கு டொமினியன் அந்தஸ்தை அளிப்பதாக அது தீர்மானஞ் செய்தது. இந்தி யாவுக்கும் பாகிஸ்தானுக்கும் சுய ஆட்சி வழங்குவதென்றால் இலங்கைக்கும் அதை அளிப்பதற்கு தாமதிப்பது சரியல்லவென சேனநாயக்கா வற்புறுத்தி நின்றார். சென்ற உலக யுத்தங்களிலும் இலங்கை பிரித்தானியாவோடு நின்று துணைபுரிந்திருக்கிறது. கல்வி யறிவுள்ள மக்கள் இந்தியாவிலும் பார்க்க இலங்கையில் கூட இருக்கிறார்கள். சர்வசன வாக்குரிமை பதினைந்து வருடங்களுக்கு முன்பாகவே இலங்கை மக்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றது. இவ்விதமான காரணங்கள் எடுத்துக்காட்டப்பட்டபின் பிரித்தானிய பொதுநல அமைப்பில் இலங்கைக்கு அங்கத்துவம் கொடுப்பதாக இங்கிலாந்து அரசாங்கம் வாக்குப்பண்ணியது. மேல்வரும் ஆரம்ப ஒழுங்குகள் செய்த பின் டொமினியன் அந்தஸ்தை வழங்குவ தாக வாக்களிக்கப்பட்டது. (1) சாம்ராச்சிய அரசாங்கத்தின் பொறுப்பினின்று இலங்கையை நீக்கி, 1931ல் உண்டாக்கப்பட்ட உவெஸ்ட் மினிஸ்டர் சட்டத்தின் தேவையான அம்சங்களை இலங் கைக்கு உபயோகிப்பதற்குப் பிரித்தானிய பாராளுமன்றத்திற் சட் டத்தை ஆக்குதல். (2) சோல்பரி அரசியல் அமைப்பின்படி சுய ஆட்சியைக் குறைக்கும் கட்டுப்பாடுகளை நீக்கிவிடுவதற்குச் சட் டத்தை உண்டாக்குதல். (3) பிரித்தானியாவுக்கும் இலங்கைக்கு மிடையில் பாதுகாப்பு ஒப்பந்தம் செய்தல். அவ்விதம் இலங்கைக் குப் பாதுகாப்பு அளிப்பதற்கு இலங்கையிற் கடற்படை, தரைப் படை, ஆகாயப்படைத் தளங்களைப் பிரித்தானியர் வசம் விடுதல். (4) பிறநாடுகளின் விஷயங்களைப்பற்றிய நடவடிக்கைகள் எவற்றைப் பற்றியும் பிரித்தானியாவும் இலங்கையும் அறிவித்துக்கொள்ளுதல்.

இவ்விதமான ஒப்பந்தங்கள் ஏற்பட்டபின் இலங்கைச் சுதந்திரச் சட்டம் உண்டாக்கப்பட்டது. அதன் பயனாக 1948ம் ஆண்டு மாசி மாதம் 4ந் திகதி இலங்கை சுதந்திர நாடாகியது. சமாதான முறைகளினாலும் சமரசப் பேச்சுக்களின் பயன் காரணமாகவும் இந்நாடு சுதந்திரத்தைப் பெற்றது.

## வினாக்கள்

1. டொனமூர் அரசியலமைப்பின் பின் சிறுபான்மையோருக்கு ஏற்பட்ட பயன் என்ன?
2. இன அடிப்படையிலுள்ள பிரதிநிதித்துவத்தைச் சிறுபான்மையினர் விரும்பியதற்குக் காரணம் என்ன?
3. சோல்பரிக் குழு நியமிக்கப்பட்டதற்குக் காரணம் யாது? அக்குழுவினர் தங்களுடைய அறிக்கையிற் குறிப்பிட்ட திருத்தங்கள் யாவை?
4. சோல்பரி அரசியல் அமைப்பின் பிரதான அம்சங்களை ஆராய்க.
5. இலங்கை சுதந்திரம் பெற்ற வரலாற்றை எழுதுக.

---

# 9. சுதந்திர இலங்கை

அந்நியருடைய ஆளுகையிலிருந்து விடுதலையடைந்த நாடுகள் முன்னேற்றமடைவது இயல்பு. அதற்குப் பல காரணங்கள் உள. இந்தியா, இலங்கை, பாகிஸ்தான், இந்தோனேசியா, பர்மா ஆகிய நாடுகள் சுதந்திரம் பெற்றதின் பயனுக முன்னேற்றமடைந்து வருகின்றன. விடுதலைபெற்ற ஒவ்வொரு நாட்டிலுள்ள மக்களும் சுதந்திரத்தைப் பெற்றதினுலே பெருமையடைந்து, ஒற்றுமையுடையவர்களாகத் தங்களுடைய நாட்டின் நலத்திற்காக உழைத்துவருகின்றனர். பொருளாதாரமே ஒரு நாட்டின் முதுகெலும்பு எனலாம். கைத்தொழில், விவசாயம், வர்த்தகம் ஆகிய துறைகளில் விருத்தியுண்டாக்கி, நாட்டின் வறுமை நோய் ஆகியவற்றை நீக்கி நாட்டில் சமாதானமும் ஒழுங்கும் நிலைபெறச்செய்வது அந்நாட்டின் அரசாங்கத்தின் கடமையாகும். அரசாங்கத்தை நியமிப்பது மக்களின் கடமையாக இருக்கின்றது. ஆகையால் ஜனநாயக முறையை கையாளும் நாட்டிலுள்ள மக்களிடையே கல்வியறிவு இன்றியமையாததாகும். இவைகளைவிட நாட்டின் நலத்திற்காக உழைக்கும் தலைவர்களும் வேண்டும். ஆகையால் புதிதாகச் சுதந்திரத்தைப் பெற்ற நாடுகளிலே பல பிரச்சனைகள் தோன்றுவதற்கு இடமுண்டு. அப்பிரச்சனைகள் யாவும் சாவதானமாகவும், தகுந்த முறையிலும் தீர்த்துவைக்கப்படல் வேண்டும். அன்றேல் கஷ்டங்கள் ஏற்படும்.

நான்கு நூற்றுண்டுகளுக்கு மேலாக இலங்கை அந்நியருடைய ஆதிக்கத்திலிருந்து வந்தது. அதனுலே அந்நியநாட்டுப் பழக்க வழக்கங்களும், பண்பாடும் இந்நாட்டுள் புகுந்து சமுதாயத்தை அதிகமாகப் பாதித்து விட்டன. அந்நியருடைய பாஷையும், சமயங்களும், நாட்டில் பரம்பரையாக வந்த பண்பாட்டையும், பண்டை நாள் தொட்டு வந்த முறைகளையும் மங்கிப்போகச் செய்து விட்டன. அந்நியர் ஆளுகை நடைபெற்ற காலத்திலே பொருளாதாரத் துறையில் அதிக திருத்தம் ஏற்படவில்லை. இந்நாட்டிலுள்ள பழைய அரசர்கள் விவசாயத்தை ஊக்கப்படுத்துவதற்காகக் குளங்களையும் கால்வாய்களையும் வெட்டி விவசாயிகளுக்கு வேண்டிய வசதிகளையுண்டாக்கினர். ஆகையால் மக்களுக்குத் தேவையான உணவுப் பொருள்கள் இங்கேயே விளைவிக்கப்பட்டன. அந்நியர் வந்ததன் பின் இலங்கை உணவுப் பொருள்களைப் பிறநாடுகளிலிருந்தே பெற்றது. விவசாயஞ் செய்யப்பட்ட நிலங்கள் எல்லாம் காடுகளாக மாறிவிட்டன. பல குளங்கள் தூர்ந்து போயின. இனிச் சனத்

தொகையும் அதிகரித்துக்கொண்டு போகிற படியால் உணவுக் கஷ்டம் ஏற்படுகிறது. சாதி வேற்றுமை சமுதாயத்தின் முன்னேற் றத்திற்குத் தடையாக இருந்தது. ஆங்கிலேயருடைய காலத்தில் அது படிப்படியாக நீங்கிவிட்டது. ஆகையால் சமுதாயத்தில் மக் களுடைய விரிந்த மனப்பான்மை ஏற்பட்டாற்றான் புதிதாகத் தோற்றுகின்ற இச்சமுதாயத்தில் அமைதியும் ஒழுங்கும் ஏற்படும். சிங்களவர், தமிழர், சோனகர், பறங்கிகள் என்ற பல வகுப்பினர் இருக்கும் இந்நாட்டில் வகுப்பு வாதம் உண்டாகுமெனில் நாட்டின் ஐக்கியம் குறைந்து விடுவதோடு இந்நாடு முன்னேற்றமும் அடைய மாட்டாது. கல்வி நாடு முழுவதும் பரவவேண்டும். இவைகள் எல் லாவற்றையும் உற்று நோக்குமிடத்து பல பிரச்சனைகள் தோன்று வதற்கு இடமுண்டு.

ஆகையால் அரசியல், பொருளாதார சமுதாய நிலைகள் எவ் வாறு சுதந்திர இலங்கையில் இருக்கின்றனவென்றும், அவைகளை எவ்வாறு திருத்தி அமைக்கலாம் என்பதையும்பற்றி ஆராயவேண் டும். இலங்கையில் இப்பொழுது இருக்கின்ற அரசியல் அமைப்பு சோல்பரி அரசியல் அமைப்பிலிருந்தே தோன்றியதெனலாம். சர்வ சன வாக்குரிமை அளிக்கப்பட்ட போதிலும், எவர்களுக்கு அவ் வுரிமை உடையது என்பது பற்றிய பிரச்சனை தோன்றியது. அதை விளக்கும் முகமாக 1948-ம் ஆண்டு பிரசா உரிமைச் சட்டமொன்று பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்டது. அதன் பிரகாரம் இலங் கைப் பிரசைகளுக்கே வாக்குரிமை அளிக்கப்பட்டது. இலங்கையி லுள்ள நிரந்தரப் பிரசைகளும், பதிவுசெய்யப்பட்ட பிரசைகளுமே இலங்கைப் பிரசைகள் எனப்படுவர். 1949-ம் ஆண்டு உண்டாக் கப்பட்ட இந்திய - பாகிஸ்தானிய பிரசா உரிமைச் சட்டத்தின் பயனாக அநேகர் இலங்கைப் பிரசைகளாவதற்குக் கஷ்டமேற்பட் டது. அநேகர் நாடற்றவர்களாக இருக்கின்றனர். சுதந்திர இலங் கையில் ஏற்பட்ட பிரச்சனைகளில் இதுவும் ஒன்றாகும்.

ஜனநாயக அரசியல் முறையின்படி மக்களாற் தெரிவு செய் யப்பட்ட அங்கத்தவர்களே அரசாங்கத்தை நடத்துவது வழக்கம். ஆனால் அவ்விதம் தெரிவு செய்யப்பட்ட பிரதிநிதிகள் எல்லோரும் ஒரே கொள்கையை உடையவர்களல்லாமையால் அவர்கள் எல் லோரும் ஒன்று சேர்ந்து அரசாங்கத்தை நடத்துவது சாத்திய மல்ல. ஆகையால் ஒன்றுபட்ட அபிப்பிராயம், பொதுக்கொள்கையை ஆதாரமாகக் கொண்ட அரசியற் கட்சிகள் தோன்ற வேண்டும். அக் கட்சிகள் சிறந்த வேலைத்திட்டத்தையும், கொள்கையையும் தெரிவு

நடைபெறுங் காலத்தில் மக்களுக்கு விளக்கிக் காட்டும். எக்கட்சியி னுடைய வேலைத்திட்டத்தையும், கொள்கையையும் மக்கள் சிறந்த தென ஏற்றுக்கொள்கின்றார்களோ அக்கட்சியே தேர்தல் காலங் களில் மக்களுடைய கூடிய ஆதரவைப் பெறுகின்றது. ஆகை யால் தேர்தல் காலங்களிலே பெரும்பான்மையான ஆதரவைப் பெற்றுக்கொள்ளும் கட்சியே அரசாங்கத்தை நடத்தும் பொறுப்பை ஏற்று நடத்துகிறது. இலங்கை சுதந்திரத்தைப் பெற்றபின்னரே அரசியற்கட்சிகள் தோன்றின. ஆகையால் அரசியல் அனுபவம் குறைந்த கட்சிகளாகவே இங்கு காணப்படுகின்றன. இலங்கையில் இன்று ஐக்கிய தேசியக் கட்சி, சமசமாஜக்கட்சி, தமிழரசுக் கட்சி, தமிழ் காங்கிரஸ் கட்சி, மக்கள் முன்னணிக் கட்சி, கொம்யூனிஸ்ட் கட்சி, ஸ்ரீ லங்கா சுதந்திரக்கட்சி எனப் பல கட்சிகள் காணப்படு கின்றன. இவைகளுள் காலஞ்சென்ற டி. எஸ். செனநாயக்காவின் தலைமையிலுள்ள ஐக்கிய தேசியக் கட்சியே முதன் முதலாக அர சாங்கத்தை நடத்த ஆரம்பித்தது. இக்கட்சி 1956 வரையும் அதி காரத்தைப் பெற்றிருந்தது. அவ்வாண்டு தொடக்கம் மக்கள் முன்னணிக்கட்சி பண்டாரநாயக்காவின் தலைமையின் கீழ் அதிகாரத் தைப் பெற்று தற்பொழுது அரசாங்கத்தை நடத்தி வருகின்றது.

ஏனைய ஜனநாயக நாடுகளில் தேசிய அடிப்படையில் அமைக் கப்பட்ட அரசியற் கட்சிகள் காணப்படுகின்றன. ஆனால் இலங் கையிலே காணப்படும் பல கட்சிகள் வகுப்புவாத அடிப்படை யில் அமைக்கப்பட்டிருக்கின்றன. அதனால் ஒரே வகுப்பைச் சேர்ந்த அங்கத்தவர்களே அக்கட்சிகளில் அங்கத்துவம் வகிக்கின்றார்கள். அவ்விதமான கட்சி அரசாங்கத்தை நடத்தும் அதிகாரத்தைப் பெற்றால் அது மற்ற வகுப்பினருக்கு அதிக அனுதாபத்தைக் காட்டுமென்று எதிர்பார்க்க முடியாது. தேசிய ஒற்றுமை உண் டாகுவதும் கஷ்டமாக இருக்கும். தேசிய அடிப்படையிலுள்ள கட்சி எதுவோ அதுவே பல வகுப்பினரையும் அங்கத்தவர்களாக ஆக்கிக்கொள்ள முடியும். வகுப்புவாதக் கட்சிகளின் தீமையை உணர்ந்து எப்பொழுது மக்கள் அக்கட்சிகளுக்கு ஆதரவளிக்காது விடுகின்றனரோ அப்பொழுதுதான் ஜனநாயக ஆட்சி சிறந்த முறை யில் நடைபெறும். ஆகையால் இது இன்னொரு பிரச்சனையாகும்.

ஐக்கிய தேசியக் கட்சி அரசாங்கத்தை நடத்திய காலத்தில் டி. எஸ். செனநாயக்கா, டட்லி செனநாயக்கா, சேர் ஜோன் கொத் தலாவலை என்போர் முறையே பிரதம மந்திரிமாராக இருந்தனர்.

சுதந்திர இலங்கையின் முதற் பிரதம மந்திரியாகிய டி. எஸ். சேன நாயக்கா சிறந்த இராச தந்திரியாக விளங்கினர். அவர் இலங்கை மக்கள் அனைவருடைய அன்பையும் மதிப்பையும் பெற்று எல்லோருடைய ஒற்றுமையுடன் அரசாங்கத்தை திறமையுடன் நடத்தினர். அவருக்குப் பின் அவருடைய மகன் டட்லி பிரதம மந்திரியாக சிறிதுகாலமிருந்தார். அவருக்குப் பின் அப்பதவியை ஏற்ற சேர் ஜோன் கொத்தலாவலே மேல் நாடுகளிலும், அயல் நாடுகளிலும் இலங்கையின் செல்வாக்கை வளர்த்துள்ளார். அவருடைய பெருமுயற்சியால் ஆசிய, ஆபிரிக்க நாடுகள் ஒன்றுசேர்ந்து **பாண்டுங்** மகாநாட்டைக் கூட்டி, தமக்குள் சமாதானத்தையும் ஒற்றுமையையும் நிலைநாட்ட ஒழுங்குகள் செய்தன. ஐக்கிய தேசியக் கட்சி அரசாங்கத்தை நடத்திய காலத்தில் நாட்டின் முன்னேற்றத்திற்காகப் பல திட்டங்கள் வகுக்கப்பட்டன. நாட்டின் உணவு அபிவிருத்திக்காக மின்னேரியா, மினிப்பை, கல்லோயா முதலிய திட்டங்களை வகுத்து உணவு உற்பத்தியைப் பெருக்கும் நோக்கத்துடன் பெரும் முயற்சிகள் செய்யப்பட்டன. உணவு உற்பத்தி செய்வதிலே அதிக கவனஞ் செலுத்திய பொழுதிலும், கைத்தொழில், சுகாதாரம் ஆகிய துறைகளில் அதிக வேலைகளைச் செய்துள்ளனர். காங்கேசன்துறையிலே சீமெந்துத் தொழிற்சாலை தாபிக்கப்பட்டது. மலேரியாக் காய்ச்சல் இந்நாட்டிற் குறைந்து விட்டது என்று சொல்லலாம். இலவசக் கல்வி அளிக்கப்பட்டது. வகுப்புவாதங்களை வளர்க்காது மக்கள் யாபேருடைய உரிமைகளையும் பாதிக்காத முறையில் நடந்துகொண்டனர். இரண்டாம் எலிசபெத் இராணி இலங்கைக்கு விசயஞ் செய்தார் (1954). சுதந்திர இலங்கையின் முதற் தேசாதிபதி சோல்பரிப் பிரபுவாகும். அவர் லண்டனுக்குச் சென்று சிறிது காலம் அங்கிருந்தபொழுது திரு. C. நாகலிங்கம் அவருக்குப் பதிலாக இருந்து கடமையாற்றினர். பின்னர் சேர் ஒலிவர் குணத்திலகா மகா தேசாதிபதியாக நியமிக்கப்பட்டு கடமையாற்றி வந்தார்.

1956 ல் நடைபெற்ற பொதுத் தேர்தலில் மக்கள் ஐக்கிய முன்னணிக் கட்சி பௌத்த பிக்குகளின் ஆதரவைப்பெற்று வெற்றி பெற்றது. இக்கட்சித் தலைவர் **S. W. R. D. பண்டார நாயக்கா** ஆவர். இக்கட்சி அதிகாரத்திற்கு வந்த உடனேயே நாட்டில் ஒரு பிரச்சனை உண்டானது. அதுவே மொழிப்பிரச்சனையாகும். சுதந்திர இலங்கையில் எல்லா வகுப்பினருக்கும் பாஷையை, சமயத்தைப் பொறுத்தளவில் சுதந்திரம் இருக்கவேண்டும். சுதந்திரத்தை

இலங்கை பெற்றுக்கொள்ளக் கூடிய நிலைக்குக் கொண்டுவந்து விட்டது ஒரு தலைவரின் முயற்சியே என்று சொல்ல முடியாது. ஆனால் சிங்களவர், தமிழர், முஸ்லிங்கள் ஆகிய பல சாதியத்தினரும், தலைவர்களுஞ் சேர்ந்தே உழைத்து வந்தனர். சிங்களமொழி மாத்திரமே அரசாங்க மொழியாக இருக்கவேண்டும் என்ற சட்டத்தை ஐக்கிய முன்னணிக் கட்சியினர் பாராளுமன்றத்தில் நிறைவேற்றியபொழுது தமிழரிடையே அதிகபயமுண்டாகிப் பெருங் கிளர்ச்சி ஏற்பட்டது. 1956-ம் ஆண்டு ஆனிமாதம் அச்சட்டம் நிறைவேறுவதற்கு முன்பாக தமிழரசுக் கட்சியினர் கொழும்பிலுள்ள காலிமுக மைதானத்தில் சத்தியாக்கிரகத்தை நடத்தினர். அப்பொழுது தமிழரசுக்கட்சித் தலைவரான திரு. S. J. V. **செல்வநாயகமும்** அக்கட்சியின் ஏனைய அங்கத்தவர்களும் சிங்களவர்களாற் கடுமையான முறையிற் தாக்கப்பட்டனர். அந்த அநீதியான செய்கை தமிழினத்தினரிடையே சிங்களவர் மேல் வெறுப்பையுண்டாக்கியது. பின்னர் நாட்டிலே சமாதானத்தை ஏற்படுத்தும் நோக்கத்துடன் பண்டாரநாயக்காவும் செல்வநாயகமும் சமரசப் பேச்சை நடத்தி ஒரு ஒப்பந்தத்தைச் செய்து கொண்டனர். அதன் பிரகாரம் தமிழ் மொழி நியாயமான முறையிலே பிரயோகிக்கப்படுவதற்கு வசதியளிப்பதாக வாக்களிக்கப்பட்டது. இச்சட்டம் நிறைவேற்றப்படுவதற்கு முன்பாக சிங்கள 'ஸ்ரீ' பொறித்த பிரயாணிகள் செல்லும் பெரிய மோட்டோர்வண்டிகள் யாழ்ப்பாணத்திற்கு அனுப்பப்பட்டபொழுது அவ்வெழுத்துக்களை தமிழரசுக்கட்சியினர் அழித்து விட்டனர். அதே மாதிரி கொழும்பு கண்டி முதலிய பிரபல இடங்களிற் காணப்பட்ட தமிழ் எழுத்துக்களைச் சிங்களவர் அழித்து விட்டனர். இவ்விதமான மனப்பான்மை இருபகுதியாருக்குமிடையில் அமைதிக்குறைவை உண்டாக்கியது. அதன் காரணமாக நாட்டில் பெருங் குழப்பம் 1958-ம் ஆண்டு வைகாசி மாதம் 27-ந் திகதி தொடங்கியது. தமிழர் சிங்களவர்களால் அதிகம் தாக்கப்பட்டனர். உடனே அரசாங்கம் ஊரடங்குச் சட்டம், அவசரகாலச் சட்டங்களை உண்டாக்கி அக்கலகத்தை அடக்கியது.

இலங்கையிலே காணப்படுகின்ற வகுப்புவாதத்திற்குரிய காரணங்களை ஆராயவேண்டும். சிங்களவர், தமிழர் ஆகிய இரு சாதியத்தாரும் பேசும் மொழிகளும், அவர்களுடைய சமயங்களும் கலாச்சாரங்களும் வேறுபட்டனவாய் இருக்கின்றன. அவ்வண்ணம் வேறுபட்டிருந்தபொழுதிலும் இரு பகுதியாரும் பல நூற்றாண்டுகளாக இந்நாட்டிலே சமாதான முறையில் வாழ்ந்து வந்திருக்கின்

றனர். ஆகையால் இவர்களுக்கிடையிலேற்பட்ட பிளவுக்கு வேறு காரணங்கள் இருக்கவேண்டும். தொடக்கத்தில் இன அடிப்படையில் பிரதிநிதித்துவத்தைப் பிரித்தானியர் அளித்துவிட்டனர். 1931-ன் மேல் பிரதேசவாரியான பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்ட பொழுது தமிழருக்குக் கிடைத்த இடங்கள் குறைந்து விட்டன. அதனுல் பெரும்பான்மையினரான சிங்களவர் கூடிய அதிகாரத்தைச் செலுத்துவார்களென்ற பயம் தமிழ்மக்களிடையே நிலவியது. அளவு கடந்த இந்திய மக்கள் இலங்கைக்குட் புகுந்து சிங்களச் சாதியினரின் பலம் குறைந்து விடுமென்ற பயம் சிங்களமக்களுக்குத் தோன்றியது. இலங்கைச் சாதி என்ற ஒரு இனம் ஏற்பட்டு விட்டால் பறங்கியர் என்ற சாதியினர் இலங்கையில் இல்லாமற் போகக்கூடுமென்ற பயம் பறங்கியரிடையே நிலவியது.

மத்திய வகுப்பினராகிய வர்த்தகர்கள், நியாயதுரந்தரர்கள், வைத்தியர்கள், ஆசிரியர்கள், அரசாங்க சேவையாளர் ஆகியோர் செல்வாக்குடைய தங்களுக்கு அரசியல் அதிகாரம் அதிகம் கிடைக்கவில்லையெனக் கருதினர். சட்டசபையிலும், தல ஆட்சித் தாபனங்களிலும் கிடைக்கக்கூடிய இடங்கள் குறைவாக இருந்தமையாலும் அரசாங்க சேவையிலும் வேண்டியளவு இடங்கள் கிடைக்காமையினுலும் அவர்கள் தங்களுடைய சாகியத்தாரின் உதவியுடன் தங்களுடைய விருப்பத்தை நிறைவேற்றுவதற்காகத் தங்களிடையே சண்டையிடத் தொடங்கினர்.

வரட்சிப் பகுதிகளில் வசிக்கும் தமிழருக்குக் கோப்பி, தேயிலை முதலிய வர்த்தகப் பொருட்களிலே ஒருவிதமான இலாபமுங் கிடைக்காததனுல் அவர்கள் வசித்த இடங்களில் பொருளாதார நிலை திருத்தமடையவில்லை. சாதிக்கட்டுப்பாட்டை நுணுக்கமாகக் கவனிப்பவர்களாகிய அவர்கள் தச்சுவேலை, கொல்லவேலை முதலிய கைத்தொழில்களில் ஈடுபடவும் இல்லை. மேல் வகுப்பினர் ஆங்கிலக் கல்வியைக் கற்று அரசாங்க சேவையிற் சேர்ந்தனர். இலங்கையின் எல்லாப் பாகங்களிலும் புதிதாகத்தோன்றிய மத்திய வகுப்பினர் பாமரசனங்களிடையே வகுப்பு வாதங்களை உண்டுபண்ணினர். பொதுத் தேர்தல்கள் நடைபெறுங் காலங்களில் மத்திய வகுப்பினர் அதிகாரத்தைப் பெறுவதற்காக வகுப்புப் பிரிவினையை சுலபமாக உண்டாக்கிவிட்டனர். இனி அரசாங்க சேவையில் உத்தியோக நியமனங்கள் ஏற்படும் பொழுதும் இனப்பற்றுன எண்ணங்கள் தோன்றின. ஆகையால் இங்கு காணப்படுகின்ற வகுப்புவாதம்

மத்திய வகுப்பினரின் பிரச்சனையாகும். பொருளாதார நிலையும் அதற்கு ஒரு முக்கிய காரணமாகும்.

ஐரோப்பியருடைய ஆட்சிக்காலத்திற்கு முன்பாக புத்தசமயம், ஆயுள்வேத வைத்தியம், சிங்களக் கலாச்சாரம் ஆகிய யாவும் அரசர்களுடைய ஆதரவைப் பெற்றிருந்தன. சுதந்திர இலங்கையில் இவைகள் எல்லாம் புனருத்தாரணம் அடையவேண்டும் என்பதே புத்தசமயத்தவர்களுடைய கொள்கையாகத் தோன்றியது. இவர்களோடு சிங்கள ஆசிரியர்களும், வேலையில்லாதவர்களும் சேர்ந்துகொண்டனர். சிங்களப் புத்தசமயத்தவர்களில் அநேகர் புத்த சமய வளர்ச்சிக்கும், சிங்களப்பாஷையின் விருத்திக்கும் வேண்டிய முயற்சிகளில் ஈடுபட ஆரம்பித்தனர். ஆங்கிலப்பாஷை இந்நாட்டிற் பரவியிருந்தமையால் அது சிங்களமொழியின் விருத்திக்குத் தடையாக இருக்குமென்ற பயம் அவர்களிடையே காணப்பட்டது. அதைவிட தமிழ்ப்பாஷை ஆங்கிலப்பாஷையின் இடத்தை எடுக்கக் கூடுமெனவும் எண்ணினர். புத்தசமய வளர்ச்சிக்குக் கிறித்த சமயமும் தடையாகவிருக்கின்றது என்று அவர்கள் பயந்தனர். இக்காரணங்களினுலேயே சிங்களமொழியையும், புத்தசமயத்தையும் பாதுகாப்பதற்காக வேண்டிய நடவடிக்கைகளை எடுக்க ஆரம்பித்தனர். அதன் பயனுகவே சிங்களம் மாத்திரமே அரசாங்க பாஷையாக உண்டாக்கப்பட்டது. தாய்ப்பாஷை மூலம் கல்வி கற்கும் தமிழ் இனத்தவர்கள் சிங்கள மொழியைப் பயின்றபொழுதிலும் தாய்ப் பாஷையாகிய சிங்களத்திற் கல்விபயின்றவர்களுடன் பரீட்சைகளிற் போட்டி இடுவது கஷ்டமென்றும், அதனுல் அரசாங்க சேவையில் வருங்காலத்தில் தமிழ் இளைஞர்கள் சேர முடியாதென்றும் பல தமிழ்த் தலைவர்கள் கூறுகிருர்கள். சிங்களமொழி, தமிழ்மொழியாகிய இரண்டும் அரசாங்க பாஷைகளாக ஆக்கப்பட்டால் சிங்களப் பாஷையைத் தமிழரும் சிரத்தையுடன் பயிலத் தொடங்குவார்கள் என்பது பலருடைய அபிப்பிராயம். தமிழ் மக்கள் மொழியுரிமையை இழந்தால் தங்களுடைய உரிமைகள் யாவும் இழந்ததற்குச் சரியென எண்ணுகின்றனர். ஆகையால் இரு சாகியத்தாரின் தலைவர்களுஞ் சேர்ந்து இப்பிரச்சனையைச் சிக்கிரத்தில் தீர்த்துவிடல் வேண்டும். ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்கு பொருளாதார நிலையே இன்றியமையாதது. ஆகையால் ஒற்றுமைப்பட்ட இலங்கைச் சாதியினராக வருவதற்கு இப்பிரச்சனைகள் தீர்க்கப்படல் வேண்டும். இவ்விதமான பிரிவினை ஏற்பட்ட நேரத்தில் அரசாங்கம் நடத்தும் குடியேற்றத் திட்டத்திலும் தமிழ்மக்கள் சந்தேகங்கொள்கின்றனர்.

பெரும்பான்மையாகத் தமிழர் வசிக்கின்ற பகுதிகளில் சிங்களச் சாதியினர் குடியேறுவதைத் தமிழர் விரும்பவில்லை. ஆனால் அவ்வித பயம் ஏற்படுவதும் இம்மொழிப்பிரச்சனையினாலேயே என்று சொல்ல வேண்டும். உலகத்தின் மற்றைய பாகங்களிலுமுள்ள நாடுகள் இப் பிரச்சனைகளை எவ்வாறு தீர்த்திருக்கின்றார்களோ அவ்விதம் இலங் கையிலுள்ள தலைவர்கள் சமரச மனப்பான்மையுடன் தீர்த்து வைக்கலாம்.

ஐக்கிய முன்னணிக்கட்சி அதிகாரத்துக்கு வந்தபின் இலங் கையில் சில நல்ல மாற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன. சமயம், கலை ஆகியவைகளைப் புனருத்தாரணஞ் செய்யும் நோக்கத்துடன் "கலாச் சார அமைச்சு" ஒன்று இவ்வரசாங்கத்தால் அமைக்கப்பட்டிருக்கின் றது. இலங்கை பிரித்தானிய பொதுநல அமைப்பில் அங்கத்துவம் வகித்து அதிலுள்ள மற்ற அங்கத்துவ நாடுகளோடு சிநேக முறையில் நடந்துகொண்டு வருகின்றது. அந்நாடுகளின் பிரதமர்களின் மகாநாடுகளிலும், கொழும்புத் திட்டத்திற்கமைந்த நாடுகளின் மகாநாடுகளிலும் பங்குபற்றி அதிக பயனை இலங்கை அடைந் துள்ளது. அந்நாடுகளோடு வர்த்தக உடன்படிக்கையும் செய்துள் ளது. இலங்கை சுதந்திரமான வெளிநாட்டுக் கொள்கையைக் கடைப்பிடித்து வருவதனாலன்றோ, சீனாவோடு, ருஷியாவோடு, எகிப்தோடு இன்னும் பல நாடுகளோடு நட்பான முறையில் இராச நீதித் தொடர்பும், வர்த்தக உறவும் பூண்டிருக்கிறது. பொதுவுடை மைக்கொள்கை நாடுகளுடனும், ஜனநாயக நாடுகளோடும் சேர்ந்து உலகசமாதானத்திற்கான முயற்சியில் இலங்கை ஈடுபட்டிருப்பது போற்றத்தக்கதொன்றாகும்.

தற்பொழுதுள்ள பிரதமர் பண்டாரநாயக்காவின் நிர்வாகத்தில் மக்களுக்குப் பயன்தரக்கூடிய வேலைகள் நடைபெறுகின்றன. "பஸ்" சேவை தேசிய மயமாக்கப்பட்டமை யாவரும் விரும்பத்தக்கதாகும். கல்வித்துறையில் ஏற்பட்டிருக்கும் முன்னேற்றமும் குறிப்பிடத் தக்கதொன்றாகும். சுகாதாரப்பகுதியினர் செய்துவரும் வேலையும் பாராட்டக்கூடியதாகும். உணவு உற்பத்தியில் ஏற்பட்டிருக்கின்ற இளைஞர்கள் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கின்றனர். நாட்டின் நலத் திற்காக இப்பொழுது செய்யப்பட்டு வரும் வேலைகள் இலங் கையைச் சிறந்த நாடாக்குமென்பது இந்நாட்டுமக்களின் அபிப்பிராய மாகும்.

## வினாக்கள்

1. சுதந்திர இலங்கையில் ஏற்பட்ட பிரதான பிரச்சனைகள் யாவை? அவை எவ்வாறு தீர்க்கப்படல் வேண்டும்?

2. D. S. சேனநாயக்காவும், பண்டாரநாயக்காவும் இந்நாட்டிற்குச் செய்த சேவைகளை ஆராய்க.

3. 1948-ன் பின் இலங்கை அடைந்த முன்னேற்றத்தைப்பற்றி விபரிக்குக.

4. பொருளாதாரத் துறையில், சென்ற பத்து வருட காலத்தில் இலங்கை அடைந்துள்ள முன்னேற்றத்தைப் பற்றி எழுதுக.

---

1. இலங்கைச் சரித்திரமும், உலக சரித்திரமும்
முதலாம் பாகம்—1500 வரை

2. இலங்கைச் சரித்திரமும், உலக சரித்திரமும்
இரண்டாம் பாகம் 1500—1796.

3. இலங்கைச் சரித்திரமும், உலக சரித்திரமும்
மூன்றும் பாகம் 1796—1948.

4. உலக சரித்திரம் 1500—1948
(G. C. E. வகுப்புக்குரியது)

5. இலங்கைச் சரித்திரம் 1500—1948
(G. C. E. வகுப்புக்குரியது.)